தமிழ் வெளியீட்டுக் கழக வரிசை எண்—109

# மேலைநாட்டுத் தத்துவம்

## (EUROPEAN PHILOSOPHY OF MEDIEVAL TIMES)

ரா. ஸ்ரீ. தேசிகன், எம்.ஏ., எல்.டி.,
முன்னாள் பேராசிரியர்,
மாநிலக் கல்லூரி, சென்னை




தமிழ் வெளியீட்டுக் கழகம்
தமிழ்நாடு - அரசாங்கம்

# அணிந்துரை

(திரு. எம். பக்தவத்ஸலம், தமிழக முதலமைச்சர்)

தமிழ்நாடு அரசாங்கம், சில ஆண்டுகளுக்கு முன்னர்க் கல்லூரித் தமிழ்க் குழுவொன்றை நிறுவி, அதன்மூலம் கல்லூரி மாணவர்கட்குத் தேவையான பல தமிழ் நூல்களை வெளியிட்டுவந்தது. தமிழை ஆட்சி மொழியாக அரசாங்கம் ஏற்றுக்கொண்ட பிறகு, தமிழ் மொழிக்கு ஆக்கம் தேடுகின்ற முறையில், இன்னும் மகத்தான அளவில் தமிழில் நூல்கள் வெளிவரவேண்டும் என்ற கருத்தில் தமிழ் வெளியீட்டுக் கழகம் 1962-ல் நிறுவப்பெற்றது.

உலகின் பிற பகுதிகளிலுள்ள மக்களின் அறிவு வளர்ச்சிக்குக் குறையாமல் தமிழ் மக்களும் அறிவு வளர்ச்சி பெறவேண்டுமானல், பிற மொழியிலுள்ள நூல்களைப் படிக்க முடியாதவர்கள் தமிழின்மூலமே எல்லாவற்றையும் கற்கக்கூடிய சூழ்நிலை ஏற்படவேண்டும். இந்த எண்ணத்தின் அடிப்படையிலேயே தமிழ் வெளியீட்டுக் கழகம் கல்லூரி மாணவர்களுக்குரிய நூல்களை வெளியிடுவதுடன், பொதுமக்களுக்கும் பயன்படுகின்ற முறையில் வரலாறு, அரசியல், உளவியல், பொருளாதாரம், புவியியல், விஞ்ஞானக் கலைகள் ஆகிய பல துறைகளிலும் பல்வேறு நூல்களை வெளியிட முனைந்துள்ளது.

அத்தகைய முயற்சிகளுள் ஒன்ருக **'மேலைநாட்டுத் தத்துவம்'** என்ற இந் நூல் தமிழ் வெளியீட்டுக் கழகத்தின் **109** ஆவது வெளியீடாக வருகிறது.

கல்லூரித் தமிழ்க் குழுவின் சார்பில் வெளியான **35** நூல்களையும் சேர்த்து, இதுவரை 144 நூல்கள் தமிழ் வெளியீட்டுக் கழகத்தால் வெளியிடப் பெற்றுள்ளன. இந் நூல்களை வாங்கிப் படிப்பதன்மூலம் தமிழ் மக்கள் மேலும் வளர்ச்சி பெறுவார்கள் என்று நம்புகிறேன்.

**எம். பக்தவத்ஸலம்**

# முன்னுரை

மேலைநாட்டின் இடைக்காலத்தை இருள் மண்டிய காலமென்று சில வரலாற்று வல்லுநர் கருதிவந்ததை நாம் நன்கு அறிவோம். ஆனால், இத்தகைய கருத்து நாள் தேயத்தேய வலியிழந்து ஒரு பழங்கதையாய், கனவாய் மெல்ல மறைந்துபோய்விட்டது என்று ஐயமறச் சாற்றலாம். இடைக்காலத்தைப்பற்றி நமக்குக் கிடைத்த அருஞ் செய்திகள் நம்மைப் பெருவியப்பில் ஆழ்த்தாமற் போகா.

இடைக்காலமோ, பண்டைக் காலத்திற்கும் இக்காலத்திற்கும் நடுவே ஒரு பெரிய பாலமாய் அமைந்து திகழ்கின்றது என்று கூறினால், அது மிகையாகாது. கிரேக்க தத்துவ வித்தகர்களின் கருத்துகள் இடைக்காலத்தில் இலங்குகின்றன; இடைக்காலத்திலேயே இக்காலத்தின் கருத்துகள் வேரூன்றியிருப்பதை நாம் நன்கு உணர்கின்றோம்.

பண்டைத் தபோவனங்களில் உறைந்த வேதகாலத்துச் சான்றோர்களின் உண்மையொளி மேலைநாட்டு இடைக்காலத்துச் செந்நெறிச் செல்வர்களின் உளங்களில் கோயில் கொண்டிருக்கின்றது. அனுபூதிச் செல்வர்களின் வான் கருத்துகள் ஒரு நாட்டைமட்டும் சார்ந்தவையல்ல. இறைவனின் அருட்கோயிலை நாடுகின்ற அனைவர்களும் ஒரே சுருதியில் தம தேம்பிழி அனுபவமாம் மகரயாழை மீட்டுகின்றார்கள்.

இடைக்காலத்துத் துறவிகள், ஞானிகள், இறைவனைக் காண்பதுதான் தம் உண்ணும் சோறும் பருகு நீருமாகக்கொண்ட அனுபூதிமான்கள் நம் நாட்டு இருடிகளை நினைவூட்டுகின்றார்கள். தாந்தேயின் 'தெய்வ மங்கல கீதம்,' ஆன்ம ஒளியை அன்பின் வாயிலாகத்தான் அடையமுடியும் என்று நம் நாட்டு அறிஞர்கள் புலப்படுத்தும் கருத்தை வலியுறுத்துகின்றது. அனுபூதிக் கற்பகக்காவில் எந்தக் காலத்து—ஏன்—எந்த நாட்டு அடியார்களும் ஆடிஆடி அகங்குழைந்து ஈசன் புகழ்தனை இடையறாது இசைப்பார்கள் என்பது திண்ணம். வான்குணக் குன்றில் ஏறிய பழுத்த ஞானிகள் அனைவருக்கும் ஆண்டவன் ஒரே வண்ணமான தெய்வக் காட்சியை அளிக்காமற்போவனோ?

இந் நூலை இயற்றுவதற்குற்ற வாய்ப்பைத் தந்த தமிழ்நாட்டின் தமிழ் வெளியீட்டுக் கழகத்தாருக்கு என் உளங்கனிந்த நன்றியைத் தெரிவித்துக் கொள்ளுகின்றேன்.

என் கல்விக்காகத் தம் அணிகலன்களனைத்தையும் வழங்கித் தியாக வடிவாய் நின்ற என் அன்னையான அரங்கநாயகி அவர்களுக்கும், என்னுடைய நலத்திற்காக அல்லும் பகலும் உழைத்த என் தந்தையான இராகவ ஐயங்காருக்கும் இந் நூலை ஓர் அன்புக் காணிக்கையாகப் படைக்கின்றேன்.

ரா. ஸ்ரீ. தேசிகன்.

## உள்ளுறை

# மேலைநாட்டுத் தத்துவம்

## இடைக்காலம்

## 1. தோற்றுவாய்

மாபெருங் காலவெள்ளம் இடையறாது ஓடிக்கொண்டுதான் இருக்கின்றது. இறந்தகாலம், நிகழ்காலம். எதிர்காலம் என்றெல்லாம் நாம் காலத்தை வரையறுக்கின்றோம் ; நம் மனத்திற்கு ஒரு தெளிவு வேண்டும்பொருட்டு அதை வகுக்கின்றோம் என்பதுதான் உண்மையாகும். மேலும், ஒரு கணம் ஓர் ஊழிக்காலமாக விரிந்துபோகலாம்; அல்லது ஓர் ஊழிக்காலம் ஒரு கணமாகச் சுருங்கிப் போகவும் கூடும்.

**'பலபல வூழிக ளாயிடும், அன்றியோர் நாழிகையைப்**
**பலபல கூறிட்ட கூறாயிடும், கண்ணன் விண்ணனையாய்**
**பலபல நாளன்பர் கூடிலும் நீங்கிலும் யாம்மெலிதும்**
**பலபல சூழலுடைத்து, அம்ம வாழியிப் பாயிருளே.'**

என்று நம்மாழ்வார் இசைக்கும் பாட்டு ஆழ்ந்து சிந்திப்பதற்குரியது. காலத்தின் அளவுகூட நம் மனத்தின் உணர்ச்சியின் ஆழத்தைப் பொறுத்ததாய் அமைந்திருக்கிறது என்று இயம்பினால் அது மிகையாகாது.

பண்டைக்காலக் கூடத்தில் எழும் ஒலி இடைக்காலக் கூடத்தில் கேட்கும் ; இடைக்காலக் கூடத்தில் பிறக்கும் அரவத்திற்கு வருங்காலக் கூடம் எதிரொலி கொடுக்கும். உலக வரலாற்றில் ஒரு நீண்ட தொடர்பைப் பார்க்கின்றோம். 'ஒன்றிலிருந்து மற்றொன்றைப் பிரித்து நாம் ஆராய்ச்சி செய்வது முறையன்று. ஒரு நாட்டு வரலாற்றைக்கொண்டே அதன் இயல்பை முற்றிலும் அறியமுடியாது' என்று டாயின்பி என்னும் உலகப் புகழ்பெற்றுத் திகழ்ந்து நிற்கின்ற வரலாற்றுப் புலவர் மொழிகின்றார். ஒரு நாட்டு வரலாறு மற்றொரு நாட்டு வரலாற்றோடு பின்னிக் கிடக்கின்றதை இவ்வாசிரியர் பற்பல தக்க சான்றுகள் கொண்டு மெய்ப்பிக்கின்றார்.

'பெரும்பாலும் தத்துவ வரலாற்றுப் புலவர்கள் பிளேட்டோவிலிருந்தும் அவருடைய மாணாக்கரான அரிஸ்டாட்டிலிலிருந்தும் இக் காலத்திற்கு விடிவெள்ளி

யாய்க் காட்சியளிக்கின்ற பிரான்ஸிஸ் பேக்கன், டேகார்ட் இவர்களிடத்திற்குத் தாவிவிடுகின்றார்கள்' என்று கோபிலஸ்டன் (Copleston) தம் 'இடைக்காலத் தத்துவம்' என்ற நூலில் குறிக்கின்றார். இடைக்காலத்தை ஓர் இருண்ட காலம் என்பதைக் கார்லைல் மறுக்கின்றார். அக்காலம் இருண்டதன்று; நமக்குத்தான் அக்காலத்தின் சிறப்பை அறிந்துகொள்வதற்குரிய ஞான ஒளியில்லை.

பேக்கனும் டேகார்ட்டும் அரிஸ்டாட்டிலின் அடிச்சுவட்டைப் பின்பற்றுபவர்களைத் தம் வசைஅம்புகளுக்கு இலக்காக வைத்துத் தாக்கினாலும், அரிஸ்டாட்டில் கொண்ட தத்துவம் அவர்கள்மீது ஆட்சிபுரியாமல் இல்லை. லெபினிஸ் என்னும் நவீன காலத்துத் தத்துவப் புலவர் இடைக்காலத் தத்துவ ஆசிரியர்களுடைய நூல்களை நன்கு ஆராய்ந்திருக்கிறார் என்பது அவருடைய நூலைத் துருவி ஆராய்வோர்க்கு நன்கு புலனாகாமற்போகாது.

சட்டத்துறையிலும் இடைக்காலத்துப் புலவருக்கும் நவீன காலத்து லாக்குக்கும் (Locke) ஒரு தொடர்பைப் பார்க்க இயலும். காரணகாரியம்போன்ற கருத்துகளை எள்ளி நகையாடுகின்ற ஹ்யூமின் (Hume) இடைக்காலத்துத் தத்துவத்திலும் சில குறிப்புகளைப் பார்க்கின்றோம். எனவே, பண்டைய கிரேக்க காலம், இடைக்காலம், மறுமலர்ச்சிக் காலம், தற்காலம் இவற்றையெல்லாம் பிணைக்கின்ற அமிசங்கள் ஆராய்ச்சித் துறையில் இறங்குபவர்கள் கண்முன் மிதந்துவரத்தான் செய்யும்.

யூதர்கள் கண்ட கருத்து, கிரேக்கர்கள் கொண்ட தத்துவம், முகமதியர் பின்பற்றும் சமயம், தொடக்கத்தில் கிறித்துவர்கள் போற்றிய கொள்கை இவை யாவும் இடைக்காலத்துத் தத்துவம் உருவாவதற்குத் துணைபுரிந்திருக்கவேண்டும் என்பதில் யாதோர் ஐயமுமில்லை.

யூதரும் கிறித்துவரும் சமயத்துறையில் நிறுவிய மரபு இடைக்காலத் தத்துவத்திற்குக் களைகண்ணாய் இருக்கின்றது என்று கில்ஸன் (Gilson) என்னும் தத்துவ ஆசிரியர் தம் 'கிவ் வோர்ட்டுச் சொற்பொழிவுகளில்' மிக நயம்பட நவின்றுள்ளார். மேலும், அனுபூதி நெறிதான் சமயத்தின் வேராயிற்றே; அருட்காட்சியைச் சுட்டுகிற சமயமும், பகுத்தறிவைக்கொண்டு ஆராய்கின்ற தத்துவமும் வேறுபட்டுத்தானே நிற்கும். இந் நிலையில் கிறித்துவ தத்துவம் என்று உண்டா? என்று வினவுவோர்களுக்கு கில்ஸன் தக்க மறுமாற்றம் தருகின்றார். ஆண்டவன் அருளிலிருந்து பிறக்கும் சமய உண்மைகள் உதயமாகும்போது அவை பகுத்தறிவின் விளைவுகள் என்று சொல்லமுடியாது; ஆனால், அவ்வுண்மைகள் பகுத்தறிவுக்கு முரணாக இரா என்று லெஸ்ஸிங் (Lessing) கூறுகிறார். அனுபூதி நெறிக்குத் தருக்க முறையில் விளக்கம் தரமுடியுங்கால், ஏன் கிறித்துவ தத்துவம் என்று இருக்க இயலாது? ஆதலால், அருட்காட்சியில் நிற்கிற சமயத்தைத் தருக்க முறைகொண்டு மெய்ப்பிக்கலாமன்றோ? சமயத்தை அடிப்படையாகக்கொண்ட இடைக்காலத் தத்துவம் ஆராய்ச்சிக்குரியது; அதைப் புறக்கணிப்பது அழகன்று.

# 2. பழைய ஏற்பாடும் புதிய ஏற்பாடும்
## (Old Testament and New Testament)

கிறித்துவ சமயந்தான் இடைக்காலத் தத்துவத்திற்கு ஆதார சுருதியானபடியால், அதன் பிறப்பும் வளர்ச்சியும் நம் சிந்தையை ஈர்க்காமற்போகா.

இயேசுநாதர் ஒரு யூதரே ஆயினும், யூதர்கள் கொண்ட முறைகளைத் தாக்கினதால், அவரைச் சிலுவையில் ஏறும்படி அவர்கள் சூழ்ச்சி புரிந்த வரலாற்றை நாம் அறிவோம்.

'நான் பழைய ஏற்பாட்டைக் குலைக்க வரவில்லை; அதை நிறைவேற்றவே தோன்றினேன்' என்று இயேசுநாதர் இயம்புகின்றார். புத்தர்பிரானும் இந்து தருமத்தை மாய்க்கவில்லை; அதன்கண் மண்டியிருந்த மாசுகளை அகற்றினார் என்பதுதான் உண்மை. 'தேவனே ஒருவன்; அவனிடம் தஞ்சம் புகுவதுதான் மனக்கவலைகளை மாற்றுவதற்கு மாமருந்தாகும்; அவனுடைய அருள் நம்மைக் காப்பாற்றும் கவசமாகும்' என்று பழைய ஏற்பாடு பகர்கின்றது.

'எல்லாவற்றையும் துறந்து ஆண்டவனை நாடுங்கள்' என்றுதான் இயேசுநாதரும் சாற்றுகின்றார். ஆனால், யூதர்கள் வழிபடும் தெய்வம் ஒரு குறிப்பிட்ட மனித இனத்தைத்தான் காப்பாற்றுகின்றது—அந்த இனத்திற்கு இன்னல் புரிகின்ற பகைவர்களை அது அழித்துவிடுகின்றது. 'யார் தம் சகோதரர்?' என்பதற்கு இலக்கணம் வகுக்கும்போது, 'யார் அன்பு நெறியைப் பின்பற்றி நிற்கின்றார்களோ, அத்தகைய அனைவரும் உடன்பிறந்தோர்கள்' என்று கூறுகின்றார். பழைய ஏற்பாட்டில் கோயில்கொண்டிருக்கும் தெய்வம் கடுஞ்சீற்றமிக்க தெய்வமாகக் காட்சி அளிக்கின்றது; இயேசுநாதர் வழிபடும் தெய்வமோ கலப்பற்ற அருளும் அன்பும் உருவெடுத்ததுபோல நம்முன் நிற்கின்றது.

யூதர்கள் சடங்குகள்மீதும் வேள்விகள்மீதும் கவனத்தைச் செலுத்தினார்கள். உள்ளன்பு இருந்தால் போதும் என்று இயேசுநாதர் உரைக்கின்றார். உண்ணா நோன்பை ஏற்கும்பொழுதும் சந்தனப்பூச்சால் அதை மறைத்துவிடவேண்டும். உலகம் உவப்பச் செய்யாமலிருப்பது நலமாகும். காணிக்கையின் அளவைப் பொறுத்ததன்று ஒருவனுடைய வழிபாடு. சான்றாக, ஒரு கைம்பெண் தனக்குரிய சிறுதொகை அனைத்தையும் ஆண்டவனுக்குக் காணிக்கையாகச் செலுத்தினாள்.

அதைத்தான் ஆண்டவன் ஏற்றான். செல்வம் படைத்தோர்கள் நல்கிய உயர்ந்த மாணிக்கங்களையோ வயிரங்களையோ அவன் விரும்பவில்லை.

'உலகமறியாது ஈதல்தான் சிறந்த அறமாகும். ஒரு கை புரிவது மற்றொரு கைக்குத் தெரியவேண்டாமென்கிறார். பெயருக்கும் புகழுக்கும் செல்வத்தை வாரியிறைக்கின்ற மக்களின் அறத்தை அவன் போற்றமாட்டான். செயல்களைக் கொண்டு ஒருவனை மதிப்பிடாதே; அவன் உள்ளத்தில் எழும் உயர்ந்த உணர்ச்சிகளுக்கு—உலகமறியாத அவன் உணர்ச்சிகளுக்கும் இலட்சியங்களுக்கும்—நீ வணக்கஞ் செய்வாயாக' என்று பிரௌனிங் (Browning) உரைக்கின்றார்.

ஞாயிற்றுக்கிழமை ஒரு தொழிலையும் செய்யக்கூடாது என்று யூதர்கள் வற்புறுத்தினார்கள். 'ஒரு குழந்தை கிணற்றில் விழுந்துவிட்டால், ஞாயிற்றுக் கிழமை ஆயிற்றே என்று வாளாவிருக்கமுடியுமா?' என்று இயேசுநாதர் வினவுகிறார். மேலும், 'மனிதனுக்காக ஞாயிறு வழிபாடா? ஞாயிறு வழிபாட்டிற்காக மனிதனா?' என்ற கேள்வியை எழுப்பிவிட்டார். தாபனங்களுக்காக நாமில்லை; நம்முடைய அகவுயிர் வளர்ச்சிக்காகவே தாபனங்கள் அமையவேண்டும் என்னும் பேருண்மையை நாம் நம் நெஞ்சில் இருத்தி வைத்துக்கொள்ளவேண்டும்.

பழைய ஏற்பாட்டிலும் உளத்தூய்மை போற்றப்படாமலில்லை; ஏதோ ஒரு தனித்த குரல்தான் கேட்டது; ஆனால், அக் குரல் புதிய ஏற்பாடு முழுவதிலும் ஒலிக்கின்றதை உணர்கின்றோம். மோஸஸ் மொழிந்த அறிவுரைகளுக்கு ஒரு புதிய விளக்கம் அளிக்கின்றார் இயேசுநாதர். 'பிறர் பொருளைக் களவாடாதீர்கள்' என்று மோஸஸ் உரைக்கின்றார். 'சிந்தையாலும் விழையாதீர்கள்' என்று இயேசுநாதர் கூறுவதில் எவ்வளவோ பேருண்மை கரந்து நிற்பதைப் பார்க்கின்றோம். உளம், உரை, செயல் இம் மூன்றும் ஒரே சுருதியில் பேசவேண்டும். உளம் ஒன்று கருதும்; உரை இதற்கு மாறாக ஒலிக்கும்; செயலோ இவ்விரண்டிற்கும் முரணான ஒன்றை நாடும். வாழ்க்கையாம் யாழில் இம் மூன்றும் குழைந்து இசைத்தால்தான் ஆண்டவனுக்கு மனிதன் புரியும் வழிபாடு ஓர் உண்மையான வழிபாடாகும்.

'பிறர் மனைவியர்பால் செல்லாது நிற்பாயாக' என்று மோஸஸ் வழங்கும் அறிவுரை போற்றுதற்குரியது. வள்ளுவரும் 'பிறர் மனை நோக்காத பேராண்மையைச்' சிறப்பித்துச் செப்புகின்றார். 'மனத்தால் நினைத்தாலும் பிறர் மனைவியை அடைந்த குற்றமாகும்' என்று இயேசுநாதர் ஒரு புதிய விளக்கம் நல்குகின்றார்.

மோஸஸ் வகுத்த நெறிப்படி, நேர்மையாய் நடக்காத ஒரு பெண்ணை நடுத் தெருவில் நிறுத்தி, அவள் மீது கற்களைப் பெய்து, அவளை மாய்த்துவிடவேண்டும். நெறிபிறழ்ந்த ஒருத்தியை யூதர்கள் அழைத்துவந்து, 'இவளுக்கு என்ன தண்டனை விதிக்கப்போகின்றீர்கள்' என்று இயேசுநாதரை வினவ, 'மனத்தினாலும் விழையாத ஒருவன் இவள்மீது கல்லை எறியக்கடவானாக' என்று கூறினார். ஒவ்வொருவரும் தத்தம் மனத்தை ஆராயத்தொடங்கினார்கள். அங்குள்ள

அனைவரும் மனத்தால் புரிந்த குற்றத்திற்கு ஆளாகிக் கல்லை அப் பெண்மீது எறியமுடியாமல் அப்புறம் அகன்றார்கள்.

'இனி இத்தகைய குற்றத்தைச் செய்யாமலிருப்பாயாக' என்று இயேசுநாதர் இயம்பி, அவளுக்கு விடைகொடுத்து அனுப்பிவிட்டார்.

செயல் பெரிதன்று; உளத்தூய்மைதான் என்ஞான்றும் போற்றுதற்குரியது. கங்கையாடினாலும், காவிரிப் புனலில் தோய்ந்தாலும், கடலில் குளித்தாலும் யாதொரு பயனுமில்லை; நீராடுதல் என்பது மனத்து மாசுகளைத் துடைப்பதே; தூய்மை என்பது ஐம்புலன்களை அடக்குவதே. இந்த உரைகல்லை வைத்து மாந்தர்களைத் துருவி ஆய்ந்துபார்த்தோமானால், கோடியில் ஒரு சான்றோன் இருப்பானா என்ற வினாவை நாமே எழுப்பிவிடுவோம்.

பழைய ஏற்பாடு பழிக்குப் பழிவாங்கும் அறத்தை வற்புறுத்துகின்றது. ஒருவன் கண்ணைப் பிடுங்கினால் அவன் கண்ணைப் பிடுங்கிவிடலாம் என்ற முறைக்கு மாறாகக் குற்றம் புரிந்தோர்களுக்கு இரங்கி அவர்கள் நாண நன்னயம் புரிந்துவிடலே ஓர் உயர்ந்த நெறியாக இயேசுநாதர் கொள்கின்றார். ஒரு கன்னத்தில் அறைந்தவனுக்கு மற்றொரு கன்னத்தை நீட்டு; வைதவர்களை வாழ்த்து. 'தின்னவரும் புலியையும் அன்னை பராசக்தி என்று தொழுவாயாக' என்று பாரதியும் இசைக்கின்றாரன்றோ! பழைய ஏற்பாட்டில் நியாயமும் அறநெறியும் வற்புறுத்தப்பட்டிருக்கின்றன; புதிய ஏற்பாட்டில் அருள்தான் ஆட்சிபுரிகின்றது. அறத்தையும் அருளையும் உயர்ந்த நிலையில் பிரிக்க முடியாது. அருளில்தான் அறம் மலரவேண்டும். அருளும் அறமும் கைகோத்துக் களிநடனம் புரிய வேண்டும். ஷேக்ஸ்பியர் எழுதிய 'வெனிஸ் வர்த்தகன்' என்னும் நாடகத்தில் லாரன்ஸோ என்னும் கிறித்துவன் யூதர் இனத்தைச் சார்ந்த ஷைலக் மகளான ஜெஸிக்காவை மணக்கின்றான். இந்தத் திருமணத்தில் பழைய ஏற்பாட்டில் காணப்படும் அறத்துக்கும் புதிய ஏற்பாட்டில் அமைந்திருக்கும் அருளுக்கும் நிகழ்ந்த மணத்தைத்தான் நாம் பார்க்கின்றோம். 'அறிவுமட்டும் போதாது, அன்பும் வேண்டும்; அன்புமட்டும் போதாது, அறிவும் வேண்டும்; இவ்விரண்டும் செங்கோல் செலுத்தும் ஆட்சியில்தான் உலக நாகரிகம் தழைத்தோங்கும்' என்று ரஸ்ஸல் கூறுவது மிகப் பொருத்தமே.

தற்காலத்தில் அறிவு ஓர் அரக்க வடிவில் கோரக்காட்சி அளிக்கத் தொடங்கி விட்டது. விஞ்ஞான விளைவுகளால் உலகத்தையே அழித்துவிடலாம்; ஆனால், இத்தனை கருவிகளையும் மனிதனுடைய நலத்திற்காகப் பூட்டினால், ஒரு புதிய உலகம்—அன்பு ஆட்சி புரிகின்ற உலகம்—நம்முன் விரியக் காண்போம்.

ஒன்றும் ஒரு பாழிலிருந்து தோன்றிவிடாது. வானளாவி நிற்கும் ஓர் ஆல மரமும் ஒரு சிறு விதையிலிருந்துதான் விரிந்து நிற்கின்றது. அச் சிறு விதையில் அந்த ஆலமரம் கூம்பியிருக்கின்றது. கூம்புதலிருக்குமானால் (involution) அதில் விரிதல் (evolution) இருக்கத்தான் செய்யும். எத்தனையோ அற்புதங்கள் தோன்றினாலும், இனித் தோன்றக்கூடியவைகளாயிருந்தாலும், அவையனைத்தும்

காலச்சூலில் கரந்துநிற்கின்றன என்ற அடிப்படையான தத்துவமாம் அத்திவாரத்தின்மீது தம்முடைய வான்தத்துவக் கோயிலை ஸ்ரீ அரவிந்தர் எழுப்புகின்றார். 'இல்லாத இல்லை இளங்குமர!' என்று இராமன் தன் தம்பியைப் பார்த்துக் கூறிய மொழியில் ஒரு தத்துவம் கோயில்கொண்டுதான் இருக்கின்றது. ஒத்த சிந்தையுடைய நாமெல்லோரும் நீண்ட காலத்தடலால் பிரிக்கப்பட்டிருந்த போதிலும் ஒரே காலத்தில் வாழ்ந்தவர்களாகத் திகழ்ந்துவிடுவோம். 'வரலாறு' என்னும் தம் கட்டுரையில் எமர்சன் (Emerson) தரும் கருத்துகள் ஆழ்ந்து சிந்திப்பதற்குரியவை.

"பிளேட்டோ கருதியதை நாமும் நினைக்கக்கூடும்; ஒரு ஞானி உணர்ந்ததை நாமும் உணரமுடியும். எந்தக் காலமானாலும் சரி 'ஒரு மனிதனுக்கு நிகழ்ந்த' ஒன்றை நாம் அறிந்துகொள்ள இயலும்; மனம் ஒன்றே."

அந்த அகில மனவுலகத்தில் நுழைந்துவிட்டால், எல்லோருடைய கருத்துகளும், எல்லோருடைய உணர்ச்சிகளும், எல்லோருடைய கற்பனைகளும் நமக்குச் சொந்தமாகப் போய்விடும். ஆதலால், இறந்தகாலம், நிகழ்காலம், வருங்காலம் இம் முக்காலங்களையும்கொண்ட காலவெள்ளத்தின்மீது நாம் மிதந்து செல்வோமாக!

# 3. பண்டைய அறிவுச் செல்வம்

ஒரு நாகரிகமோ அல்லது ஒரு தத்துவமோ சூழ்நிலையின் சேய் என்று கூறிவிடமுடியும். கிறித்துவ சமயம் தோன்றுதற்கு முன்பே கிரேக்க நாகரிகம் தழைத்து ஓங்கி நின்றதை நாம் அறிவோம். மாஸிடோனியாவின் மன்னனை அலெக்ஸாண்டரின் மாபெரு வெற்றிக்குப் பிறகு கிரேக்க நாட்டிற்குக் கண்ணுய் மிளிர்ந்த ஏதன்ஸ் என்னும் நகரம் அழிந்துபோய்விட்டது. ஆனல், அந் நகர் நிறுவிய அறிவுச் சாம்ராச்சியம் காலவெள்ளத்தை நீந்தித்தான் நிற்கின்றது. சாக்ரடீஸ், பிளேட்டோ, அரிஸ்டாட்டில் இம் மூன்று அறிவுச் சிகரங்கள் வானளாவி நிற்கத்தான் செய்யும்.

## சார்லிமேன் (Charlemagne)

சார்லிமேன் கி.பி. 800ஆம் நூற்றுண்டில் சக்கரவர்த்தியாக முடிசூட்டப் பட்டார். இந்த ஆண்டையே இடைக்காலத் தத்துவத்தின் தொடக்கமென்று கூறலாம். ஜஸ்டினியன் 529ஆம் ஆண்டு ஏதன்ஸ் நகரிலுள்ள தத்துவ ஆராய்ச் சிச் சாலைகளை மூடிவிட்டான். கிறித்துவரல்லாதவர்களும் புதுமுறைப் பிளேட்டோ கொள்கையை ஏற்பவர்களுமான மக்கள் (Neo-platonists) பாரசீக நாட்டிற்கு ஓடிவிட்டார்கள். வாண்டல்ஸ் என்று அழைக்கப்படும் வடநாட்டுக் கொள்ளைக் காரர்கள் ஞானி அகஸ்டைன் உறைந்துவந்த ஹிப்போ என்னும் நகரத்தைச் சூறையாடிவிட்டார்கள். ஆனல், அவர் எழுதிய நூல்கள் இடைக்காலத்துத் தத்துவ உலகின்மீது ஆட்சிபுரிந்தது என்பது உண்மையே. ஆனல், இடைக்காலத் தத்துவத்தின் மூலவேர்களை கிரேக்க நாகரிகத்திலும், அதன் அடிச்சுவட்டைப் பின்பற்றிய ரோமானியர்களின் பண்பாட்டிலும் நாம் காண்கின்றோம்.

முதன்முதலாக ஞானதூதர்களும், அவர்களுக்குப் பிறகு வந்தவர்களும் கிறித்துவ சமயத்தைப் பரப்பினர்கள்; ஆனல், அதை ஒரு தத்துவமாக்கி உலகத்திற்கு அளிக்கவில்லை. கிறித்துவ சமயத்தைக் காப்பாற்றும்பொருட்டு அரும்பாடுபட்டார்கள்.

மார்கியேனஸ் அரிஸ்டிடீஸ் (Marcianus Aristides, கி.பி. 140), அத்தினை கோரஸ் (Athenagoras, கி.பி. 177), பரம தியாகியான ஞானி ஜஸ்டின்

(கி.பி. 106-164) இம் மூவரும் கிறித்துவ தத்துவத்திற்கு விளக்கம் தருகிற பொழுது, பிளேட்டோ கொண்ட தத்துவத்தையும், அரிஸ்டாட்டில் கண்ட தருக்க முறையையும் அடிப்படையாகக்கொண்டு தம் ஆராய்ச்சிகளில் இறங்கினார்கள். இப்படி இறங்குவது தவறு என்று டெர்டுலியன் (Tertullian) என்னும் ஆசிரியர் கூறியுள்ளார். பல ஆண்டுகளுக்குப் பின் வந்த ஞானி தாமஸ் அக்யுனஸ் (St. Thomas Aquianas) அரிஸ்டாட்டிலின் தருக்க முறையை முற்றிலும் பயன் படுத்திக்கொண்டுவிட்டார்.

பல தெய்வ வழிபாடுகள் மறைந்துபோயின. தெய்வங்கள்கூட எல்லா வற்றையும் ஆட்டிவைக்கிற ஒரு விதியின் ஆட்சிக்கு உட்பட்டுள்ளன என்ற கொள்கையிலிருந்து 'தெய்வம் ஒன்றே' என்று யூதர்கள் தம் கருத்தைத் திரட்ட லானார்கள்.

மேலும், ஹோமர் எழுதிய இலியத்தில் காணப்படும் தெய்வங்கள்கூட உருவகப்படுத்தப்பட்ட சக்திகள் தவிரப் பிறிதில்லை என்று ஆராய்ச்சி செய்யத் தொடங்கினார்கள். தெய்வத்தின் சலனங்கள், போர்கள், நிகழ்ச்சிகள் இவை யாவும் இயற்கைச் சக்திகளின் ஓட்டங்களே. கிரேக்கர்கள் போற்றும் இஸ்யூஸ், மனத்தைச் சுட்டும் அத்தினே கலையின் சிறப்பைக் காட்டுதற்பொருட்டுக் கவி சித்திரித்த வடிவமாகும். அப்பாலோ ஞாயிறுதான். அவனுடைய அம்புகள் வெய்யோனின் கதிர்களே. தன்னுடைய அம்புகளால் மக்களை அழித்துவிட்டான் என்றால், வெங்கோடையில் மக்கள் தொத்துநோய்க்கு இரையாகி மாண்டனர் என்றுதான் கொள்ளவேண்டும். ஹெர்மீஸ் என்னும் தெய்வம் தேவர்களின் தூதாகக் கருதப்படுகிறது. பேச்சுமூலந்தானே கருத்துகள் வெளியாகின்றன. மேலும், இத் தெய்வம் ஆடுகளைக் கொண்டுபோகின்றது என்ற எண்ணத்தின்மீது மக்களாம் ஆடுகளை நல்வழியில் செலுத்தும் ஆயனாக இயேசுநாதர் இருக்கின்றார் என்பது நிறுவப்பட்டிருக்கிறது.

யூலிஸிஸ் புயற்காற்றும் பெரு மழையும் பின்தொடரத் தன்னுடைய கடற் பிரயாணத்தை நடத்தினான் என்றால், வாழ்க்கைப் புயல்களோடு ஒருவன் போராடு கிறான் என்றுதான் கருதவேண்டும். அரிஸ்டாபுலஸ் (Aristobulus — கி.மு. 170–150) பழைய ஏற்பாட்டிற்கு விளக்கம் தருகின்றபொழுது, ஆண்டவன் கை என்றால் அவனுடைய மாபெரும் சக்தியென்றும், அவனுடைய பாதங்களென்றால் நிலைபெற்றிருக்கும் உலகம் என்றும் நினைக்கவேண்டுமென்கிறார். கிரேக்கர்கள் தாம் யூதர்களைப் பின்பற்றினார்கள் என்றும் சாதிக்கின்றார்.

பைலோ (Philo) என்பவர் கட்புலனுக்குப் பொருளாகின்ற அனைத்தும் உளம், உரை கடந்த ஒன்றை மூடியிருக்கிற போர்வைகள் என்று நினைக்கின்றார். இவர் யூதர்கள் கொண்ட முறையை ஏற்காது கிரேக்கர் நல்கிய பாதையிலேதான் செல்லுகின்றார். மோஸஸ் வழங்கிய நூல்களில் கிரேக்க தத்துவங்கள் கோயில் கொண்டிருக்கின்றன என்று மொழிகின்றார். பழைய ஏற்பாட்டில் கிறிஸ்துவ

தத்துவங்கள் கரந்து நிற்கின்றன என்று கிறிஸ்துவ சமயவாதிகளே கூறுவது நோக்குதற்குரியது. உண்மையைக் கூறுமிடத்து, எல்லாக் கவிஞர்களும், எல்லா ஞானிகளும், எல்லாத் தீர்க்கதரிசிகளும் ஆண்டவன் கையில் திகழும் வேய்ங்குழல்களே; அவற்றின்வாயிலாக ஆண்டவன் அருட்கீத வெள்ளம் வழியக் காண்கின்றோம்.

1888ஆம் ஆண்டில் ஹிப்பர்ட் சொற்பொழிவுகளை நடத்திய ஹாச் (Hatch) என்னும் பழுத்த அறிவுபடைத்த ஆசிரியரும், ஹென்ரி ஆஸ்பொர்ன் டெயிலர் (Henry Osborn Taylor) என்னும் அறிஞரும் இடைக்காலத் தத்துவ உலகத்தில் புகுந்த கிரேக்கர், ரோமானியர் இவர்களுடைய இலக்கிய மரபுகள், கவிதைச் செல்வங்கள், தத்துவ ஆராய்ச்சிகள், ஓவியக்கலை, சிற்பத்தின் சிறப்பு, கட்டடக்கலை இவற்றின் இயல்பைத் தக்க சான்றுகள் கொண்டு நுட்பமாய் ஆராய்வதை நோக்குங்கால், நாம் ஒரு பெரு வியப்பில் ஆழ்ந்துபோகாமலிருக்க முடியாது.

கி.பி. 270ஆம் ஆண்டில் இறந்த பிளோடைனஸ் (Plotinus) பிளேட்டோவின் அடிச்சுவட்டைப் பின்பற்றினர். இவர் படைத்த கொள்கைக்குப் ‘புதுமுறைப் பிளோட்டோ தத்துவம்’ என்று மௌலி சூட்டினர்கள். சிந்தையையும் சொல்லையும் கடந்த ஒரு பரம்பொருளை நாடவேண்டும். அப்படி நாடினல் பேரின்பத்தை எய்த முடியும். அவர் கண்ட ஒழுக்க இயல் இதுவே. ஐம்புலச் சேற்றிலிருந்து ஒருவன் தன்னைத் தூய்மைப்படுத்திக்கொள்ளவேண்டும். இதுதான் துறவு நெறியாகும். இடைக்காலத்தில் துறவு வாழ்க்கையை வற்புறுத்திய சான்றோர்கள் தனித்தே மடங்களில் உறைந்துவந்தார்கள். அத்தகைய வாழ்க்கை நெறிக்கும், பிளோடைனஸ் வகுத்த ஒழுக்க இயல் ஒரு விடிவெள்ளியாய்த் திகழ்கின்றது என்று மொழிந்தால் அது மிகையாகாது.

பார்பைரி (Porphyry), ஐயாம்பிலிக்கஸ் (Iamblicus) இவ்விருவரும் பிளோடைனஸ் ஏற்றிவைத்த ஞானதீபத்திற்கு வணக்கஞ் செய்தார்கள். பார்பைரி டையரைச் சார்ந்தவர்; நிரம்பப் படித்தவர்; நுண்ணிய அறிவுடையவர். மிகவும் கடுமையான ஒழுக்க நெறியிலே நடப்பவர். அரிஸ்டாட்டிலின் இனவியல் என்னும் (Categories of Aristotle) நூலில் நுழைவதற்குற்ற ஒரு வாயில் வகுத்துள்ளார்.

இந் நூல் இடைக்காலத்துத் தருக்க அறிவுக் கோயிலுக்கு ஓர் ஆதாரக் கல்லாய் விளங்கிற்று. இவர் தம் உயர்ந்த கொள்கைகளை வெளியிட்டுள்ளார். உயர்தியாகம் என்பது ஆசாபாசங்களிலிருந்து விடுபட்டிருப்பதே. நம்முடல் ஆன்மா கழற்றி எறியக்கூடிய ஓர் உடைதான். ஆண்டவன் உறைகின்ற கோயில் நம் இதயமே. இப்படி இயம்புகின்றவர், பேய்களும், பூதங்களும், தேவர்களும் நம்மை ஆண்டவன்பால் நடத்திச் செல்லக்கூடும் என்று கருதுகின்றார். ஐயாம்பிலிக்கஸ் இதே கருத்து உடையவராய்க் காட்சியளிக்கின்றார்.

தேவர்கள் நமக்குப் பரிந்து பேசக்கூடும் என்னும் நம்பிக்கையில் இயேசுநாதர் ஆண்டவனிடத்தில் தமக்காகப் பரிந்துபேசக்கூடும் என்று கிறித்துவர்கள் நம்பும் கொள்கை கரந்து நிற்கின்றது. ஞானி அகஸ்டைன் பிளேட்டோ கொள் கையின் ஆட்சிக்கு நேரடியாய் உட்படவில்லை. ஆனால், எங்கும் சூழ்ந்திருந்த புதுமுறைப் பிளோட்டோ தத்துவத்தில் அவரும் தாலாட்டப்பட்டார். நாஸ்டிக் (Gnostics) கொள்கை, மானிக்கேயிஸம் (Mani-chæism) என்னும் கொள்கை, பாரசீகரின் தத்துவம் இவை யாவும் என்றும் அழியாத ஒரு தீமையின் இருக் கையை நம்புகின்றன. இவ்விரு பிளவுபட்ட கொள்கையைக் கிறித்துவர் ஏற்க வில்லை என்றாலும், பெருந்தீதை விளைவிக்கும் சாத்தான் என்னும் கொடிய பாவி இருக்கிறான் என்று எண்ணுகிறார்களல்லவா? கிரேக்கர்கள் கண்ட ஒழுக்க இயலின் சிகரத்தை எபிக்டெடஸ் (Epictetus) என்னும் சான்றோனிடத்தில் உணர்கின்றோம்.

நாம் அனைவரும் ஆண்டவன் குழந்தைகள். அம் முறையில் நாம் மற்றவர் களோடு அன்பு காட்டிப் பழகவேண்டும். அவர் வகுத்த நெறியைப் பின்பற்றுவதே அறமாகும். அவர் எல்லாம் அறிந்தவர். அவர் கட்டளையை எஞ்ஞான்றும் நிறை வேற்றவேண்டும். அவர் அருளுக்காகக் காத்திருக்கவேண்டும். அவர் அருள் முகில் எப்பொழுது பொழியுமோ யாம் அறியோம். அவர் சங்கற்பப்படி எல்லாம் நடக்கட்டும்.

இதே சுருதியில்தான் இயேசுநாதரும் பேசுகின்றார். மேலும், ஞானதூதர்கள் வழங்கிய நற்செய்திகள் கொண்டு வைதிக யூதர்களை நிந்தித்துக் கிறித்துவர்கள் பேசுகின்றார்கள். ஆனால், 'பன்னிரு குடும்பத் தலைவர்கள் அளித்த சாதனங்கள்' என்னும் நூல் கி.மு. 109ஆம் ஆண்டிலோ அல்லது 107ஆம் ஆண்டிலோ ஒரு வைதிக யூதரால் எழுதப்பட்டது. அந்த நூலில் இயேசுநாதர் பொழிந்த மலை உபதேசத்தின் உட்கருத்து அப்படியே கோயில்கொண்டிருக்கிறது என்று ரஸ்ஸல் மொழிகின்றார். ஒரு கன்னத்தில் அறைந்தால் மற்றொரு கன்னத்தை நீட்டுவா யாக என்னும் உயர்ந்த மனப்பண்பு சாக்ரடீஸைப்பற்றிப் பிளேட்டோ எழுதிய உரையாடலில் எத்தனையோ நூற்றாண்டுகளுக்குமுன் வேரூன்றி நிற்கப் பார்க் கின்றோம். கருத்துலகம் எவருக்கும் உரியதன்று. ஒத்த மனப்பண்புடைய அனைவரும் அதில் நுழையலாம். இஸ்டாயிக் கொள்கையினர் பிரபஞ்சத்தில் ஓர் ஒழுங்கைப் பார்க்கின்றனர். கதிரவன் தோன்றி மறைகின்றான். திங்களும் தன் நீண்ட யாத்திரையை விண்ணில் நடத்துகின்றது. விண்மீன்கள் இடையறாது காவல்புரிகின்றன. ஒழுங்காய் எல்லாம் நடக்கிறதைப் பார்த்தால், எல்லாவற்றையும் உந்தும் ஓர் அகண்ட சக்தியிருக்கவேண்டும் என்று தோன்று கிறது.

எந்தத் தொழிலைப் புரிகின்றவனும் ஆண்டவனுடைய புகழைத்தான் இசைக் கின்றான். அவன் உலகைப் படைக்கின்றானா? எல்லாம் வல்லவனும் எல்லா நற்குணங்களும் பெற்றவனுடைய அருளாட்சியில் தீமை எப்படிப் புகுந்தது

என்னும் வினவை எழுப்புவார்கள். அவன் படைக்கவில்லை; ஏற்கெனவே இருந்த பிரகிருதியை ஓர் சிற்பிபோலச் செதுக்கி உருவாக்கினன் என்று வேறு சிலர் கருதுவார்கள்.

இந்த இடையருத சர்ச்சைகளில் வீணே காலத்தைப் போக்காமல் ஆண்டவனுடைய அருள் நெறியைப் பின்பற்றினல்தான் அமைதி ஏற்படும் என்னும் நம்பிக்கையில் வேரூன்றிநிற்கும் சான்றோர்கள் பேரமைதி அடைவார்கள் என்பது திண்ணம். கிறித்துவ இறைநூலை உருவாக்குவதற்குக் கிரேக்க நாட்டுச் சான்றோர்கள் துணைபுரிந்திருக்கிருர்கள் என்பது வரலாற்றுப் புலவர்களுக்குத் தோன்ருமற்போகாது.

கிறித்துவர்கள் பின்பற்றும் பழக்கவழக்கங்களின் வேர் கிரேக்க பழக்கங்களில் ஓடியிருப்பதை உணர்கின்ருேம். ஆர்பிக் கொள்கையினர் சில இரகசியங்களை வெளியிடாமல் போற்றிவந்தனர். அந்த இரகசியங்களை ஏற்க விரும்புகிறவர்கள் தூய்மை உடையவர்களாயிருக்கவேண்டும். நீராடிய பிறகே ஒரு தனித்த இடத்திற்கு வரவேண்டும். இந்த நீராட்டம் கிறித்துவ சமயத்தில் இடம் பெற்றிருக்கிற ஞானநன்னீருக்கு விடிவெள்ளியாய்த் திகழ்கின்றது.

இரகசியங்களைக் கண்டவர்களுக்கு உபதேசம் செய்யக்கூடாது. அவற்றை உள்ளபடி அறியாமல் மனக்குழப்பத்திற்கு அவர்கள் ஆளாய்விடுவார்கள். கழுதைக்குத் தெரியுமா கற்பூர வாசனை என்று நாம் அடிக்கடி சொல்லுவோம். 'பன்றிகள் முன்பு நன்முத்துகளை வாரி இறைக்காதீர்கள்' என்று இயேசுநாதர் இயம்பியிருக்கின்ருரன்ருே? பாத்திரம் அறிந்து நல்லுரைகள் வழங்குவதுதான் முறையாகும்.

கவிதை மரபுகளும் கிறித்துவ சமயத்திற்கு மிகவும் பயன்பட்டன. கிரேக்க இலக்கியத்தில் காதலைச் சித்திரிக்கும் பாடல்கள் ஆண்டவனுக்கும் ஆன்மாவுக்கும் தொடர்ந்து நடக்கும் திருமணமாக மாற்றுவதற்குற்ற கருவிகளாய் இடைக் காலச் சான்ருேர்களின் கையில் அமைந்துவிட்டன. சங்க காலத்து இலக்கியத்தில் காதலும் போருந்தாம் திகழக் காண்கின்ருேம். உணர்ச்சிகளை அழிக்க முயன்ற சாக்கியர்கள் வெற்றிபெற முடியவில்லை. இந்த உண்மையை அறிந்த ஆழ்வார்களும் நாயன்மார்களும் உணர்ச்சி வெள்ளம் பெருக வாய்க்கால்களை வகுத்தார்கள். புறப்போர் அறப்போராக மாறிவிட்டது; மனிதக் காதல் தெய்வக் காதலாக மிளிர்ந்தது. புற அழகு ஒரு மூல தத்துவத்தின் நிழலென்று பிளேட்டோ உணர்ந்தார். இந்தக் கொள்கையைப் பின்பற்றியே அழகைக் கண்டு அஞ்ச வேண்டியதில்லை, அழகையும் ஆண்டவனின் அருட்சோதியாகக் கொள்ளலாம் என்று கிறித்துவ சமயிகள் உரைத்தார்கள். நம்மாழ்வாரும் பின்வருமாறு இசைக்கின்ருர் :

**'அடங்கெழில் சம்பத்து அடங்கக் கண்டு ஈசன்**
**அடங்கெழி லஃதென்று அடங்குக வுள்ளே'**

எப்படி ஆழ்வார்களும் நாயன்மார்களும் பண்டைய இலக்கிய மரபுகளைத் தம் உணர்ச்சி வெள்ளம் பாய்வதற்குப் பயன்படுத்திக்கொண்டார்களோ அப்படியே மேலைநாட்டிலும் இடைக்காலத்துச் சான்றோர்கள் கிரேக்க இலக்கிய மரபுகளைத் துணையாகக்கொண்டார்கள். சிற்சில சமயங்களில் அவர்கள் மரபுகளையும் உடைத்துத் தள்ளினார்கள் என்பது உண்மையே. கிரேக்க இலக்கியத்தில் எப்பொழுதுமே ஒரு மிதத்தைப் பார்க்கின்றோம். ஆனால், இடி, மின்னல், புயற் காற்று, கடல் இவைபோல ஓங்கி எழும் உணர்ச்சியைப் பழைய மரபில் சிறை செய்ய முடியாது. அப்பொழுது புதிய சந்தங்களை இடைக்காலக் கவிஞர்கள் அமைக்காமல் இருக்கமுடியாது.

இடைக்காலக் கருத்துலகம் பண்டைய கிரேக்கர்களுக்கும், அவர்களின் அடிச்சுவட்டைப் பின்பற்றிய ரோமானியர்களுக்கும் மிகவும் கடமைப்பட்டிருப் பதை எவரும் மறுக்கமுடியாது.

# 4. கிறித்துவ சமயம்

## முதல் நான்கு நூற்றுண்டுகள்

இந்த உலகம் மூல தத்துவத்தின் நிழலென்று பிளேட்டோ பகர்ந்தார். இஸ்டாயிக் கொள்கையினர் உலகத்தில் ஓர் ஒழுங்கைக் கண்டு இன்பதுன்பங் களைத் தங்கள் மனத்திண்மை கொண்டு செற்றுக் களைந்து அகவமைதி பெற்ருர்கள் என்று வரலாறு மொழிகின்றது. இந்த வெற்றியில் மனிதன் செருக் கடைய இடமுண்டு. யூதர்களே ஆண்டவனுடைய கட்டளையைப் பின்பற்ற வேண்டும் என்று இயம்பினுர்கள். அப்படிப் பின்பற்றினுல் உலகத்தின் பல்வேறு இன்பங்களையும் மனிதன் அடைவான்; அப்படி இங்கே எய்தப்பெருமற் போனுலும், மறுமையில் அவனுக்கு இடையருத இன்பம் உண்டு. கிறித்துவர்கள் பணிவையே ஓர் அணிகலமாகக் கொண்டார்கள். எல்லாத் துயர்களையும் நம்மைச் சோதிக்க வந்த ஆண்டவனின் அருளாக ஏற்கவேண்டும் என்ருர்கள். விடுதலை தான் அவர்களுடைய குறிக்கோளாகும். அறிவை அறிவுக்காகவே கிரேக்கர்கள் நாடினுர்கள்; ஆனுல், எல்லாச் செல்வங்களும் விடுதலை பெறுதற்பொருட்டுப் பயன்பட வேண்டுமென்று கிறித்துவர்கள் கருதினுர்கள்.

கிறித்துவ மதம் முதன்முதலாக யூதர்களுக்குள்ளேயே வளர்ந்துவந்தது. கிறித்துவ மதம் என்பது மாசு நீங்கிய யூதர் மதம் என்றே எண்ணினுர்கள். கிறித்துவ மதம் யூதர்களைத் தூய்மைப்படுத்துவதற்குமட்டும் திகழ்ந்தால் போதும் என்று ஞானி பீட்டர் சிந்தித்தார். ஆனுல், கிறித்துவ சமயக் கோயிலின் கபாடங்களை உலகத்திலுள்ள அனைவருக்கும் திறந்துவைக்கவேண்டுமென்பதே ஞானி பாலின் திருவுள்ளமாகும். யூதர்கள் தாம் ஆண்டவனுல் தேர்ந்தெடுக்கப் பட்டவர்கள் என்னும் கொள்கை, செருக்குற்ற கிரேக்கர்களின் மனத்தைப் புண் படுத்திவிட்டது. நாஸ்டிக் (Gnostics) கொள்கையைச் சார்ந்தவர்கள் கட்புல னுக்குப் பொருளாய் நிற்கின்ற இவ்வுலகம் ஒரு தீய தேவதையால் படைக்கப் பட்டது என்று எண்ணினுர்கள். மோஸஸின் பொய் புதைந்த கொள்கையி னின்றும் இவ்வுலகை விடுவிக்க ஆண்டவன் தன்னுடைய அருமை மைந்தனை இயேசுநாதர் என்னும் மனித உடலில் புகும்படி செய்துவிட்டார். 'என்னை ஏன் புறக்கணித்துவிட்டாய் ஆண்டவனே' என்று இயேசுநாதர் தம் இறுதிக்

காலத்தில் கூறிய 'மொழிக்கு அவர்கள் விளக்கம் தருவது நோக்குதற்குரியது. 'இயேசு என்னும் சாதாரண மனிதன் ஞானநன்னீர் பெற்றபொழுது ஆண்டவன் சேய் அவருடைய உடலில் புகுந்தார்; அவரைச் சிலுவையில் வைத்து அறைகின்ற பொழுது அந்தத் தெய்வத் திருமகன் அவருடைய உடலைவிட்டு அகன்று விட்டார். யூதரால் சிலுவையில் ஏற்றப்பட்டது ஒரு பொய் உருவமே தவிரப் பிறிதில்லை' என்றெல்லாம் அவர்கள் ஆராய்ச்சி செய்கின்றார்கள்.

'மானிக்கேயிசம் (Manichæism) என்னும் கொள்கையில் பாரசீகருடைய சமயக் கொள்கையின் அமிசங்களும், கிறித்துவ மதக் கொள்கையின் அமிசங் களும் கலந்து நிற்கின்றன. தீதிற்கும் நல்லதற்கும் இடையறுத போராட்டம் நிகழ்ந்துவருகின்றது என்று அவர்கள் நம்புகின்றார்கள். ஊன் தின்பதை அவர்கள் அறவே வெறுக்கின்றார்கள். மணமும், அதன்கண் பிறக்கும் இன்பமும் அவர்களுடைய பகையம்புகளுக்கு இலக்காயின. ஆண்டவனுக்காகவே தாம் அலிகளாயினேம் என்றும், அவனை மணப்பதைத் தவிர மற்ற சுகங்களை விழைய மாட்டோம் என்று கூறும் கிறித்துவர்களின் நோன்பிற்கு இந்தக் கொள்கை மூலம் இருப்பதை உணர்கின்றோம்.'

கிறித்துவ ஆட்சிக்குப் பிறகும் மேலே குறிப்பிட்ட தத்துவங்கள் சுரந்து தொழில் புரியாமலில்லை.

கிறித்துவர்கள் யூதர்களை வெறுப்பதற்குக் காரணமும் உண்டு. ஆண்டவன் ஞானிகள் மூலமாகவும், தீர்க்கதரிசிகள் மூலமாகவும் இயேசுநாதர் தோன்றுவார் என்று மொழிந்தார் என்னும் செய்தி பழைய ஏற்பாட்டில் குறிக்கப்பட்டிருந்த போதிலும், யூதர்கள் அவரைச் சிலுவையில் ஏற்றிவிட்டார்கள். மோஸஸ் கொள்கையை இயேசுநாதர் மாற்றிய விஷயத்தை அவர்கள் அறிந்தார்க ளில்லை. 'ஆண்டவனைமட்டும் அன்புமூலம் வழிபடுவதோடு நின்றுவிடாதீர்கள்; அவனுடைய குழந்தைகளான உன் அண்டை வீட்டினரிடமும் அன்பு காட்டு வீர்களாக' என்று இயேசுநாதர் அருளிய பொன்மொழிகளையும் மறந்து விட்டார்கள்.

யூதர்களுடைய கொள்கையைக் காட்டிலும் கிறித்துவ சமயக் கொள்கை வளமுற்றுத் திகழ்ந்தது. பிளேட்டோ, இஸ்டாயிக்ஸ் இவர்களுடைய தத்து வங்கள் கிறித்துவ சமய உலகத்தில் புகுந்த காரணத்தால் அவ்வாறு ஏற் பட்டது என்று கூறலாம். மாத்யூ, மார்க், லூயூக் இவர்கள் இயேசுவை ஆண்டவ னுடைய மைந்தன் என்றுமட்டுமே விளக்கம் தந்துள்ளார்கள். ஞானி ஜான் என்பவர் இயேசுநாதரை ஒரு தத்துவ முறையிலே—பிளேட்டோ, இஸ்டாயிக் இவர்கள் கொண்ட தத்துவ முறையிலே—வைத்து ஆராய்கின்றார். மேலும், ஞானி ஜானைப்பற்றித்தான் கிறித்துவ சமயத் தந்தையர்கள், பாதிரி மார்கள் மிகுதியாகப் பேசுகின்றார்கள் என்று ரஸ்ஸல் உரைக்கின்றார். ஞானி பாலிடமும் கிரேக்கருடைய பண்பாட்டின் மணம் வீசுகின்றது; ஆனால்,

'கிரேக்க தத்துவ மூலம் அழிந்து போகாமல் உங்களைக் காப்பாற்றிக்கொள்வீர்களாக!' என்றும் அவர் எச்சரிக்கை செய்கின்றார்.

கிரேக்க தத்துவத்தையும் பழைய ஏற்பாடு, புதிய ஏற்பாடு இவற்றையும் இணைத்துப் பார்க்கும் பேறு ஒரிஜன் (Origen—கி.பி. 185-254) என்னும் சான்றோனைச் சார்ந்ததாகும். பைலோவைப் (Philo) போலவே இவர் அலக்ஸாண்டிரியாவில் வாழ்ந்துவந்தார். இவருடைய நூலில் பிளோடைனஸ் கண்ட தத்துவத்தின் எதிரொலியைக் கேட்கின்றோம். தந்தையான கடவுள், அவருடைய சேயான இயேசுநாதர், பரிசுத்த ஆவி இவர்களோ கலப்பற்ற சின்மயங்களாகத் திகழ்கின்றார்கள். மற்றை அனைத்திற்கும் பிரகிருதியின் தொடர்பு உண்டு. கிறித்துவ சமயிகள் ஏற்காத தத்துவங்களை இவர் வெளிப்படுத்தியபடியால், இவரை அவர்கள் வெறுக்கலானார்கள். (1) ஆன்மாக்கள் படைப்புக்கு முன்பே அநாதியாய் இருக்கின்றன. (2) இயேசுநாதரின் இயல்பும், அவருடைய தெய்விக நிலையும் அவர் அவதாரம் செய்வதற்கு முன்பே மிளிர்ந்துகொண்டுதான் இருந்தன. (3) இறுதி நாளில், உயிர்த்தெழுகின்ற அந் நாளில் நம்முடைய உடல்கள் யாவும் தெய்விக உடல்களாக மாறிவிடும். மனிதர்கள் அனைவருக்கும் விடுதலை என்பது திண்ணம். பேய்களுக்கும் ஆண்டவனுடைய அருட் கபாடங்கள் திறந்துவிடும் என்று கூறுகின்றார். பிளேட்டோவின் அடிச் சுவட்டைப் பின்பற்றிக் கிறித்துவ சமயத்திற்கு விளக்கம் தருவதைக் கண்டு முதலில் ஞானி ஜெரோம் (St. Jerome) வியந்தாலும், இவர் கூறியது கிறித்துவக் கொள்கைக்கு முரணானதுபற்றி இவரை வெறுக்கவுந் தொடங்கிவிட்டார்.

மேலும், ஆண்டவன் அருள் நகரில் புகுவதற்குத் தங்களை அலிகளாய்ச் செய்துகொண்டார்கள் என்று விவிலிய நூலில் கூறியிருப்பதை அப்படியே உண்மையாக நினைத்துத் தம்மை ஓர் அலியாகச் செய்துகொண்டார். இச் செயலைக் கிறித்துவ சமயிகள் நிந்தித்தார்கள். ஆனால், இவர் கிறித்துவ சமயத்திற்கு ஆற்றிய தொண்டை மறக்கமுடியுமோ ?

செல்ஸஸ் (Celsus) என்பவர் கிறித்துவ சமயத்தைத் தாக்கிப் பேசினார். அதற்குத் தக்க மறுமாற்றந் தருகிற இவருடைய சொல்வன்மை போற்றுதற்குரியது. கிறித்துவர் திரட்டுகின்ற கூட்டம் சட்டத்தை ஒட்டி நிற்கவில்லை என்று கூறுவதற்குக் கொடுங்கோல் ஆட்சியை மாய்ப்பதும் சட்டத்தைப் புறக்கணித்ததாகும் என்று மிகத் திறனுடன் விடை அளிக்கின்றார். கிறித்துவ சமயம் அநாகரிகமான யூதர்களிடமிருந்து பிறந்தது என்கிறார். விவிலிய நூலில் காணக்கூடிய தத்துவங்களுக்குக் கிரேக்க தத்துவங்கள் வாயிலாக விளக்கந்தரலாம் என்ற விடையை இவர் நல்கினார். மேலும், கிறித்துவ சமய நூல்களில் அலர்ந்து நிற்கும் அற்புதங்களே கிறித்துவ சமயத்தை மெய்ப்பிக்கப் போதும் என்று நயன்பட உரைக்கின்றார்.

அரசாங்க அலுவல்களில் கிறித்துவர்கள் தலையிடக்கூடாது என்று கூறுவது ஞானி அகஸ்டைன் நூலில் கரந்து நிற்கின்றது. ஆனால், மடத்தாட்சி வளரத்

தொடங்கிவிட்டது. கான்ஸ்டன்டைன் (Constantine) என்னும் ரோம இராச்சியத்தின் சக்கரவர்த்தி கிறித்துவ மதத்தைத் தழுவிய பிறகு பிஷப்புகள் தேர்ந்தெடுக்கப்பட்டார்கள். கிறித்துவ மடம் ஆட்சிபுரிதற்குற்ற காரணங்களை கிப்பன் தருகின்றார். அவற்றையே ரஸ்ஸல் தம்முடைய மேலைநாட்டுத் தத்துவ வரலாற்றில் குறிக்கின்றார். கிறித்துவர்களுடைய தளராத ஆர்வமும், மறுமையில் அவர்களுடைய ஒரு குன்றாத நம்பிக்கையும், பண்டைய மடல்கள் காட்டிய அற்புதங்களும், அவர்களுடைய தூய ஒழுக்கமும் ரோம இராச்சியத்தின் நடுவிலேயே ஒரு தனிப்பட்ட கிறித்துவ ஆட்சியை நிறுவிவிட்டன.

எரியங் என்பவர் அலெக்ஸாண்டிரியாவில் ஒரு பாதிரியாகத் திகழ்ந்து வந்தார். ஆண்டவனுடைய சேய் சற்றுத் தாழ்ந்தவர் என்ற கொள்கையை வெளியிட்டார். 335ஆம் ஆண்டிலிருந்து 378ஆம் ஆண்டுவரையில் எரியங் கொள்கைகளை ரோம இராச்சியத்துச் சக்கரவர்த்திகள் ஆதரித்து வந்தார்கள். ஆனால், 379ஆம் ஆண்டில் சக்கரவர்த்தியான தியடோஸியஸ் (Thiodosius) கத்தோலியர்கள் கொண்ட தத்துவத்தை ஆதரித்துவிட்டான். கிறித்துவர்களால் போற்றப்பட்ட முத்தத்துவம் (Triniti), அவதாரத்தின் மர்மம் இவற்றைச் சுற்றி எழுந்த சொற்போர்ப் புயல்கள் அடித்து ஓய்ந்துவிட்டன. வடக்கேயிருந்து படையெடுத்து வந்த க்ாத்ஸ், வாண்டல் இவர்களுடைய ஆதிக்கம் ஏறத்தாழ ஓர் ஆண்டுவரையில் நீடித்திருந்தது. இறுதியில் இந்தப் படைவெள்ள ஆட்சிக்கு அணைபோட்டு, அதை முற்றிலும் ஜஸ்டினியன் என்ற சக்கரவர்த்தி அழித்து விட்டான். கத்தோலியர்கள் வெற்றிமுழக்கஞ் செய்த இந்தச் சூழ்நிலையில்தான் ஞானி அம்பிரோஸ் (St. Ambrose), ஞானி ஜெரோம் (St. Jerome), ஞானி அகஸ்டைன் (St. Augustine) இம் மூன்று சான்றோர்களாம் விண்மீன்கள் இடைக்காலத் தத்துவ வானில் சுடர்விட்டு ஒளிர்வதை நாம் நன்கு அறிவோம்.

# 5. கிறித்துவமடச் சான்றோர்கள்

ஞானி அம்பிரோஸ் அரசியலுக்கும் கிறித்துவ மடத்திற்கும் உள்ள தொடர்பை வரையறுத்தார். ஞானி ஜெரோம் என்பவர் மேலைப்பிரதேசத்து மடத்திற்கு லத்தீன் மொழியில் விவிலிய நூலை நல்கினர். ஞானி அகஸ்டைன் மடத்தின் இறைநூலின் இயல்பை உருவாக்கினர்.

இம் மூன்று அறிஞர்களும் இடைக்காலத்து அறிவுலகத்தில் ஆட்சிபுரிந்த செய்தியை நாம் அறிவோம். மடத்தின் ஆதிக்கத்தைப்பற்றி வற்புறுத்திய அம்பிரோஸ் ஞானியின் கொள்கை மதச் சீர்திருத்தப் புரட்சி (reformation) வரையில் செங்கோல் செலுத்திற்று. 17ஆம் நூற்றுண்டில் ஹாப்ஸ் (Hobbes) என்னும் அரசியல் நிபுணர் இக் கொள்கையைத் தாக்கிப் பேசினர். அம்பிரோஸ் அறிஞரைத் தம் மனத்தகத்தே வைத்துத்தான் இவர் வாதப்போர் புரிந்தார் என்பதில் யாதோர் ஐயமுமில்லை.

16 அல்லது 17ஆம் நூற்றுண்டுகளில் கிறித்துவ சமயக் கொள்கைகளில் எழுந்த வாதப் புயல்களில் ஞானி அகஸ்டைன் குரல்தான் இடையருது கேட்டது. வியன் அறிவிலும், குலையாத மனத் திண்மையிலும், பேருயர் ஒழுக்கத்திலும் இம் மூவரும் இடைக்காலத்தில் வானளாவி நின்றனர்.

மேலை ரோம் சாம்ராஜ்யத்திற்கு நான்காம் நூற்றுண்டின் இறுதியில் புகழ் பெற்ற தலைநகராயிருந்தது மிலான் (Milan) என்னும் ஊராகும். இந்த நகரத்து மடத்திற்கு பிஷப்பாய் அம்பிரோஸ் திகழ்ந்தார். அரசியல் துறையில் சிறந் தோங்குவதற்கு இவருக்கு மிகுந்த வாய்ப்பு இருந்தது. அதை இவர் பயன் படுத்திக்கொள்ளவில்லை. இவர் தந்தையாரோ உயர்ந்த பதவியை ஏற்றுவந் தார். டிரிவிஸ் (Treves) என்னும் ஊரில் இவர் பிறந்ததாகத் தெரிகின்றது. அவ்வூரில்தான் ரோமானியர்களின் படைகள் ஜர்மானியர்கள் முன்னேறுமல் காவல் புரிந்துவந்தன. அவர்களுடைய படைவெள்ளத்திற்கு இவர்கள்தாம் அணைபோட்டார்கள்.

தம் பதின்மூன்றும் ஆண்டில் இவர் ரோமாபுரிக்குச் சென்றர். அங்கே இவருக்குக் கல்வியில் தக்க பயிற்சி ஏற்பட்டது. கிரேக்க மொழியிலும் இவர்

2

ஓர் ஆழ்ந்த புலமை எய்தினார். சட்டக் கல்வியைப் பின்பற்றி அத் துறையிலும் வெற்றி பெற்றார். லிகுரியா (Liguria), எமீலியா (Aemilia) இவ் வட்டாரங்களுக்கு இவர் ஆட்சித் தலைவராக இருந்தார். உலக இன்ப போகங்களைத் துறந்து ஒரு பாதிரியானார். தம் சொத்து சுதந்திரங்களனைத்தையும் வறிஞர்களுக்கு வழங்கினார். பிறகு மிலான் மடத்துப் பாதிரியானார். இவருடைய ஆன்ம குணங்களை வியந்து பொதுமக்கள் இவரைப் பெரிதும் பாராட்டினார்கள்.

மடத்திற்கும் சக்கரவர்த்திகளுக்கும் இடையறாது போர் நிகழ்ந்தது. இறுதியில் மடத்திற்குத்தான் வெற்றி கிடைத்தது. வெற்றிச் சின்னத்தை—கிறித்துவரல்லாத பண்டைய ரோமானியர்கள் நிறுவிய வெற்றிச் சின்னத்தை—ரோமாபுரியிலிருந்து அகற்றிவிடவேண்டுமென்று இவர் அரும்பாடுபட்டார். தியடோஸியஸ் (Theodosius) ரோம ராச்சியத்துச் சக்கரவர்த்தியானார். இவருக்கும் ஞானி அம்பிரோஸுக்கும் சர்ச்சைகள் எழுந்துகொண்டேயிருந்தன. மிலான் நகரில் கி.பி. 390ஆம் ஆண்டில் ஒரு படைவகுப்புத் தலைவனைப் பாமர மக்கள் கொன்றுவிட்டார்கள். இதன் காரணமாக வேடிக்கை பார்க்க வந்த மக்களைப் படைஞர்கள் ஒரு வெஞ்சினத்தில் சக்கரவர்த்தியின் கட்டளைக்கிணங்க மாய்த்துவிட்டார்கள். இதைத் தடுக்கப்பார்த்தும் பயனில்லாதுபோனது கண்டு, சக்கரவர்த்திக்கு ஒரு நீண்ட கடிதம் அம்பிரோஸ் எழுதினார். இக் கடிதம் சக்கரவர்த்தியின் தூய நல்லுணர்ச்சிச் சுடரைத் தூண்டிவிட்டது. கிறித்துவக் கொள்கைக்கு—அன்புநெறிக்கு—முரணாகச் சக்கரவர்த்தி நடந்துகொண்டபடியால், மிலான் மடத்தில் எல்லோரும் கூடியிருக்கும் சமயத்தில் தன் தவற்றை ஒப்புக்கொண்டு கழுவாய் புரிந்தான். இக் கழிவிரங்கல் மடத்தின் உயர்வை இடைக்காலத்தில் நாட்டிவிட்டது. மடத்தின் வெற்றிக் கொடி சக்கரவர்த்தியின் அரண்மனைக் கோபுரங்கள்மீது குனிக்கத் தொடங்காமற்போகுமோ !

ஒழுக்க இயலில் இவர் ஸிஸிரோவின் (Cicero) அடிச்சுவட்டில் செல்லுகின்றார். நம்முடைய ஆசாபாசங்கள் நம் பகுத்தறிவுக்குக் கீழ்ப்படிந்து நடக்க வேண்டும். உடல் உணர்ச்சிகள்மீது நம் அறிவு செங்கோல் செலுத்தவேண்டுமென்பது இஸ்டாயிக் கொள்கையாகும். ஏற்றுக்கொண்ட குறிக்கோளுக்கேற்ப நாம் உழைக்கவேண்டும். இடம், காலம் இவற்றிற்கிணங்கச் செயலாற்றுவது தான் சான்றோர்க்குக்கு அழகாகும். இம் மூன்றிற்கும் சிகரமாயிருப்பது முதன் முதலாகக் குறிப்பிட்டதுதான். அன்பு, அருளுடைமை, நியாயம், காலத்திற்கேற்ப நடந்துகொள்ளல் இவை யாவற்றையும் அம்பிரோஸ் அலசிப் பார்க்கின்றார். ஆனால், இவர் வரைந்த கடிதங்கள் ஸிஸிரோ கண்ட கருத்துகளுக்கு எதிரொலி கொடுக்கின்றன. கிரேக்க இஸ்டாயிக் கொள்கையின் மணம் இவரிடம் வீசக் காண்கிறோம். 'பண்டைய கருத்துலகத்தின் நிழல் இவர் இயற்றிய நூல்கள்மீது படர்வதில் யாதொரு வியப்புமில்லை. செல்வங்கள் அமைதியை அளிக்கமாட்டா ! அறத்தில் நிற்பதுதான் அழியா வாழ்விற்கு நம்மை அழைத்துச் செல்லும். அறத்திற்காகவே அறத்தில் நிற்கவேண்டும் என்று இஸ்டாயிக் கொள்கையினர்

குறிக்கின்றார்கள். அறம் என்பது ஒரு கருவி; அதன் விளைவு அமரவாழ்வு என்று அம்பிரோஸ் உரைக்கின்றார்.

ஓர் அரசியல் நிபுணர்போல மடத்து அலுவல்களைத் தக்க முறையில் கவனிக்கும் அறிஞராயிருந்தபோதிலும், அவர் காலத்துச் சூழ்நிலைக்கேற்றவாறு அவர் மனப் பண்பும் திகழ்ந்திருந்தது. கன்னிநிலைச் சிறப்பை வானளாவப் புகழ்கின்றார்; கைம்பெண் மணத்தை வெறுக்கின்றார். ஒரு மாதாகோயில் எழுப்புவதற்காக அவருடைய உள்ளம் நாடிற்று. எந்த இடத்தில் அதை நிறுவ வேண்டுமென்று விழைந்தாரோ, அந்த இடத்தில் இரண்டு எலும்புக்கூடுகள் கிடைத்தன. அவ்விரு எலும்புக்கூடுகளும் கிறித்துவ சமயத்திற்காக உயிரை நீத்த பெரியோர்களின் கூடுகளே என்று கருதினர். அவற்றின் வாயிலாகப் பற்பல அற்புதங்களை அவர் காட்டினாராம். புலமையில் ஜெரோமைவிடச் சற்றுத் தாழ்ந்தவரே; தத்துவஞானக் கடலின் ஆழத்தை அகஸ்டைன் கண்டதைவிட அம்பிரோஸ் காணவில்லை என்பதும் உண்மையே. சமயப் பிரசாரத்திலும் மடத்தின் அலுவல்களைக் கூர்ந்து கவனிப்பதிலும் அவர் மிகுந்த ஆர்வத்தையும், தளராத உழைப்பையும், குன்றாத உற்சாகத்தையும் காட்டினர். இத்தகைய உயர்குணங்கள் போற்றுதற்குரியவையே.

அம்பிரோஸ் பிறந்த ஐந்தாண்டிற்குப் பிறகு ஸ்டிரைடன் (Stridon) என்னும் நகரில் ஞானி ஜெரோம் தோன்றினர். இந் நகரம் காத்ஸ் என்னும் இனத்தாரின் வெஞ்சினத்திற்கு இரையாகிவிட்டது; அதை முற்றிலும் அவர்கள் அழித்து விட்டார்கள். 363ஆம் ஆண்டில் ரோமாபுரிக்கு இவர் சென்று அணியிலக்கணம் பயின்றார். அங்கே இவர் நெறிபிறழ்ந்து பாவச் செயல்களுக்கு ஆளாகிவிட்டார் இப்பொழுது ஃபிரெஞ்சுநாடு என்று சொல்லப்பட்ட கால் (Gaul) முழுதும் கால் நடையாய் நடந்து, அக்குலியா (Aquileia) என்னும் ஊரைத் தமக்கு உறைவிட மாகக் கொண்டார். அங்கே துறவறம் பூண்டு ஒரு குகையில் வசித்தார். உழைத்தே தம் உணவைப் பெற்றார். தாம் புரிந்த தீச்செயல்களுக்கு வருந்தி வருந்திக் கண்ணீர் வடித்தார். ரோமாபுரியில் இவர் புரிந்த தீச்செயல்கள் இவர் அகக்கண் முன் மிதந்து வருகின்றபோதெல்லாம், இவர் உளம் சாம்பி நைந்துபோய்விடும். ஆண்டவனுடைய அருட்காட்சி இவர்முன் வரும்போது இவர் பேருவகையில் ஆழ்ந்துவிடுவார். ரோமாபுரியில் டமேஸஸ் (Damasus) என்னும் போப்பாண்டவ ருக்கு உற்ற நண்பராயும், அறிவுச்சுடர் கொளுத்தும் போதகராயும் திகழ்ந்தார். போப்பாண்டவருடைய பேரூக்கத்தால் இவர் விவிலியநூலை லத்தீன் மொழியில் மொழிபெயர்த்தார். கிரேக்க மொழியில் பழுத்த ஞானம் உடையவரேனும் 'இனியத்' என்னும் காப்பியம் சமைத்த வர்ஜிலிலிருந்தே (Virgil) தம் கடிதங்களில் மேற்கோள்கள் காட்டுவார். இவர் துறவறம் பூண்டபோதிலும், உணர்ச்சிவசப் பட்டு எல்லோருடனும் பூசல்புரிவார். ஞானி பீட்டரின் நடத்தைபற்றி ஒரு சர்ச்சை எழுந்தபொழுது ஞானி அகஸ்டைனோடு போராடினர். டமேஸஸ்ஸுக்குப் பிறகு வந்த போப்பாண்டவர்பாலும் இவர் சீற்றங்கொண்டார். ரோமாபுரியில் பாலா (Paula) என்னும் கைம்பெண்ணின்மீதும், அவளுடைய செல்வப் புதல்வியான

இஸ்டோட்சியம் (Eustochium) மீதும் இவர் தம் தெய்வக் காதலைச் சொரிந்தார். ஆண்டவனிடம் தங்களை அர்ப்பணித்த உத்தமப் பெண்டிர்க ளென்று இவர்களைப் போற்றினர். ரோமாபுரியிலிருந்த மக்கள் இந்தத் தூய மாசற்ற காதலின் இயல்பை உணராது இவர்களைப்பற்றி நாணயக்கேடு விளைவிக்கும் வசை மொழிகளைப் பரப்பினர்கள். இவர் அக் காரணம்பற்றியே ரோமாபுரியைவிட்டுப் பெத்தலகத்திற்கு வந்துசேர்ந்தார். இவரைப் பின் தொடர்ந்து இந்த இரண்டு பெண்மணிகளும் போய், இவர் உறைந்த அண்மை யில் கன்னிமாடங்கள் அமைத்துத் தம் வாழ்க்கையை நடத்தலானர்கள். பெத்தலகத்தில் இவர் கி.பி. 420ஆம் ஆண்டு உயிர் நீத்தார்.

பாலா என்னும் பெண்மணி பெத்தலகத்தில் மாண்டதும், இவர் அவளுடைய நினைவுச் சின்னமாக ஒரு சமாதி சாசனத்தை அவளுக்காக அமைத்துக் கல்லறை மீது பொறித்தார். மேலும், மனிதக் காதலைத் தெய்வக் காதலாக மாற்றவேண்டு மென்று அருளினர். கன்னிநிலையை எப்படிக் காப்பாற்றவேண்டும் என்றும், எப்படி ஆண்டவனுக்கு ஆட்பட்டு மற்றக் காமங்களை மாற்றவேண்டும் என்றும் பாலாவின் புதல்விக்குக் கடிதங்கள் வரைந்தார். பாலாவின் புதல்வி கன்னி மாடத்தில் சேர்ந்து ஒரு துறவிப் பெண்மணியானபோது, இவர் பாலாவிற்கு எழுதின கடிதம் சிந்திப்பதற்குரியது. 'உன் பெண், ஒரு வேந்தனை—எல்லே ருக்கும் வேந்தனை இயேசுநாதரை—மணந்துவிட்டாள். ஒரு படைஞனை மணக்க வில்லை என்று உனக்குச் சீற்றமா? அவள் இயேசுநாதரை மணப்பதால் நீ இயேசு நாதருக்கே மாமியாராய்த் திகழ்கின்ருய். இதைவிட வேறு பேறு உனக்குண்டோ!' துறவிக் கன்னி உலகக் காதலை நீத்து இயேசுநாதராம் மணவாளனை மணக்கின்ருள். இத்தகைய அருஞ்செயல் ஸாலமன் இசைத்த பாவில் (Song of Solomon) கோயில்கொண்டிருப்பதைப் பார்க்கின்றோம். ஆழ்வார்களும் நாயன்மார்களும் தங்களை ஆண்டவனுடைய காதலிகளாகக் கருதிப் பாடிய பாடல்களை—ஆடி ஆடி அகங்கரைந்து பாடிய பாடல்களை—நாம் மாந்தி மாந்தி இன்புறவில்லையா?

ரோம சாம்ராச்சியத்தின் வீழ்ச்சியைக் கண்டு அவர் உளம் நைந்தார். வடக்கேயிருந்து வந்த கொடும் பகைவர்களால் ரோமாபுரி சூறையாடப்பட்ட நிலையைப்பற்றியும், மாதாகோயில்கள் அழிபட்டதையும் நினைந்து நினைந்து கண்ணீர் உகுத்தார். இந்தப் பெரும் இராச்சியம் போனல் என்ன? இதைக் காட்டிலும் வானுயர்ந்த அருள்நகரை (The City of God) நாம் சமைப்போம் என்று ஞானி அகஸ்டைன் அருளினர். அவர் எழுதிய இந்நூல் மிகவும் போற்றத் தகுந்தது.

ஜெரோம், ஆண்டவன் அருளைப் பெற்றவர். இயற்கையாய் அவருக்கு ஞானச்சுடர் திகழ்ந்துவிட்டது. அவரிடத்தில் ஒரு தாயுள்ளம் மிளிர்வதைக் காண்கின்றோம். அம்பிரோஸ் ஓர் ஆண்தகை; ஒரு வழக்கறிஞர்; மடத்து அலுவல்களை மனந்தளராமல் நடத்தும் ஆற்றல் படைத்தவர். கிறித்துவ சமயக் கொள்கைகளுக்கு ஓர் அரணுய், ஒரு களைகண்ணுய் நிற்பவர். இடையருது மழை

பெய்தாலும், பேரிடி முழங்கினாலும், கடும்புயல் வீசினாலும் தம் செய்கருமத்தை நடத்தும் இஸ்டாயிக் கொள்கையின் இயல்பை இவரிடம் உணர்கின்றோம். பூண்டது ஒரு கிறித்துவ வேடம்; உளமோ ஓர் இஸ்டாயிக்கின் தளரா உளம். ஞானி அகஸ்டைனே தத்துவ ஆராய்ச்சியில் மேலே குறிப்பிடப்பட்ட இரண்டு ஞானிகளைக் காட்டிலும் மிகமிகச் சிறந்தவர் என்பதில் யாதோர் ஐயமுமில்லை.

ஞானி அகஸ்டைன் தம் கிளரொளி இளமையில் ஐம்புலச் சிற்றின்பச் சேற்றில் உழன்று பிறகு ஆண்டவன் அருளால் ஒரு நன்னெறிச் செல்வராய்த் திகழ்ந்தார் என்பது அவருடைய கழிவிரக்கங்களில் எழுந்த ஓலங்களின் வாயிலாக (confessions) நாம் நன்கு உணர்கின்றோம். ரூஸோ தம் தவறுகளைத் தம் நூலில் ஒப்புக்கொள்கிறார். டால்ஸ்டாயும் தாம் புரிந்த தீச்செயல்களையும் பாவங்களையும் உணர்ச்சி ததும்ப நூலில் சித்திரிக்கிறார்.

ரூஸோ எழுதிய நூலில் காணப்படும் செய்திகளனைத்தையும் அப்படியே ஏற்பதற்கில்லை. உணர்ச்சி வேகத்தில் உண்மையைச் சற்றுத் திரித்தும் மொழிந்திருக்கக்கூடும்; டால்ஸ்டாய் தம் மனத்து மாசுகளைக் கண்டு கண்ணீர் உகுத்து அவற்றினின்றும் வெளியேறுவதற்காக அரும்பாடுபட்டார். ஓர் உயர் கலைஞன்போதிலும், கலைகூட ஒரு சிற்றின்பத்தில் உய்த்துவிடும் என்று ஷேக்ஸ்பியரையும் வெறுக்கலானார். ஞானி அகஸ்டைன் வரைந்த ஒவ்வொரு வரியிலும் அவருடைய இதயத் துடிப்பையும், அளவுகடந்த உணர்ச்சிவெள்ள வேகத்தையும், போராட்டப் புயல்களின் கொந்தளிப்பையும் பார்க்கின்றோம். டால்ஸ்டாய் புலம்பினதைவிட இவர் உளம் நைந்து நைந்து புலம்பினது மிகுதியாய் ஓங்கி நிற்கின்றது. ஞானி அகஸ்டைனும் டால்ஸ்டாயும் மாதரார் கண் வலைக்குட் சிக்கி ஆண்டவன் அருளொளியை மறந்துவிட்டார்கள் என்பது அவர்கள் நல்கிய நூல்களால் நன்கு புலனாகின்றது.

கி.பி. 354ஆம் ஆண்டு—அதாவது, ஜெரோம் தோன்றிய ஒன்பது ஆண்டுகளுக்குப் பிறகும், அம்பிரோஸ் பிறந்த பதினைந்து ஆண்டுகளுக்குப் பிறகும்—இவர் ஆப்பிரிக்காவில் உதயமானார். இளம்பிராயத்தில் இவர் புரிந்த களவைப் பற்றி உளம் சாம்புகின்றார். இவரும் இவருடைய நண்பர்களும் அண்டை வீட்டிலுள்ள பேரிக்காய் மரத்திலேறி அதைச் சூறையாடிவிட்டார்கள். இத் தீச்செயல் அகஸ்டைன் மனத்தைப் புண்படுத்திக்கொண்டே யிருந்தது. இதைப் பற்றி விரிவாகத் தம் நூலில் குறிக்கின்றார். 'அதுவும் எனக்குப் பசிப்பிணி இல்லாத சமயத்து நான் திருடுவது முறையா? அறமா?' என்று உளம் வெம்பி ஆண்டவனிடம் மன்னிப்புக் கேட்கின்றார். பள்ளியில் இவரால் கிரேக்க மொழியைக் கற்கமுடியவில்லை; லத்தீன் மொழியைத்தான் இவர் எளிதில் கற்க முடிந்தது. ஆசிரியர்கள் இவரை அடித்தார்கள்; திட்டினார்கள். இவை யாவும் தம்முடைய நன்மைக்கே என்று இவர் கருதினார். தம் பதினாறும் ஆண்டிலேயே இவர் சிற்றின்பத்தில் இறங்கிவிட்டார். 'உன்னுடைய அருளொளியில் திளைக்காது சிற்றின்பத்தில் ஆழ்ந்துவிட்டேனே' என்று அகங்கரைகின்றார்.

கார்த்தேஜ் என்னும் நாட்டிற்குப் போனதும் இவர் ஒரு காமக்கிழத்தியிடம் தம் காலத்தைக் கழிக்கலானுர். கிறித்துவ மதத்தைச் சார்ந்த மானிகா (Monica) என்பவள் தம் மைந்தனை அகஸ்டைனை ஒழுக்கநெறியில் நிற்குமாறு வேண்டினுள்; ஆண்டவனிடம் முறையிட்டாள்; விண்மாரியெனக் கண்ணீர் பொழிந்தாள். இவளுடைய கணவன் கிறித்துவ சமயத்தைச் சார்ந்தவனல்லனுதலால், அகஸ்டைனைக் கண்டிக்காது அவருக்குக் கல்வித்துறையில் பல வாய்ப்புகளை அமைத்துத் தந்தார். இவருடைய சிற்றின்ப விளைவாக அந்தக் காமக்கிழத்தியின் மூலமாக இவருக்கு ஒரு புதல்வன் தோன்றினன். இப் புதல்வனைப் பிறகு நன்னெறியில் உய்த்த செய்தியை அகஸ்டைன் வரைந்த நூல் மொழிகின்றது.

மானிகா தன் புதல்வனுக்குத் திருமணச் சடங்கு ஆற்றவேண்டுமென்று கருதினள். இவர்கள் பார்த்த பெண் மிகவும் இளமைப் பிராயத்தவளாய் இருந்த காரணத்தால், திருமணத்தை இரண்டு ஆண்டிற்குத் தள்ளிப்போடும்படி நேர்ந்துவிட்டது. இதற்குள் மற்ருெரு காமக்கிழத்தியின்பால் இவர் நேயம் வைத்தார். இவருடைய அகச்சான்று இவர் மனத்தை உறுத்திக்கொண்டேயிருந்தது. மனம் அமைதியடையாது கடலின்மீது ஊசலாடும் ஒரு கலம்போல ஓடித் திரிந்தது. 'ஐம்புலன்களை அடக்க அருளைப் பெய்யமாட்டாயா' என்று இவர் ஓலமிட்டார்.

தம் பத்தொன்பதாம் ஆண்டு அணி இலக்கணத்தில் தேர்ச்சி பெற்றுர். தத்துவ நூலும் இவரை வாவென்று அழைத்தது. ஸிஸரோ இயற்றிய நூல்களைப் பயின்று இன்புற்றுர். மானிக்கிய தத்துவத்தைப் போதிக்கும் ஃபாஸ்டஸ் (Faustus) என்பவரோடு வாதாடினர். தீது என்பது ஓர் அநாதி தத்துவம் என்று—இத்தகைய கொள்கையைத் தவறெனத் தேர்ந்து—அதை எதிர்த்து இவர் போராடினுர். விவிலிய நூலைப் படிக்குந்தோறும் ஸிஸரோ எழுதின நூல் போல அவ்வளவு சிறந்ததன்று என்று முதலில் கருதினுர்.

மிலானுக்கு வந்ததும் ஞானி அம்பிரோஸின் தொடர்பு இவருக்கு ஏற்பட்டது. தன் மைந்தன் ஒரு கிறித்துவனுகத் திகழ வேண்டுமே என்று அல்லும் பகலும் ஆண்டவனை இறைஞ்சிய மானிகாவும் அங்கே வந்திருந்தாள். அகஸ்டைன் கிறித்துவனுனபோது அந்த அம்மைக்குப் பொங்கின உவகைக்கு எல்லையேயில்லை. தன்னுடைய பிரார்த்தனை நிறைவேறினது கண்டு மெய்ம் மறந்துபோனுள். இவளுடைய இறுதிக் காட்சியைத் தம் 'ஓலங்கள்' என்னும் நூலில் சித்திரிக்கிருர். இக் காட்சி கல்லையும் கனிவிக்கும் என்பதில் யாதோர் ஐயமுமில்லை. பண்டைய வாழ்வு ஞானத் தீயில் மாய்ந்து நீருய்ப் போய்விட்டது. தம்மை ஆண்டவனுக்கே முற்றிலும் உரிமையாக்கும் பணியில் இறங்கினுர். பிளேட்டோ எழுதிய நூலின் நுட்பத்தை அதன் லத்தீன் மொழி பெயர்ப்பில் கண்டு அதில் மிளிரும் தத்துவத்திற்கும் கிறித்துவ சமயக் கொள்கைக்கும் உள்ள தொடர்பைத் துருவி ஆராய்ந்து பார்த்தார்.

சிற்றின்ப வாழ்வு நடத்தினல் நரகத்தீயினுக்கு இரையாகக் கூடும் என்று அஞ்சி இவர் தம் வாழ்வை அறவே தூய நற்பாதையில் ஓடவிட்டதை நோக்குங்கால், திருமங்கை ஆழ்வார், தொண்டரடிப்பொடியாழ்வார் இவர்களின் வாழ்க்கைச் சித்திரங்கள் நம் அகக்கண்முன் எழாமற் போகா.

**'சேமமே வேண்டித் தீவினை பெருக்கித்**
**தெரிவைமா ருருவமே மருவி**
**ஊமனர் கண்ட கனவிலும் பழுதா**
**யொழிந்தன கழிந்தவந் நாட்கள்**
**காமனர் தாதை நம்முடை யடிகள்**
**தம்மடைந் தார்மனத் திருப்பார்**
**நாமம்நா னுய்ய நான்கண்டு கொண்டேன்**
**நாராயணா வென்னும் நாமம்'**

என்ற பாடலில் தாம் பண்டைய நாட்களில் புரிந்த தீச்செயல்களை எண்ணி எண்ணி ஏங்குகின்றார் திருமங்கை ஆழ்வார். ஞானி அகஸ்டைனைப்போலவே, அஞ்சியே இந்த ஆழ்வாரும் ஆண்டவன் அருட்சோலையில் தஞ்சம் புகுகின்றார்.

**'வம்புலாங் கூந்தல் மனைவியைத் துறந்து**
**பிறர்பொருள் தாரமென் றிவற்றை**
**நம்பினா ரிறந்தால் நமன்றமர் பற்றி**
**யெற்றிவைத்து எரியெழு கின்ற**
**செம்பினா லியன்ற பாவையைப் பாவீ**
**தழுவென மொழிவதற் கஞ்சி**
**நம்மனே வந்துன் திருவடி யடைந்தேன்**
**நைமிசா ரணியத்து ளெந்தாய்'**

**'சூதனாய்க் கள்வ னாகித் தூர்த்தரோ டிசைந்த காலம்**
**மாதரார் கயல்க ணென்னும் வலையுள்பட் டழுந்து வேனை**
**போதரே யென்று சொல்லிப் புந்தியில் புகுந்து தன்பால்**
**ஆதரம் பெருக வைத்த வழகனூ ரரங்க மன்றே'**

என்று உளங்கசிந்து பாடும் தொண்டரடிப்பொடியாழ்வாரின் நிலை ஓர் உண்மையை உணர்த்தாமலிருக்குமோ!

சான்றோர்கள், ஐம்புல நுகர்ச்சிகளில் ஆழ்ந்துகிடந்தாலும் ஆண்டவனுடைய ஞானவாள்கொண்டு தம் ஆசைகளை வேரோடு வீழ்த்தி அவன் அருட்கொடியைத் தம் இதயமாம் கோயிலின்கண் நாட்டிவிடுவார்கள் என்பது திண்ணம். பொய் புதைந்த வாழ்க்கையிலிருந்த அவர்கள் உண்மையை நாடுகின்றார்கள்; இருள் செறிந்த உலகத்திலிருந்து தெய்விக ஒளி கிளம்பிய விண்ணிற்கு அவர்கள் பயணஞ் செய்கின்றார்கள். மரணவாழ்வை நீத்து அமரவாழ்வுப் பாதையில் இறங்குகின்றார்கள். ஆண்டவனை அடையும் பாதை ஒரு நீள்வழியேயாயினும், ஆண்டவனை உண்ணும் சோறும், பருகும் நீரும், தின்னும் வெற்றிலையுமாகக் கொள்ளும் இச்சான்றோர்கள் சற்றும் உளம் தளராது, முயற்சி குன்றாது, ஆர்வம் தேயாது, இடையறாது பயணஞ் செய்துகொண்டே இருப்பார்கள்.

# 6. ஞானி அகஸ்டைன் கண்ட தத்துவமும் இறைநூலும்

தூய ஞான நீர் கொண்டு தம் மனத்தைக் கழுவிய அகஸ்டைன் கண்ட தத்துவத்தைப்பற்றியும், அவர் இறைவனுக்கு வகுத்த இலக்கணத்தைப்பற்றியும் நாம் ஆராய்வோம். ஞானி அகஸ்டைனுக்கு முன்னிருந்த கிறித்துவ சமயிகள் அகஸ்டைனைப்போலத் தத்துவ ஆராய்ச்சி புரியவில்லை என்று தம் தத்துவ வரலாற்றில் ரசல் குறிக்கின்றார். சான்றாக் ஓரைஜன் (Origen) என்பவரிடம் பிளேட்டோ கண்ட தத்துவமும் கிறித்துவ சமயமும் துண்டு துண்டாய்த் தனித்துத் திகழ்கின்றன. விவிலிய நூலை நம்புகின்ற ஞானி அகஸ்டைன் பிளேட்டோவின் கருத்திற்கும், விவிலிய நூலில் படைப்பைப்பற்றிக் கண்டிருக்கும் தத்துவத்திற்கும் உள்ள முரண்பாட்டை நோக்கித் தத்துவ ஆராய்ச்சித்துறையில் இறங்குகின்றார். இப்படி ஆராய்ந்து பார்ப்பதுதான் ஒரு தத்துவ ஞானிக் கழகாகும். பிளேட்டோவும் அவருடைய சீடரான அரிஸ்டாடிலும் படைப்பு ஒரு வெறும் பாழிலிருந்து வரவில்லை. அநாதியாய் பிரகிருதி ஒன்றுள்ளது. அதற்கு ஓர் ஒழுங்கு, ஓர் உருவம் — இவை ஆண்டவனின் சங்கற்பத்தில் எழுந்தன. அவர்கள் தேர்ந்த கடவுள், ஒரு தெய்வத் தச்சன் போலவும், ஓர் ஓவியப் புலவனைப் போலவும் காட்சி அளிக்கின்றான். வைணவத் தத்துவத்தில் இறைவன், ஆன்மா, பிரகிருதி இம் மூன்றும் அநாதியான தத்துவங்களாய் நிற்கின்றன என்று மொழியப்பட்டிருக்கிறது. கடவுளுக்கு ஆன்மாவும் பிரகிருதியும் உடலாய்த் திகழ்கின்றன. உடன்மிசை உயிரெனக் கரந்தெங்கும் பரந்துளன் என்று நம்மாழ்வார் இறைவனுக்கு இலக்கணம் வகுக்கின்றார். கூம்புதலும் விரிதலும் இறைவனுக்கு இலக்கணம் என்றால் படைப்பும் ஆண்டவனுடைய அமிசமாகிவிடும். கடலும் அதன் கண் திரைத்தெழும் அலைகளும்போல் எல்லாம் காட்சி அளிக்கும். இந்தக் கொள்கையை ஸ்பைனோஸா (Spinoza) என்ற மேலைநாட்டுத் தத்துவ ஆசிரியர் வலியுறுத்திக் கூறுகின்றார். அனுபூதிச் செல்வர்களெல்லாம் இவ்வண்ணமே தான் மொழிகின்றார்கள்.

ஆனால், ஞானி அகஸ்டைனும் விவிலிய நூலில் வேரூன்றிய பரம்பரையான கிறித்துவர்களும் வெறும் பாழிலிருந்தே ஆண்டவன் பிரகிருதியைப் படைத்து

அதற்கு ஓர் ஒழுங்கையும், ஒரு முறையையும் வகுத்தார் என்று கருதுகின்றார்கள். இத்தகைய கருத்துப் பொருந்துமா? பொருந்தாதா? என்பதைப்பற்றி ஞானி அகஸ்டைனுக்குக் கவலையில்லை. விவிலிய நூல் இக் கருத்தைச் சாற்றிவிட்டது; வேறு சான்று வேண்டியதில்லை. மேலும், ஞானி அகஸ்டைன் காலத்தைப் பற்றிக் கண்ட தத்துவத்திற்கேற்ப எல்லாம் அமைகின்றன. தம்முடைய 'ஓலங்கள்' என்னும் நூலில் காலத்தைப்பற்றி ஆராய்ச்சி செய்கின்றார்,

ஆண்டவனுக்குத் தொடக்கமுமில்லை முடிவுமில்லை. காலத்தினுல் மாற்றமுமில்லை; இடத்தினுலும் பாதிக்கப்படவில்லை. தன்னுடைய இயல்பிலும் யாதோர் அழிவுமில்லை. அவனுக்கு முன்பு பின்பு இல்லை. எல்லாம் ஒரே நிகழ் காலந்தான். முன்பு பின்பு என்று பேசப்படுமாயின் காலவெள்ளத்திலும் ஆண்டவன் சிக்கிவிடுவானன்றோ?

காலத்தைப்பற்றி அவர் குறிக்கும்பொழுது அவர் உரைப்பது நோக்குதற் குரியது. 'காலத்தைப்பற்றி என்னை ஒருவர் வினவாதவிடத்துக் காலம் என்பதை நான் அறிவேன், வினவை எழுப்பி அதற்கு விளக்கம் தரும்படி என்னைக் கேட்டால் அதைப்பற்றி நான் அறிந்திலேன் என்றுதான் இயம்புவேன்' என்கிறார்.

நிகழ்காலம் என்பது ஒரு கணந்தான். போய்க்கொண்டிருக்கும் காலத்தின் இயல்பைமட்டுந்தான் நாம் உணரமுடியும். ஆனுலும் கழிவும் உண்டு; வருங் காலமும் உண்டு என்று கூறுகின்றார். இப்படி உரைத்தால் முரண்படுமே என்றுல் அதற்கு விடையும் அளிக்கின்றார். இறந்த காலத்தையும் வருங் காலத்தையும் நிகழ்காலமாகவே கருத இடமுண்டு. மனிதனுடைய நினைவைக் கொண்டு காலத்தை நிகழ்காலமென்று சாற்றலாம். கழிந்தனவற்றை நினைத்துப் பார்த்தால் அவை நம்முன் நிற்கத்தானே செய்யும்; ஆர்வத்துடன் ஒன்றை எதிர் பார்க்கும் தருணத்து வருங்காலம் நிகழ்காலமாகிவிடும் என்று ஞானி அகஸ்டைன் பகர்கின்றார். உண்மையைக் கருதுமிடத்து எல்லாம் ஒரே நிகழ்காலந்தான் என்று அவர் எண்ணுவது சிந்திப்பதற்குரியது.

படைக்கப்பட்ட மனிதனுடைய சிந்தையில்தான் மூன்று காலங்கள் இருப்பனபோலத் தோன்றும், மனிதனின் மனத்திற்கேற்றவாறு காலமும் அமையும் என்று இயம்பிய ஞானி அகஸ்டைன், காண்ட் (Kant) என்னும் தத்துவ ஆசிரியருக்கு ஒரு விடிவெள்ளியாய்த் திகழ்கின்றார், காலத்தைப்பற்றி ஞானி அகஸ்டைன் மொழிந்த கருத்தை ரசல் ஏற்கவில்லை. இருந்தாலும் அஃது ஆழ்ந்து சிந்திப்பதற்குரியது என்று தம் நூலில் குறிக்கின்றார். மேலும், ஞானி அகஸ்டைனும் ஒரு முடிவுக்கு வந்துவிடவில்லை. 'காலம் இன்னதென்று எனக்கு விளங்கவில்லை; ஐயனே, எனக்கு நீதான் விளக்கந் தர வேண்டும்' என்று ஆண்டவனை இறைஞ்சுகின்ற தன்மையை நோக்கிய ரசல், தத்துவ ஆராய்ச்சி உலகத்தில் ஞானி அகஸ்டைனுக்கு ஓர் உயர் இடமுண்டு என்று

மொழிகின்றார். உணர்ச்சியாலா அல்லது சிந்தனையாலா ஒருவன் தன்னுடைய இயல்பை அறிகின்றான் என்னும் வினாவை எழுப்பி, இறுதியில் 'ஒருவன் நான் நினைக்கிறேன் என்று கூறும்பொழுதுதான் உண்மை புலனாகின்றது என்று விடையளித்த டெக்கார்ட்டுக்கும் (Descartes) இவர் முன்னோடியாய்த் திகழ்கின்றார் என்பதில் ஐயமில்லை. ஞானி அகஸ்டைன் அருளிய 'ஆண்டவன் அருள் நகர்' (The City of God) என்னும் நூலில் கோயில்கொண்டிருக்கும் கருத்துகள் ஆராய்ச்சிக்குரியவை.

410ஆம் ஆண்டு காத்ஸ் என்னும் இனத்தார் ரோமாபுரியைத் தாக்கி அதை அடியோடு அழித்தபொழுது, இந்தப் பேரழிவுக்குக் காரணம் ரோம இராச்சியத்துச் சக்கரவர்த்திகள் பண்டைய தெய்வங்களைப் புறக்கணித்துப் புதிய நெறியைப் பின்பற்றினதே என்று கிறித்துவரல்லாதார் கூறினார்கள். மேலும், ஜூபிடர் என்னும் தெய்வநாயகனை மக்கள் வணங்கியவரையில் ரோமாபுரிக்கு அழிவில்லாமலிருந்தது; கிறித்துவ சமயம் முளைத்ததால் அழிவு ஏற்பட்டது என்ற கருத்தை எதிர்க்கும்பொருட்டு ஞானி அகஸ்டைன் இந்தப் பெரிய நூலை எழுதினார்.

இந் நூல் ரோமாபுரியின் அழிவைப்பற்றித்தான் தொடங்குகின்றது. கிறித்துவர்கள் தோன்றுவதற்கு முன்பே எத்தனையோ இடுக்கண்களும் அழிவுகளும் ஏற்பட்டிருக்கின்றன. அத்தகைய பேரழிவுகளை உன்னுங்கால், ரோமாபுரி அழிந்த நிலை பெரிதன்று. மேலும், படையெடுத்த காத்ஸ் இனத்தார் கிறித்துவர்களாதலால், மடங்களில் தஞ்சம் புகுந்தவர்களை அவர்கள் மாய்க்கவில்லை; திராய் நகரைத் தெய்வங்களும் காப்பாற்றவில்லை; ஜூனோ கோயில்கொண்ட இடத்தில் போய்த் தஞ்சம் புகுந்த மக்களும் வெந்தீயினுக்கு இரையானார்கள். ரோமானியர்கள் வெற்றியடைந்த இடங்களிலுள்ள கோயில்களை அழித்தார்கள். அதன் விளைவுதான் அவர்களுடைய நகரத்தின் அழிவும் கிறித்துவருடைய தன்மையால் அவர்களுடைய துயரின் வெம்மையும் குறைந்தன என்று சொல்ல வேண்டும். கொள்ளை அடித்ததால் காத்ஸ் இனத்தார் சற்றுச் செழித்து ஓங்கினவர்களேபோலத் தோன்றுவார்கள். ஆனால், மறுமையில் அவர்களுக்கு இன்பம் இருக்க முடியாது. பொறுமையாய் எல்லாவற்றையும் ஏற்று வாழ்ந்தவர்களுக்கும் யாதொரு குறைவும் வராதுகாண் என்று ஞானி அகஸ்டைன் கருதுகின்றார்.

ரோமாபுரியைச் சூறையாடுகின்றபொழுது கிறித்துவ மடத்துக் கன்னியர்கள் மாசுறும்வண்ணம் செய்யப்பட்டார்களே என்னும் வினாவிற்கு அகஸ்டைன் தக்க விடையளிக்கின்றார். 'கற்பென்பது மனத்தின் தூய்மையைப் பொறுத்தது. பிறர் வலிய வந்தணைந்தாலும், மனம் ஒவ்வாதவிடத்து அது கற்பின் சிதைவாகாது; மனத்தால் விழைந்தால்தான் அது குற்றமாகும்' என்று அவர் நயன்படக் கூறுகின்றார். மேலும், தாங்கள் ஐம்புலங்களை அடக்கி ஆண்டுவிட்டோம் என்ற செருக்குற்றபடியால் அவர்களுக்கு இத்தகைய நிலை வந்துவிட்டது என்றும் கூறுகின்றார். கற்பழிக்கின்ற நிலையில் காமநுகர்ச்சி இன்பம் எழுமானால், அது

தீச்செயலாகும்; அதை வெறுக்கின்ற ஒரு பெண் எஞ்ஞான்றும் தூய்மை உடையவளே. அவர்கள் ஏன் தற்கொலை செய்துகொள்ளக்கூடாது என்று வினவுவோர்க்கு விடை நல்குகின்றார். தற்கொலை செய்துகொள்வது அறமன்று என்று விவிலிய நூல் விதித்திருக்கிறது. ஆண்டவன் உறைகின்ற கோயிலான உடல் நமக்குச் சொந்தமன்று; அதைச் சிதைப்பது கொடிய தீச்செயலாகும். சீதையும் அப்படித்தான் கருதினாள். 'என் உடல் எனக்கு உரியதன்று; என் கணவனை இராமபிரானுக்கே உரியதாயிற்று. அதை எப்படி நான் மாய்த்து விடமுடியும்' என்னும் சிந்தனையில் ஆழ்ந்த காரணத்தால், அத் தீச்செயலை அவள் புரியவில்லை. லுகிரிஷியா (Lucretia) என்னும் கற்பழிக்கப்பட்ட மாது மாசுற்ற தன் நிலை கண்டு தன் உயிரை மாய்த்துக்கொண்டாள். இது தவறு என்று ஞானி அகஸ்டைன் எண்ணுகின்றார்.

கிறித்துவரல்லாதார் வணங்கும் தெய்வங்கள் தீச்செயல் புரியும் தெய்வங்களே. ரோமாபுரி மக்கள் ஐம்புலச் சேற்றில் உழல நேர்ந்தது அந்த நெறிபிறழ்ந்த தெய்வங்களின் பாவச்செயல்களே. பிளேட்டோவுக்கு அகஸ்டைன் ஒரு புகழ் மாலை புனைகின்றார். 'நீரையே மூலகாரணமாகக் கொண்ட தேலஸ் (Thales) ஒழிந்துபோகட்டும்; காற்றே ஆதி தத்துவமாகக் கருதிய அநாக்ஸிமினிஸ் (Anaximenes) என்பவரை நான் பொருட்படுத்தமாட்டேன். தீதான் ஆதிமூலம் என்று எண்ணும் இஸ்டாயிக் கொள்கையினரை நான் போற்றேன். அணு வாதியைச் சார்ந்த எபிக்கூரஸை நான் வணங்கேன். பிளேட்டோ கடவுளைப் பற்றிக் கொண்ட தூய கருத்திற்கு நான் வணக்கஞ் செய்கின்றேன்' என்று அவர் உரைக்கின்றார். பிளேட்டோவும் அரிஸ்டாட்டிலும் இவருடைய சிந்தனையைக் கவர்ந்துவிட்டார்கள். அவதார இரகசியத்தை ஏற்காத பிளேட்டோ கொள்கை யினரை அவர் கண்டிக்கிறார்.

ரோமாபுரி அழிந்ததால் கிறித்துவர்கள் துயருற வேண்டியதில்லை. அவர்கள் தஞ்சம்புக அருள்நகர் ஒன்றுண்டு. இந்த அருள்நகருக்கு வேந்தன் உண்மை தான்; அன்புதான் அதன் சட்டம்; அதன் அளவு, வரம்பு கடந்ததும் என்றும் அழியாததுமான ஒரு நிலைதான். இந்த அருள்நகரின் நிழல்தான் இந்த உலக ஆட்சி என்று கூறுமிடத்தும் பிளேட்டோவின் நிழல், ஞானி அகஸ்டைன் கண்ட தத்துவத்தின்மீது படியக் காண்கின்றோம். மனிதனுக்குச் சுதந்திரமில்லை. ஆண்டவனுடைய அருளால்தான் அவன் விடுதலை பெற முடியும். அவ் விடு தலையை அடையக்கூடியவர்களை அவன் தேர்ந்தெடுக்கிறான் என்று கூறும் ஞானி அகஸ்டைன் தத்துவத்தில் கால்வின் கொள்கையின் விதைகள் கரந்து இருப்பதை உணர்கின்றோம். ஆண்டவன் அருள்நகர்தான் கிறித்துவ மடம். உலகத்தில் காணப்படும் நகரம் அரசியலாகும்; இந்த உலக அரசியல் மடத் திற்குக் கீழ்ப்பட்டிருக்கவேண்டும் என்ற கருத்திற்கும் இந்த நூலில் இடமுண்டு என்று சாற்றுவோரும் உளர். பாலுணர்ச்சி அற்றுத் தூய வாழ்வு வாழ வேண்டு மென்று ஞானி அகஸ்டைன் மொழிவதிலிருந்து மடத்துப் பாதிரிமார்கள் மணவாழ்க்கையை அறவே நீத்தல் வேண்டும் என்ற கருத்துப் பிறக்கத்தானே

செய்யும். மேலும், இஸ்டாயிக் கொள்கையினர் எல்லா உணர்ச்சிகளையும் வேரோடு களையவேண்டுமென்றார்கள். ஆனால், ஞானி அகஸ்டைன் அவற்றைக் களையாது அவற்றை நல்ல பாதைகளில் ஓடச்செய்யவேண்டும் என்கிறார். அவருடைய கொள்கையில் அறச்சீற்றத்திற்கு இடமுண்டு என்பதை நாம் உணர்கின்றோம். இடைக்காலத்தில் கிறித்துவ மடம் ஆட்சிபுரிந்துவந்ததை நாம் நன்கறிவோம். அத்தகைய ஆட்சிக்கு ஞானி அகஸ்டைன் வரைந்த அருள்நகர் ஒரு விடிவெள்ளியாய்த் திகழ்கின்றது என்று இயம்பினால் அது மிகையாகாது.

மேலும், வேல்ஸ் வட்டத்தைச் சார்ந்த பெலெஜியஸ் (Pelagius) என்னும் பாதிரியோடு ஞானி அகஸ்டைன் சொற்போர் புரிய நேர்ந்தது. இவருடைய உண்மையான பெயர் மார்கன் (Morgan) என்பதே. இவர் மனிதனின் சுதந்திர வாழ்வில் நம்பிக்கையுள்ளவர். ஆதி பாவம் உண்டு என்னும் கொள்கையை எதிர்ப்பவர். அறநெறியில் நிற்பவர்களனைவரும் தம்முடைய அறிவொளியைக்கொண்டே நடக்கின்றார்கள். தங்களுடைய உயர்குணங்களால் விடுதலை பெறுகின்றார்கள் என்பதுதான் இவருடைய கருத்து. ஞானி அகஸ்டைன் இதற்கு மறுமாற்றம் மொழிகின்றார். ஆதாமும் ஈவும் புரிந்த தீச்செயலே எல்லோரையும் பாதிக்கின்றது. ஆதலால், அநாதியான பாவம் ஒன்று உண்டென்றும், சிலருக்குத்தான் விடுதலை யுண்டென்றும், நல்லவனாய் மட்டும் இருந்தால் போதாது என்றும், ஆண்டவனுடைய அருளும் வேண்டு மென்றும் உரைக்கின்றார். ஏன் சிலருக்கு நற்கதி உண்டு, மற்றவர்களுக்கு இல்லை என்னும் வினாவை எழுப்பவேண்டியதில்லை. எல்லாம் ஆண்டவனுடைய சங்கற்பந்தான் என்று ஞானி அகஸ்டைன் சாற்றுகின்றார். ஞானி பாலின் அடிச்சுவட்டை இவரும் பின்பற்றுகின்றார். இவர் கூறுவதில் ஒன்றும் புதிதன்று. விவிலிய நூலின் பழைய ஏற்பாட்டில் காணப்படும் கருத்தையே வலியுறுத்து கின்றார். வைகுந்தம் புகுவது மண்ணவர் விதியே என்று உலகங் கேட்க முர சடிக்கும் நம்மாழ்வாருடைய உயர்ந்த பண்பாட்டிற்கும், இவருடைய குறுகிய நோக்கத்திற்கும் உள்ள வேறுபாடு நன்கு புலனாகும். இடைக்காலத்தின் தன்மை கள் யாவையும் தம் மங்கல கீதத்தில் சிறைசெய்யும் தாந்தேயும் ஆழ்ந்த உணர்ச்சி யுள்ளவரேனும், குறுகிய நோக்கமுடையவரே. காலவரம்புகளைத் தாண்டி நிற்பவர்கள் சிலரே. எவரையும் குறைகூறுவதில் பயனில்லை. அவரவர் சூழ்நிலைக் கேற்றவாறு, அவரவர் கருத்துகள் மிளிர்கின்றன. அவர்கள் கண்ட நல்லதை நவில் கின்றார்கள்; அஃது இதயத்தின் ஆழத்திலிருந்து வருகிறதா? அல்லது வெறும் உதட்டில் உலாவி நிற்கும் ஒன்றா? என்பதைமட்டும் நாம் கவனிப்போமாக.

# 7. பிளேட்டோவின் அடிச்சுவட்டிலே

ஞானி அகஸ்டைனுக்குப் பிறகு வந்த இரண்டு சான்றோர்களை நாம் குறிப்பிடாமலிருக்க இயலாது. இவ்விருவரும் புதுமுறைப் பிளேட்டோ தத்து வத்தின் வனப்பைப் பருகி அதைக்கொண்டு கிறித்துவ சமயத்திற்கு விளக்கந் தருகின்றார்கள். ஸைரினி (Cyrene) நாட்டைச் சார்ந்த ஸைனீஸியஸ் (Synesius) என்பவரும், அரீயோபக்கைட் டையேனிஸியஸ் (Dionysius the Areopagite) அல்லது ஸ்யூடே டையோனிஸியஸ் (Pseude Dionysius) என்னும் பெயர்பெற்றுத் திகழ்பவருமான இருவரும் நம் மனத்தை ஈர்க்காமற் போகார்.

ஸைனீஸியஸ் கி.பி. நான்காம் நூற்றாண்டின் இறுதியிலும், ஐந்தாம் நூற் றாண்டின் தொடக்கத்திலும் மிளிர்ந்தவர். கிறித்துவ சமயத்தைத் தழுவுவதற்கு முன்பு புதுமுறைப் பிளேட்டோ தத்துவக் கொள்கையைச் சார்ந்தவராயிருந் தார். பெரும்புகழ் பெற்றுப் பிளேட்டோவின் அடிச்சுவட்டைப் பின்பற்றி ஞான ஒளியைப் பரப்பிய ஹைப்பேஷ்யா (Hypatia) என்னும் தத்துவ ஆசிரியை யோடு அலக்ஸாண்டிரியாவில் சில ஆண்டுகள் இன்பமாய்க் காலத்தைக் கழித் தார். இவர் படிப்பில் மிகுந்த ஆர்வமுள்ளவர். அதில் ஆழ்ந்து தம் நேரங்கள் போவதுகூடத் தெரியாமல் உவகைக் கடலில் நீந்துவார். உழவுத் தொழிலில் இவருக்கு ஒரு தனிப்பட்ட ஊக்கமுண்டு. கனவுகளிலும் வருங்காலமுணர்த்தும் தெய்விக சத்தியிடத்திலும் வேரூன்றிய ஒரு நம்பிக்கை இருந்தது. பிளேட் டோவின் தத்துவத்தில் திளைத்த இப் பிளோடைஸ் கண்ட முத்தத்துவத்திற்கு இணங்க, கிறித்துவ சமய முத்தத்துவத்திற்கு விளக்கம் தந்தார். ஒரு மடத்திற்குப் பாதிரியானாலும், இவர் தம்மீது ஆட்சிபுரிந்த பிளேட்டோவின் கொள்கையினின்றும் தம்மை விடுவித்துக்கொள்ள இவரால் முடியவில்லை. கிறித்துவ சமயத்தைச் சாராத ஹைப்பேஷ்யாவுக்கு இவர் வரைந்த கடிதம் அந்தப் பெண்மணியின்பால் இவர் வைத்த ஒரு தனிச் சிறப்பையும் மதிப்பையும் நன்கு சுட்டுகின்றது. 'கிறித்துவரல்லாதவரைப் போற்றிப் பாடல்களைப் புனைந்து விட்டேன்; அந்தத் தவற்றைப் பொறுத்தருளவேண்டும் இயேசுநாதரே! உலகத்தை உய்விக்கத் தோன்றிய என் வள்ளலே! என்மீது உன் கருணை முகிலைப் பெய்திடவேண்டும்' என்று இறைஞ்சுகின்றார்.

சைனீஸியஸ் என்பவரிடம் கிரேக்க தத்துவமும் கிறித்துவ சமயமும் துண்டு துண்டாய்த் தனித்து நிற்கின்றன. அதை டையோனிஸியஸ் என்ற சான்றோரிடம் கிரேக்கர், குணதிசை அறிஞர், யூதர்—இவர்களுடைய கொள்கைகள் கிறித்துவ சமயத்தில் நன்கு குழைந்து கரைந்துவிடுவதை நாம் நோக்குகின்றோம். இவர் வாழ்க்கை வரலாறு காலப்பனிமூட்டத்தில் மறைந்து கிடக்கின்றது. ஆனால், இவர் ஓர் அனுபூதிச் செல்வர் என்று தோன்றுகின்றது. எல்லாவற்றையும் கூர்ந்து, ஆனால், எல்லாம் தானேயாகி நின்ற ஒரு பரம்பொருளை நேரில் காண விழையும் ஒரு சான்றோர் இவர் என்று இயம்பினால் அது மிகையாகாது. பரம் பொருள் புலன் கடந்து சுடர்விட்டு நிற்கின்றது என்பது தெய்வ வழிபாட்டை அடிப்படையாகக்கொண்ட தத்துவ அறிஞரனைவருக்கும் ஒத்த கருத்தேயாகும் இப் பிளேட்டோவைத் தத்துவ உலகத்தில் கண்டறிந்தது இங்குச் சிந்திப்பதற் குரியது. பரம்பொருளின் ஒளிவெள்ளம் விசுவ மனத்திடைப் பாய்ந்த பிறகு விசுவ ஆன்மாவிடம் பெருகுகின்றது. இப்படி ஓடுகின்ற சுடர்வெள்ளம் ஆன்மாக்களிடத்திலும் அருவிபாய்கின்றதாம். எல்லா நன்மைகளும், படைப்பு, வாழ்வு முதலிய அமிசங்களும் ஆண்டவனிடமிருந்து வழிந்தவையே. எல்லாம் ஆண்டவனும் சிதையாத வித்திலிருந்து அரும்புகின்றன. ஆண்டவனிடமிருந்து தோன்றிய மன்னுயிர்களனைத்தையும் அவனுடைய ஒளிமிக்க தேவதூதர்கள் அவனிடத்திற்கு அழைத்துச் செல்லுகின்றார்கள். கடந்தும் கரந்தும் ஆண்டவன் இருக்கின்றான். வாழ்வு என்பது ஆண்டவனோடு கலந்து நிற்பது; தீதென்பது அவனைவிட்டு அகன்று நிற்பதே என்று இவர் சாற்றுகின்றார். சிந்தையையும் சொல்லையும் கடந்த அந்தப் பேருண்மையை உலகத்தில் காணப்படும் பொருள்களைக் கொண்டு சித்திரிக்க இயலாது. ஆனால், அவையனைத்தையும் உருவாகக் கருதி ஒருவாறு ஆண்டவனை உணர முடியும். இவருடைய தத்துவம் கி.பி. ஒன்பதாம் நூற்றாண்டில் தோன்றிய ஜான் ஸ்கோட்டாஸ் யுரியுஜினா (John Scotus Eriugena) என்பவர் ஆட்சி புரிந்ததை நாம் நன்கு உணர்வோம். ஜெர்மனியில் அவதரித்த மெய்ஸ்ட்டர் ஏக்கார்ட் (Meister Eckhart) என்பவரும், அன்புமூலம் ஆண்டவன் திருக்கோயிலை அடைந்த தாந்தே என்னும் இடைக்காலத்து வான்புகழ்பெற்ற கவிஞனும் இவ்வாசிரியருக்குக் கடமைப்பட் டுள்ளனர் என்பதைப் பல சான்றுகள் கொண்டு தத்துவ ஆராய்ச்சியாளர்கள் மெய்ப்பித்துள்ளார்கள். இத்தகைய ஞானவள்ளலுக்கு நாம் புகழ்மாலை சூட்டாமலிருக்க முடியுமோ?

# 8. ஞானி அகஸ்டைனுக்குப் பின்

கி.பி. ஐந்து, ஆறு நூற்றுண்டுகள் மிகவும் குழப்பமான காலம்; தத்துவ சாத்திர ஒளி பரவுதற்கு ஏற்ற தருணம் அன்று. வெம்போர்ப் புயல்கள் அடிக்கின்ற காலத்திலும் ஐரோப்பாக் கண்டத்தின் அரசியல்துறையில் சில மாறுதல்களை எழுப்பக்கூடிய சில அமிசங்கள் அந்த மாபெருங் குழப்பத்தில் இல்லாமலில்லை. ஆங்கிலேயர்கள் பிரிட்டன்மீது படையெடுத்து அதைத் தங்களுக்கு வசமாக்கிக் கொண்டார்கள். பிறகு பிரிட்டன் பெயர் மாறவே, இங்கிலாந்து என்னும் பெயர் அந் நாட்டிற்குச் சூட்டப்பட்டது. ஃபிராங்க் என்னும் இனத்தார் கால் என்னும் பிரதேசத்தைக் கைப்பற்றினர்கள். கால் என்னும் நாடு இப்பொழுது ஃபிரான்ஸ் என்னும் பெயர் பெற்றுத் திகழ்கின்றது. வாண்டல் என்னும் கொள்ளைக் காரர்கள் ஸ்பெயின்மீது படையெடுத்து அதைத் தம் ஆட்சிக்கு உட்படுத்தி விட்டார்கள்.

படையெடுப்புகளும் வெம்போர்களும் காட்டுத்தீயைப்போல் எங்கும் இன்னல்களை விளைக்கின்ற காலத்தில், கிறித்துவ மடம் ஒரு சொற்போரில் இறங்கி விட்டது; கிறித்துவின் அவதார இரகசியத்தைப்பற்றிய சர்ச்சை மிகுந்த சீற்றத்தை எழுப்பிவிட்டது. இந்தப் போரில் கலந்துகொண்டவர்களுள் ஒருவர் ஞானி ஸிரில் (St. Cyril) என்பவர், 'இரண்டு கிறித்துகள் இல்லை; எல்லாம் ஒன்றே' என்று வாதாடினர். நெஸ்டோரியஸ் என்பவர், 'மேரியைக் கடவுளுக்கு அன்னை என்று சொல்வதற்கிடமில்லை. மனித வடிவுள்ள இயேசுவுக்கு அவள் அன்னையா யிருக்கலாம்; தெய்வ அமிசத்தோடுகூடிய ஒன்றிற்கு அன்னை உண்டா?' என்று ஒரு சொற்போர் நடத்தினர். ஒரு திருக்கூட்டம் கூடியதில் நெஸ்டோரியஸுக்குத் தோல்வி ஏற்பட்டுவிட்டது.

ஞானி ஸிரில் என்பவர் ஒரு வெறிபிடித்த கிறித்துவப் பாதிரி. அலக்ஸாண்டிரியாவில் இருந்து வந்த ஹைப்பேஷ்யாவை—கிறித்துவ சமயத்தைச் சாராது, புதுமுறைப் பிளேட்டோ தத்துவத்தைப் பின்பற்றிய ஹைப்பேஷ்யாவை—ஞானி ஸிரிலின் கட்டளையால் அவளுடைய இரதத்திலிருந்து அவளைக் கீழே வீழ்த்தி, அவள் உடைகள் யாவற்றையும் கழற்றி, அவளை மடத்தில் சித்திரவதை செய்து அவளை வெங்கொழுந்தீக்கு இரையாக்கிவிட்டார்கள். இத்தகைய

கொடுஞ்செயல்கள் கிறித்துவ சமயத்தின் பெயரால் நடந்ததைப்பற்றி நாம் துயரில் ஆழாமலிருக்க இயலாது. மேலும், ஸிரியாவில் உறைந்துவந்த நெஸ்டோரியஸ் தோல்வியுற்றாலும், அவரும் ஒரு முறையான கிறித்துவ சமயத்தைத் தாபித்தவராய் விளங்குகின்றார். அவரைப் பின்பற்றுகிற கிறித்துவர்களும் நம் நாடான இந்தியாவிலும் இருக்கின்றார்கள். இருள் சூழ்ந்த இந்தக் குழப்பமான காலத்திலும் போயித்தியூஸ் (Boethius), ஜஸ்டினியன் (Justinian), பெனிடிக்ட் (Benedict), கிரெகரிப் பெரியார் (Gregory, the great) என்ற சான்றோர்கள் இருட்படலத்தைக் கிழித்து ஞானச்சுடரை ஏற்றி வைத்ததை நாம் நன்கறிவோம்.

ஏரியன் கொள்கையைச் சார்ந்தவனாயிருந்தாலும், இத்தாலிய நாட்டை ஆண்டுவந்த தியோடிரிக் கிறித்துவ மடத்தின்மீது பகைமை பாராட்டாது இருந்தான். ஆனால், கி.பி. 523ஆம் ஆண்டு சக்கரவர்த்தியான ஜஸ்டின், ஏரியன் கொள்கையை முற்றிலும் தலைகாட்டாதபடி புறக்கணித்துவிட்டான். இதன் விளைவாகத் தனக்குப் பகையாகப் பலர் சதிசெய்துவருகின்றார்கள் என்று கருதி ஸெனடராயிருந்த போயித்தியூஸ் என்ற சான்றோனைச் சிறையில் வைத்துவிட்டான். இந்தச் சிறைவாசத்தில்தான் 'தத்துவம் நல்கும் ஆறுதல்கள்' (Consolation of Philosophy) என்னும் அரிய நூலை எழுதினார். இடைக்காலம் முழுதிலும் இந் நூல் படிக்கப்பட்டுப் போற்றப்பட்டுவந்தது. இவர் ஆர்வமிக்க ஒரு கிறித்துவரென்று கிறித்துவ சமய உலகத்தில் மிகவும் பாராட்டப்பட்டார். எனினும், இவருக்குக் கொலைத் தண்டனையை விதித்து மாய்த்துவிட்டார்கள். உயர்சான்றோனுக்கு உலகம் அளிக்கும் பரிசு போலும் இது !

போயித்தியூஸ் வழங்கிய நூல் பொன்னேபோல் போற்றுதற்குரியது. 'சாக்ரடீஸ், பிளேட்டோ, அரிஸ்டாட்டில் இவர்கள்தாம் உண்மையான தத்துவ ஞானிகள்' என்று இவர் மொழிகின்றார். எல்லாம் ஆண்டவன் மயம் என்னும் கொள்கையை வலியுறுத்துகின்றார். 'தீமைக்கு இறையளவும் இடமே இல்லை. ஆண்டவன் தன்மையை அடைவதால், மக்கள் இன்பமடைகின்றார்கள். உண்மையைக் கூறுமிடத்துத் தெய்வம் ஒன்றே. ஆனால், அந்த இறைநிலையை அடைந்த அனைவரும் கடவுளரே. நன்னெறியிலே நிற்பவர் எல்லோரும் ஆற்றல் படைத்தவர்களே. தீயவர்கள் பலவீனமுள்ளவர்கள்தாம். அறிவுமிக்க சான்றோர்களின் இதயங்களினல் பகைமைக்கு இடமே இல்லை, ஆண்டவனுடைய அறநெறியை ஒருவன் அறிய விழைந்தால், அவனுடைய பார்வை விண்ணின் மீது செல்லட்டும். பரிதியும், திங்களும், விண்மீன்களும் ஆண்டவன் கட்டளைப் படி ஒழுங்காய்த் தம்தம் நெறிகளில் செல்லுகின்றன. மண்ணிலும் இதே ஒழுங்கைப் பார்க்கின்றோம். பருவகாலங்கள் ஒரு பவனி வருகின்றன. கடல் கரையை மீறுது அடங்கிக் கிடக்கின்றது. ஆண்டவனிடமிருந்துதான் எல்லாம் தோன்றுகின்றன' என்று அந்நூலில் கூறியுள்ளார்.

சிறையிலிருந்த சாக்ரடீஸைப்போலவே இவர் மனம் குழப்பமடையவில்லை. செல்வச் செருக்கிலிருந்து இத்தகைய அறிவுரைகள் வந்தால், அவைகளைப் போற்றுவதற்கில்லை. மரணநிழல் தம்மீது படர்ந்து நின்றாலும், அதைப் பொருட் படுத்தாது தாம் கண்ட உண்மையை உலகத்திற்கு அச்சமின்றி உணர்த்திய பெரியோரை நாம் வணங்காமலிருக்க இயலுமோ ?

போயித்தியூஸ் மரண தண்டனையால் இறந்த இரண்டு ஆண்டுகளுக்குப் பிறகு தியோடரிக் மாண்டுபோனான். ஜஸ்டினியன் ரோம சாம்ராச்சியத்திற்குச் சக்கரவர்த்தியானார். சட்டத்துறையில் இவர் புகழ்பெற்றார். சட்டச் சுருக்கம் ஒன்றை அமைத்தார். கிறித்துவ மதப்பற்று உள்ளவர். கிறித்துவரல்லாதார் போற்றும் கழகங்களை மூடிவிட்டார். கி.பி. 568ஆம் ஆண்டு—அதாவது, ஜஸ்டினியன் இறந்த மூன்றாண்டுகளுக்குப் பிறகு—லொம்பார்ட்ஸ் என்னும் ஜெர்மானிய இனத்தார் இத்தாலியாமீது படையெடுத்த காரணத்தால், இத்தாலியா நாட்டு நாகரிகம் பாழடைந்துபோய்விட்டது. லொம்பார்ட்ஸ் இனத்தாருக்கு அஞ்சி ஓடிய மக்கள் வெனிஸ் நகரத்தை நிறுவினார்கள் என்று ரஸ்ஸல் கருது கின்றார். எஞ்சி நின்ற ரோம நாட்டு நாகரிகச் சுடரை அழியாமல் காத்தது கிறித்துவ மடமென்று மொழிந்துவிடலாம். இத்தகைய துறவற மடம் எப்பொழுது தோன்றிற்று என்பது நம் ஆராய்ச்சிக்குரியதன்றோ ?

## 9. துறவற மடம்

ஞானி அகஸ்டைன், ஸ்டாயிக் கொள்கையினரைப்போல உணர்ச்சிகளை அழிக்க விரும்பவில்லை. மனிதக் காதல் தெய்வக் காதலாக மாறவேண்டும். மேலும், ஐம்புலப் பலகணிகளை அறவே அடைத்தால்தான் அகவுயிருக்கு அமுதமாயிருக்கும் ஆண்டவன் அருள் கிட்டும். அமர வாழ்வு வாழவேண்டும். அத்தகைய வாழ்வைப் பெறுவதற்குத் தன்னை ஒருவன் தூய்மைப்படுத்திக் கொள்ளுவதுதான் உயர்நெறியாகும். இயேசுநாதர்மீது அன்பு வைத்து, அவருடைய அருளாட்சியை உலகத்தில் நிறுவுவதே ஒவ்வொருவருடைய சிறந்த குறிக்கோளாகும். மேலும், தாம் புரிந்த தீச்செயலுக்காகக் கழிவிரங்கல் காட்டுதற்பொருட்டு மிகக் கடுமையான நோன்புகளைக் கிறித்துவர்கள் மேற்கொண்டுவிட்டார்கள். ஞானி மார்ட்டின் இறக்கும் தருணம் சாம்பற் குவியல் மீது படுத்தது கழிவிரங்கலின் அறிகுறியாகும்.

இங்கிலாந்தை ஆண்ட சிங்கவேறு அனைய முதல் ரிச்சேர்ட் ஒரு ஞானியுமல்லன் ; ஒரு துறவியுமல்லன். ஆனால், இறக்கும்பொழுது தான் புரிந்த தீச்செயல்களைத் துடைத்தற்பொருட்டுத் தன்னைச் சாட்டையால் அடிக்கும்படி கட்டளை இட்டான். இந்த முறையில் கிறித்துவ நோன்புகள் செல்லுகின்றன.

மேலும், பிளேட்டோ கண்ட தத்துவமும் துறவறத்திற்குத் துணைபுரிந்தது. பிரகிருதியை அவர் தீதெனக் கொண்டார். அதிலிருந்து விடுபட்டால்தான் ஆன்மா உய்யமுடியும் என்று இயம்பினார். ஐம்புலன்களுக்கு அப்பால் சுடர் விடுகின்ற பரம்பொருளின் நிழல்தான் உலகத்தில் காணப்படும் பொருள்கள் யாவும் என்றார். நிழலின்மீது பார்வை விழாமல் தடுத்து மூலப்பொருளை நாடவேண்டும் என்பதுதான் அவருடைய திருவுள்ளம். கிறித்துவத் துறவறக் கொள்கைக்கு மூலம் பிளேட்டோவின் தத்துவத்திலேயே உணரக்கூடும்.

முதன்முதலாக இந்தத் துறவற இயக்கம் எகிப்திலும், ஸிரியாவிலும் தோன்றிற்று. தனித்த வாழ்க்கையைக் கைக்கொண்ட துறவிகள் ஒருபால், மடங்களில் உறைந்து வாழும் துறவிகள் ஒருபால்—இவ்விரு முறைகளிலும் தங்கள் வாழ்நாட்களைத் துறவிகள் கழித்துவந்தார்கள்.

ஞானி அந்தோனிதான் (St. Anthony) துறவறக் கூட்டத்திற்கு வழி வகுத்ததாகத் தெரிகின்றது. இவர் மடத்தில் உறைந்து வாழவில்லை. சுமார் கி.பி. 250ஆம் ஆண்டில் உலகத்தை நீத்து ஒரு பெருந்துறவியானார்; பாலை வனத்தில் மிகச் சேணில் தன்னந்தனியாய் வாழத் தொடங்கினார். தம்முடைய வீட்டிற்கு அண்மையில் ஒரு குடிசையில் பதினைந்து ஆண்டுகள் கழித்தார். இவருக்கு இருபதாண்டுகள் வெம்பாலையில் மெல்லத் தேய்ந்துவிட்டன. இவருடைய புகழ் எங்கும் பரவிற்று. மக்கள் திரள் அருவியெனப் பாய்ந்தது. தாம் கண்ட உண்மைச் சுடரை அவர்களிடையே பரப்பினார். அரிய நோன்புகளை மேற்கொண்டார். உண்டி சுருக்குதல், உண்ணாநோன்பிருத்தல், தூக்கம் முதலியவற்றைக் குறைத்துக்கொள்ளுதல் — இவைபோன்ற கடுமையான தவநெறிகளைப் பின்பற்றினார். இவருடைய அடிச்சுவட்டைப் பின்பற்றிய பல துறவிகள் தி பெய்ட் (The Baid) என்னும் பாலைவனத்தை நிரப்பிவிட்டார்கள்.

சில ஆண்டுகளுக்குப் பிறகு, அஃதாவது, கி.பி. 315 அல்லது 320ஆம் ஆண்டுகளில் எகிப்து நாட்டைச் சார்ந்த பாக்கோமியஸ் (Pachomius) என்பவர் ஒரு மடத்தை நிறுவினார். இதுதான் முதலில் தோன்றிய மடமாகும். இம் மடத்தில் துறவிகள் சேர்ந்து வாழ்ந்தார்கள். தனிச் சொத்துரிமை அவர்களுக்கு இல்லை. எல்லாச் சொத்துகளும் பொதுவே. சேர்ந்தே உண்டி அருந்தினார்கள்; சேர்ந்தே கிறித்துவச் சமயத்திற்குரிய வழிபாடுகளைப் புரிந்துவந்தார்கள். உலகத்தை வென்றது ஞானி அந்தோனி கைக்கொண்ட முறையன்று. ஆனால், வையகத்துமீது ஆட்சி புரிந்தது பாக்கோமியஸ் வகுத்த மடத்து நெறிதான். மடத்தில் வாழ்ந்துவந்த துறவிகள் ஐம்புல இன்பங்களை மாய்ப்பதிலேயே காலத்தைக் கழித்துவிடவில்லை; பயிர்த்தொழிலிலும் ஈடுபட்டார்கள். மனச் செம்மையை நாடுதலோடு நின்றுவிடாமல் உடலுக்கும் பயிற்சி அளித்து வந்தார்கள்.

மெசபட்டோமியா, ஸிரியா முதலிய இடங்களிலும் துறவற வாழ்க்கை தொடங்கிற்று. ஞானி ஸைமன் போன்றவர்கள் இரும்புமுளைகளில் நின்று தவம்புரிந்தார்கள். குணதிசையிலிருந்துதான் ரோமாபுரிக்குத் துறவற வாழ்க்கை வந்தது. ஞானி பேஸில் (St. Basil) என்பவர் அவ்வளவு கடுமையான துறவறத்தை வற்புறுத்தவில்லை. அனாதை விடுதிகளை அமைத்தார். சிறுவர் களுக்குப் பள்ளிகளையும் நிறுவினார்.

முதன்முதலாகத் துறவற வாழ்க்கை இயற்கையாய் எழுந்தது; மடத்துத் தொடர்பில்லாமலிருந்தது. ஞானி அத்தனேஸியஸ் (St. Athanasius) என்பவர் துறவிகள் பாதிரிமார்களாய்த் திகழவேண்டும் என்று வற்புறுத்தினார். தனித்து வாழ்ந்துவந்த துறவிகள் மடங்களில் இடம்பெற்றுவிட்டார்கள். இவர் காலத்தில் தான் குடதிசையிலும் துறவற வாழ்க்கை புகுந்துவிட்டது. கீழ்த்திசைத் துறவற வாழ்க்கையினர் பணிவு, கீழ்ப்படிதல், புலனடக்கம் முதலிய குணங்களைப் பேணிவந்தார்கள். அளவுகடந்த கடுமையான நோன்புகள் ஆட்சிபுரியலாயின.

மேற்றிசையிலோ எல்லாம் ஓர் ஒழுங்காய் வரம்புக்குக் கட்டுப்பட்ட நெறியில் சென்றுகொண்டிருந்தன. மேற்றிசைத் துறவற வாழ்க்கைதான் இறுதியில் வெற்றிபெற்றது. லத்தீன் கிறித்துவச் சமயத்தில் துறவறத்திற்கு வேண்டிய விதை ஊன்றியிருப்பதை நாம் உணர்கின்றோம். அம்பிரோஸ், ஜெரோம், அகஸ்டைன் முதலியோர்கள் துறவற நெறிக்கு வழிகாட்டியுள்ளார்கள். மிலானில் ஞானி அம்பிரோஸ், மடத்துத் துறவிகளுக்கு அறப்பாதையைச் சுட்டிக்காட்டினார். ஞானி ஜெரோம் துறவற வாழ்க்கையின் புனிதத் தன்மையைப்பற்றிக் கடிதங்கள் எழுதிவந்தார். ஞானி அகஸ்டைன், துறவறக் கன்னி வாழ்க்கையின் வான்சிறப்பைச் சித்திரித்தேவந்தார். காசியன் (Cassion) என்பவர் துறவற இயலைப்பற்றி இரண்டு நூல்கள் கி.பி. ஐந்தாம் நூற்றாண்டில் எழுதியுள்ளார். ஸ்டாயிக் கொள்கையில் மிளிர்கின்ற தன்னம்பிக்கையும், ஐம்புலன்கள்மீது வெற்றிக்கொடியை நாட்டிவிட்டோம் என்ற செருக்கும் கிறித்துவச் சமயத்திற்கு உடன்பாடில்லை. இடையறாது ஆண்டவனை வழிபடுதலும், அவன் அருளை நாடியிருத்தலும், பணிவுடன் நிற்றலும்தாம் கிறித்துவர்களுக்கு அணிகலன்களாகும் என்று இயம்பிவிட்டார். கிரேக்கர்கள் கண்ட அறநெறி இயலின் சாயை கிறித்துவர் போற்றும் அறங்கள்மீது படரக்கூடாதென்பதுதான் இச் சான்றோனின் குறிக்கோளாகும். கிறித்துவ சமயத்தை இதற்குப் புறம்பாயுள்ள எதுவும் மாசுறச் செய்யக்கூடது என்னும் திண்மையான நோக்கமுள்ளவர் இவர் என்பதில் யாதோர் ஐயமுமில்லை. பணிவே கிறித்துவ சமயத்தின் மௌலி என்று ஞானி பெனிடிக்ட் (St. Benedict) கூறியுள்ளார். அவர் தேர்ந்த உண்மைகளை நாம் ஆராய்வோம்.

# 10. ஞானி பெனிடிக்ட்
## (St. Benedict)

இந்த ஞானி தோன்றுவதற்கு முன்பே ஞானி மார்ட்டின் (St. Martin) என்பவர் காலில் (Gaul) மடங்களை முதன் முதலில் தொடங்கிவைத்தார். அயர்லாந்தில் ஞானி பாட்டிரிக் (St. Patrick) என்பவர் மடத்தை நிறுவினர். அது செயின்ட் கொலம்பாவில் (St. Columbo) கி.பி. 566ஆம் ஆண்டு ஐயோனு என்னும் இடத்தில் தாபிக்கப்பட்டது. துறவிகள் தோன்றுவதற்கு முன்பே துறவறத்தை மேற்கொண்ட பெண்மணிகள் கி.பி. மூன்றும் நூற்றுண்டின் நடுவிலேயே காட்சி அளித்தார்கள். துறவிகள் உடலின் தூய்மையை வெறுத்தார்கள். தலைமயிரில் ஊரும் பேன்களை ஆண்டவன் அருளிய முத்துகள் எனப் பேணினர்கள். ஆறுகளைக் கடக்கின்ற தருணங்களைத் தவிர மற்றைய சமயங்களில் தண்ணீர் தங்கள் திருமேனிகளில் பட்டது இல்லை என்று இறும்பூது எய்தினர்களாம். பின் நூற்றுண்டுகளில் மடத்துத் துறவிகள் நற்பணிகளில் இறங்கிச் சிறந்த தொண்டாற்றியுள்ளார்கள். கல்விச் சுடர் அவிந்துபோகாமல் அதைக் காப்பாற்றிவந்தார்கள். அதை விரும்பவில்லை இதை விரும்பவில்லை என்றதுதான் துறவறத்தை மேற்கொண்டவர்களைப்பற்றி நமக்குக் கிடைத்த செய்தியாகும். பெரும்பாலும் துறவிகள் ஒரு தொழிலிலும் அமரவில்லை; சமயம் வகுத்த நூலைத் தவிர வேறு நூல்களைப் பயின்றார்களில்லை. ஞானி ஜெரோம் பாலைவனத்தில் தம் நாட்களைக் கழிக்கின்ற காலத்திலும் தம்முடைய புத்தகக் குவியல்களை எடுத்துச் சென்றர். அத்தகைய செயலைக்கூட ஒரு பாவம் என்று கருதினர்.

மடங்களில் ஓர் ஒழுங்கு மிகவும் தேவையாயிருந்தது. அந்த ஒழுங்கைச் சமைத்த பேறு ஞானி பெனிடிக்டைச் சார்ந்ததாகும். பெனிடிக்ட் வகுத்த துறவற நெறி போற்றுவதற்குரியது.

இவர் ஸ்பாலிடோ (Spoleto) என்னும் ஊருக்கு அண்மையில் சிறந்த அம்பிரிய குலத்தில் சுமார் கி.பி. 480ஆம் ஆண்டு தோன்றினர். தம்முடைய இருபதாம் நூற்றுண்டில் ரோமாபுரியில் தலைவிரித்தாடும் பெரும் போகங்களிலிருந்தும் ஐம்புலச் சிற்றின்பங்களிலிருந்தும் ஓட்டம் பிடித்து, ஒரு குகையில் மூன்று ஆண்டுகள் தன்னந்தனியே வாழ்ந்தார். கி.பி. 520ஆம் ஆண்டு மாண்டி காசினே (Monte Cassino) என்னும் புகழ்பெற்ற மடத்தை நிறுவினர்.

இந்த மடம் மேலைப்பிரதேசத்திற்குரிய தட்பவெப்பத்திற்கு ஏற்றவாறு அமைந்து விளங்கிற்று. மிகக் கடுமையான நோன்புகளை எவ்வளவுக்கெவ்வளவு நோற்கின்றார்களோ, அவ்வளவுக்கவ்வளவு அவர்கள் சிறந்த துறவிகளாகப் போற்றப்படுவார்கள். இத்தகைய கடுமையான நோன்புகளுக்கு ஞானி பெனிடிக்ட் ஒரு முற்றுப்புள்ளி வைத்து ஒரு மிதத்தைத் துறவறத்தில் புகுத்தினார். இந்த மடம் தேர்ந்தெடுக்கப்பட்ட—ஆயுள் முழுதும் தேர்ந்தெடுக்கப்பட்ட—ஓர் ஆபட் ஆட்சிக்குட்பட்டது. கடுமையான தவங்களை மேற்கொள்ளவேண்டுமானால், இவருடைய சம்மதத்தைப் பெறவேண்டும்.

மடங்கள் பெரும்பாலும் பிற்காலங்களில் தாபகர்கள் கொண்ட கருத்துகளுக்கு மாறாகவே நடக்கின்றன. இயேசுநாதர், பால் முதலியோர் வந்து அவற்றைக் கண்ணுற்றால், அவர்களையே திடுக்குறச் செய்யும் என்று ரஸ்ஸல் மொழிகின்றார். ஆனால், பெனிடிக்ட் மடத்தினர் இயேசுநாதரின் அடிச்சுவட்டில் செல்லுகின்றனர். வறுமை, பணிவு, புலனடக்குதல் இம் மூன்றையும் இம் மடத்தினர் அரிய நோன்புகளாகக் கொண்டனர். பெரியோன் கிரகரி (Gregory, the Great) என்னும் போப்பாண்டவரின் ‘உரையாடல்கள்’ என்னும் நூலின் வாயிலாக பெனிடிக்டின் வரலாறு ஒருவாறு புலனாகின்றது. இவர் அற்புதங்களையெல்லாம் காட்டினாராம். இவர் தம்மைத் தூய்மைப்படுத்திக் கொண்ட ஒரு செய்தி இங்கு நோக்குதற்குரியது. ஒரு பெண்ணை எங்கேயோ கண்ணுற்றாராம். அந்தப் பெண்ணின் உருவத்தைச் சாத்தான் இவர் முன் நிறுத்தியது. உடனே இவருக்குச் சிற்றின்ப நுகர்ச்சி வந்ததாம். அதைப் போக்குவதற்காக முள்ளிலும் நெருஞ்சியிலும் தம் உடலைப் புரட்டினாராம்; அத்தகைய செயலால் மனத்தூய்மை அடைந்தாராம்.

அண்மையிலுள்ள ஒரு பாதிரி இவருக்கு வந்த புகழால் அழுக்காறு உற்று இவரைக் கொல்லுவதற்கு நஞ்சு கலந்த ரொட்டித் துண்டை அனுப்பினார். இதை அறிந்து ஞானி பெனிடிக்ட், காகத்தைக் கூப்பிட்டு, அந்த ரொட்டித் துண்டை மிகச் சேணில் கொண்டுபோய் எறிந்துவிடும்படி கட்டளையிட்டார். அது அவ்வாறு செய்து திரும்பிவரவே, அதற்குற்ற நல்ல ரொட்டித் துண்டை ஞானி பெனிடிக்ட் அளித்தார்.

இன்னும் இவரைத் துன்புறுத்துவதற்கு அந்தத் தீய பாதிரி ஏழு பெண்களை—ஆடையில்லாத பெண்களை—இவர்பால் செல்லும்படி ஏவினார். இதை உணர்ந்த ஞானி பெனிடிக்ட் மடத்தைவிட்டு வெளியே சென்றுவிட்டார்.

இப்படித் தீமைகளை விளைவித்த பாதிரிமீது மேற்கட்டடம் இடிந்து விழுந்துவிடவே, அவர் மாய்ந்துபோய்விட்டார். இந்தச் செய்தியை ஒரு துறவி மகிழ்ச்சியுடன் கொண்டுவந்தபொழுது, தமக்குத் தீது செய்தவருக்கு இரங்கிக் கண்ணீர் வடித்தார். மகிழ்ச்சியுற்ற துறவிக்குக் கழுவாய் ஒன்றை விதித்தார்.

இவ் வரலாறுகளிலிருந்து நாம் உணரவேண்டியது யாதெனில், தூய வாழ்வை நடத்திய ஒரு சான்றோன் இவர் என்பதே.

இவர் பன்னிரண்டு மடங்களைத் தாபித்தார். மான்டி காசினோ என்னும் இடத்தில் யவனர்கள் வணங்கிய அப்போலோ என்னும் தெய்வத்திற்கு ஒரு தொழும் கோயிலிருந்தது. அதை இடித்து ஒரு கிறித்துவ மடத்தை நிறுவினர். இந்த மடத்தில் கி.மு. 543ஆம் ஆண்டுவரையில் இவர் உறைந்துவந்தார். இந்த மடத்தை லொம்பார்ட் இனத்தார் சூறையாடிவிட்டனர். அதிலுள்ள துறவிகள் ரோமாபுரிக்கு ஓடிவிட்டனர். லொம்பார்டினரின் சீற்றப் புயல் அடங்கினதும், இவர்கள் மீண்டும் தங்கள் மடத்திற்கு வந்துவிட்டார்கள். ஞானி பெனிடிக்ட் புரிந்த அருஞ்செயல்கள் நம் உளங்களைக் கவராமற்போகா. இவருடைய மடத்தில் ஒரு பெரிய நூல்நிலையம் இருந்தது. இம் மடத்தினர் ஞான நற்பயிர் தழைத்தோங்கப் பாடுபட்டனர் என்பதற்கு இஃது ஒரு தக்க சான்றாகும். இந்த மடத்துத் துறவி ஒருவர் மொழிந்தது சற்றுச் சிந்திப்பதற்குரியது.

'என்னுடைய வறுமை எனக்கு ஒரு பெருஞ் செல்வத்தை நல்குகிறது. என்னுடைய பணிவு என்னை ஒரு வேந்தன் நிலைக்கு உயர்த்திவிட்டது. பெனிடிக்ட் வகுத்த சட்டதிட்டங்களில் கிரேக்கக் கல்வி மணம் சற்றும் வீசவில்லை. விவிலிய நூலில் கோயில் கொண்டுள்ள சொற்றொடர்கள்தாம் இவைகளில் வைத்து இழைக்கப்பட்டிருக்கின்றன. அன்றாட வாழ்க்கைக்குப் பொருந்தாதனவாயிருக்கின்றன. தூய தெய்வீக வாழ்க்கையை நடத்துவதற்குத் தக்க உதவி புரிகின்றன.'

'நீங்கள் எப்பொழுதும் பணிவுள்ளவராய்த் திகழ்வீர்களாக. நாம் ஆண்டவனுடைய குழந்தைகள். நாம் தீச்செயல்கள் புரிந்து அவனைப் புண் படுத்தாமலிருப்போமாக. உளம், உரை, செயல்—இம் மூன்றும் ஒரே சுருதியில் இசைக்கவேண்டும். நாம் செய்கின்ற நற்செயல்கள் நம்முடைய புகழுக்கல்ல. ஆண்டவனுடைய புகழ்மாலையைத்தான் எஞ்ஞான்றும் நாம் புனையவேண்டும்.'

பணிவின் பன்னிரண்டு படிகளை இவர் சுட்டுகின்றார். கடவுள் நம்மை இடையறாது பார்த்துக்கொண்டுதான் இருக்கின்றார். அவருக்கு அஞ்சிப் பணிவுடன் நடத்தல் நம் கடனாகும். நம்முடைய சங்கற்பத்தை நாம் நிறைவேற்ற வரவில்லை; ஆண்டவனுடைய சங்கற்பத்தை நிறைவேற்றவே தோன்றினோம். இது இரண்டாம் படியாகும்.

இயேசுநாதர் தன் தந்தைக்குக் கீழ்ப்படிந்து உலகம் உய்வதற்காக உயிரை நீத்தார். அவ்வண்ணமே கடவுள்பால் அன்புவைக்கிற அனைவரும் தங்களுக்கு மேலுள்ளவர்களுக்குக் கீழ்ப்படிதல் மூன்றாம் படியாகும். இன்னல்களும் இடுக்கண்களும் வந்தாலும் சரி, நமக்கு நியாயம் கிடைக்காதுபோனாலுஞ் சரி, நாம் மனம் உவந்து கீழ்ப்படிதல் வேண்டும். இது நான்காம் படியாகும்.

நம்முடைய மனத்தில் கரந்து நிற்கும் எண்ணங்களையும் பிறர் அறியா வண்ணம் புரிந்த தீச்செயல்களையும் நாம் ஒப்புக்கொண்டு கழுவாய் தேடவேண்டுமென்பது ஐந்தாம் படியாகும்.

எந்த இழிவான நிலை தனக்கு நேர்ந்தாலும் அதைப் பொருட்படுத்தாது, தனக்கு விளைந்தது நியாயந்தான், ஏனெனில் தான் தகுந்த ஒரு தொழிலாள னல்லன் என்று அவன் கருதவேண்டும். இஃது ஆறும் படியாகும். தன்னை நாயினும் கடையனாகக் கூறிக்கொள்ளுதலோடு நில்லாமல், தம் மனத்தின் கண்ணும் அப்படிச் சிந்தித்திருத்தல்வேண்டும். இஃது ஏழாம் படியாகும்.

துறவறத்திற்காக வகுத்த நெறிகளிலிருந்து சிறிதும் பிறழாமலிருத்தல் எட்டாம் படியாகும்.

நாவை அடக்கி மோனமௌலி சூடியிருத்தல் ஒன்பதாம் படி என்பர்; வினவினால் அல்லாது வாளா இருத்தல் நலமாகும்.

நகையாடாமலிருப்பது பத்தாம் படியாகும். பணிவுடனும், சொற்சிக்கனத் துடனும், அமைதியுடனும் தாழ்ந்த சுருதியில் பேசுவது பதினொன்றும் படியாகும். உளத்தில், செயலில், நடையுடைபாவனைகளில் பணிவுகாட்டுதல் மிகவும் சிறந்தது. நடக்கும்பொழுதும் அமரும்பொழுதும் பணிவு திகழவேண்டும். விண்களைப் பார்ப்பதற்குற்ற நிலை தன்னிடத்தில் இல்லை என்று கருதி பூமியை நோக்கியே அவன் நடப்பானாக. இதுதான் பன்னிரண்டாம் படியாகும்.

இப் படிகளின் வாயிலாக மனிதன் ஆண்டவன் அருட்கோயிலை எளிதில் நண்ணமுடியும் என்பதுதான் பெனிடிக்ட் கொண்ட வான்கருத்தாகும். இடைக் காலத்துக் கிறித்துவக் கொள்கையில் கிரேக்க தத்துவ நிழல் அடித்தாலும், கிறித்துவர்களுடைய துறவற வாழ்க்கையைப் பேணுகின்ற மடங்களிலிருந்து இஃது அறவே நீங்கிப்போயிற்று. ஆண்டவன்பால் அன்பு செலுத்தி அவனை நேரில் காணவேண்டும் என்பதே அவர்களுடைய அவா. அந்த அவாவிற்கு முரணான எல்லா விழைவுகளையும் நீக்கிவிடவேண்டும். ஆண்டவன்பால் அன்பு காட்டு வது என்பது அவன் படைத்த குழந்தைகள்மீதும் அன்பைப் பொழிவதாகும். நாம் அனைவரும் அவன் குழந்தைகளல்லவா? ஆதலால், அனைவரும் உடன் பிறந்தோர்களே.

மனிதக் காதலுக்கு இடமில்லை; பாலுணர்ச்சிக்கு இடமில்லை. மிகுதியான உண்டி அருந்தினால், அது பாலுணர்ச்சியைத் தூண்டிவிடும். ஆதலால், மிதமான உணவை ஏற்கவேண்டும். தாமஸ் ஏ. கெம்பிஸ்ஸின் 'இயேசுநாதரின் அடிச் சுவட்டிலே' என்னும் நூலில் துறவற வாழ்வு நன்கு சித்திரிக்கப்பட்டிருக் கின்றது. இடைக்கால இறுதியில் தோன்றிய இந்த நூல் இடைக்காலத்துத் துறவறக் கொள்கையாம் திருக்கோயிலுக்கு ஒரு கோபுரம்போல மிளிர்கின்றது என்று இயம்பினால் அது மிகையாகாது.

## கிரகரிப் பெரியார்

சுமார் கி.பி. 540ஆம் ஆண்டில் மிகுந்த செல்வம் படைத்த ஒரு பிரபுவின் குலத்தில் இவர் தோன்றினார். இவருடைய பாட்டனார் தம் மனைவியை இழந்த பிறகு போப்பாண்டவராய்த் திகழ்ந்ததாகத் தெரியவருகின்றது. கிரகரிக்கும்

ஓர் அரண்மனை உண்டு ; பெருஞ் செல்வம் உண்டு. அந்தக் காலத்திற்கேற்ற முறையில் நடந்துவந்த கல்விப் பயிற்சியையும் பெற்றிருந்தார். கிரேக்க மொழியைக் கற்றுரில்லை. ரோமாபுரியில் அரசியல் துறையில் ஒரு தக்க பணியில் அமர்ந்திருந்தார். பிறகு உத்தியோகத்தை நீத்துத் தம் செல்வத்தை மடங்கள் கட்டுவதிலும், வறியர்களுக்கு ஈவதிலும் செலவுசெய்தார். தம்முடைய அரண்மனையே துறவிகள் தங்குவதற்குற்ற மடமாக மாறிவிட்டது. தியானத்தில் ஆழ்ந்தும், அரும்பெரு நோன்புகளை மேற்கொண்டும் காலத்தைக் கழித்ததால், உடல்நலங்கூடச் சிதையத் தொடங்கிவிட்டது.

அக் காலத்துப் போப்பாண்டவர் மாண்டதும், இவர் அப் பதவியை ஏற்ருர். கிரகரிப் பெரியார் வாழ்ந்த காலம் மாபெருங் குழப்பத்தில் ஆழ்ந்த காலம். லொம்பார்ட் இனத்தினர் இத்தாலியா நாட்டைச் சூறையாடிக்கொண்டிருந்தனர். ஸ்பெயின், ஆப்பிரிக்கா இவ்விடங்களில் தக்க ஆட்சியின்றிப் பெருங் கலகங்கள் தலைவிரித்தாடின. ஃபிரெஞ்சு நாட்டில் தென்திசையோர்களுக்கும் வடதிசையோர்களுக்கும் இடையருத வெம்போர்கள் நடந்துவந்தன. பிரிட்டன் கிறித்துவ சமயத்தை நீத்துப் புறநெறியைத் தழுவத் தொடங்கிவிட்டது. இந்தக் குழப்பமான சூழ்நிலையில் பாதிரிமார்கள் நெறிபிறழ்ந்த வாழ்க்கையில் இறங்கிவிட்டார்கள். கிறித்துவ மடங்களிலும் பணம் வாங்கியே பாதிரிமார்கள் பதவிகளை நல்கிஞர்கள்.

கிரகரிப் பெரியார் உள்ளம் தளராமல் மனத்திண்மையுடன் தக்க பணியாற்றிஞர். இவர் தமக்குக்கீழ் அமர்ந்து பணிபுரியும் பாதிரிமார்களுக்கு விடுத்த கடிதங்களை உற்றுநோக்குமிடத்து, இவருடைய மனப்பான்மை நன்கு புலனுகும். நீ அதைப் படிக்காதே, நீ அதைச் செய்யாதே என்ற அதிகாரச் சுருதியில்தான் இவர் கடிதங்கள் பேசும்.

கிறித்துவ சமயத்திற்குப் புறம்பான எந்த நூலையும் கையில்கூடத் தொடக்கூடாது என்னும் ஆழ்ந்த கருத்துடையவர். ஞானி அகஸ்டைன் அடிச்சுவட்டைத்தான் பின்பற்றிஞர். பெனிடிக்ட் வகுத்த நெறியை இவர் கைப்பற்றினதால், அவரிடத்தில் இவருக்குத் தனிப்பட்ட ஓர் ஈடுபாடு உண்டு. அற்புதங்களில் மிகுந்த நம்பிக்கை வைத்திருந்தார். ஞானிகளை வழிபடுவதால் வழிபடுவோர்களுக்கு அவர்களுடைய அருளால் நன்மை உண்டாகும் என்கிருர். ஒரு முறை ஞான நன்னீராடினுல்மட்டும் போதாது ; கழிவிரங்கலிலும், நோன்பு மேற்கொள்ளுவதிலும், புரிந்த தீச்செயல்களுக்காக அகங்கரைந்து கண்ணீர் விடுதலிலும் ஒருவன் வாழ்நாள் செல்லவேண்டும் என்றதை வற்புறுத்துகின்ருர். இடைக்காலத்துக் கிறித்துவச் சமயக் கொள்கையின் செயல்முறை வகுத்த தந்தை இவர்தான் என்று இயம்பலாம். இவருக்குப் பிறகு பல ஆண்டுகளாக இவரைப்போல போப்பாண்டவர் தோன்றவில்லை என்று ரஸ்ஸல் குறிப்பிடுகின்ருர்.

# 11. போப்பாண்டவர் ஆட்சி
## (கி.பி. 600 — 1000)

கிரகரிப் பெரியாருக்கு முன்பு இருந்த போப்பாண்டவர்களைப்பற்றி உலகத்திற்கு யாதொன்றும் தெரியாது. அவர்கள் தத்துவஞானிகளும் அல்லர்; இறைநூலை வையகத்தில் பரப்பினவர்களும் அல்லர். இந்தத் தொண்டில் முதன் முதலில் ஈடுபட்டவர்கள் அயர்லாந்தில் தோன்றிய ஞானிகளும் தீர்க்கதரிசிகளும் ஆவார்கள். மடத்துக்குரிய கொள்கையைப் பரப்பும் தொண்டில் ஈடுபடவும் இல்லை. இத்தகைய தொண்டில் இறங்கிய பெரும்பேறு கிரகரிப் பெரியாரைச் சார்ந்ததாகும்.

இங்கும் அங்கும் யாரேனும் ஒரு போப்பாண்டவர் காட்சி அளித்தால், அவருடைய ஆற்றல் சமயத்துறையில் இலங்கவில்லை; அரசியல் வட்டத்தில்தான் அது மிளிர்ந்தது என்று உணர்தல்வேண்டும்.

ரோமாபுரியே போப்பாண்டவர்கள் சமய ஆட்சி புரியும் தலைநகராய் எத்தனையோ நூற்றுண்டுகளாய்த் திகழ்ந்துவருவதற்குக் காரணங்களும் உண்டு. ஞான ஒளி பரப்பும் சமயிகளுக்கு மூலகாரணமாய் மிளிர்ந்தவர் ஞானி பீட்டர். 'நீதான் பீட்டர்; இந்த அழியாப் பாறைமீதுதான் என்னுடைய மடத்தை நிறுவுகிறேன்' என்னும் வரி மாத்யூ எழுதிய நற்செய்தியில் (சுவிசேஷத்தில்) பார்க்கின்றோம்.

ரோமாபுரியில்தான் ஞானி பீட்டர் சமயப் பணியில் ஈடுபட்டுப் பல இடுக்கண்களை உவகையோடு ஏற்று உயிர்துறந்தார் என்று செவிவழி வந்த வரலாறு மொழிகின்றது. இந்த ஞானச்சுடர் அவியாவண்ணம் போற்றிக் காத்தற் பொருட்டு லைனஸ் (Linus) என்பவர் ஞானி பீட்டர்பால் ஒப்படைத்தார் என்று கூறுகின்றார்கள். லத்தீன் சமயகுரவர்களும், கிரேக்க சமயத் தந்தையர்களும் ரோமாபுரிக்குப் புகழ்மாலை புனைந்துவிட்டார்கள். மேலும், ஞானி பீட்டர், ஞானி பால் இவர்களுடைய புனித எலும்புகள் ரோமாபுரியின்கண் உளவாம். ஞானி ஜான் கிறிஸோஸ்டம் (St. John Chrysostom) என்பவர் யவனக் கிறித்துவப் பாதிரிக்குள் சிறந்த சொல்வன்மை படைத்தவர் என்று ஃபிஷர் (Fisher) தம்முடைய உயர்ந்த ஐரோப்பிய வரலாற்று நூலில் குறிக்கின்றார்.

ஞானி பீட்டரும் ஞானி பாலும் ரோமாபுரியில் உயிர்நீத்த நிகழ்ச்சி ஒன்றே நாம் அதன்பால் அன்பு சொரிவதற்குப் போதுமான காரணமாகும். ரோமா புரியின் மாபெருமை, அதன் தொன்மை, அதன் வனப்பு, அதைப் போற்றுகிற சான்றோர்களின் மிகுதியான தொகை, அதன் பேராற்றல், அதன் பெருஞ் செல்வம், அது போர்களில் கண்ட வெற்றிகள் இவை நம் உள்ளங்களைக் கொள்ளைகொள்ளக்கூடியவையே. ஆனால், கிறித்துவ சமயக் கோயிலையே தாங்கும் வியன்தூண்கள்போலத் திகழும் ஞானி பீட்டர், ஞானி பால் இவர் களுடைய வான்சுடர்களுக்குமுன் உலகச் செல்வ ஒளி தேய்ந்து மறைந்து தான் போகும் என்பதில் யாதோர் ஐயமுமில்லை.

கி.பி. 600ஆம் ஆண்டிலிருந்து 1000 வரையில் போப்பாண்டவர்கள் வியத்தகு மாறுதல்களையும் இடுக்கண்களையும் எதிர்த்துப் போராடிக் கிறித்துவ சமயக் கோயிலை நிறுவின செய்தி நம் உள்ளத்தைக் கவர்கின்றது. கிரேக்க சக்கரவர்த்திகளிலிருந்து அவர்கள் விடுதலை எய்தி, சுதந்திரம் பெற்றது தங்களுடைய முயற்சிகளாலன்று. லொம்பார்டுகளின் (Lombards) போர் வலியால்தான் தங்கள் குறிக்கோளை நிறைவேற்ற முடிந்தது. கீழ்த்திசைக் கிறித்துவச் சமயக் கோயில் சக்கரவர்த்திக்குக் கீழ்ப்படிந்து நடந்துகொண்டது. சமயக் கொள்கை சம்பந்தப்பட்ட விஷயங்களைத் தீர்க்கவோ, பிஷப்புகளை நியமிக்கவோ நீக்கவோ அவன் ஆற்றல் படைத்திருந்தான். கிறித்துவ சமயத் துறவிகள் சக்கரவர்த்தியின் ஆட்சியிலிருந்து விலக முயன்றார்கள். அக் காரணம் பற்றி போப்பாண்டவரின் ஆதிக்கியத்தைப் போற்றினார்கள். கான்ஸ்டான்டி நோபிளிலுள்ள கிறித்துவக் குரவர்கள் (Patriarchs) சக்கரவர்த்திக்குக் கீழ்ப் படிந்தாலும், போப்பாண்டவரின் அதிகாரத்தை ஏற்றார்களில்லை. குணதிசைக் கோயிலுக்கும் குடதிசைக் கோயிலுக்கும் ஒரு பிரிவினை ஏற்பட்டுவிட்டது. கீழ்த்திசையோர்கள் போப்பாண்டவர்களின் ஆட்சிக்குப் புறம்பே உறைய விழைந்தார்கள். பைசான்டியர்கள் லொம்பார்டுகளால் தோல்வியுற்றார்கள். தங்களுக்கும் இதே விதி ஏற்படுமோ என்று போப்பாண்டவர்கள் அஞ்சி னார்கள். ஃபிரான்க் இனத்தாரோடு கூட்டுறவு செய்துகொண்டதால் அவர்கள் பிழைத்தார்கள். ஃபிரான்க் தலைவனான சார்லிமென் இத்தாலிய நாட்டினரையும், ஜெர்மானியர்களையும் வென்று வாகை சூடிவிட்டான்.

இந்த நட்பு தூய ரோமராச்சியம் (The Holy Roman Empire) உருவாவ தற்குச் சிறந்த துணைபுரிந்தது. போப்பாண்டவருக்கும் சக்கரவர்த்திக்கும் ஓர் இயைபு பிறந்துவிட்டது. கி.பி. ஏழாம் நூற்றாண்டில் சக்கரவர்த்தியின் இராணுவ பலத்திற்கு ரோமாபுரி தலைவணங்கிற்று. ஹொனோரியஸ் என்பவர் கிறித்துவ சமயக் கொள்கைக்கு முரணான தத்துவத்திற்கும் இணங்கும்படியான நிலைக்கு வந்துவிட்டார். முதல் மார்ட்டின், சக்கரவர்த்தியை எதிர்த்த காரணத் தால் சிறைவைக்கப்பட்டார். 685ஆம் ஆண்டிலிருந்து 752 வரையில் போப்பாண்டவர்கள் ஸிரியன் கிறித்துவ சமயிகளாகவோ அல்லது கிரேக்க கிறித் துவ சமயிகளாகவோ திகழ்ந்தார்கள். லொம்பார்டுகள் படையெடுப்பால்

போப்பாண்டவர்கள் பெரும் ஆபத்திற்கு உட்பட்டாலும், கிரேக்க சக்கரவர்த்திகள் தளைகளிலிருந்து விடுதலை அடைந்துவிட்டார்கள். லொம்பார்ட் இனத்தாரைவிட கிரேக்கர்களைப் போப்பாண்டவர்கள் விரும்பினதற்குப் பல காரணங்கள் உள. நாகரிகமற்ற கொள்ளைக்கார வேந்தர்கள் இராச்சியங்களை வலியப் பற்றி ஆண்டவர்கள். சக்கரவர்த்திகளின் ஆட்சியோ ஒரு நெறியின் வாயிலாகப் பிறந்தது. மேலும், கிரேக்கர்கள் சிறந்த நாகரிகம் படைத்தவர்கள் ; லொம்பார்டுகள் நாட்டுப்பற்றுள்ளவர்கள். கிறித்துவ மடமோ நாட்டுப்பற்றைக் கடந்து சர்வதேசிய உணர்ச்சியைத் தழுவிநின்றது. லொம்பார்ட் இனத்தார் ஏரியன் கொள்கையைப் பின்பற்றினவர்கள்.

தூய ரோமசாம்ராச்சியம் பிறந்த காரணத்தால் இடைக்காலத் தத்துவ உலகத்தில் ஒரு புதிய சகாப்தம் தோன்றினதாகக் கொள்ளுவதற்கு இடமுண்டு. முன்பு போப்பாண்டவர்களைச் சக்கரவர்த்திகள் பீடத்தில் ஏற்றிவைத்தார்கள். இப்பொழுது சக்கரவர்த்திகள் போப்பாண்டவர்களின் அனுமதியின்றி அரியாசனத்தில் அமரமுடியாது. 15ஆம் நூற்றுண்டில் போப்பாண்டவரின் ஆதிக்கியம் குன்றிப்போய்விட்டது. அகில தேசிய உணர்ச்சி மறைந்துபோய் நாட்டுப்பற்று தலையெடுத்துவிட்டது. ஃபிரெஞ்சுக்காரர்கள், ஸ்பெயின் நாட்டு மக்கள், ஆங்கிலேயர்கள்—இவர்கள் தம்தம் ராச்சியங்களை நிறுவிவிட்டார்கள். சார்லிமேன் என்னும் சக்கரவர்த்தியின் அர்ண்மனை வாழ்வு சிறப்புற்றுத் திகழ்ந்தாலும், அவனுடைய செல்விகள் நெறிபிறழ்ந்த வாழ்வை மேற்கொண்டுவிட்டார்கள். பிறர்மனை நோக்கும் ஆடவர்களும், பிற ஆடவர்களை நோக்கும் பெண்டிரும் தோன்றிவிட்டார்கள். தூய ரோமசாம்ராச்சியம் என்னும் பெயரை அவன் ஆட்சி தாங்கி நின்றாலும், அந்த மன்னர்மன்னனிடம் தூய்மை இல்லை. அவன் ஐம்புலச் சிற்றின்பத்தில் திளைத்தான் என்று வரலாறு சான்று பகர்கின்றது. கிறித்துவ சமயக் கோயிலுக்கு மிகுந்த ஆதரவு காட்டினன். தனக்கு எழுதப்படிக்கத் தெரியாதுபோனாலும், கல்வித்துறையிலும் இலக்கிய உலகத்திலும் ஒரு புத்துயிர்ச் சுடரைத் தூண்டினன். தன்னுடைய தந்தை பெபினைப்போலவே கிறித்துவ சமயிகளின் ஆர்வத்தைப் பயன்படுத்திக் கொண்டான். ஆனால், போப்பாண்டவர்களைத் தன் உத்தரவுகளுக்குப் பணியும்படி செய்தான். ரோமாபுரியில் ஓர் ஒழுங்கு இல்லை. அக் காரணம்பற்றியே போப்பாண்டவர்கள் அச்சமின்றி வாழமுடியவில்லை. அவர்களைக் காப்பாற்றத் தக்க துணை தேவையாயிருந்தது.

சார்லஸ் காலத்தில் சமயத்துறையில் ஒரு புதிய நெறி அமையும்போலக் காட்சி அளித்தது. அவன் மாண்டதும், ஒன்றும் எஞ்சி நிற்கவில்லை. போப்பாண்டவர்கள் மன்னனைக் காட்டிலும் உயர்ந்தவர்கள் என்னும் கொள்கைதான் எஞ்சி நின்றது. குடதிசைச் சாம்ராச்சியத்தைக் காட்டிலும் போப்பாண்டவர்களின் ஆட்சி நிலைபெற்று மிளிர்ந்தது. கிரகரிப் பெரியார்மூலம் ஆங்கிலேயர் நாடு கிறித்துவ சமயத்தைத் தழுவிற்று. ஞானி பானிபெஸ் (St. Boniface, 680-754) ஜெர்மன் நாட்டைக் கிறித்துவ சமய ஆட்சியின்கீழ் அமரும்படி செய்துவிட்டார்.

இவர் ஓர் ஆங்கிலக் கிறித்துவ சமயப் பணியாளர் சார்லஸ் மார்ட்டல் (Charles Martel), பெபின் (Pepin) இவர்களுடைய நெருங்கிய நண்பர். ஞானி கால் (St. Gall) என்பவர் இவருடைய நண்பரே. இவர் சுவிஸ் நாட்டில் ஒரு கிறித்துவ மடத்தை நிறுவினர். பெபின் என்னும் மன்னனுக்கு எண்ணெய்க் காப்பிட்டு அரியாசனத்தில் அமரச்செய்த பேறு பானிபேஸைச் சார்ந்ததாகும்.

பானிபேஸ் டெலன்ஷயரைச் சார்ந்தவர். எக்ஸிடி, வின்செஸ்டர் முதலிய இடங்களில் கல்வி பயின்றார். கி.பி. 716ஆம் ஆண்டு ஃபிரிஸியா (Frisia) என்னும் இடத்திற்குப் போனர்; ஆனல், அவ்விடத்தைவிட்டுத் திரும்ப நேர்ந்தது. 717ஆம் ஆண்டு ரோமாபுரிக்குச் சென்றார். கிறித்துவ சமயத்திற்கு ஜெர்மானியர்களைத் திரட்டுவதற்கும், அயர்லாந்து கிறித்துவ சமயப் பணியாளர்களுடைய ஆதிக்கியத்தை ஓங்கவிடாமல் தணிப்பதற்கும் பானிபேஸை ஜெர்மனிக்கு 719ஆம் ஆண்டு அனுப்பினர். அயர்லாந்து சமயப் பணியாளருக்கும் ரோமாபுரி சமயப் பணியாளருக்கும் ஈஸ்டர் பண்டிகையின் தேதியைப்பற்றி எந்த முறையில் பாதிரிகள் தங்கள் தலைமயிரை வெட்டிக் கொள்ளவேண்டும் என்ற சொற்போர் நடந்ததை நாம் அறிவோம். 722ஆம் ஆண்டு இவர் ரோமாபுரிக்குத் திரும்பினர். இரண்டாம் கிரகரி இவரை ஒரு பிஷப்பாக ஆக்கினர். கிரகரிக்குக் கீழ்ப்படிந்து நடப்பதாகச் சபதம் செய்தார். இந்தப் போப்பாண்டவர் சார்லஸ் மார்ட்டல் என்பவருக்குப் பானிபேஸ்மூலமாக ஒரு கடிதம் கொடுத்து அனுப்பினர். கிறித்துவ சமயத்திற்கு முரணன கொள்கையை அகற்றுவதற்கும், கிறித்துவரல்லாதாரைக் கிறித்துவ சமயத்தைத் தழுவும்படி செய்வதற்கும் பானிபேஸுக்கு மன்னன் உதவிபுரியவேண்டும் என்றும் அக் கடித வாயிலாகத் தம் கருத்துகளைத் தெரிவித்துள்ளார். 732ஆம் ஆண்டு பானிபேஸ் ஆர்ச்சுபிஷப்பானர். 738ஆம் ஆண்டு மூன்றும் முறை ரோமாபுரிக்கு வந்தார். 741ஆம் ஆண்டு போப்பாண்டவரான ஸெக்கரயாஸ் (Zacharias) என்பவர் இவரை லிகேட் (Legate) என்னும் பதவிக்கு உயர்த்தினர். ஃபிரான்க் மடத்தைச் சீர்திருத்தும் கைங்கரியத்தில் இவரை இறங்கும்படி பணித்தார். ஃபுல்டா (Fulda) என்னும் மடத்தைச் சமைத்து பெனிடிக்ட் மடத்து நெறியைக்காட்டிலும் சற்றுக் கடுமையான விதிகளை வகுத்தார். சால்ஸ்பர்க் (Salzburg) என்னும் அயர்லாந்து பிஷப்போடு சொற்போர் நிகழ்த்தினர். இந்த அயர்லாந்து பிஷப் இந்த உலகத்தைக்காட்டிலும் மாபெரும் உலகங்கள் உண்டு என்று சாற்றினதாகத் தெரியவருகின்றது. 754ஆம் ஆண்டு ஃபிரிஸியாவுக்குத் திரும்பிவந்ததும், பானிபேஸும் இவர்களுடைய நண்பர்களும் கிறித்துவரல்லாதாரின் பெருஞ் சீற்றத்திற்கு இரையாகிவிட்டார்கள். ஜெர்மன்நாட்டுக் கிறித்துவ சமயம் போப்பாண்டவர் கண்ட சமயமாயிருந்ததற்கு மூலகாரணம் பானிபேஸின் இடையருத முயற்சியேயாகும்.

ஆங்கில நாட்டில் யார்க்ஷயரில் இருந்த மடங்கள்தாம் சிறப்புற்றுத் திகழ்ந்தன. ரோமாபுரி நாகரிகம் பிரிட்டனில் ஒரு காலத்தில் தழைத்திருந்தது.

அது மெல்ல மறைந்துபோய்விட்டது. கிறித்துவ சமயப் பணியாளர் புகுத்திய நாகரிகம் பெனிடிக்ட் நெறியைப் பின்பற்றுகிற மடங்களில்தான் மிளிர்ந்தது என்று மொழியலாம். இம் மடங்கள் போப்பாண்டவரின் ஆதிக்கியத்திற்குள் அடங்கின என்பதில் யாதோர் ஐயமுமில்லை. போற்றுதற்குரிய பீடே (The Venerable Bede) என்பவர் ஜாரோ என்னும் இடத்திலுள்ள கிறித்துவத் துறவியாவர். அவருடைய சீடரான எக்பெர்ட் என்பவர் யார்க்கின் முதல் ஆர்ச்சுபிஷப்பாய் இலங்கினர். மடத்துப் பள்ளி ஒன்றை நிறுவினர். இந்த மடத்துப் பள்ளியில்தான் ஆல்க்குயின் (Alcuin) என்னும் சான்றோர் கல்வி பயின்றார் என்று சரித்திர வரலாறு மொழிகின்றது.

சார்ல்மேன் தமக்கு எழுதப் படிக்கத் தெரியாதுபோனலும் இலக்கியத் துறையில் கற்றோர்களை இறங்கச் செய்தது அவருடைய பேருகும். இக் கற்றோர் களில் மிகச் சிறந்தவர் ஆல்க்குயின் என்பவராவர். இவர் யார்க்கைச் சார்ந்தவர். 781ஆம் ஆண்டு சார்லஸ் இவரைப் பார்மா என்னும் இடத்தில் முதன்முதலாகச் சந்தித்தார். தமக்கும் தம் குடும்பத்தாருக்கும் ஓர் ஆசானக இவரை இருக்கும்படி வேண்டினர். ஆனல், தம் நாட்டைப் பார்க்கவேண்டும் என்னும் ஓர் ஆர்வம் இவரை உந்தவே, தம்முடைய அவையிலிருந்து தம் ஊருக்குத் திரும்பிப்போக அனுமதி ஈந்தார்.

டூர்ஸில் (Tours) உள்ள ஞானி மார்ட்டின் மடத்தையும், அதைச் சார்ந்த பள்ளிகளையும் இவருடைய மேற்பார்வைக்கு விட்டுவிட்டார். தம் முடைய ஆயுள் முழுவதையும் சமயப் பணியில் கழித்தார். 804ஆம் ஆண்டு உயிர்நீத்தார். இடைக்காலத்து இயல்புகளை ஆல்க்குயின் தம்முடைய நூல் களில் நன்கு சித்திரித்திருக்கிறார். இவருடைய லத்தீன் மொழி இலக்கண நூல் அக் காலத்து இளைஞர்களுக்கு மிகவும் பயன்பட்டது. மாண வர்க்கும் ஆசானுக்கும் நடக்கின்ற உரையாடல்மூலம் இவர் தம் கருத்துகளை வெளியிட்டார். சிக்கிமுக்கிக் கல்லில் தீ கரந்து நிற்கின்றது. அதை ஓங்கி அடித்தால்தான் சுடர் அதிலிருந்து பிறக்கும். எல்லா உள்ளங் களிலும் ஞானத் தீச்சுடர் துயின்றுகொண்டிருக்கிறது. அதை ஆசான் தட்டி எழுப்புகின்றன். ஞானப்பாதையைச் சுட்டுவது மிகவும் எளிதே. ஆனல், கடவுள் வழிபாட்டிற்காகவும், உன்னுடைய ஆன்ம தூய்மைக்காகவும், உண்மைச் சுடரை நண்ணுதற்பொருட்டும் கல்வியைக் கசடறக் கற்கவேண்டும். உலக வீண் புகழிற்கோ, கௌரவத்திற்கோ அறிவுத்துறையில் இறங்குவது அறமன்று என்று தம் கருத்தைப் புலப்படுத்துகின்றார். ஆண்டவன் அருளால் எல்லாப் பேற்றையும் அடையமுடியுமென்று இவர் ஓதுகின்றார். பீடேவைப் போலவே ஆல்க்குயின் விரிந்த படிப்புள்ளவர். ஆனல், புதுப்புதுக் கருத்துகளை நல்கக் கூடிய ஆற்றல் இவரிடத்தில் இல்லை. யார்க்கில் உள்ள நூல்நிலையத்தில் வர்ஜில், அரிஸ்டாடில் முதலியோர் எழுதிய நூல்கள் இலங்கின. இவற்றை யெல்லாம் இவர் படித்திருக்கவேண்டும் என்றும், பின்பு இந் நூல்களால்

பயனில்லை என்று தேர்ந்திருக்கவேண்டும் என்றும் நாம் உணர்கின்றோம். இவருடைய சீடரான ரஹபன் மார் (Rhaban Maur) என்பவர் பண்டைய நூல்களைத் திரட்டி அவற்றைக் காப்பாற்றிவந்தார். இருளடைந்த இடைக் காலத்தில் ஒரு ஞானதீபத்தை ஏற்றிவைத்த பேறு இவரைச் சார்ந்ததாகும். யார்க்கில் திகழ்ந்த நாகரிகம் டேன்ஸ் என்னும் இனத்தாரால் அழிந்துபோய் விட்டது. ஃபிரெஞ்சு நாட்டு ஞானச்சுடர் நார்மன் இனத்தாரின் வெஞ்சினப் புயற்காற்றால் அவிந்துவிட்டது. அரேபியாவிலுள்ள ஸாரஸன் இனத்தார்கள் இத்தாலிய நாட்டின் தெற்குப் பாகத்தைச் சூறையாடினார்கள். ஸிஸிலியைக் கைப்பற்றினார்கள்; ரோமாபுரியைத் தாக்கினார்கள். பத்தாம் நூற்றாண்டை இடைக்காலத்து இருள் மண்டிய நூற்றாண்டு என்பர். ஒன்பதாம் நூற்றாண்டின் இருளைக் கிழித்த ஆங்கிலப் பாதிரிகள் தம் ஞானப்பேரொளியால் நம் உளங்களை ஈர்ப்பார்கள் என்பது திண்ணம். நம்மைப் பெருவியப்பில் ஆழ்த்தக்கூடிய ஜோஹன்னஸ் ஸ்கோடஸின் (Johannes Scotus) தூய உருவம் நம் அகக் கண்முன் மிதந்துவரும்.

சார்ல்மேன் மாண்டபிறகு போப்பாண்டவர்களுடைய ஆட்சி மேலோங்கி விட்டது போப்பாண்டவரான முதலாம் நிக்கலஸ் (Pope Nicholas I, 858-867) போப்பாண்டவர்களின் ஆட்சியை மிகவும் ஓங்கும்படி செய்துவிட்டார். கீழ்த்திசை, மேற்றிசை இந்தத் திசைகள்மீது ஆணை செலுத்துகின்ற சக்கரவர்த்திகளோடு பூசலிட்டார். சார்லஸ் பால்டு என்னும் ஃபிரெஞ்சு வேந்தனோடு போர்தொடுத்தார். லொரேன் நாட்டைச் சார்ந்த வேந்தனை இரண்டாம் லோதரை (Lother II) வாதுக்கு இழுத்தார். பாதிரிகள் குறுநில மன்னர்களுக்குக் கீழ்ப்படிந்து நடந்தார்கள். இத் தீச்செயலை அகற்ற இவர் அரும் பாடுபட்டார். மண ரத்துகளை மடங்களே செய்துவந்தன. ஆனால், எட்டாம் ஹென்றியிடம் அதன் ஆட்சி பலிக்கவில்லை. தன் ஆதிக்கியத்தை எட்டாம் எட்வர்ட் மன்னன் விஷயத்தில் அது மீண்டும் பெற்றது என்று நகைச்சுவை ததும்ப ரஸ்ஸல் பகர்கின்றார். இரண்டாம் லோதர் மண ரத்தை விழைந்த பொழுது, அவருடைய நாட்டுப் பாதிரிகள் அவருக்குச் சம்மதம் அளித்தார்கள். போப் நிக்கலஸ் இடந்தரவில்லை. அதற்கு இசைந்த பாதிரிகளைப் பதவிகளி லிருந்து நீக்கிவிட்டார். லோதரின் உடன்பிறந்தோனை இரண்டாம் லூயி சக்கரவர்த்தி ரோமாபுரியின்மீது படையெடுத்தார். ஆனால், மூடத் தெய்வ பக்தி குறுக்கிட்டு அவனைத் தடுத்துவிட்டது. போப் நிக்கலஸ் வெற்றியடைந்தார்.

கி.பி. 1000ஆம் ஆண்டில்தான் நிகழ்ச்சிகளில் ஒரு திருப்பம் ஏற்பட்டது என்று கூறலாம். அதற்கு முன்பு எல்லாத் துறைகளிலும் குழப்பமும், நேர்மையின்மையும், விபசாரமும் தலைவிரித்தாடின.

பிறகு காத்ஸ்கள், லொம்பார்டுகள், ஹங்கேரியர்கள், நார்மன் இனத் தார்கள் அலைக்குமேல் அலையாக வந்து தாக்கினாலும், அவர்கள் கிறித்துவர்களாக மாறிவிட்டார்கள். இந்த மாபெரு மாறுதல் போப்பாண்டவர்களின் ஆட்சியை எல்லாத் துறைகளிலும் வலியுறுத்திவிட்டது.

மேனாட்டு இடைக்காலத்தை இருளடைந்த காலம் என்று சொன்னாலும், கீழ்த்திசையில் மகமதியர்கள், சீனர்கள், இந்தியர்கள் முதலியோர் சிறப்பான நாகரிகச் சுடர்வெள்ளத்தை எங்கும் ஓடும்படி செய்தார்கள். விஞ்ஞான வினாவுகளால் மேற்றிசை முன்னணிக்கு வந்தது. ஆனால், கீழ்த்திசை நாடுகளும் விழித்தெழுந்துவிட்டன. அவர்களையும் எல்லாத் துறைகளிலும் சரிசமானர்களாக நாம் கருதவேண்டும் என்று ரஸ்ஸல் தம் 'மேனாட்டுத் தத்துவ வரலாற்றில்' குறிக்கின்றார்.

# 12. ஜான் ஸ்கோடஸ் இரியுகஞ
## (John Scotus Eriugena)

ஒன்பதாம் நூற்ருண்டில் தோன்றிய சான்ருேர்களுள் நம்மை மாபெரு வியப்பில் ஆழ்த்தக்கூடியவர் ஜான் ஸ்கோடஸ் இரியுகஞ என்பவர் என்பதில் யாதோர் ஐயமுமில்லே. இவருடைய தாயகம் அயர்லாந்து நாடாகும். புது முறைப் பிளேட்டோ தத்துவத்தைப் பின்பற்றுகிறவர். மனித சுதந்திரத்திலும், அவனுடைய பகுத்தறிவிலும் முழு நம்பிக்கை வைத்து, எதையும் ஆராய்ந்து பெலஜியஸ் (Pelagius) என்னும் சான்ருேனின் தத்துவத்தைத் தமக்கு ஒரு தக்கநெறியாகக் கொண்டவர், எல்லாவற்றையும் ஆண்டவன் தோற்றமாகக் கண்டவர்.

இத்தகைய உத்தமர் காட்சி அளிப்பதற்கு மூலம் அவர் பிறந்த சூழ்நிலேயே யாகும். ஞானி பாட்ரிக் (St. Patrick) ஓர் ஆங்கிலேயர். இவர் அயர்லாந் திற்குப் போவதற்குமுன்பே கிறித்துவப் பணியாளர்கள் ஆண்டுத் திகழ்ந்திருந் தார்கள். அட்டிலா, காத்ஸ், ஃபாண்டல் முதலிய கொள்ளேக்கார இனத்தார்கள் கால் (Gaul) என்னும் நாட்டைச் சூறையாடியபொழுது, அங்குள்ள கற்றறி ஞர்கள் இங்கிலாந்தில் தஞ்சம் புகாது அயர்லாந்திற்குச் சென்றுவிட்டார்கள். ஆறு, ஏழு, எட்டு நூற்ருண்டுகளில் ஐரோப்பாக் கண்டத்தில் கொள்ளேக்காரக் கூட்டத்துப் படையெடுப்புகளில் மறைந்த கிரேக்க, ரோம நாகரிகச் சுடர் அவி யாமல் ஒளிவிட்ட நாடு அயர்லாந்தேயாகும். படித்தோர்கள் தத்தம் நாடுகளே விட்டுப் பிற நாடுகளில் தஞ்சம் புகும் இயல்பு அந்த நாட்களில் மட்டுமன்றி இந்த நாளிலும் பார்க்கின்ருேம் என்று ரஸ்ஸல் கூறுகின்ருர். சான்ருக, கணிதத் துறையில் உலகத்திலேயே ஒரு பெரு மேதாவியாகக் கருதப்படும் ஐன்ஸ்டின் என்னும் யூதர் ஹிட்லரின் கொடுங்கோல் ஆட்சிக்கு இரையாகாமல் அமெரிக்க நாட்டை நண்ணியதை நாம் நன்கறிவோம்.

கிரேக்க மொழியிலும், லத்தீன் பாஷையிலும் கோயில்கொண்டிருந்த இலக்கி யங்கள் அழிந்துபோகாமல் அயர்லாந்தில் காப்பாற்றப்பட்டுள்ளன. கல்வி நிரம்பிய இந் நாட்டின் சூழ்நிலேயில் ஸ்காட். தாலாட்டப்பட்டார். இவர்

எப்பொழுது தோன்றினர், எப்பொழுது மறைந்தார் என்பது நம்முடைய அறிவு வட்டத்திற்கு அப்பாலுள்ளதாகும். கி.பி. 800ஆம் ஆண்டு மாண்டதாக ஊகிக்கப்படுகின்றது. முதல் போப்பாண்டவர் நிக்கலஸ் காலத்தில் இவர் ஃபிரான்சு நாட்டில் இருந்ததாக நாம் அறிகின்றோம். சார்லஸ் பால்டு (Charles, the Bald) என்னும் வேந்தன் இவரைத் தம் அரண்மனைக்கு அழைத்தார். உண்மையான சமயத்திற்கும் உண்மையான தத்துவத்திற்கும் மாறுபாடு இல்லை என்றார். உண்மையான தத்துவந்தான் உண்மையான சமயம்; உண்மையான சமயந்தான் உண்மையான தத்துவம் என்று இவர் சாற்றினர். பகுத்தறிவுக்கும் அனுபூதி நெறிக்கும் முரண்பாடில்லை. முரண்பாடு ஏற்படுமாயின், பகுத்தறிவைத் தான் பின்பற்றவேண்டும் என்றார். 855ஆம் ஆண்டிலும் 859ஆம் ஆண்டிலும் கூடிய சமய அவைகளில் இவருடைய கொள்கையைப் புறக்கணித்துப் பேசியுள்ளார்கள். தண்டனையில்லாது தப்பினது ஃபிரெஞ்சு வேந்தர் இவர்பால் வைத்த நட்பே காரணமாகும். ஃபிரெஞ்சு வேந்தர் 877ஆம் ஆண்டு இறந்தார். இந்த ஆண்டிற்குப் பிறகு இவரைப்பற்றிய செய்தி நமக்கு ஒன்றும் கிடைக்கவில்லை. இங்கிலாந்தில் ஆல்பிரட் பெரியாரால் ஆதரிக்கப்பட்டார் என்றும், மால்மெஸ்பரி (Malmesbury) என்னும் இடத்தில் ஆபட்டாக விளங்கினர் என்றும், இறுதியில் கிறித்துவத் துறவிகளால் கொல்லப்பட்டார் என்றும் வரலாறுகள் எழுந்துவிட்டன. உண்மை எங்குளதோ? ஆண்டவன்தான் அறிவான். கிரேக்க மொழியில் இஸ்ஸூடோ டையோனிஸ்யஸ் எழுதிய நூலை இவர் லத்தீன் பாஷையில் மொழிபெயர்த்தார். இம் மொழிபெயர்ப்பு போப்பாண்டவரான நிக்கலஸ்ஸின் சீற்றத்தைத் தூண்டிவிட்டது. ஏனெனில், போப்பாண்டவரின் அனுமதியில்லாமல் இது வெளியிடப்பட்டதாம். ஆனால், போப்பாண்டவரின் நூல்நிலையத்து அதிகாரியான அனஸ்டேஸியஸ் (Anastasius) கிரேக்க மொழியில் ஆழ்ந்து தோய்ந்தவர்; இதன் மொழிபெயர்ப்பைக் கண்டு அவர் வியப்புற்றார் என்று நாம் அறிகின்றோம்.

ஜான் வரைந்த 'இயற்கைப் பிரிவு' என்னும் நூல் மிகச் சிறந்தது. இடைக்காலத் தருக்க பண்டித சமயவாதக் கொள்கைப்படி அல்லது புலமைக் கொள்கையினர் (Scholasticism) கருத்துப்படி இவரை மெய்ஞ்ஞானவாதி (Realist) என்று எண்ணுவார்கள். வியாப்திதான் (Uruvesalas)—பொதுமை தான் விலக்ஷணத்திற்கு—தனி இயல்புக்கு முந்தித் திகழ்ந்தது என்று கருதும் பிளேட்டோவின் அடிச்சுவட்டைப் பின்பற்றினர். கருத்துலகந்தான் உண்மையான உலகமாகும். பெயருண்மைக் கொள்கையை (Nominalism) இவர் போற்றவில்லை. இயற்கையில் இருக்கை, இல்லை என்ற இரண்டு நிலைகளையும் சுட்டுகின்றார். இயற்கை முழுவதையும் நான்கு பகுதிகளாகப் பிரித்திருக்கிறார்: (1) படைக்கிறது; ஆனல், படைக்கப்படவில்லை; (2) படைக்கிறது; படைக்கவும்படுகிறது; (3) படைக்கப்படுகிறது; ஆனல், படைக்கிறதில்லை; (4) படைக்கிறதுமில்லை; படைக்கப்படுவதுமில்லை. முதலில் குறிக்கப்பட்டது கடவுளாகும்; இரண்டவதாகச் சுட்டப்பட்டது கடவுளில் அழியாது உறைந்திருக்கும் கருத்தேயாகும்; மூன்ருவதாகக் காட்சியளிப்பவை காலதேசத்தில்

காணப்படுகின்றவை; நான்காவதாகக் கருதப்படுவதும் கடவுளே. அவர் படைப்புக் கடவுளல்லர். எல்லாப் பொருள்களும் முடிவும் குறிக்கோளு மாக மிளிரும் பரம்பொருளாகும். ஆண்டவனிடத்திலிருந்து வெளிப்போந்து ஆண்டவனிடத்தே மீண்டும் கரந்துவிடுகின்றன. பரம்பொருளான அந்தத் தனிப்பட்ட ஒன்றுக்கும் பலவிதமாய்த் தோன்றுபவைக்கும் இடையே பாலமாய் அமைந்தது கருத்துலகமாகும் (Logos). பிரகிருதியும் குறிப்பிடப்படுகின்றது. அது தோற்றமே தவிரப் பிறிதன்று. பொருள்களின் தொடக்கம், நடுவு, முடிவு இவை யாவும் கடவுளே. உயிரனைத்திலும் கரந்து நிற்பது அப் பரம்பொருளே. கடவுள் தன்னையே அறியவில்லை. தன்னைத் தவிர வேருென்று இருந்தால்தானே அறிகிறது அறியப்படும்; பொருள் என்னும் நிலை தோன்றும். அவன் மனித அறிவுக்கு அப்பாற்பட்டவன். காட்சி அளிக்கின்ற பொருள்களில் இவன் வடிவு மிளிர்கின்றது; அவற்றின் ஒழுங்கில் அவனது அளவுகடந்த ஞானம் சுடர் விடுகின்றது. அவற்றின் சலனத்தில் அவன் உயிர்நாடி பேசுகின்றது. இந்த முறையிலேயே கிறித்துவத் தத்துவமான முக்கொள்கைக்கு (Trinity) விளக்கந் தருகின்ருர். அவனுடைய இருக்கையைத்தான் தந்தை (Father) என்று நவில் கின்ரும். அவனுடைய ஞானத்தைத்தான் அவன் சேயான (Son) இயேசுநாதர் என்று மொழிகின்ரும்; அவனுடைய உயிரைத்தான் தூய ஆவி (Holy Ghost) என்று இயம்புகின்ரும். அவன் அது அல்லன், இது அல்லன் என்று சாற்றலாமே தவிர, அவனுக்கு யாதொரு குணத்தையும் அளிக்க இயலாது. வைணவர்கள் அவன் தீய குணங்களற்றவன் என்று செப்புகின்ருர்கள். நல்லது என்று ஒன்று சொல்லவேண்டுமாஞல் தீது என்பது நம்முன் எழுந்துவிடும். குணமற்றவன் என்று மொழிவதே சாலப் பொருந்தும் என்று அத்துவைதிகள் கருதுகின்ருர்கள். ஆன்மா கடவுளைத் தவிர வேறன்று. ஆன்மா பரமான்மாவில் உறைகின்றது. பரமான்மா ஆன்மாவில் புகலரும் முறையில் சுடர்விட்டு நிற்கின்றது. இதைத் தான் நம் உபநிடதங்களும் வையகங் கேட்க முரசடிக்கின்றன.

படைப்பென்பது எப்பொழுதுமே விரிந்துகொண்டுபோகிற நெறியாகும். விரிதலும் கூம்புதலும், கூம்புதலும் விரிதலும் ஆண்டவன் அருளாட்சியில் இலங்கிக்கொண்டேதான் இருக்கின்றன.

ஒரு பாழிலிருந்து பொருள்களைப் படைத்தான் என்ருல், தன்னைத் தானே தோற்றுவித்துக்கொண்டான் என்பதுதான் அதன் பொருளாகும். சுருங்கக் கூறு மிடத்து, உளம், உரை, செயல்—இம் மூன்றிற்கும் அப்பால் அப் பரம்பொருள் ஒளிர்கின்றது. தீச்செயல் என்பது கடவுள்பால் தன் பார்வையைச் செலுத்தாது தன் அகந்தையின்மீது தன் பார்வையை ஓடவிடுவதாகும். தீதென்பதற்குக் கடவுளிடத்தில் இறையளவேனும் இடமில்லை. நல்லதன் குறைவே தீதாகும். லோகாஸ் (Logos) என்பதுதான் மனிதனை ஆண்டவன்பால் ஈர்த்துச் செல்லு கின்றது. பிளேட்டோ கண்ட கருத்துலகந்தான் லோகாஸ் (Logos) ஆகும். இக் கருத்துகள்தாம் உண்மையானவை; இவற்றின் நிழல்கள்தாம் உலகத் திற்குக் காணப்படும் பொருள்களாகும். தத்துவஞானிகளுக்குள் வானளாவிய

சிகரமாயிருப்பவர் பிளேட்டோதாம் என்று இவர் பகர்கின்றார். சலிக்காமல் மற்றதைச் சலிக்கும்படி செய்கிறது. சலிக்கச் செய்கிறதும் சலிக்கப்படுகிறதும், சலிக்கப்படுகிறது சலிக்கச் செய்கிறதில்லை. இத்தகைய தத்துவங்களை அரிஸ்டாட்டிலிலும் நாம் காண்கின்றோம். படைக்கிறதில்லை, படைக்கப்படுகிறதுமில்லை என்ற தத்துவத்தை டையோனிஸியஸ் பெரியாரிடம் இவர் திரட்டிக்கொண்டார். புதுமுறைப் பிளேட்டோ கொள்கை அயர்லாந்தில் பொதுவாக இருந்திருக்கக் கூடும். மேலும், தாம் கண்ட தத்துவத்தை உலகங் கேட்கச் சாற்றும் மனத் திண்மை இவரிடம் இருந்ததென்பதை எவரால் மறுக்கமுடியும்! அரிஸ்டாட்டில் தனி வியக்திகளுக்கு—தனிப் பொருள்களுக்கு—இருப்பு உண்டு என்றார். ஜான் அனைத்திறைக் கொள்கையைச் சார்ந்தவரானபடியால், அக் கொள்கையை ஏற்றாரில்லை. தனிப்பொருள் உண்மையைப் பற்றுகிற தருக்க பண்டித சமயக் கொள்கைக்கு (Scholasticism) ஜான் கண்ட தத்துவம் முரணாக நிற்கிறது. கடவுள் கடந்தும் சுரந்தும் நிற்கிற காட்சியை நம்மாழ்வார் நமக்கு நல்கியிருக்கிறார் :

**திடவிசும் பெரிவளி நீர்நில மிவைமிசைப்**
**படர்பொருள் முழுவதுமாய் அவை யவைதொறும்**
**உடல்மிசை யுயிரெனக் கரந்தெங்கும் பரந்துளன்**
**சுடர்மிகு சுருதியுள் இவையுண்ட சுரனே.**

புலனோடு தோய்ந்திருந்தாலும், புலனலன், உருவினன், அருவினன் என்றெல்லாம் கடவுளை நம்மாழ்வார் சித்திரிப்பது இங்கு நோக்குதற்குரியது.

**இலனது வுடையன் இதெனநினை வரியவன்**
**நிலனிடை விசும்பிடை உருவினன் அருவினன்**
**புலனொடு புலனவன் ஒழிவிலன் பரந்தஅந்**
**நலனுடை யொருவனை நணுகினம் நாமே.**

# 13. சமயத்துறையில் சீர்திருத்தம்
## (11ஆம் நூற்றுண்டு)

மேலைநாட்டில் கி.பி. 11ஆம் நூற்றுண்டில் எல்லாத் துறைகளிலும் ஒரு முன்னேற்றம் நிகழ்வதைக் காண்கின்றேம். துறவறத் துறையில் ஒரு சீர்திருத்தச் செயலோடு அது தொடங்கிற்று. பிறகு அத்தகைய புனிதமான உணர்ச்சி வெள்ளம் போப்பாண்டவரின் ஆட்சியிலும், கிறித்துவ சமயக் கோயிலிலும் பாய்ந்தது. அந்த ஆண்டின் இறுதியில் தருக்க பண்டிதத் தத்துவ வித்தகர்களையும் அந்த இயக்கம் தோன்றச் செய்தது. கட்டடக் கலைத்துறையில் ஒரு வான்சிறப்பு மலர்ந்தது. சமய குரவர்களிடமும், உலகச் செல்வத்தில் திளைக்கின்ற பிரபுக்களிடமும் கல்வித்தரம் உயர்ந்துகொண்டேபோயிற்று. ஆனால், பல துறைகளில் நேர்மையற்ற வாழ்வு தலைவிரித்தாடிற்று. சில பாதிரிகள் இல்லற வாழ்க்கையை நடத்தினர்கள். அவர்களுக்குப் பிறக்கும் சேய்களுக்கும் சமயக் கோயில்களில் தக்க வசதியான வருவாய் தரக்கூடிய இடங்கள் கிடைத்தன. மணம்புரியாத பாதிரிகள் பிறர்மனை நோக்காத பேராண்மையைப் பெருத காரணத்தால், பால் உணர்ச்சி ஆட்சிக்கு வசப்பட்டு நெறிபிறழ்ந்த வாழ்க்கையில் உழலத் தொடங்கிவிட்டார்கள். கிறித்துவ சமயிகள் தமக்குக் கிடைத்த உத்தியோகங்களை விற்றனர். பதவி விற்பனை (simony) எங்கும் மூளைத்துவிட்டது. விபசாரக் குற்றத்தையும், பதவி விற்பனை என்னும் தீத்தொழிலையும் அகற்றுவதற்குற்ற சீர்திருத்தங்களும் உருவாகிக்கொண்டிருந்தன.

உயர்லட்சியத்திற்கும் நடைமுறைச் செயலுக்கும் இடையே எப்பொழுதுமே ஒரு பள்ளம் இருக்கத்தான் செய்யும். அந்தப் பள்ளத்தைத் தூர்க்க அரும்பாடுபட்ட சான்றேர்கள் இல்லாமலில்லை. சமயத்துறையில் சீர்திருத்தம் வந்ததால், மடத்தின் ஆட்சி ஓங்கிற்று. கிறித்துவப் பாதிரிகளின் ஆட்சிக்கும் வேந்தராட்சிக்கும் ஒரு வெம்போர் ஏற்பட்டது. அந்தப் போரில் கிறித்துவ சமயிகள் வெற்றிகண்டார்கள்.

ஏழாம் கிரகரி காலம்வரையில் ரோமாபுரி மாந்தர்கள் போப்பாண்டவர்களைப் புறக்கணித்தேவந்தார்கள். போப்பாண்டவரைச் சிறையுஞ் செய்தார்கள். நஞ்சையும் அவருக்கு அளித்தார்கள். அவருக்குப் பகையாக அவர்மீது போரையும் தொடுத்தார்கள். பதினென்றும் நூற்றுண்டில் பாதிரிமார்கள் பெற்ற

ஆற்றல்களுக்கு எல்லையேயில்லை. அவர்களில்லாமல் திருமணச் சடங்குகள் நிறைவேரு. பாவங்களிலிருந்து விடுதலை அடையவேண்டுமானுல், அவர்களைத் தாம் நண்ணவேண்டும். ஆண்டவரின் இறுதி உண்டிச் சடங்கைத் (Eucharist) தக்க பாதிரிகள் நடத்துவார்கள். அப்பொழுது அருந்தப்படும் ரொட்டி இயேசு நாதருடைய உடலாகவும், சாராயம் அவருடைய குருதியாகவும் மாறிவிடும் (transubstantiation) என்று கருதுகிருர்கள்! மீளா நரகத்தில் ஆழ்வதும் விண்ணவர் நாட்டை நண்ணுவதும் அவர்களுடைய அருளைப் பொறுத்ததாக இருந்தன. இங்கிலையில் பாதிரிகளின் ஆட்சி ஓங்காமல் என்ன செய்யும்? தூய வாழ்வுக்கே சான்ருகத் திகழ்ந்தோர்களே பெருஞ் சமயப் பணிகளில் ஈடுபட முடியும். பாலுணர்ச்சிக்குச் சற்றும் இடந்தராது துறவற வாழ்வு நடத்துகிற பெரியோர்களே உலகத்தாரால் போற்றப்படுகின்ருர்கள்.

இத்தாலியா நாடு, ஃபிரெஞ்சுப் பிரதேசம், ஜெர்மன், ஆங்கில நாடு—இவற்றில் இயங்கின கிளர்ச்சிகள் ஆராய்தற்குரியவை. முதன்முதலாக இத்தாலியா நாடு அளித்த சான்ருேர்களைப்பற்றிக் கூறுவோம். இத்தாலிய நாட்டில் பண்டைய நாட்டு அறிவுச் செல்வத்தின் சுடர், அடியோடு அவிந்துபோய்விடவில்லை. நடு நடுவே அது மாய்ந்துவிடும்போலப் பட்டாலும், அதன் சுடர் மீண்டும் கொழுந்து விட்டெரிந்த செய்தியை நாம் நன்கு உணர்வோம். அந் நாட்டுத் தொல்லிலக்கியப் படைப்புகள் கிறித்துவ சமய வளர்ச்சிக்கும் துணைபுரியாமலில்லை.

லியுட் பிராண்டு (Liut Prand) லொம்பார்ட் இனத்தைச் சார்ந்தவர். இருந்தாலும், கிரேக்க—லத்தீன் பாஷைகளில் கோயில்கொண்டிருக்கும் நூல் களின் வனப்பை நன்கு மாந்தினவர். நோவராவைச் (Novara) சார்ந்த கன்ஸோ (Gunzo) என்பவரும் தம் நாட்டைவிட்டு அகன்று அரிய நூல்களைக் கற்று ஞான ஒளியையும் பரப்பினுர். கிறித்துவ சமய வளர்ச்சிக்கிடையேயும் பண்டைய நாகரிகம் மாய்ந்துபோய்விடல்லை என்பதை இச் சான்ருேர்கள் வாயிலாக நாம் அறிகிருேம். பாதிரிமார்களிடையே சுரந்து நின்ற தீய ஒழுக்கங்களைத் துடைக்கவந்த பெரியோர்களுள் பீட்டர் டேமியன் (Peter Damian), ஆன்ஸெல்ம் (Anselm) இவ்விருவரும் குறிப்பிடத்தகுந்தவர்கள். 11ஆம் நூற்ருண்டின் தொடக்கத்தில் ரேவன்ன (Ravenna) என்னும் இடத்தில் பீட்டர் பிறந்தார். இவருடைய பெற்ருேர்கள் வறுமைச் சேற்றில் உழன்ருர்கள். இவர் ஏன் பிறந்தார் என்றுகூட அவர்கள் எண்ணினுர்கள். இவருடைய வாழ்க்கையோ இன்னலும் இடுக்கண்களும் நிரம்பிய வாழ்க்கையாக, இவருடைய பத்தாம் பிராயம்வரையில் துயரை யெழுப்பும் காட்சியாக அமைந்திருந்தது. ரேவன்னவில் ஒரு பாதிரியாகத் திகழ்ந்த இவருடைய உடன்பிறந்தோர் தம் முடைய பாதுகாப்பில் அமர்த்திக்கொண்டு இவருக்கு வேண்டிய கல்வியையும் நல்கினுர். அக் காலத்தில் விளங்கிய கலைகளனைத்தையும் பயின்ருர். இவருடைய புகழ் எங்கும் பரவிற்று. இவருடைய மாணவர்கள் இவருக்கு அளித்த குரு தக்கிணையால் செல்வம் படைத்தவரானுர். உலகத்தில் தலைவிரித்தாடும் ஆசாபாசங் களுக்கு அஞ்சி சமயத்துறையில் இறங்கினுர். உடலை உருக்கும் பால் உணர்ச்சி

யின் வெம்மையைத் தணித்தற் பொருட்டு ஓடுகின்ற தண்ணீரில் குடைந்து நீராடுவார். பணத்தாசை, தற்செருக்கு முதலியவற்றை அகற்றுவதற்கு ஏழை மக்களுக்குத் தாம் ஈட்டிய பொருள்களனைத்தையும் வாரி இறைத்தார். ஃபெயின்ஸா (Faenza) என்னும் ஊருக்கு அண்மையில் நிறுவப்பட்ட துறவிகள் உறையும் ஆசிரமத்தைத் தமக்கு முப்பதாம் ஆண்டு நிறைவேறுவதற்குமுன்பே நண்ணித் தம் காலத்தை உறக்கமின்றி, உண்டியின்றித் தியானத்தில் கழித்தார்; அரும்பெரு நோன்புகளையும் பின்பற்றினர்.

தமக்கு விருப்பமின்றியே மடத்தின் கைங்கரியங்களில் இறங்கினர். போப்பாண்டவரான ஒன்பதாம் ஸ்டீபன் இவரை ஆஸ்டியா (Ostia) என்னும் ஊருக்குக் கார்டினலாக அமர்த்திவிட்டார். போப்பாண்டவரான இரண்டாம் அலெக்ஸாண்டர் (Pope Alexander), ஆர்ச்டீகன் ஹில்ட் ஃபிராண்டு (Archdeacon Hilde Frand) இவ்விருவரும் முரண்பட்டு ஒருவருக்கொருவர் பகைமை பாராட்டிவந்த நிலையைப் பீட்டர் நகைச்சுவை ததும்பச் சித்திரிக்கிறார். வழிப்போக்கனின் உடையைக் கவர்வதில் யார் பெரியர் என்று காற்றிற்கும் புயலுக்கும் நிகழ்ந்த போராட்டம்மூலமாகத் தம் நிலையை உலகத்திற்கு உணர்த்து கின்றார்.

இப்படியிருந்தும், மடத்து அலுவல்களில் இவர் ஆழவேண்டியிருந்தது. மணம்புரிந்த பாதிரிகளை அழித்துப் போப்பாண்டவரின் அதிகாரத்தை நிறுவு வதற்காக மிலானுக்கு அனுப்பப்பட்டார். இத்தகைய பணியை மிகவும் ஆர்வத் தோடு புரிந்தாலும் இவருக்கு இயற்கையாய் அமைந்த உணர்ச்சி யாதெனில் வாழ்க்கையில் மண்டிக் கிடக்கின்ற ஊழல்களை அகற்றுவதேயாகும். போப்பாண்ட வருக்கும் போப்பாண்டவரை எதிர்ப்போர்களுக்கும் இடையே தோன்றிய பூசல்கள் இவர் மனத்தைப் புண்படுத்திவிட்டன. பொய்புதைந்த வாழ்க்கையில் ஆழ்ந்த பாதிரிகளின் பேராசை, பதவி விற்பனை, பெரும்போக வாழ்க்கை, குடி முதலிய தீய பழக்கங்கள், பால் உணர்ச்சி ஆட்சிக்கு ஆளாகி நெறிபிறழ்ந்த வாழ்க்கையை நடத்துகிற இயல்பு—இவை யாவும் பீட்டரின் சீற்றப் புயலை எழுப்பிவிட்டன. அவர்களைத் தம் நூல்களில் பேரிடிமுழக்கச் சொற்களால் தாக்கிப் பேசியுள்ளார்.'

ஒரு நீதிபதிக்கு இவர் விடுத்த கடிதம் நோக்குதற்குரியது. 'உலகம் புன் முறுவல் பூத்து, உங்களுக்கு வேண்டிய வசதிகளை நல்கும். உலகச் செல்வம் உங்களை ஈர்க்கும். உடல்நலத்தைப் பேணுவீர்கள். ஐம்புலச் சிற்றின்பங்கள் உம்மைப் பெருவலைகளில் சிக்கவைத்துவிடும். இம்மையை மறந்து உமக் காகக் காத்திருக்கும் மறுமையை உன்னிப் பார்ப்பீர்களாக. இறுதித் தீர்ப்பை—ஆண்டவனின் நீதிமன்றத்தில் உமக்குக் கிடைக்கக்கூடிய தீர்ப்பை நினைந்து உடல் நடுங்குவீர்களாக. வாழ்வு ஒரு கணத்தில் மறைந்துவிடும். உமக்குமுன் விரிந்துகிடக்கும் வருங்கால ஊழிகளை உன்னிப்பாருங்கள்.'

தம்முடைய உடன் பிறந்தோனுக்கு எழுதிய கடிதத்தில் தம்முடைய் தீக் குணங்களைக் குறிப்பிடுகின்றார். 'என் தலை நரைத்துவிட்டது. நான் போகின்ற

அவைகளில் உள்ளவர்கள் என்னைவிட வயதில் சற்றுச் சிறியவர்களே. என்னுடைய எண்ணம் முழுவதும் எனக்காகக் காத்திருக்கும் மரணத்தின்மீது பாய்கின்றது. இறுதித் தீர்ப்பில் என்மீது எத்தகைய குற்றங்களெல்லாம் காணப்பட்டிருக்குமோ யான் அறியேன். என்னுடைய வாழ்வு துயர்க்கடலில் ஆழ்ந்திருக்கிறது. செருக்கு, அளவுகடந்த பால் உணர்ச்சி, சீற்றம், அழுக்காறு, குடிமயக்கம், சிற்றின்ப விழைவு இத்தகைய தீக்குணங்களுக்கு நான் அடிமையாகிவிட்டேன். வசைமொழியில் என் நா இடையருது திளைத்தது.'

தம்மீது சுமத்திக்கொண்ட குற்றங்கள் அனைத்தும் சமய ஆட்சித்துறையில் அக் காலத்தில் இருந்தன என்பதில் யாதோர் ஐயமுமில்லை. 'தோல் சுருங்கி கோரக்காட்சி அளிக்கின்ற ஒரு கிழவியைக் கிழவனை நான் அச்சமின்றிப் பார்க்க இயலும்; ஆனால், பெருந்தீயை நோக்க இயலாதபடி கண்களை மூடி நிற்கும் இளஞ் சிறுவர்கள்போல நான் ஆயிழைகளை அணிந்த வனப்பு மிக்க இளம் பெண்களைப் பார்க்காவண்ணம் என் கண்கள் காவல்புரிகின்றன. மிகவும் வயது முதிர்ந்த கிழவர்களிடமே காம வெந்தீ அணையவில்லை என்றால், குருதியோட்டம் மிகுந்துள்ள மற்றைய இளைஞர்களைப்பற்றி என்ன இயம்புவது!'

ஈதலைப்பற்றி இவர் கூறியது சிந்திப்பதற்குரியது. 'வறியவர்களுக்கு நீ அளிப்பது—உன் செல்வத்தை அவர்களுக்குப் பகிர்ந்துகொடுக்கவில்லை; அவர்களிடமிருந்து நீ அடைந்த செல்வத்தை அவர்கள்பால் மீண்டும் ஒப்படைக்கின்றாய்' என்று இவர் சாற்றும் பொன்மொழிகளில் ஓர் உயர்ந்த கருத்து மிளிர்கின்றதன்றோ?

இத்தாலியா நாட்டைச் சார்ந்த ஆன்ஸெல்ம் (Anselm) என்பவர் வாழ்க்கை நம் மனத்தைக் கவர்கின்றது. இவருடைய நண்பரான எட்மர் (Eadmer) இவருடைய வரலாற்றை அன்பும் அழகும் ததும்பும்படி நமக்கு நல்குகின்றார். அருள் பெருகும் அரண்மனையில் வீற்றிருக்கும் ஆண்டவனுடைய இருப்பிடத்திற்கு இவர் சென்றதைச் சித்திரிக்கும் ஒரு கனவை முதற்கண் நம்முன் நிறுத்துகின்றார். ஆல்ப்ஸ் வரைகளின் நிழல்கள் படியும் அஸ்டா (Aosta) என்னும் ஊரில் இவருடைய இளம்பிராயம் கழிந்தது. இவருடைய அன்னை விண்ணுலகத்தைப்பற்றி இவருக்கு உரைத்திருக்கிறார்.

ஓர் இரவு இவர் ஒரு மலைமீது ஏறுவதாகக் கனவு கண்டார். தாழ்வரைகளில் ஆண்டவரின் பணிப்பெண்டிர்கள் கழனிகளில் கோதுமை முதலிய தானியங்களை யாதொரு சுறுசுறுப்புமின்றி மெல்ல அறுவடைசெய்துகொண்டிருந்தார்கள். அவர்களைப்பற்றிக் குறைகூறுதற்பொருட்டு இவர் மலையின் உச்சிக்கேறி ஆண்டவர் வீற்றிருக்கும் அரியாசனத்து அண்மைக்குச் சென்றார். உண்டி முதலியவற்றைக் கவனிக்கும் பணியாளன் அவர் பக்கத்தில் அமர்ந்திருந்தான். ஆண்டவன் கட்டளைக்கேற்ப அப் பணியாளன் இவருக்கு ரொட்டியை ஈந்தான். காலையில் எழுந்திருந்தவுடன் விண்ணுலகுக்குச் சென்று ஆண்டு இவர் ரொட்டி அருந்தினதாக இவர் நம்பினார்.

இவ் வரலாற்றிலிருந்து நாம் உணர்வது இதுதான். ஒரு சிறுவனுய்த் திகழும் பருவத்தேயும் இவருக்கு ஆண்டவனின் அருளமுதம் கிடைத்தது. முதன் முதலாக இவருக்குப் பாடம் கற்பித்தவர் ஆண்டவரிடம் மிகவும் பக்தியுடைய இவருடைய அன்னையாராவர். பிறகு பற்பல கலைகளில் இவர் மிகவும் தேர்ச்சி பெற்ருர். தாம், ஒரு துறவியாக வேண்டுமென்று இவர் பக்கத்திலுள்ள ஆபட்டை (Abbot) வினவியபொழுது, இவருடைய தந்தையின் சீற்றத்திற்கு அஞ்சி அவர் மறுத்துவிட்டார். இவர் நோய்வாய்ப்பட்டார்; நோய் அகன்றதும், உடலைப் பேணுகின்ற ஆர்வத்தில், தம்முடைய படிப்பையும் துறவறத்தில் இறங்க வேண்டும் என்னும் நோக்கத்தையும் சற்று மறந்தார். தம் அன்னைபால் வைத்த அன்பின் காரணமாக மிகுதியாய் இளம்பிராயப் பொழுதுபோக்குகளில் திளைக்கவில்லை. தம் அன்னை மாண்டதும், இவருக்கு ஓர் ஆதரவாய்த் திகழ்ந்த நங்கூரம் முறிந்துபோய் மீகாமன் இல்லாத கப்பல்போல் வாழ்க்கைக் கடலில் இவர் தத்தளிக்கத் தொடங்கினுர். தம் தந்தையின் சீற்றமிகு இயல்பிற்கும் இவருடைய பெரும் நோக்கத்திற்கும் முரண்பாடு நிகழாமல் இருக்குமோ? வீட்டைவிட்டுத் தனியே வெளிக்கிளம்பிவிட்டார். பர்கண்டி (Burgundy), ஃபிரான்ஸியா (Francia) முதலிய பிரதேசங்களில் மூன்ருண்டுகளைக் கழித்தார். லான்ஃபிரான்க் (Lanfranc) என்பவருடைய புகழ் பெக் (Bec) என்னும் இடத்திற்கு இவரை ஈர்த்தது. அவர் பொன்னடிக்கீழ் அல்லும்பகலும் பாடங் கேட்டார்; மற்றவர்களுக்கு அறிவுரையும் வழங்கினுர்.

துறவியாக மாறவேண்டும் என்னும் ஆர்வம் ஆன்ஸெல்முக்கு மீண்டும் கிளர்ந்தெழுந்தது. எங்கே துறவறம் பூணுவது என்னும் வினு இவர் மனத்தகத்தே முளைத்தது. கிளுனி (Cluny) என்னும் மடத்தைச் சேர்வதா? அல்லது பெக் என்னும் மடத்தை நண்ணுவதா? என்னும் சிந்தனையில் இவர் ஆழ்ந்தார். கிளுனி மடத்தில் கடுமையான நிபந்தனைகளுக்கும் கட்டளைகளுக்கும் உட்பட வேண்டுமே என்று அஞ்சினுர். லான்ஃபிரான்கின் அறிவுச் செல்வமாம் பெருஞ் சுடருக்குமுன் மின்மினிபோலத் தோன்றும் தம் சிற்றறிவு மங்கிவிடக்கூடும் என்று ஐயுற்ருர். தன்னடக்கம் தமக்கு வரவில்லை என்றும், உலக ஆசைமீது ஒரு வெறுப்பு வரவில்லை என்றும் இவர் தேர்ந்தார். மற்றவர்களைக் காட்டிலும் புகழிலோ அல்லது ஆற்றலிலோ ஓங்கி வளர்ந்துபோவதா ஒரு துறவிக்கழகு என்னும் எண்ணம் அவர் மனத்தில் மின்னலடித்தது. ஆண்டவரின் பணி ஏற்பதென்ருல் நாயினும் கடையவர்க்குள் தாம் ஒரு கடையவனுகச் சமையவேண்டும் என்னும் ஓர் எண்ணம் இவரை உந்த, 'பெக் மடத்தைச் சேர்ந்துவிட்டார்'. 'இது தான் அமைதி நிலவும் என் இருப்பிடம்; கடவுள் ஒருவரே என் குறிக்கோள்; அவர்பால் அன்பு வைப்பதே என் இடையருத எண்ணம்; அவர்பால் தொடர்ந்து வரும் நினைவே இன்பத்தை அளிக்கும் ஆறுதல்' என்று தமக்குள்ளே மொழிந்து கொண்டார். 'ஒரு சான்ருேன்மூலம் அறிவுரை பெறவேண்டும் என்று விவிலிய நூல் குறிக்கின்றதே; அதற்கேற்ப நான் உபதேசம் அடையவேண்டாவா?' என்னும் எண்ணத்தில் ஆழ்ந்தார். தாம் ஒரு துறவியாக ஆகவேண்டும் என்றும், தம் தந்தை மாண்டதால் ஆண்டவன் அருளை அடைதற்பொருட்டுத் தம்

சொத்தனைத்தையும் ஏழை மக்களுக்கு ஈந்துவிடவேண்டும் என்று லான் ∴பிரான் கிடம் தெரிவித்தார். இவ் விஷயத்திற்குத் தாம் முடிவு கூறமுடியாதென்றும், ரோயன் என்னுமிடத்தில் மதிப்புக்குரிய ஆர்ச்பிஷப்பாக விளங்கும் சான்றோனே இத்தகைய செயலை உருவாக்கவேண்டும் என்றும் இயம்பிவிட்டார். அந்த ஆர்ச் பிஷப் இவர் துறவறம் பூணுவதற்கு இசைந்துவிட்டார். அந் நாளில் லான் ∴பிரான்க் ஒரு பிரயராய் (Prior) இருந்தார். கேயன் (Caen) என்னும் ஊரில் உள்ள ஞானி ஸ்டீபன் மடத்திற்கு இவர் ஓர் ஆபட்டாய் அமர்ந்த காரணத்தால், இவர் இருந்த இடத்தில் ஆன்ஸெல்ம் பிரயரானார். தமக்குக் கீழிருந்த துறவிகளைத் தம் பழுத்த ஞானம், ஆழ்ந்த பரிவு இவற்றைக்கொண்டு நன்னெறியில் நடத்தி, ஆண்டவனிடம் அவர்களைத் தியானிக்கும்படி செய்தார். தெய்வ உண்மைகளை அவர்களுக்குப் புலப்படுத்தியும் தம் பணியைச் செவ்வனே ஆற்றினார். தம்மை இம்மடத்துக் கைங்கரியங்களாம் சுமைகளிலிருந்து விடுவிக்கவேண்டுமென்று ஆர்ச் பிஷப்பிடம் மன்றாடினார். ஆனால், இவருடைய வேண்டுகோளுக்கு இணங்காதது மன்றித் தமக்கு மேன்மேலும் கிடைக்கக்கூடும் பதவிகளையும் ஏற்கவேண்டு மென்றும் பணித்தார். கி.பி. 1078ஆம் ஆண்டு பெக் மடத்தை நிறுவிய ஹெர்லுயின் (**Herluin**) என்னும் மிகவும் வயது முதிர்ந்த ஆபட் மாண்டுவிட்டார். ஒருமித்த மனத்துடன் அம் மடத்துத் துறவிகள் ஆன்ஸெல்மைத் தேர்ந்தெடுத்தார்கள். அந்தப் பதவி வேண்டா என்று அவர் கண்ணீர் வடித்தார்; மடத்துத் துறவிகள் காலடியில் விழுந்தார்கள்; அவர் சற்றும் இணங்கவில்லை. மிகவும் பணிவுடன் கண்களில் நீர்மல்கக் கேட்டுக்கொண்ட பிறகே அந்தப் பதவியை இவர் ஏற்றார். ஆண்டவனின் குணங்களைப்பற்றிச் சிந்திக்கலானார். அவர் இருக்கிறார்; அவர் என்றும் முன்னவர்; மாறுதலற்றவர்; எல்லாம் வல்லவர்; நியாயமே வடிவானவர்; கருணையே உருக்கொண்டவர். உண்மைக்கும் நலனுக்கும் ஓர் ஆலயமாவார். அவருடைய குணங்களைச் சிந்தித்துச் சிந்தித்து ஒரு முடிவுக்கு வராமல் தத்தளித்தார். நம்பினால் போதும்; கடவுளைப்பற்றிய சிந்தனை வேண்டா என்று அதை ஒதுக்க ஒதுக்க, அது அலைக்குமேல் அலையாய் வந்து இவருடைய அமைதியைக் குலைக்கத் தொடங்கிற்று. ஆனால், ஓர் இரவு இவருடைய உள்ளத்தில் ஆண்டவனுடைய அருளொளி அருவிபாய்ந்தது. அமைதி மனத்தின்கண் வேரூன்றிவிட்டது; உலகத் தளைகளனைத்தும் அறுந்துபோயின.

சான்றோர்களுடைய அறிவுரைகளை நாடினாலும், தம் அகச்சான்றிற்கே செவி சாய்த்து ஆண்டவருடைய சிந்தனைக் கடலிலே ஆழ்ந்தார். லான்∴பிரான்குகூடத் தம்முடைய உள்ளத்தை அவிழ்த்தாரில்லை. இவருடைய மனத்தகத்தே உறைந்திருக்கும் இரகசியங்களும், மர்மங்களும், கடவுள்பால் வைத்த சொற்பதம் கடந்த ஆர்வமும் இவரைச் சூழ்ந்துள்ள மக்களுக்கு மறைபொருள்களாகவே இருந்தன.

லான்∴பிரான்கு, ஆங்கிலநாட்டில் காண்டர்பரி ஆர்ச்பிஷப்பானார். இவருக்கும் அந்த நாட்டை ஆண்ட வில்லியம் ருவஸ் என்னும் மன்னனுக்கும் இடையறாத சச்சரவுகள் எழுந்துகொண்டேயிருந்தன. ∴லான்பிரான்க் இறந்த பிறகு ஆன்ஸெல்ம் அதே பதவிக்கு வந்தார். இத்தாலிய நாட்டைச் சார்ந்த

இவ்விரண்டு சான்றோர்களும் ஆங்கிலநாட்டில் ஓர் ஒழுங்கை நிறுவினுர்கள். கல்விச்சுடரைப் பரப்பித் தத்துவத்திலும் ஓர் ஆர்வத்தைத் தூண்டினுர்கள். வில்லியத்தின் தீய வழிகளுக்கு ஆன்ஸெல்ம் சற்றேனும் இடந்தரவில்லை. அவை இவருடைய மனத்திண்மையைச் சிதைக்க இயலவில்லை. கடவுளுக்குத் தாம் கீழ்ப்படிவோமேயன்றி, புவியாளும் மன்னர்களைப் பொருட்படுத்தமாட்டோம் என்று தம் உட்கருத்தை அந்தக் கொடுங்கோல் வேந்தனுக்கு நன்கு புலப்படுத்தி விட்டார். கான்டர்பரியை விட்டுப்போக ஒரு தீர்மானத்திற்கு வந்தார். 'நான் ரோமாபுரிக்குப் போகின்றேன். என்னுடைய வேண்டுகோளை மறுக்காத நிலையில் நீ என் ஆசிகளைப் பெறுவாய்' என்று இயம்பினுர். அஞ்சிய வேந்தனும் இசைந்தான். மடத்திற்குப் போய் அங்குள்ள துறவிகளுக்கு ஆறுதல் கூறினுர். 'என் அன்புமிக்க உடன்பிறந்தோர்களே, சேய்களே, நான் இந்த நாட்டை விட்டுப் போகின்றேன். என்னுடைய நாணத்தை நான் காப்பாற்றிக்கொள்ள வேண்டும். வானே இடிந்து விழுந்தாலும், ஆண்டவன் கட்டளைக்குப் புறம்பாக எதையும் நான் புரியமாட்டேன். நான் உங்கள்மீது மிகவும் பரிவு காட்டு கின்றேன். நான் இங்கு இருக்கும்போதே உங்களுக்குப் பல இன்னல்கள் ஏற்பட்டுவிட்டதை நான் நன்கறிவேன். நான் இல்லாதவிடத்து உங்களுக்கு எண்ணருந் துயர்கள் ஏற்படக்கூடும். ஆண்டவன் அருள்நெறி உறையும் மடங்களில் நீங்கள் பெற்ற ஆற்றலும் ஞானமும் உங்களுக்குத் தகர்க்கருங் கவசங்கள்போல் நின்று உங்களைக் காப்பாற்றுமற்போகா. உலக இன்பங் களைப் பெறுகின்றவரையில் ஆண்டவன் புகழ் பாடுவார்கள்; ஆனுல், இடுக்கண் களும், இன்னல்களும், துயர்களும் அவர்களைச் சோதிக்குங்கால், 'பாழுந் தெய்வமே' என்று பெருங்கூச்சலிட்டு ஆண்டவனை வெறுக்கவுஞ் செய்வார்கள். நீங்கள் அத்தகைய இனத்தைச் சார்ந்தவர்களல்லர் என்பதை நான் நன்குணர்வேன். ஆண்டவன் பணியே தமக்கு உண்ணுஞ் சோறும் பருகு நீருமாய்க்கொண்ட சான்றோர்கள் எத்தனை இன்னல்கள் வந்துற்றுலும் ஆண்டவன் அறப்பாதையிலிருந்து சற்றும் விலகமாட்டார்கள் என்பது திண்ணம். கடவுள்பால் தாம் வைத்த மாபெரும் அன்பினின்று எத்தகைய இன்ப போகங்களும் அவர்களை ஈர்த்துச் செல்லா. ஆண்டவன் அருட்செல்வத்தை உரிமையோடு பெறவந்த நாம் அவன் அருளாட்சியை உலகத்தில் நிறுவுவதற்கு அரும்பாடு படுவோமாக.'

இவர் தந்த பொன்மொழிகளின் வனப்பைச் சற்றுப் பருகுவோமாக. 'மாந்தர் களே! அரித்துத் தின்னும் உலகக் கவலைகளிலிருந்து சற்று விலகி நிற்பீர்களாக. ஆண்டவன் உறைவதற்கு உங்கள் இதயத்தில் சற்று இடந்தருவீர். ஆண்டவரே! உங்கள் அருளின்றிச் செயலற்றுக் கிடக்கும் எமக்கு உம் திருமுகத்தைக் காட்டுவீர். அப்பனே! ஐயனே! எம் உளத்தில் ஞானச்சுடரைத் தூண்டுவீர். நீங்கள் எமக்கு நல்வரவு அளிக்காதவிடத்து யாம் உங்களைக் காண இயலாது. அளப்பரும் உம் குணக்கடலைத் துருவி ஆராய்தற்குரிய அறிவு எம்மிடத்தில் இறையளவேனும் இல்லை. உங்களைப்பற்றிய உண்மையை ஓரளவு உணர்வதற்கு விழைகின்றோம், எம்முடைய இதயம் நம்பி உங்கள்பால் அன்பு வைக்க

ஆர்வம் கொள்ளுகின்றது என்று வேண்டுவோமாக' என இவர் இயம்புகின்றுர்.

ஆன்ஸெல்ம் ஆண்டவன் இருக்கையில் நம்பிக்கை வைக்கின்றுர். அந்த நம்பிக்கைக்கு இவருடைய அறிவு துணைபுரிகின்றது. தம்முடைய சிதையாத நம்பிக்கை ஒன்றே போதும், தம்முடைய ஆன்ம விடுதலைக்கு என்று கருதும் இயல்புள்ளவர் ; பகுத்தறிவின் துணைகொண்டு அந்தப் பெரு நம்பிக்கையில் இவர் திளைத்தார்.

எல்லா நலன்களையும் நல்கும் உயர்வற உயர்ந்த ஒரு பரம்பொருளான இறைவன் இல்லை என்று வாதாடும் மாந்தர்களின் மனமும் கருதுகின்றது என்று இவர் கூறுகின்றுர். ஞானி அகஸ்டைன் கழிவிரங்கல்களில் பாய்ந்தோடும் உணர்ச்சிப் பெருக்கு இவரிடத்தில் இல்லை. ஞானி பர்ஞடின் உருக்கமும் இவரிடத்தில் அரும்பவில்லை. அஸிஸி ஞானியான ஃபிரான்ஸிஸ் என்னும் சான்றோனுடைய அன்புக் கடலையும் இவரிடம் காண இயலாது. ஆனுல், ஆண்டவன்பால் வைத்த நம்பிக்கை இவருக்கு ஒரு குலையாத அமைதிநிலையை அளித்துவிட்டது என்று சாற்றலாம். பொதுவாகக் கூறுமிடத்து, இவர் ஞானி அகஸ்டைன் அடிச்சுவடுகளைப் பின்பற்றினுர் என்பது இவர் வழங்கிய நூல்களைத் துருவி ஆராய்வோர்க்குப் புலனுகும்.

## ஃபிரெஞ்சு நாட்டிலே

ஃபிரெஞ்சு நாட்டில் சமயப் பணிகளை ஆற்றிய சான்றோர்களைப்பற்றி ஆராய்வோம். கெர்பெர்ட் (Gerbert) என்னும் பெரியோர் நம் சிந்தையைக் கவராமற் போகார். அக்குட்டேன் (Acquitaine) என்னும் பிரதேசத்தில் இவர் எங்குத் தோன்றினுர் என்பதை யாம் அறியோம். கி.பி. 950ஆம் ஆண்டிற்குச் சற்று முன்பு இவர் பிறந்ததாகத் தெரிகின்றது. தாம் ஒரு சிறுவனுயிருக்கும்பொழுது பெனிடிக்ட் மடத்தில் சேர்ந்தார். ரெய்மண்டு (Raymond) என்னும் துறவியிடம் இலக்கணம் முதலியவற்றைக் கற்றுர். கிரேக்க, லத்தீன் மொழிகளில் சிறைப்பட்டிருக்கும் அரிய நூல்கள்பால் இவருடைய ஆர்வம் திரும்பிற்று. ஸ்பெயின் நாட்டுப் பிரபு ஒருவர் கெர்பர்ட் உறைந்திருக்கும் அவுரலாக் (Aurallac) என்னும் ஊருக்குப் பயணமாக வந்தார். மடத்திற்கு முதன்முதல் இவருக்கு இடம் தந்த கெரால்டு (Gerald) என்பவர், இவரை ஸ்பெயின் நாட்டிற்கு அழைத்துச் செல்லும்படி வேண்டிக்கொண்டார். இவருடைய வேண்டுகோளுக்கு இணங்கி கெர்பெர்ட்டை ஏற்றுக்கொண்டார். ஸ்பெயின் நாடு முழுதும் கால்நடையாய் நடந்து அரேபியர்களிடமிருந்து பாடம் கேட்டார் என்பதற்கு ஆதாரமில்லை.

ரோமாபுரியில் கெர்பெர்ட் பல துறைகளில் முன்னேற்றம் பேற்றை அடைந்தார். பதின்மூன்றும் ஜான் என்னும் போப்பாண்டவர் இவருடைய ஆண்தகையிலும் விரிந்த படிப்பிலும் தம் இதயத்தைப் பறிகொடுத்துவிட்டார். தமக்கு

ஆதரவு காட்டிவரும் ஆட்டோவுக்கு (Otto) இவரை அறிமுகப்படுத்திவிட்டார். மூன்று சக்கரவர்த்திகள் இவர்மீது தங்கள் அன்பைப் பொழிந்துவிட்டார்கள். முதல் ஆட்டோ (Otto) இவரை ரீம்ஸ் (Rheims) என்னும் இடத்திற்குப் போகும் படி செய்தார். இரண்டாம் ஆட்டோ இவருடைய அறிவுரைகளுக்குத் தம் செவி சாய்த்தார். கி.பி. 983ஆம் ஆண்டு பாபியோ (Bobbio) என்னும் இடத்திற்கு ஆபட்டாகச் செய்தார். மூன்றும் ஆட்டோ, ரேவன்னுவுக்கு இவரை ஆர்ச்பிஷப்பாக நியமித்தார். இறுதியில் போப்பாண்டவராகவும் திகழ்ந்தார். கணித சாத்திரத்தில் இவர் வல்லவர். பண்டைய சான்றோர்கள் அளித்த அறிவுச் செல்வத்தைப் பயன்படுத்தவேண்டும். 'தியானமும் சர்ச்சையும் நம்முடைய அறிவை விரிவடையச் செய்யும்' என்று மொழிகின்ற பண்டைய இலக்கியச் சுடர் மாய்ந்து போகாமல் காப்பாற்றிய பேறு இவரைச் சார்ந்ததாகும். அறிவுத் துறைகளை நன்கு வகுத்து இடைக்காலத்திற்கு நல்கினுர்.

கிரேக்க காலத்தின் மொழிகளில் இலங்கும் இலக்கியங்களைப் படிக்கலாமா படிக்கக்கூடாதா என்ற சர்ச்சைகள் கிறித்துவத் துறவற மடங்களில் எழுந்தன. அவற்றை நுகர்ந்தால் யாதொரு கெடுதலும் இல்லை; அதற்கு மாருக அத்தகைய நுகர்ச்சி கிறித்துவ சமயத்திற்குத் துணையே புரியும் என்று ஒரு சாரார் கூறுவர்; மற்ருெரு கட்சியினர் துறவறத்திற்குத் தீது விளைவித்துவிடும் என்று செப்புவர்.

லாயர் (Loire) ஆற்றங்கரைமீது விளங்குகின்ற ஃபுளூரி (Fleury) என்னும் ஊரிலுள்ள பெனிடிக்ட் மடத்தைச் சார்ந்த ஆபட் அப்போவைப் (Abbo) பற்றிய செய்திகள் சிந்திப்பதற்குரியவை.

இதய தோட்டத்திலுள்ள தீச்செயல்களாம் முட்களைக் களைந்துவிட்டு, அதில் தெய்வ நற்குணப் பூக்களை மலரச் செய்யவேண்டும். ஐம்புலச் சிற்றின் பங்களோடு எதிர்த்துப் போராடுதற்குரிய போர்க்கலன்களையும் திரட்டவேண்டும். தியானத்திற்குப் பிறகும் பட்டினி முதலிய அரிய நோன்புகள் ஆற்றிய பிறகும் இலக்கியங்களைப் படிப்பதில் பொழுதுபோக்கினுல் அது மிகுந்த நன்மையை அளிக்கும் என்று இயம்பினுர். கிளுனி மடத்திற்கு ஓடிலோ (Odilo) என்பவர் 994ஆம் ஆண்டு ஆபட்டாய்த் திகழ்ந்தார். 1049ஆம் ஆண்டு மாண்டு போனுர். இவருடைய இறுதிக் காட்சி நோக்குதற்குரியது.

'மனித இனத்திற்கே கொடும் பகையாய்க் கோரக்காட்சி அளிக்கின்ற பேயே! உன்னுடைய சதிகளை என்னிடம் காட்டாது அப்புறம் அகன்று போய் விடு. ஆண்டவன் சிலுவை என் பக்கலில் உள்ளது. அந்தச் சிலுவையை நான் வழுத்தாத நாளே இல்லை. என்னுடைய அடைக்கலம் அதுவே! அதுதான் என் தூய நெறியாகும். நான் போற்றும் உயர்குணமும் அதுவே. வீழ்த்த முடியாத என் வெற்றிக் கொடியும் அதுவே. அழிக்க முடியாத போர்க்கருவியும் அந்தச் சிலுவைதான். அந்தத் தெய்விகச் சிலுவைகொண்டு என்னுடைய இறுதிப் பயணத்தை நண்ணுகின்றேன். என் வாழ்வும் வைப்பும்

அதுதான். ஆனால், அது உனக்கு ஒரு மரண தேவதை என்று கொள்வாய்'. பண்டைய சான்றோர்களின் உயர்குணங்களே இவருடைய சிந்தனைகளையும் கருத்துகளையும் உருவாக்கின. தத்துவஞானிகள் அறிவுக்கு இலக்கணம் வகுக்கும்போது, அறிவென்பது உண்மையை நாடுவதே என்று இயம்பியுள்ளனர். மேன்மேலும் அதன் இயல்பை ஆய்ந்துகொள்ளும் ஆர்வமும் மக்களுக்கு வேண்டும்.

நியாயம் என்பது தன்னல மறுப்பே. அவரவர்க்குற்றதை அவரவர்க்கு நல்கவேண்டும். மனத்திண்மை என்பது அஞ்சாமல் எல்லா இடுக்கண்களையும் இன்னல்களையும் பொறுத்துக்கொண்டு தீங்கிழைப்போர்களுக்கு அவர் நாண நன்னயம் செய்துவிடுவதேயாகும்.

நடையுடை பாவனைகளில் ஒரு மிதம் வேண்டும். இந்த மிதத்தைத்தான் கிரேக்கர்கள் போற்றிவந்தார்கள். ஸ்டாயிக் கொள்கைகளைத்தாம் இந்தச் சான்றோரிடம் காண்கிறோம். ஒடிலோவின் வாழ்க்கை இத்தகைய உயர்குணங்களுக்கு ஒரு மாபெரு விரிவுரையாய் இலங்குகின்றது.

கெர்பெர்ட்டின் மாணுக்கரான ஃபுல்பெர்ட் (Fulbert) ஒடிலோவின் நண்பராவர். சார்ட்டரஸ் என்னும் ஊரின் மடத்திற்கு இவர் பிஷப்பாய் அமர்ந்தார். இவ்வூர் கலைக்கோயிலுக்கே ஒரு பண்டைய இருப்பிடமாகத் திகழ்ந்தது. ஃபுல்பெர்ட் பிஷப்பாய் வருவதற்கு முன்பே மடத்தைச் சார்ந்த பள்ளிக்குத் தலைமை ஆசிரியராக இருந்தார். இவருடைய பள்ளிக்கு மிகச் சேணிலிருந்தும் அண்மையிலிருந்தும் மாணவர்கள் வருவார்கள். இலக்கணம், அரிஸ்டாடில் கண்ட தருக்க நூல், கணிதம், மருத்துவ நூல், கிறித்துவ சமய நூல்கள் முதலியவை அங்கே கற்றுக்கொடுக்கப்பட்டன. இடைக்காலத்துத் தருக்க புலமைக் கொள்கைக்கு (Scholasticism) வேண்டிய அனைத்தும் இந்தப் பள்ளியில் உருவானதைப் பார்க்கின்றோம். ஆப்த மொழி அல்லது நூல் சான்று (authority) அல்லது பகுத்தறிவு (reason) சான்று என்ற பொருள்பற்றியே இடைக்காலத்தில் வெஞ்சொற்போர்கள் எழுந்தன என்பதை நாம் அறிவோம்.

டூர்ஸ் (Tours) என்னும் இடத்தில் பெரின்கர் (Berengar) என்பவர் பிறந்தார். ஃபுல்பெர்ட்டின் மாணுக்கரானபடியால், அவர் சொற்பொழிவு ஆற்றுதல் போல் இவரும் சொற்பொழிவாற்றுவார். நூல் ஆதாரத்தை ஒப்புக்கொள்ளாது பகுத்தறிவுக்கே இவர் வணக்கஞ்செய்தார். ஆண்டவன் இறுதி உண்டிச் சடங்கில் ரொட்டித் துண்டு இயேசுநாதர் உடலாகவும், சாராயம் அவருடைய குருதியாகவும் அப்படியே ஆகவில்லை என்று இவர் சாதித்தார். இவருடைய அடிச்சுவட்டைப் பின்பற்றியே ராஸ்ஸெலின் (Roscelin) தம் வாதத்தை நடத்தினர். உண்மையான தருக்க புலமைவாதியரில் (Scholastic) முதல் அணியில் நிற்பவர் ராஸ்ஸெலின்தாம் என்று ரஸ்ஸல் கருதுகின்றார். இவரைப்பற்றிய செய்தி யாதொன்றும் தெளிவாகத் தெரிந்திலது. சுமார் 1050ஆம் ஆண்டில் கம்பெக்னி

(Compiegne) என்னும் இடத்தில் இவர் பிறந்ததாக அறிகிறோம். பிரிட்டனி லுள்ள லாக்ஸ் (Loches) என்னும் இடத்தில் மாணவர்களுக்கு இவர் பாடங் கற்பித்தார். 1092ஆம் ஆண்டில் ரீம்ஸ் என்னும் தலத்தில் கூடிய திருக்கூட்டம் இவர் விவிலிய நூலுக்கு மாறுபட்ட கொள்கையைச் சார்ந்தவர் என்று இவர்மீது குற்றஞ்சாட்டிவிட்டது. தம்மீது கல்மாரியைப் பெய்து தம்மைக் கிறித்துவ சமயிகள் கொன்றுவிடுவார்கள் என்று அஞ்சித் தாம் வெளியிட்ட கொள்கையைத் தவறென்று ஒப்புக்கொண்டார். இங்கிலாந்திற்கு ஓடினர். அங்கேயும் ஞானி ஆன்ஸெல்ம் என்றவரோடு வாதப்போர் தொடுத்தார். பிறகு ரோமாபுரிக்கு ஓடினர். அங்கே மடத்தோடு ஏதோவொரு சமாதானம் செய்துகொண்டதாகத் தெரியவருகின்றது. 1120ஆம் ஆண்டிற்குப் பிறகு இவரைப்பற்றிய செய்தி யாதும் கிடைக்கவில்லை.

அபிலார்டுக்கு (Abelard) முக்கொள்கையைப் (Trinity) பற்றி இவர் விடுத்த கடிதத்தைத் தவிர இவருடைய வேறு நூல்கள் கிடைக்கவில்லை. கட்புலனுக்குத் தோன்றுகின்ற தனிப்பொருள்கள்தாம் உண்மை பொதுக் கொள்கை வியாப்தி என்பது உதட்டிலிருந்து உதிரும் பேச்சே தவிரப் பிறிதில்லை என்றார். இவர் நடத்திய தனிப்பொருள் உண்மைவாதம் இவரை அணுவாதி (Atomist) இனத்தினர்பால் உய்த்துவிடத் தடையில்லை. முக்கொள்கையில் ஆராயுமிடத்துத் தனிப்பட்ட மூன்று பெயர்களைத்தாம் அது சுட்டும் என்கிறார். மூன்று தனித் தெய்வங்கள் என்றுகூட இயம்பிவிடலாம் என்ற கருத்தை உடையவர் இவர் என்று கூறுவதற்கும் இடமுண்டு. பொதுக் கருத்துகள் (universals) உண்டு என்று வாதம் செய்வோர்களை இவர் ஆமோதிக்காது, ஐம்புலன் காணும் தனிப்பொருள்கள்தாம் உண்மையென்று சாற்றினர்.

இத்தாலி, ஃபிரான்ஸ்—இந் நாடுகளில் தோன்றிய சான்றோர்களைக் கண் ணுற்ற நாம் ஜெர்மன் நாட்டுப் பெரியோர்களைப்பற்றிச் சற்று ஆராய்வோம்.

முதல் ஆட்டோவின் கடைசி உடன்பிறந்தோரான புருனே (Bruno) என் பவர் இலக்கியத்துறையில் சிறப்புற்றோங்க அரும்பாடுபட்டார். பற்பல நாடுகளி லிருந்து இவரை நாடியே கற்றறிந்த பெரியோர்கள் வந்தார்கள். கிரேக்க, லத்தீன் மொழிகளில் காணப்படும் நூல்களனைத்தும் இவருடைய சிந்தையைக் கவராமலில்லை. ஆனல், கிறித்துவ சமயத்திற்குப் புறம்பாக உள்ள நூல்களைப் பயிலலாமா பயிலக்கூடாதா என்னும் சர்ச்சை ஓய்ந்தபாடில்லை; ஒத்லோக் (Othlogh) என்பவர் இத்தகைய சர்ச்சைச் சுழலில் சிக்கியவரே. டல்லி (Tully) சியாரோ (Ciaro), வர்ஜில் (Virgil), லூகன் (Lucan), நாஸோ (Naso) இவர்க ளுடைய நூல்களில் திளைக்கின்றபொழுதும் பிறக்கின்ற இன்பம் நேர்மையான இன்பந்தானு என்னும் வினு இவர் மனத்தகத்தே எழத்தான் செய்தது.

ஏறத்தாழ இவர் கி.பி. 1000ஆம் ஆண்டில் பவேரியாவிலுள்ள (Bavaria) ஃபிரிஸிங் (Freising) என்னும் மடத்து ஆதீனம் திகழும் ஊரில் பிறந்தார்.

இவர்களுடைய புலமை மாந்தர்களுடைய உளத்தைக் கவர்ந்தது. ராட்டிஸ்பன் (Ratisbon) என்னும் ஊரிலுள்ள ஞானி எம்மரம் (Emmeram) மடத்தில் கி.பி. 1032ஆம் ஆண்டு துறவறம் பூண்டார். 'ஒரு துறவிக்குற்ற சோதனைகள்' என்னும் தம் நூலில் தம்முடைய மனப்போர்களைத்தாம் இவர் சித்திரித் திருக்கிறார்.

"இந்தத் துறவி விவிலிய நூலில் ஆழ்ந்தார். மற்றவர்களோ உலக இன்பதுன்பங்களைப் படம் பிடித்துக் காட்டும் இலக்கியப் படைப்புகளில் திளைத்தார்கள். ஏன் இலக்கியங்களில் தோயக்கூடாது என்னும் தீய விருப்பம் இடையிடையே எழும்; ஆனால், ஆண்டவன் அருளால் இந்தத் தீய விருப்பம் மீது இவர் வெற்றி கண்டார். 'கடவுள்தான் உன் துயரை அறிவாரே; அதை ஏன் அவர் துடைக்கக்கூடாது? அவர்தாம் எல்லாம் வல்லவராயிற்றே' என்னும் குரல் எழும். இந்தக் குரலுக்கும் இந்தத் துறவி செவிசாய்க்கவில்லை. ஆண்டவனின் அருளாட்சியில் இவருடைய நம்பிக்கை குன்றவில்லை. விவிலிய நூலில் கூறப்படுவது மெய்தானா? ஆண்டவன் உண்மையில் எல்லாம் வல்லவரா என்னும் ஐயமும் இவர் மனத்தகத்தே பிறக்கும்."

'அழியா வாழ்வாம் மௌலியைப் பெறுதற்பொருட்டு நான் என் அடியார்களை அளப்பருஞ் சோதனைக்குள் சிக்கவைத்தேன்' என்ற ஒலி பிறந்தது. ஆண்டவனிடமிருந்து வந்த இந்த மொழி இவருக்கு ஓர் அமைதி அளித்தது. எத்தகைய இன்னல்களிலிருந்தும் நம்மைக் காப்பாற்ற ஆண்டவன் இருக்கிறான் என்னும் சிதையாத நம்பிக்கையில்தான் அமைதி வேரூன்றி நிற்கும் என்னும் பேருண்மையை இவர் கண்டுவிட்டார். அந்தச் சுருதிக்கேற்றவாறு இவர் வாழ்க்கையாம் யாழும் பேசத்தொடங்கிற்று. இவருடைய நூல்களையும், எண்ணங்களையும், கருத்துகளையும் உருவாக்குதற்பொருட்டு இந்தத் திண்மையான நம்பிக்கை துணைபுரிந்துவிட்டதை நாம் உணர்கின்றோம்.

இந்த 11ஆம் நூற்றாண்டில் இங்கிலாந்தில் பெருமை அடைதற்குற்ற யாதோர் அருஞ்செயலும் ஏற்பட்டதாகத் தெரியவில்லை. வெம்படையெடுப்புப் புயல்கள் அடித்த இக் காலத்தில் இங்கிலாந்தில் மடங்களில் இலக்கியச் சுடர் அவிந்துபோகாமல் காப்பாற்றிய பேறு, டன்ஸ்டன் (Dunstan) என்னும் சான்றோனைச் சார்ந்ததாகும்.

மேலே குறிப்பிடப்பட்ட மாபெருஞ் சமயிகள் கிறித்துவ மடத்தின்கண் எழுந்த மாசுகளையெல்லாம் அகற்ற முயன்றவர்களே. ஞானி பெனிடிக்ட் இந்தத் துறையில் ஆழ்ந்ததைப்பற்றி முன்னரேயே மொழிந்துள்ளோம். 910ஆம் ஆண்டு கிளூனி என்னும் மடத்தை அக்குட்டேன் பிரதேசத்துப் பிரபுவானவரும் (Duke of Acquitaine), பக்திக்குப் பெயர்போனவருமான வில்லியம் (William the Pious) என்பவர் நிறுவினார். ரோமால்டு (Romald) என்னும் துறவி 1012ஆம் ஆண்டில் காமல்டோலஸி (Camaldolese) என்னும்

மடத்தைத் தாபித்தார். பீட்டர் டேமியன் (Peter Damian) இவருடைய அடிச் சுவட்டைப் பின்பற்றினர். 1084ஆம் ஆண்டில் கொலோனில் (Cologne) கார்த்தூஸியர்களின் (Carthusians) மடம் புருனோவால் (Bruno) எழுப்பப் பட்டது. 1098ஆம் ஆண்டு ஸிஸ்டர்ஸியன் ஆர்டர் (Cistercian Order) என்னும் மடம் ராபர்ட் என்பவரால் சமைக்கப்பட்டது. இந்த மடத்தில் ஞானி பெர்னர்டு (Bernard) 1113ஆம் ஆண்டில் சேர்ந்தார்; இம் மடம் பெனிடிக்ட் வகுத்த முறையைப் பின்பற்றிற்று.

இத்தகைய மடங்களால் கிறித்துவ சமயத் தாபனங்களில் புகுந்த ஊழல் களும் மாசுகளும் ஒருவாறு களையப்பட்டன என்று கூறுவதற்கு இடமுண்டு. உயர் குறிக்கோள்களுக்கும் செயல்முறைகளுக்கும் இடையே நிகழும் முரண்பாடு களை நீக்கப் புரியும் அருஞ்செயல்கள் போற்றுதற்குரியவை அல்லவ ?

# 14. அரேபியநாட்டுத் தத்துவம்

இடைக்காலத்தில் அரேபிய நாட்டினர் கிறித்துவ உலகத்திற்கு நல்கிய பண்பாடும் தத்துவமும் நம்முடைய ஆராய்ச்சிக்குரியவையல்லவா? அரேபிய நாடு பெரும்பாலும் ஒரு பாலைவனமே. அதன்கண்ணுள்ள மக்களுக்குப் போதுமான உணவுப் பொருள்கள் இல்லை. அக் காரணம்பற்றியே அண்மையிலுள்ள நாடுகளைச் சூறையாடினர்கள். பிறகு, முகமது நபி தாபித்த கொள்கையை எங்கும் பரப்புதல்பொருட்டு கி.பி. 632ஆம் ஆண்டில் படையெடுக்கத் தொடங்கினர்கள். கி.பி. 711ஆம் ஆண்டிற்குள் ஸிரியா, எகிப்து, பாரசீகம், ஸ்பெயின் முதலிய நாடுகள் இவர்களுடைய ஆட்சிக்குக் கீழ்ப்பட்டுவிட்டன.

முகமது நபி வழிவந்த காலிஃப் வாயிலாக அரேபிய சாம்ராச்சியம் ஆட்சிபுரியப் பட்டுவந்தது. முதலில் காலிஃப் தேர்ந்தெடுக்கப்பட்டார்; பிறகு நாளடைவில் அது பரம்பரையாட்சியாகக் காட்சி அளிக்கத் தொடங்கிவிட்டது. இக் காலிஃப் சக்கரவர்த்திகளுள் மிகச் சிறந்தவர் ஹாரன்-அல் ரஷிட் (Harun-al Raschid, கி.பி. 809) என்பவர்; சார்ல்மென் சக்கரவர்த்திக்குச் சமகாலத்தவர் என்று இயம்பலாம். 'அரபிக் கதைகள்' மூலமாக இவருடைய புகழ் எங்கும் பரவிற்று. உலக இன்பபோகத்திற்கும், கவிதைக்கும், படிப்பிற்கும் இவருடைய அரண்மனை ஓர் இருப்பிடமாகத் திகழ்ந்தது. ஸ்பெயின் நாட்டிலிருந்து சிந்து ஆற்றங்கரைவரையில் இவர் சாம்ராச்சியம் பரவியிருந்தது. இவர் வைத்தது சட்டம். இவர் தம் சென்னியைச் சற்று அசைத்தால் போதும்; அது நிறைவேறிவிடும். ஆனல், இந்தச் சாம்ராச்சியத்தின் சிறப்பு நீடித்து நிற்கவில்லை. காலிஃப் படைஞர்கள் கலப்பற்ற துருக்கியர்களே. இவர்கள் காலிஃப் சக்கரவர்த்திக்குக் கீழ்ப்படிகிறதில்லை. படைஞர்கள் காலிஃப்மார்களைப் பல துன்பங்களுக்கும் ஆளாக்கியிருந்திருக்கிறர்கள். அப்பாஸிட் (Abbasid) வமிசத்து இறுதிக் காலிஃப் மங்கோலியர்களால் 1256ஆம் ஆண்டு கொலையுண்டார். பாக்தாத்தில் உறைந்துவந்த 8,00,000 மக்களும் அவர்களுடைய கொடுஞ்சீற்றத்திற்கு இரையாகிவிட்டார்கள் என்று ரஸ்ஸல் மொழிகின்றர்.

முகமதியர்களுடைய பண்பாட்டுத் துறையின் தனிச் சிறப்பு முதன்முதலாக ஸிரியாவில்தான் மலரத் தொடங்கிற்று. அரிஸ்டாட்டில் இயற்றிய நூல்கள் அவர்க

னுடைய சிந்தையைக் கவர்ந்தன. கிரேக்க தத்துவத்தை ஸிரியர்கள்மூலமாக அரேபியர்கள் அறிந்துகொண்டார்கள். குடதிசை ஐரோப்பியர்கள், அரேபியர்கள் மொழிபெயர்ப்புகள்மூலம் அரிஸ்டாட்டிலின் நூலின் நுட்பங்களை ஓர்ந்தார்கள். கிரேக்கநாட்டுக் கணிதம், வானநூல், மருத்துவம் இவைபோன்ற இயற்கைத்தத்துவ நூல்களை மொழிபெயர்ப்புகளின் உதவிகொண்டு அரேபியர்கள் உணர்ந்தார்கள். அரிஸ்டாட்டிலின் தத்துவம் அப்படியே கலப்பற்றதாக வரவில்லை; புதுமுறை பிளேட்டோ தத்துவத்தின் சாயம் ஏறியே அவர்களுக்குக் காட்சியளித்தது.

அரேபிய தத்துவ வித்தகர்களுள் முதன்முதலாகக் குறிப்பிடத்தகுந்தவர் அல்கிண்டி (Alkindi) என்பவர். இவர் ஸ்கோடஸ் எரியுகினுவின் சம காலத்தவராகக் கருதப்படுகின்றார். இவர் சுமார் கி.பி. 873ஆம் ஆண்டு இறந்ததாகத் தெரியவருகின்றது. இவர் ஒரு தருக்கப் பண்டிதர்; ஒரு சிறந்த மொழிபெயர்ப்பாளர்; ஓர் அறிவுக் களஞ்சியம். இவருடைய நூல்கள் லத்தீன் பாஷையில் மொழிபெயர்க்கப்பட்டுள்ளன. அரிஸ்டாட்டிலின் இறையியல் அரேபியர் பாஷையில் மொழிபெயர்க்கப்பட்டிருந்தது. இந்த மொழிபெயர்ப்பு மிகத் தொன்மை வாய்ந்தது. இந்த மொழிபெயர்ப்பின் குற்றங்குறைகளைக் களைந்து அதைத் தக்க முறையில் இலங்கும்படி செய்தார்.

இடைக்காலத்துத் தருக்க பண்டிதக் கிறித்துவ சமயிகள் (The Scholastics) 949ஆம் ஆண்டிலோ அல்லது 950ஆம் ஆண்டிலோ மாண்டுபோன அல்ஃபரபியைப் (Alfarabi) பற்றி நன்கு உணர்ந்தவர்கள் என்பது நாம் அறிந்ததே. தான் சலியாது மற்ற எல்லாவற்றையும் சலிக்கச் செய்யும் கடவுளின் அழியா இருக்கையை அரிஸ்டாட்டில் கண்ட தத்துவத்தைக்கொண்டு இவர் விளக்கிக் காட்டுகிறார். பிரபஞ்சத்திலுள்ள பொருள்களை, எல்லாவற்றையும் இயங்கவைக்கும் தம் பேரறிவின் துணைகொண்டே கடவுள் படைக்கின்றார். அவிஸென்னு (Avicenna), அவர்ஹோஸ் (Averrhoes) இவ்விரு சான்றோர்களின் நூல்களில் அலரும் கருத்துகளின் முகைகளை அல்ஃபரபி கண்டுள்ள தத்துவங்களில் உணர்கின்றோம்.

அவிஸென்னு (Avicenna) என்பவர் (980—1037) ஒரு தத்துவஞானி; ஓர் இறையியல் வல்லுநர்; ஒரு மருத்துவர். இவருக்குப் பற்பல இடுக்கண்கள் விளைந்தாலும் ஏறத்தாழ நூறு நூல்கள் எழுதியுள்ளார். அரிஸ்டாட்டிலுக்கு விளக்கந் தருவதில் அரேபியநாட்டு இறையியல் வல்லுநர்களில் இவர் மிகச் சிறந்தவர் என்று இயம்பலாம். அல்ஃபரபியின் நூல்களில் கலந்துள்ள புதுமுறைப் பிளேட்டோ தத்துவத்தின் கருத்துகளைக் களைந்துவிட்டு அப்படியே மாசின்றி அரிஸ்டாட்டிலின் நூலை அரேபியர்களுக்கு அளித்த சான்றோன் இவர் என்று கூறுவது மிகையாகாது. இவருடைய உயர்ந்த நூலான கிதாப் அஸிஃபா (Kitab Assifia) சிந்தை நோயைத் துடைக்கும் சிறந்த நூலாகும்; தருக்கம், விஞ்ஞானம், கணிதம், உளநூல், தத்துவநூல் முதலியவை அடங்கிய ஓர் அறிவுக் களஞ்சியம் என்று உரைக்கலாம். மருத்துவ நூலையும்

வான சாத்திரத்தையும் அரேபியர்களுக்கு அளித்துள்ளார். தருக்க இயல் கொண்டுதான் தத்துவ ஆராய்ச்சி செய்யவேண்டும் என்னும் உண்மையை வற்புறுத்திப் பேசுகிருர்.

எல்லாச் சாத்திரங்களைக் காட்டிலும் மிகச் சிறந்தது தத்துவ நூல்தான் என்று உரைக்கின்ருர். பரம்பொருளான ஒன்றிலிருந்து பல வெளிக்கிளம்பு கின்றன. உயர்வற உயர்ந்த நிலையில் ஆதிப் பரம்பொருள் திகழ்கின்றது; அது பூரணமான அறிவுமயமாய் மிளிர்கின்றது; அஃது ஓர் அகண்டமான மாபெரு நலமே. அதிலிருந்து உந்தப்படுகின்ற ஒன்று பரம்பொருளைப்பற்றிய ஞானத் தைப் பெறுகிற காரணத்தால் இன்னென்றிற்கு இது காரணமாயிருக்கிறது. இப்படிச் சங்கிலித் தொடர்போல் எல்லாம் ஒரு பரம்பொருளால் உந்தப்படு கின்றன. ஒன்றுக்கு மற்ருென்று காரணமாய் மிளிர்கின்றது. ஸாட்டர்ன் (Saturn) அறிவிலிருந்து ஜுபிட்டர் கோளத்தின் ஞானம் பிறக்கின்றது. இறுதியில் எல்லாவற்றையும் இயங்குவிக்கும் அறிவுக்கு வருகின்ருேம். இந்த அறிவால்தான் பிரபஞ்சத்திலுள்ள பொருள்கள் உந்தப்படுகின்றன. இந்த அறிவுதான் மனித ஆன்மாக்களுக்குக் காரணமாயிருக்கின்றது. ஆனல், எல்லாம் ஒன்றுதான் என்னும் அத்துவைத வாதத்தை (Monism) இவர் நிறுவவில்லை. தனித்த அழியா ஆன்மாக்களின் இருக்கையைத்தான் இவர் வற்புறுத்துகின்ருர். முற்பிறப்பு, மறுபிறப்பு இவற்றை இவர் ஏற்ருரில்லை. பிரகிருதி, பரம்பொருளிலிருந்து பிறக்கவில்லை; இஃது அநாதியாய் நித்தியமா யுள்ளது; கடவுளைப்போல ஆதியும் அந்தமும் இல்லாமலிருக்கிறது. பிர கிருதியை இவ்வண்ணந்தான் வைணவர்களும் கருதுகின்ருர்கள். கருத்துதான் வடிவங்களில் ஒரு பொதுமையைப் பிறக்கும்படி செய்கின்றது. இப் பொது மையே பொருள்களுக்கு முன்பும், பொருள்களிலும், பொருள்களுக்குப் பின்பும் இயங்குகின்றது. கடவுளிடத்தில் எல்லாம் கருத்துகளாய்க் காட்சி அளிக் கின்றன. சான்ருக, தனிப்பட்ட பூனையைப் படைக்கும் முன்னமேயே ஆண்ட வன் ஆக்கும் பூனையைப்பற்றிய பொதுக் கருத்து இருக்கிறது. பூனைகள் தோன்றிய பிறகு அவற்றில் பூனையின் இயல்பைப் பார்க்கின்ருேம். பல பூனைகளை ஆராய்ச்சி செய்தபிறகே பூனையின் பொதுத்தன்மையை உணர்கின்ருேம். படைப் பதற்கு முன்பும் பொதுத்தன்மை இருக்கிறது; படைக்கும்பொழுதும் இந்தப் பொதுத்தன்மை இருக்கிறது; படைத்தபிறகும் இந்தப் பொதுத்தன்மை இருக் கிறது என்று ரஸ்ஸல் விளக்கந்தருகிருர். முரண்பட்ட கருத்துகளுக்குச் சமரசம் காண்பதுபோல் இந்தக் கொள்கை அமைந்திருக்கிறது.

ஆல்கஸ்ஸாலி (Algazzali, 1058–1111) ஓர் அனுபூதிச் செல்வர் (Mystic); சூஃபி கொள்கையைச் சார்ந்தவர். இத்தகைய அனுபூதிநெறி குரானில் இல்லை என்று மாரிஸ் டி உல்ப் (Maurice De Wulf) என்னும் தத்துவப் பேராசிரியர் தம்முடைய 'இடைக்காலத் தத்துவ வரலாற்றில்' குறிக்கின்ருர். குரானிலும் இதற்கு இடமிருக்கிறது. இது குரானுக்கு முரணனதன்று என்று வாதிப்பாரு முள்ளனர்.

உலகத்தின் அழியா இருக்கையையும், கோளங்கள் ஒன்றையொன்று பின் பற்றி இயங்குகின்றன என்று இயம்புவோர்களின் கொள்கையையும் இவர் ஆமோதிக்கவில்லை. ஐம்புலன்களை, அடக்குவதாலும் ஆண்டவன்பால் வைத்த சிதையாத நம்பிக்கையாலும் இவருக்கு ஆண்டவனுடைய நேர்க்காட்சி கிடைத்தது என்று மொழியலாம். சாதாரண அறிவு ஐம்புலன்கள் தரும் அறிவேயாகும். ஐம்புலன்கள் காணமுடியாத ஒரு நிகரற்ற அனுபூதி இருக்கிறது என்று இவர் சாற்றினர். சூஃபிக் கொள்கையினர் அனைத்திறைக் கொள்கையின ரல்லர் என்று உலஃப் உரைப்பதற்கு இடமில்லை. அனைத்திறை இயல்பும் அவர்க ளிடத்தில் காண்கின்றோம்.

அவர்ஹோஸ் (Averrhoes) என்னும் தத்துவ வித்தகர் முன்னே சுட்டப்பட்ட பெரியோர்களை விடச் சற்று உயர்ந்தோர் என்று இயம்பினால் அது மிகையாகாது. 1126ஆம் ஆண்டில் கார்டோவா (Cardova) என்னும் இடத்தில் பிறந்தார். 1198ஆம் ஆண்டில் மாண்டார். இவர் ஒரு மருத்துவர். ஒரு விஞ்ஞானியாயும் விளங்கினர். அரிஸ்டாட்டில் சமைத்த நூல்களின் நயங் கண்ட மிகச் சிறந்த விரிவுரையாளர். இடைக்காலத்தில் இவர் மாபெரும் உரையாசிரியர் என்றே அழைக்கப்பட்டார். தத்துவத்துறையிலும் இவர் தனிப்பட்ட நூல்களை எழுதி யுள்ளார். தத்துவஞானிகளின் அறிவு என்னும் நூலை கசாலி எழுதினர். எல்லா உண்மைகளும் குரானில் மிளிர்கின்ற காரணத்தால் வேறு நூல் தேவையில்லை. ஆண்டவனல் புலப்படுத்தப்பட்ட கண்கூடாகிய ஓர் உண்மை இருக்கிற பொழுது, வேறு சான்று எதற்கோ. ஒரு பெரும் பாழிலிருந்து கடவுள் படைத் தார்; அவருக்கு உயர் குணங்களுண்டு. உடல் மீண்டும் உயிர்த்தெழும் (Resurrection). இத்தகைய கொள்கையில் கசாலி நம்பிக்கை வைத்திருக்கிறார். இக் கொள்கைகளை 'அழிவுக்கோர் அழிவு' என்னும் தம் நூலில் அவர்ஹோஸ் தாக்கிப் பேசுகின்றார்.

இவருடைய கொள்கைகள் ஆராய்ச்சிக்குரியவை. அவிஸென்ன கூறியது போல் ஒன்றிலிருந்து மற்றொன்று எழுகின்றது என்று இவர் மொழியவில்லை. எல்லாம் ஆண்டவனிடமிருந்து நேராகவே வருகின்றன. சான்றோர்களுக்குப் புலப்பட்ட ஒன்றை (Revelation) வைத்துக்கொண்டு கடவுளின் இருக்கையை மெய்ப்பிக்கவேண்டியதில்லை. பகுத்தறிவின் துணைகொண்டே கடவுளின் இருக் கையை நாம் நிலைநாட்டிவிடலாம் என்று இவர் உரைக்கின்றார். ஞானி தாமஸ் அக்யுனஸ்ஸும் இம் முறையில்தான் மொழிகின்றார்.

பிரகிருதி அழிவற்றது; அதிலிருந்து எத்தனையோ வடிவங்கள் தோன்று வதற்கு இடமிருக்கின்றது என்று இவர் கருதுகின்றார். எங்கும் ஒரே சின்மயமாய் (அறிவுமயமாய்) இருந்தாலும், வேறுபட்ட வடிவத் தோற்றங்களால் பல்வேறு பொருள்கள்போலக் காட்சி அளிக்கின்றன.

பல கோளங்களால் விண் சமைக்கப்பட்டிருக்கின்றது. ஒவ்வொரு கோளத் திற்கும் வடிவு அறிவேயாகும். முதல் கோளத்தை ஆதிசக்தி உந்துகின்றது.

இந்த உந்தல் மற்றொன்றை ஆட்டிவைக்கிறது. இந்த உந்தும் சக்தி சந்திர மண்டலம்வரையில் வருகின்றது. மனத்திற்கும் மதிக்கும் ஒரு தொடர்பு உண்டு என்று நாமும் கருதுகின்றோம். சந்திரமண்டலம் மனிதனுடைய அறிவால் உந்தப்படுகின்றது. எல்லாப் பொருள்களிலும் தலையிடுவது இந்த அறிவு தான். தனிப்பட்ட ஆன்மா உண்மையில்லை. எல்லாவற்றிற்கும் பொதுவாயுள்ள *சின்மயந்தான் (Nous) அழியாத தத்துவமாய் மிளிர்கின்றது. தனிப்பட்ட* ஆன்மா என்று ஒன்று இல்லை. எல்லாவற்றிலும் இலங்குகின்ற சைதன்னியம் ஒன்றுதான் உண்மை என்று இவர் கூறுகின்றார்.

இத்தகைய தத்துவம் சங்கரரை நினைவூட்டாமற்போகுமோ. இந்தத் தத்துவத்தைக் கிறித்துவத் தத்துவ வித்தகர்கள் எதிர்த்து வாதித்தார்கள்.

குரானுக்கு முரணாயிருக்கிறது இக் கொள்கை என்று வினவியதற்கு இவர் அளித்த விடையும் சிந்திப்பதற்குரியது. குரானை அப்படியே வைத்துக்கொண்டு சர்ச்சையில் இறங்குவதில் பயனில்லை. அந் நூல் எல்லா உரைகளுக்கும் இடம் தருகின்றதன்றோ ?

அரேபிய தத்துவ வித்தகர்களுடைய பரம்பரை அவர்ஹோஸ் என்னும் சான்றோனோடு நின்றுவிடுகின்றது என்று கூறலாம். ஆனால், அவர்களுடைய தத்துவ ஆட்சியின் விளைவை யூதர்களிடையே நாம் நன்கு உணரலாம்.

ஸரகோஸா (Saragossa) வைச் சார்ந்த அவன்ஸிப்ரால் என்பவர் (1020—1070) ஸ்பெயின் நாட்டில் தோன்றிய யூதர் ; தத்துவ அறிஞர்களுடைய பரம்பரையைத் தொடங்கியவர் என்று உரைக்கலாம்.

பரம்பொருள் ஒன்றுதான் ஓர் அழியாத் தத்துவமாகும். இந்தத் தத்துவத்திலிருந்துதான் வரம்புள்ள உருவங்கள் கொள்ளக் குறைவிலாத ஒரு மூலத்திலிருந்து எழுகின்றன. அகண்டமாயுள்ளது இழிவுபட்ட உருவமாகக் காட்சி அளிக்கின்றது. தனக்குக் கீழ்ப்பட்ட பிரபஞ்ச ஆவியை (Cosmic Spirit) கடவுள் உண்டுபண்ணுகின்றார். இந்தப் பிரபஞ்ச ஆவியோ பிரகிருதியாயும் வடிவமாயும் திகழ்கின்றது.

பிரகிருதி—வடிவம் (Matter and Form) என்னும் தத்துவத்தைத்தான் அரிஸ்டாட்டில் குறிக்கின்றார். தம்முடைய வரம்புள்ள ஒன்றில் காணப்படும் பிரகிருதி, வடிவம் இஃ்றைப் பிரிக்கவொணாவண்ணம் தம்முடைய சங்கற்பத்தால் கடவுள் பிணைத்துவைக்கிறார். தூய ஆவிகளில் (Pure Spirits) ஆன்மீக அல்லது தெய்விகப் பிரகிருதியும் அதற்குற்ற உருவமும் (Spiritual Matter and Form) இலங்குகின்றன . ஒன்றிலிருந்து பலவெழும் கொள்கை புதிதன்று. பிரகிருதியும் வடிவமும் ஆன்மிகப் பொருள்களிலும் தங்கியிருக்கின்றன.

மனிதன் ஒரு பிண்டாண்டம் (Microcosm). அண்டாண்டத்திலுள்ள (Macrocosm) பிரகிருதியும் வடிவமும் பிண்டாண்டத்தில் விளங்கத்தானே செய்யும் என்று இவர் சாற்றுகின்றார். இவ் விரு கொள்கைகளும் 13ஆம் நூற்றாண்டு இடைக்காலத்துப் புலமைக் கொள்கையினரின் மனத்தின்மீது ஆட்சிபுரிகின்றதைக் கண்ணுறுகின்றோம்.

மேலும், பிரபஞ்ச ஆவியும் அதிலிருந்து வெளியே வருகின்ற ஒவ்வொன்றும் உயர்வற உயர்ந்த பரம்பொருளை நோக்கிச் செல்லுகின்றன என்று இவர் உரைப்பது சிந்திப்பதற்குரியது.

மோஸஸ் மெய்மானிடீஸ் (Moses Maimonides) கண்ட உண்மையை ஆய்வோமாக. இவர் கார்டோவாவில் 1135ஆம் ஆண்டு பிறந்து, எகிப்தில் 1240 ஆம் ஆண்டு மாண்டார். உண்மையான நம்பிக்கையிழந்து திக்குத்திசை ஓராது திரிகின்ற தத்துவ அறிஞர்களுக்கு வழிகாட்டியாயுள்ள ஒரு நூலை (Guide to Wanderers) எழுதியுள்ளார். யூதர்கள் கண்ட தத்துவத்தை—அரிஸ்டாட்டில் தேர்ந்த தத்துவத்தை — அடிப்படையாகக் கொண்டு விளக்கந் தருகின்றார். யூதர்கள் கடவுளின் இருப்பை மறுக்கவில்லை. ஆனால், கடவுளை மனித வடிவமாகக் காண்கின்றார்கள். சகுணமாகக் கொள்ளும் இயல்பு — தெய்வத்தின்மீது மனித இயல்பை ஏற்றிச்செல்லும் முறை — அரிஸ்டாட்டிலின் தத்துவத்திற்கு முரணானதன்றோ. முரண்பட்ட இவ் விரண்டு கொள்கைக்கும் இடையே எப்படி ஓர் இசைவை (Harmony) அமைக்க இயலும் என்பதுதான் பிரச்சினையாகும். அப்பாலைத் தத்துவத்தின் (Metaphysics) மிக உயர்ந்த குறிக்கோள் கடவுளேயாகும். அக் கடவுள்தான் எல்லாவற்றையும் சலிக்கச் செய்கிற ஆதிமூலமாகும். வரம்புள்ள ஒன்று தோன்றுமாயின் வரம்பிகந்த பரம் பொருள் உண்டு என்பது உய்த்துணரப்படும். கடவுளை அறிதலே தத்துவம், சமயம் இவற்றின் குறிக்கோளாகும். நம்பிக்கைக்கும் பகுத்தறிவுக்கும் முரண் படுமாயின் விவிலிய நூலை ஓர் உருவமாகக் கொண்டு அதற்கு உரை நல்கவேண்டும்.

உண்மையை நாடுதலே சமயத்தின் கடமையாகும். அரிஸ்டாட்டிலின் தத்துவத்திற்கு மாறாகக் கடவுள் பிரகிருதியையும் அதில் கரந்துநிற்கும் உருவத்தையும் வெறும் பாழிலிருந்து படைத்தார் என்று இயம்புகின்றார். இறைக்கு இலக்கணம் வகுப்பது இயலாத காரியமன்றோ. ஆண்டவன் இப்படித்தான் இருக்கிறான் என்னும் சொற் கடந்தவன். அஃது அல்லன், இஃது அல்லன் என்னும் முறையில்தான் அவனைச் சித்திரிக்கக்கூடும். ஸ்பினோஸாவின்மீது இவர் கொண்ட கருத்து ஆட்சிபுரிந்தது என்று சிலர் செப்புவர்; இதற்கு அத்தகைய ஆதாரமில்லை என்று ரஸ்ஸல் கருதுகின்றார். அரேபியநாட்டுத் தத்துவ வித்தகர்கள் இடைக்காலத்துப் புலமைக் கொள்கையினருக்கு மிகவும் துணைபுரிந்திருக்கிறார்கள் என்னும் உண்மையை எவராலும் மறுக்க முடியாது.

# 15. பன்னிரண்டாம் நூற்றுண்டில்

சக்கரவர்த்தியின் ஆட்சிக்கும் போப்பாண்டவர் ஆட்சிக்கும் போராட்டம் நிகழ்ந்தது. இறுதியில் போப்பாண்டவர் வெற்றி பெற்ருர். இத்தாலியா நாட்டின் வடக்கிலே மாபெரு நகரங்கள் எழுந்தன. வாணிபத்தால் அவற்றின் செல்வம் மேன்மேலும் ஓங்கித் திகழ்ந்தது. கணக்கிறந்த நாவாய்த் துணை கொண்டு நிற்கும் வெனிஸ், ஜினேவா, பிசா முதலிய நகரங்களின் வாணிபமும் செழிப்புற்றது. சிலுவைப் போர்களால் பல யூதர்கள் மாண்டார்கள். சமய ஆர்வக் கிளர்ச்சியால் போப்பாண்டவர்களின் ஆதிக்கியம் விரிந்து விட்டது. யூதர்கள் நடத்திய வியாபாரத் தொழில் மெல்லமெல்லக் கிறித்துவர்கள் கையில் சிக்கிவிட்டது. குணதிசை இலக்கியச் செல்வ வெள்ளம் மேற்றிசையில் பாயத் தொடங்கிற்று. கீழ்த்திசை நாடுகளில் இலங்கிநின்ற பன்மொழிகளில் கோயில்கொண்டுள்ள நயங்களும் சிறப்புகளும் மேற்றிசைச் சான்ருேர்களின் அறிவையும் பண்பாட்டையும் வளமுறச் செய்தன.

வெளிநாடுகளில் கிறித்துவர்கள் குடியேறிஞர்கள் (colonisation). குடியேறுவதற்கு இந்தச் சிலுவைப் போர்கள் உதவி செய்தன என்று உரைக்கலாம். கப்பற் பயணத்தைத் தக்க முறையில் அமைப்பதற்குற்ற வசதிகளைப் பற்றி மாலுமிகள் ஆழ்ந்த சிந்தனைகளில் இறங்கிஞர்கள். ஃபிரெஞ்சு நாட்டுக் கப்பற் படைக்கு மூலம் சிலுவைப் போர்கள் எழுப்பிய உணர்ச்சியின் ஆர்வம் என்றுகூட இயம்பலாம். காற்றுவழியே போகாமல், காற்றையும் எதிர்த்துச் செல்லும் உபாயங்களைக் கலவர்கள் நாடிஞர்கள். கிரேக்கக் கட்டடக்கலையோடு தொடர்பு ஏற்பட்டதற்குக் காரணம் சிலுவைப் போர்களேயாகும். சிற்பங்களும் ஓவியங்களும் பற்பல சான்ருேர்களின் உருவங்களைக் காலவெள்ளத்திலே அடித்துக்கொண்டுபோகாமல் காப்பாற்றின. எல்லாத் துறைகளிலும் இவை ஒரு மாபெருங் கிளர்ச்சியை எழுப்பின என்பதில் ஐயமில்லை.

இந்த நூற்ருண்டின் புலமைக் கொள்கையைப்பற்றி (Scholasticism நாம் ஆராய்வோம். இந்த நூற்ருண்டில் அறிவுத்துறையில் ஒரு புதிய நம்பிக்கை ஏற்பட்டுவிட்டது. அரிஸ்டாட்டிலின்பால் ஒரு மரியாதை எழுந்திருந்தாலும், தடையற்ற அறிவின் ஆட்சிக்கு இடந்தரவேண்டும் என்னும் நிலை வந்தது என்று ரஸ்ஸல் மொழிகின்ருர். புலமைக் கொள்கையின் குறைபாடு

களையும் ரஸ்ஸல் குறிக்கின்றுர். உண்மையான நிகழ்ச்சிகளையும் விஞ்ஞானம் அளிக்கின்ற அறிவையும் புறக்கணித்து, வெறும் வரட்டுத் தருக்க அறிவு கொண்டு சொற்சிலம்பம் பழகத் தொடங்கிவிட்டார்கள். நேரில் பார்த்துத் தொட்டுத் தெரிந்துகொள்ளவேண்டிய விஷயங்களில்கூடத் தருக்க அறிவு பயன்படும் என்று கருதுவது பெரும் பிழை என்று ரஸ்ஸல் சாற்றுகின்றுர். புலமைக் கொள்கையில் முதன்முதலாகக் கருதக்கூடியவரான ராஸெலின் என்பவரைப்பற்றி முன்பே ஆராய்ந்துள்ளோம்.

பொதுமைதான் உண்மை (Realism); தனிப்பொருள் தற்செயலான தோற்றமே என்று வாதிப்போருள் சாம்போவைச் சார்ந்த வில்லியம் (William of Champeaux) குறிப்பிடத்தகுந்தவர். பொதுமை உண்மைக் கொள்கையை இவர் போற்றினுர். எல்லாத் தனிப்பொருள்களிலும் பொதுமையின் இயல்பு (universal essence) இலங்குகின்றது என்று இவர் இயம்புகின்றுர். எல்லாவற்றிலும் இந்தப் பொதுமையின் இயல்பு விளங்குமாயின், சாக்ரடீஸ் என்னும் சான்றேனிடமும், பிளேட்டோ என்னும் பெரியோனிடமும் அது விளங்குமன்றே ? சாக்ரடீஸ் இருக்கிற இடத்தில் பிளேட்டோவும், பிளேட்டோ இருக்கிற இடத்தில் சாக்ரடீஸும் இருக்கத்தானே செய்வார்கள். ஆனுல், இவர்கள் வெவ்வேறு இடங்களில் அல்லவா இருக்கின்றுர்கள் என்று அபிலார்டு (Abelard) இவரை எள்ளி நகையாடுகின்றுர். இந்தக் கொள்கையை விட்டுவிட்டுத் தனிப்பட்ட இயல்புக் கொள்கையை ஏற்கத் தொடங்கினுர். ஒவ்வொரு பொருளின் தனி உருவை ஆக்கக்கூடிய தனி இயல்பு அதனிடம் இருக்கின்றது. அது மற்றென்றிடமிருந்து இதைப் பிரிக்கின்றது. ஆனுல், இதனிடத்தில் இலங்குவதுபோல, இதைப்போல இருக்கும் பொருள்களிலும் பொதுத் தன்மை மாறுபாடின்றித் திகழ்கின்றது (indifference theory). தனிப்பட்ட பல வியக்திகளில் இந்த இயல்புகள் காட்சி அளித்தாலும், ஒவ்வொன்றிலும் அந்த இயல்பு ஒரே தன்மையாய் (theory of similitude) இலங்குகிறது என்று உரைக்கின்றுர். இயல்புகளின் ஒரே தன்மையைப்பற்றியும் இவர் மொழியத் தொடங்கிவிட்டார்.

## சார்ட்ரஸ் கழகம்
## (The School of Chartres)

சார்ட்ரஸ் கழகம் ஃபுல்பெர்ட் (Fulbert) என்னும் சான்றேரால் நிறுவப்பட்டது. சாம்போவைச் சார்ந்த வில்லியம் பொதுமைக் கொள்கையின் ஓர் அமிசத்தைத்தான் ஆராய்ச்சி செய்தார். பிளேட்டோ கண்ட கருத்துண்மைத் தத்துவத்திற்கு இந்தக் கழகம் அரண் செய்துவந்ததை நாம் அறிவோம். இந்தக் கழகத்தைச் சார்ந்தவர்கள் அணி இலக்கணம் (Rhetoric), லத்தீன் மொழிகளிலுள்ள சிறந்த நூல்கள் (The Latin Classics), தத்துவ நூல் (Philosophy) இவற்றைக் கற்றே தீரவேண்டும். மேலும், வான சாத்திரம் கணித இயல், உடல் சம்பந்தமான நூல், மருத்துவ நூல் முதலியவற்றையும் இவர்கள் ஆராய்வதற்குரிய திட்டங்களை வகுத்துள்ளார்கள். இந்தக் கழகத்தில்

சிறந்தோங்கியவர் பெர்னர்டு என்பவர். இவர் டூர்ஸைச் (Tours) சார்ந்த பெர்னர்டு அல்லர்; மொயிலன் (Moelan) என்னும் இடத்தைச் சார்ந்த பெர்னர்டுமல்லர் என்னும் பொருளை மனத்தே இருத்திக்கொள்ளவேண்டும். இவர் 1119ஆம் ஆண்டு சார்ட்ரஸ் மடத்திற்குத் தலைமை அதிகாரியானர் (Chancellor). 1130ஆம் ஆண்டிற்கு முன்பே இவர் இறந்துவிட்டார். இவர் பாடம் கற்பிக்கும் துறையில் இறங்கியிருந்தபொழுது, கில்பர்ட் டி லா பொர்ரீ (Gilbert de la Porree) என்பவர் இவரிடம் பாடங்கேட்டார். கான்சஸ் என்னும் இடத்தைச் சார்ந்த வில்லியம் (William of Conches) என்பவரும், பிஷப்பான ரிச்சேர்டு (Richard the Bishop) என்பவரும் இவர் ஆற்றிய சொற்பொழிவுகளை மாந்தினர்கள். சாலிஸ்பரியைச் சார்ந்த ஜான் (John of Salisbury) இவர் இயற்றிய நூல்களில் சிலவற்றைக் காலவெள்ளம் அடித்துக்கொண்டு போகாவண்ணம் காப்பாற்றினதாகத் தெரியவருகின்றது. இந்தக் குழுவில் பெர்னர்டு அடிப்படைத் தத்துவ வித்தகர் (Metaphysician) என்று மொழியலாம். உயர்வற உயர்ந்த அழியாக் கடவுள் ஒருவர் இருக்கிறார். படைப்புச் சக்தியினல் வெறும் பாழிலிருந்து பிரகிருதி எழுகின்றது. இவ்வுலகில் காண்கின்ற நகல்களாம் (copies) பொருள்களுக்கு அசல்களாம் (prototypes) கருத்துகள் எஞ்ஞான்றும் இலங்குகின்றன. மாருத கருத்துகளாம் அசல்களைக்கொண்டு பல்வேறு உருவங்களாம் நகல்களை ஆண்டவன் படைக்கின்ருன். கருத்துகள்தாம் உண்மை; அவற்றின் நகல்கள் நிழல்களே தவிரப் பிறிதில்லை. பிளேட்டோவையும் அரிஸ்டாட்டிலையும் சமரசப்படுத்த முயல்கின்ருர் என்று ஜான் (John of Salisbury) கூறுவது அத்துணைப் பொருத்தமன்று; ஏனெனில், அரிஸ்டாட்டிலின் கொள்கைக்கேற்ப, பிரகிருதி யாராலும் படைக்கப்படவில்லை. அஃது அநாதியாயிருக்கிறது. இந்த அழியாத என்றுமுள்ள பிரகிருதிதான் இப் பிரபஞ்சத்திற்கு மூலகாரணம் என்று அவர் மொழிகின்ருரன்றோ ? மூலப்பிரகிருதித் தத்துவத்தின் (Hylomorphic theory) இயல்பை வைணவர்களும் ஒப்புக்கொள்ளுகின்ருர்கள்.

இந்தக் கழகத்தைச் சார்ந்த தியோடரிக் (Theodoric) என்பவரைப் பற்றிச் சற்று ஆராய்வோம். பாரிஸ் நகரத்தில் இவர் பாடம் கற்பித்தார். சாலிஸ்பரியைச் சார்ந்த ஜான் (John) இவருடைய மாணுக்கர்களில் ஒருவராவர். தியோடரிக், பிளேட்டோவின் அடிச்சுவட்டைப் பின்பற்றியவர்; மக்கண்மைக் கொள்கையர் (Humanist). இவர் ஒரு விஞ்ஞானியாயும் விளங்கினர். 'எல்லாவற்றிற்கும் ஓர் ஒருமை கொடுக்கிறவர் கடவுளே. பலவிதத் தோற்றங்கள் என்று கூறுமிடத்து, ஒரு பரம்பொருளைத் தாமே அவை சுட்டாமற் போகா. அந்த அகண்ட பரம்பொருளைத்தான் எல்லாம் சார்ந்து நிற்கின்றன. மற்றவை இல்லை என்பது அதன் பொருளன்று' என்று உல்ஃப் (Wulf) இயம்புகின்ருர். ஆண்டவன் இயல்பை அவை பெற்றிருந்தாலும், அவை தனித்த பொருள்களே. ஜீவான்மாவுக்குக் கடவுளுடைய முழு அறிவும் ஆனந்தமும் இருந்தாலும், அது பரமான்மாவாகிவிடாது என்பதும் வைணவர்களுடைய கொள்கைதானே ?

கான்செஸ் என்னும் இடத்தைச் சார்ந்த வில்லியம் (William of Conches, 1080—1154) என்பவர் கண்ட தத்துவமும் நாம் சிந்திப்பதற் குரியது. இவருடைய மக்கண்மைக் கொள்கை, கல்வித் துறையில் பாடத் திட்டங்களைக் குறைக்கவேண்டும் என்று கூறிய கார்னிஃபீசியர்களை (Cornificians) எதிர்த்துப் புரிந்த இவருடைய பெரும் போர், இவர் தேர்ந்த தத்துவக் கொள்கைகள் இவை யாவும் நம் உள்ளத்தைக் கவர்கின்றன. இப் பிரபஞ்சம் ஓர் உடல்; இதை இயங்கும்படி செய்கின்ற ஓர் ஆன்மா கரந்து நிற்கின்றது என்று பிளேட்டோ கூறினதைத் துணைகொண்டு, இந்தப் பிரபஞ்சத்தை ஆட்டிவைக்கிறது தூய ஆவிதான் (Holy Spirit) என்று மொழிந்தார். பிளேட்டோ தேர்ந்த தத்துவமும், விவிலிய நூலில் கண்ட இந்தத் தூய ஆவி தத்துவமும் ஒன்றே என்று இவர் இயம்பும்பொழுது, இவருக்குப் பெரும் எதிர்ப்பு இருந்தது. பிறகு அந்தக் கருத்தை விட்டுவிட்டார். பிரபஞ்ச இயலைப்பற்றி இவர் உரைக்கும்பொழுது, டெமாகிரிட்டஸ் (Democritus) நிறுவிய அணுவாதத்தைப் (Atomic Theory) போற்றினதாகத் தெரி கின்றது. ஆனால், இக் குழுவினர்களுள் பெரும்பாலோர் பிளேட்டோவைப் பின்பற்றினர் என்பதில் யாதோர் ஐயமுமில்லை. மூலமாதிரிக் கொள்கையைப் பற்றிப் பல இடங்களில் மொழிகின்றார்கள்.

பொதுமை அல்லது கருத்துண்மை வாதத்தை (Realism) எதிர்த்துப் பேசத் தொடங்கினவர்களின் நோக்கம் நம் ஆராய்ச்சிக்குரியதே. பாத்தைச் சார்ந்த அடிலார்டு (Adelord of Bath) பாரிஸ் நகரத்தில் ஒரு பேராசிரியராய் விளங்கியவர். கிரேக்க நாடு, ஸ்பெயின் நாடு இவற்றிற்குச் சென்று தம்முடைய விஞ்ஞானக் கல்வியை முடித்துக்கொண்டார். 1105—06 இந்த ஆண்டில் தம் ' உரையாடல் ' என்னும் நூலை வெளியிடுகின்றார். என்றும் மாறாத தத்துவத்திற்கும், மாறுகின்ற இயல்பைச் சித்திரிக்கும் தத்துவத்திற்கும் எழுந்த ஓர் உரையாடல்மூலமாகத் தம் கருத்துகளுக்கு விளக்கம் தருகின்றார். நோக் கியல் கொள்கைப்படி (the theory of respectus), நாம் பார்க்கும் கோணங் களிலிருந்து ஒன்றை வரையறுக்கின்றோமே தவிர, உண்மையில் அப்படி ஒன்றில்லை. கட்புலனுக்குத் தோன்றும் ஒன்றைப் பேரினமாகவும் (genus) கொள்ளலாம்; அதையே அதில் அடங்கிய கீழினமாகவும் (species) கருத லாம்; அல்லது தனிப்பட்ட வியக்தியாகவும்—மனிதனாகவும் எண்ணலாம். பேரினம், கீழினம் என்பவை தனிப்பட்ட மனிதனை வரையறுக்கத் துணை செய்யும் துறைகளே தவிரப் பிறிதல்ல. இவர் கண்ட உளநூல், பிளேட்டோ தேர்ந்த கருத்தையும், ஞானி அகஸ்டைன் கொண்ட கருத்தையும் அடிப்படை யாகக் கொண்டது. புலன்களால் அறிவு பிறக்கவில்லை; அறிவென்பது இயற்கையாகவே மனிதனிடத்தில் கோயில்கொண்டிருக்கிறது.

பிரகிருதியின் தொடர்பற்ற ஆன்மா கடவுளால் படைக்கப்பட்டது; அஃது உடலினின்று தனித்து நிற்கிற ஒரு தத்துவம். உடல் ஆன்மாவன்று என் பதைத்தான் இவர் வற்புறுத்துகின்றார். இவர் அணுவாதத்தை ஏற்றாலும்,

பிரபஞ்சம் ஓர் உடல்போல் ஓர் உருவையும் இசைவையும் பெற்றுத் திகழ் கின்றது என்று தம் பிரபஞ்ச இயலில் உரைக்கின்றார்.

மார்டக்னியைச் சார்ந்த வால்டர் (Walter of Mortagne) என்பவர் நிலைக்கொள்கையை (the theory of the status) ஆதரிக்கிறார். சான்றாக, பிளேட்டோவை ஒரு தனித்த மனிதனாகவும் (individual), மனிதன் என்ற இனத்தனாகவும் (species) அல்லது விலங்கு (animal) என்னும் பேரினத்த னாகவும் கொள்ளலாம்.

இத்தகைய தத்துவ வித்தகர் நிறுவிய கொள்கைகள் பீட்டர் அபிலார்டு (Peter Abelard) எழுப்பிய தத்துவக் கோயிலுக்கும் படிகளாய் அமைந் துள்ளன என்று கூறலாம். இவர் முரண்நிலை ஆய்வைத் (Dialectics) திறம் படக் கையாண்டதோடு நில்லாமல், தம்முடைய காலத்து அறிவுத்துறையில் மிகச் சிறந்தோங்கிய புலமை வாய்ந்தவர் என்று பல்லோரால் புகழப்பட்டவர் என்று இவருடைய வரலாறு இயம்புகின்றது. கிறித்துவ சமயத்திற்குற்ற பரிபாஷையிலிருந்து சில அமிசங்களில் இவர் வேறுபட்டாலும், அம் மதத்தில் மிகப் பற்றுள்ள அடியார்களுள் ஒருவர் என்பதில் யாதோர் ஐயமுமில்லை. ஆனால், எதையும் நம்பிப் போற்றும் இயல்பு இவரிடத்தில் இல்லை என்று கொள்ளலாம். தான் ஆய்ந்து கண்டதை அச்சமின்றிச் சாற்றவேண்டுமென்ற அவாவுடையவர். மனச்சான்றின் குரலுக்குச் செவி கொடுத்து மூடநம்பிக்கையினரை எதிர்த்துப் போராடவேண்டுமென்று கூறும் இடைக்காலத்துப் பெரியோர்களுக்கு இவர் ஒரு விடிவெள்ளியாய் விளங்குகின்றார். ஒன்றை ஐயுறுவதால் நாம் அதைப் பற்றித் துருவி ஆராய்கின்றோம். அப்படித் துருவி ஆராய்வதால் நாம் உண்மையை உணர்கின்றோம் என்று மொழியும் கருத்து போற்றுதற்குரியது. இந்த முறையைத்தான் இவர் மேற்கொள்ளுகின்றார். அறிவு வகுத்த பாதை யும், ஆப்தவாக்கியம் அல்லது சான்று வலிமை (authority) அமைத்த பாதையும் ஒன்றுகூடிவிடலாம் என்னும் கொள்கையை இவர் மறுக்கவில்லை. ஆனால், தனிப்பட்ட மனிதனின் மனச்சான்றுக்கு உட்பட்டு நடப்பதே மாந்தர்க்கு அழகாகும் என்னும் இயல்புடையவர் என்று நாம் நன்கு உணர்கின்றோம். சான்று வலிமையைக் கொண்டே இவர் எதையும் தொடங்கமாட்டார்; தன்னம்பிக்கையே இவருடைய சிறந்த பண்பாடாகும். இவருடைய இத்தகைய இயல்பு இவருடைய நூல்களில் மிளிர்வதைக் காட்டிலும் இவருடைய வாழ்க் கையில் விளங்குகின்றது. (ஃபிரெஞ்சு நாட்டு இலக்கிய உலகத்தில் இடைக் காலத்தில் மாபெரும் இடங்களைப் பெற்றவர்கள் ஃபிரெஞ்சுக்காரர்களல்லர்.) பிரிட்டனியிலுள்ள (Brittany) பலேயில் (Palais) பிறந்தவர். தம் உடன்பிறந் தோர்களுள் இவர் மூத்தவரேயாயினும், தம் சொத்துரிமையைத் தமக்கு வேண்டா என்று நீத்த ஒரு சான்றோன். கல்வித் துறையிலும் அறிவுத் துறையிலும் தாம் சிறந்து ஓங்கவேண்டும் என்னும் அவா இவரை இடையறாது உந்திற்று. பொதுமை என்பது பேரளவில்தான் உண்மையே தவிரப் பிறிதன்று என்று கூறும் பெயருண்மைக் கொள்கையை (Nominalism) நிலைநாட்டும்

ராஸெலின் (Rosalin) என்னும் பேராசிரியரிடம் பாடங் கேட்டார். இவரையே இவர் எதிர்த்துப் பேசி அவரைவிட்டு அகன்றுவிட்டார். சாம்போவைச் சார்ந்த வில்லியம் (William of Champeaux) என்பவரை நாடினுர். இவர் பொதுமை தான் உண்மை யென்று கூறும் தத்துவ வித்தகர் (Realist). இவருடைய கொள்கையும் இவருடைய மனத்திற்கு உகந்ததன்று. அவ்வரையும் தாக்கிப் பேசத் தொடங்கிவிட்டார்.

இவருடைய சொல்வன்மை பலருடைய உள்ளங்களைக் கவர்ந்துவிட்டது. பண்டையோர்களுடைய முறையைக் கையாளாது ஒரு புதிய முறையைப் பின்பற்றி எதற்கும் ஒரு தெளிவான விளக்கம் தந்தார். இவருடைய கருத்தின் புதுமையும் அறிவுத்துறையில் ஒரு புரட்சியை எழுப்பிவிட்டது. தனித்த வியக்திதான் உண்மை; பொதுமை வெறும் பெயரென்று கூறும் பெயருண்மை வாதத்திலும் (Nominalism) குறைபாடு இருக்கின்றது. பொதுமைதான் உண்மை. தனித்த பொருள் உண்மையன்று என்று கூறும் பொதுமைவாதிகள் சாற்றுவதிலும் முழு உண்மையில்லை. தனித்த பொருளி லிருந்துதான் நாம் நம் சிந்தனையின் ஆற்றலைக் கொண்டு பொதுமைக்குப் போகின்ருேம். பொதுமைகள் (universals) அல்லது கருத்துப் பொருள்கள் (abstractions) அனைத்தும் நம் அறிவு தந்த வளமே. கட்புலனுக்குக் காட்சி அளிக்கின்ற இந்தப் பிரபஞ்சத்திற்கு முன்பே பொதுமைகள் அல்லது கருத்துப் பொருள்கள் உள்ளன என்று பிளேட்டோ கூறுகின்ற முறைக்கு இவர் விளக்கந் தருகின்ருர். அவை கடவுளின் படைப்புக் கருத்துலகத்தில் உலாவுகின்றன. அவ்வண்ணமே நம் மனத்தினுள் அவை திரியலாமல்லவா ? அபிலார்டு அளித்த பொருட் கருத்துண்மை வாதம் (Conceptualism) ஒரு புதிய கிளர்ச்சியை இடைக்காலத்துத் தத்துவ உலகத்தில் எழுப்பியதில் வியப்பில்லை. அரிஸ்டாட்டில் கண்ட தருக்க நூலில் ஆழ்ந்து, ஒரு பெரு முரண் நிலை ஆய்வினராய்த் திகழத் தொடங்கிவிட்டார். இவர் அளவுகடந்த மன ஆற்றல் படைத்தவர். பிறர் உளங்கள்மீது ஆட்சிபுரிய வேண்டுமென்ற தனிப்பெரு வேட்கை இவரைத் தூண்டிற்று. எந்தத் துறையிலும் ஒரு பெருஞ் சிறப்புப் பெறவேண்டுமாயின், இறையியலில் நன்கு திளைத்திருப்பது இன்றியமையாதது. மாந்தருடைய அறிவாம் கட்டடத்திற்கு இறையியல்தான் மௌலியாக உள்ளது.

'நான் ஃபிரெஞ்சு நாட்டிற்குத் திரும்பிவந்ததன் நோக்கம் இறையியலைப் படிப் பதன் பொருட்டே' என்று அவர் கூறுகின்ருர். தம்மிடத்தில் அவர் அளவு கடந்த நம்பிக்கை வைத்த காரணத்தால், தமக்கு ஒவ்வொரு நிகழ்ச்சியும் வருகிற தம்முடைய முன்கூட்டி அமைந்த திட்டத்தின் விளைவு என்கின்ருர்.

தம்பால் பாடங்கேட்க வந்த ஹெலிசாவை இரகசியமாய் மணம் புரிந்து கொண்டார். ஒரு பாதிரி மணம் புரியலாமா ? புரியக்கூடாதா ? என்னும் வாதப்புயல் எழுந்தது. ஹெலிசா, நாட்டர்டேம் என்னும் மடத்துப் பாதிரி யான ஃபுல்பர்ட் (Fulbert) என்பவருடைய உடன்பிறந்தவரின் மகளாவாள்.

அபிலார்டைப்பற்றி வசைமொழி எழுந்துவிட்டது. பால் உணர்ச்சிக்குரிய ஒன்றை நீக்கிவிட்டார்கள். இவர் ஞானி டென்னிஸ் என்னும் மடத்தில் தஞ்சம் புகுந்தார். அர்ஜன்டியுவில் (Argenteuil) கன்னிமாடத்தில் ஹெலிசா உறையலானாள். இவர்களுக்கு இடையே எழுந்த கடிதங்கள் இலக்கியத்திற்கு ஒரு சிறந்த பொருளாகிவிட்டன. போப் என்னும் ஆங்கிலக் கவிஞர் 'ஹெலிசா அபிலார்டுக்கு' (Elisa to Abelard) என்னும் கவிதையைப் புனைந்தார்.

ஜார்ஜ் மூர் (George Moore) என்பவரும் 'ஹெலிசாவும் அபிலார்டும்' என்னும் நூலை உலகத்திற்கு நல்கினார். 1163ஆம் ஆண்டு ஹெலிசா மாண்டதும், இவளை அபிலார்டுக்கு அமைக்கப்பட்ட கல்லறையிலேயே புதைத்துவிட்டார்கள். இக் கடிதங்கள் யாவும் அபிலார்டினால்தான் புனையப்பட்டன என்று ஜெர்மன் நாட்டு ஆசிரியர் ஒருவரால் கூறப்படுகிறது என்று ரஸ்ஸல் மொழிகின்றார். இந்த உண்மையைப்பற்றித் தமக்கு ஆராயும் ஆற்றல் இல்லை என்று ரஸ்ஸல் உரைப்பது சிந்திப்பதற்குரியது. ஹெலிசாவால் வரையப்பட்ட கடிதங்கள் வாயிலாக அபிலார்டின்மீது அவள் வைத்த ஆர்வம் நன்கு புலனாகின்றது என்று ரஸ்ஸல் சாற்றுகின்றார்.

'தெய்வ ஐக்கியமும் முக்கொள்கையும்' (On the Divine Unitiy and Trinity) என்னும் நூலில் ஒரே கடவுள்தான் உளது; பல தெய்வங்கள் இல்லை. மூன்று தெய்வங்களாகக் கருதப்படுவதில் உண்மை இருக்க இயலாது. ஒரு தெய்வத்தின் குணங்களைத்தாம் இப்படி உருவகப்படுத்தியிருக்கிறார்கள். ஆற்றல், ஞானம், அன்பு — இம் மூன்றுந்தாம் இப்படி மூன்று தெய்வங்களாகக் காட்சி அளிக்கின்றன. (படைத்தல், காத்தல், அழித்தல் — இம் மூன்று தொழில்களைப் புரியும் கடவுள் ஒன்றே. படைக்கின்றபோது பிரமன் என்றும், காக்கின்றபோது திருமால் என்றும், அழிக்கின்றபோது சிவன் என்றும் நாம் அழைக்கின்றோம்.) இவரைப்பற்றி பர்னார்டு கூறுமிடத்து, முத்தத்துவத்தை மறுக்கின்ற காரணத்தால் இவர் ஓர் ஏரியன் (Arian) என்பதாகவும், மூலப்பாவம் இல்லை யென்றும், நல்ல நடத்தையாய் ஒருவன் உய்ய முடியுமென்றும், ஆண்டவன் அருள் தேவையில்லை என்றும் இவர் இயம்பிய காரணத்தால் இவர் பெலெஜியஸ் (Pelagius) கொண்ட கொள்கையைச் சார்ந்தவர் என்பதாகவும் மொழிந்தார். மேலும், மனித நிலையும் தெய்வ நிலையும் இயேசுநாதரிடம் இருந்தன. மனித நிலையையுடைய இயேசுநாதருக்குத்தான் கன்னி மேரி தாயென்றும், தெய்வ நிலையுடைய ஒன்றிற்கு இவள் தாயாய் இருக்க இயலாது என்றும் சாற்றின கொள்கையை அபிலார்டு ஆமோதித்ததாகக் கருதி, இவரை நெஸ்டோரியஸ் (Nestorius) கொள்கையைப் பின்பற்றும் இனத்தவரென்றும் அவர் இயம்பிவிட்டார்.

அபிலார்டு நாதவடிவாயுள்ள ஒன்றிலிருந்துதான் (Logos) தருக்கம் (Logic) பிறந்தது என்று பகரவும் தொடங்கினார். சொற்போர் புரிவதில்

இவர் நினைத்தார். வெறும் சொற்கள் உண்மையை நாட்ட இயலுமோ? இவர் புலன்வழிக் கொள்கையைச் சார்ந்தவரல்லர்.

வெறும் வரட்டு வாதம் புரிவதைக் காட்டிலும் அனுபூதி நெறியைப் (mystic way) பின்பற்றுவது சாலச் சிறந்ததாகும் என்று பர்னார்டு உரைக்கின்றார். இவருடைய தந்தை முதல் சிலுவைப் போரில் உயிர்துறந்த ஒரு மெய்வீரர். வெறும் அறிவைக்கொண்டுமட்டும் உண்மையை அடைய முடியாது; அனுபூதிநெறிமூலம்ாகவும் இடையறாத தியானத்தாலுந்தாம் இறைவனை அடையமுடியும் என்ற கொள்கையை உடையவர். போப்பாண்டவர்கள் உலக இயலில் ஈடுபடக்கூடாது என்று தம் கொள்கையைப் பரப்பினார். இவரைப்பற்றி 'இடைக்காலத்து அனுபூதிச் செல்வர்கள்' என்னும் தலைப் பின்கீழ்ப் பிறகு விரிவாக விளக்குவோம்.

கில்பர்ட் டி லா பொர்ரீ (Gilbere de la Porree) 1076ஆம் ஆண்டு பாய்ட்டியர்ஸ் என்னும் இடத்தில் பிறந்தார். பர்னார்டின் நண்பரானார். 1141ஆம் ஆண்டு பாரிஸ் மாநகரத்தில் ஓர் ஆசிரியராய்த் திகழ்ந்தார். இவர் ஆற்றிய சொற்பொழிவுகளின் இன்சுவையைப் பருகிய சாலிஸ்பரியைச் சார்ந்த ஜான், இவர் அடைந்த பெரும் புகழைப்பற்றிக் குறிக்கின்றார். 1142ஆம் ஆண்டு இவர் பாய்ட்டியர்ஸ் என்னும் இடத்திற்கு பிஷப்பானார்; 1154ஆம் ஆண்டு இவர் மாண்டார். அதுவரையில் இவர் அந்த மடாதிபதியாகவே மிளிர்ந்துவந்தார்.

போத்தியூஸ் கண்ட உண்மை இவர்மீது ஆட்சி புரிந்தது. அவர் பின்பற்றிய பகுமுறையும் (deductive method) இவரால் கையாளப்பட்டது. பொருள் (substance), அளவு (quantity), பண்பு (quality), தொடர்பு (relation) இந்தச் சொற்பொருள் வகைகளை (categories) அரிஸ்டாட்டில் குறிக்கின்றார். இவற்றோடு கில்பர்ட்டின் வந்தேறிய பண்புகள் (accidents) என்னும் பகுதியையும் இவர் இணைக்கின்றார். வந்தேறிய பண்புகளுக்கு ஒரு தொடர்பு காட்டுவது எளிதன்று. வரம்பு கடந்த பொதுமை உண்மை வாதம் அல்லது கருத்துண்மை வாதத்தை (Realism) எதிர்த்தே பேசுகின்றார். அழியாத பொதுமை (Essence) தனிப்பட்ட வியக்திகளில் விளங்குகின்றது. இந்த அழியா ஒத்த பொதுமையை மற்றைய வியக்திகளிலும் உணர்கின்றோம். ஒத்த அழிவிலாச் சிறந்த இயல்புகளைக் கொண்டு பொதுமைகளை அறிகின்றோம். பேரினமும் (genus) அதன்கண் அடங்கிய சிற்றினமும் (species) பிறக்கின்றன. கருத்துண்மை வாதத்திற்கும் தனிப் பொருள் உண்மை வாதத்திற்கும் உள்ள முரண்பாட்டை அகற்ற இவர் முயல்கின்றார். இந்த முயற்சி போற்றுதற்குரியது.

தருக்கச்சொற்போர்கள் புரியும்—சொற்சிலம்பம் பழகும் புலமைக்கொள்கையினர்கள் (Verbalists) தோன்றி அவற்றில் திளைக்கத் தொடங்கிவிட்டார்கள்.

சாலிஸ்பரியைச் சார்ந்த ஜான் இவர்களைத் தம் கொடுவசை அம்புகளுக்கு இலக்காக்கிவிட்டார்.

ஞானி விக்டர் மடத்துப் பள்ளியைச் சார்ந்த ஹியூகோ (Hugo of St. Victor) பற்றிச் சிறிது ஆராய்வோம். 1096ஆம் ஆண்டு ஸாக்சனியி லுள்ள (Saxony) ஹார்ட்டிங்ஹாம் (Hartingham) என்னும் ஊரில் பிறந்தார். தம்முடைய 19ஆம் ஆண்டில் இவர் பாரிஸ் மாநகரத்திற்குப் போனார். அங்கே கல்வி பயின்றார். ஞானி விக்டர் மடத்தைச் சேர்ந்த கல்வித் துறையில் 1141ஆம் ஆண்டுவரையில் சிறந்த பணியாற்றினார். இவர் ஒரு தத்துவ வித்தகர் (Philosopher); ஒரு மக்கண்மைக் கொள்கையர்; இறையியலில் ஓர் ஆய்விலா நம்பிக்கை யுள்ளவர் (Dogmatic theologian); ஓர் அனுபூதிச் செல்வர். ஆனால், இறையியலைமட்டும் ஓதுவதோடு நின்றுவிடாமல் எல்லா அறிவுத்துறை களிலும் ஈடுபட வேண்டும் என்ற ஆர்வமுள்ளவர். இவற்றைத் தொகுத்துக் (synthesis) காண முயன்றார்; 13ஆம் நூற்றாண்டுத் தத்துவ உலகம் உருவா வதற்கு வேண்டிய பாதையை வகுத்துக்காட்டிய பேறு இவரைச் சார்ந்ததாகும்.

மூன்று பாதைகள் வாயிலாக ஒருவன் அறிவைப் பெறலாம் என்று இவர் இயம்புகின்றார். அதற்கு இயற்கையாய் அமைந்துள்ள ஆற்றல் வேண்டும். அந்த ஆற்றலை விரிந்த புலமையால் செழிப்புறச் செய்தல் இன்றியமையாதது. ஆழ்ந்த சிந்தனையும் ஆர்வமும் நமக்குத் துணைபுரிய வேண்டும். கடவுள் இருக்கின்றாரா இல்லையா என்பதற்குரிய சான்றுகளை இவர் ஆய்கின்றார். புலச் சார்பற்ற நுகர்ச்சிக்குமுன் எழும் (apriori) சர்ச்சைகளை (arguments) விடுத்து ஒருவன் தன்னுடைய அனுபவ வாயிலாகத்தான் இறைவன் இருப்பை ஓர்தல் வேண்டும். நம்மை உணர்ந்துவிட்டால்—நாம் யார் என்பதைத் தேர்ந்து விட்டால், எல்லாவற்றிற்கும் ஆதாரமாயுள்ள ஆண்டவனை நாம் கண்டு விடலாம் என்று இவர் உரைக்கின்றார். [நம்முடைய ஆன்மாவின் வடிவத்தை (சுயரூபத்தை) உணர்ந்தோமானால், நமக்கும் பரமான்மாவுக்கும் உள்ள தொடர்பை நாம் அறிந்துகொள்ள இயலும் என்னும் கொள்கையை வைணவர் கள் வற்புறுத்துகின்றனர்.]

புறச்சான்றைக் கொண்டும் கடவுள் இருப்பை இவர் நிலைநாட்டுகின்றார். புறவுலகத்தில் சலனங்கள் தோன்றுவதால், இச் சலனங்களுக்குக் காரண மான ஒரு படைப்புக் கடவுள் இருக்கிறார் என்பதை உய்த்து உணரலா மன்றோ! இவர் அனைத்திறைக் கொள்கையை (Pantheism) ஏற்கவில்லை. பன்மைக் கொள்கையைத்தான் (Pluralism) இவர் வலியுறுத்துகின்றார். பன்மைக் கொள்கைக்கும் பொதுமைக் கொள்கைக்கும் இடையே எழுந்த சொற்போருக்குச் சமாதானம் கண்ட அபிலார்டை இவர் பின்பற்றுகின்றார்.

ஓரளவுக்கு அணுக்கொள்கையும் இவருடைய நூலில் இடம்பெறு கின்றது. ஆனால், அணுக்கள் அப்படியே நின்றுவிடாமல், அவற்றிற்கும் வளர்ச்சி உண்டென்றும், அவை பெருகி வளர்கின்றனவென்றும் இவர் மொழிவது சிந்திப்பதற்குரியது.

உள நூலில் இவருக்கு ஆர்வமுண்டு. ஓர் அனுபூதிச் செல்வருக்கு இந்தத் துறையில் ஈடுபாடு இருக்கத்தானே செய்யும்? அறிவுக்கு மூன்று நோக்கங்கள் உண்டு. புலனறிவால் உலக இயல்பை நாம் உணர முடிகின்றது. நம்மை நாம் அறிந்துகொள்ளவும் இயலும். இடையறாத தியானத்தால் நாம் ஆண்டவனை அடைகின்றோம். அகநோக்கு (introspection) நமக்கு ஆண்டவன் அருட்கோயிலின் கபாடங்களைத் திறந்துவைக்கின்றது.

ஆண்டவனோடு இடையறாது உறையவேண்டுமென்பதே இவருடைய பசியும் வேட்கையுமாகும். ஞானி அகஸ்டைனையும், அவர் கண்ட பிளேட்டோ கொள்கையையும் தம்முடைய தனிப்பட்ட ஆராய்ச்சி வன்மையாலே ஓர்ந்து விட்டார்.

விவிலிய நூலுக்கு உருவக முறையில் (symbolic way) இவர் விளக்கம் தருகின்றார். இறைவனைப்பற்றிக் கூறும் உயர்ந்த நூல்களுக்கும் பொருளாவது, தீச்செயல் புரிந்த ஆன்மா எப்படி இறைவனை மீண்டும் அடைகின்றது என்பதேயாகும்.

உலகம் படைக்கப்படுகின்றது; தீச்செயல்களால் ஆன்மாக்கள் துயரக் கடலில் தத்தளிக்கின்றன. அவற்றைப் பாவங்களே உருவான சாத்தானிடமிருந்து வீடுவிக்க இயேசுநாதர் அவதாரஞ் செய்தார். கடவுளுக்காக ஆன்மா படைக்கப்பட்டது; உடலை ஆன்மாவுக்காக அவர் அமைத்தார்; உலகம் உடலுக்காகத் தோன்றியிருக்கிறது. கடவுளுக்கு ஆன்மா கீழ்ப்படிந்து நடக்க வேண்டும். உடல் ஆன்மாவின் ஆட்சிக்கீழ் அமர்ந்திருக்கிறது. உலகம் உடலின் நன்மைக்காக இலங்குகின்றது. மனிதனுக்காக அமைக்கப்பட்ட உலகத்தின் படைப்புக் கடவுளை முதன்முதலாக விவிலிய நூல் சித்திரிக்கிறது; எப்படி மனிதன் படைக்கப்பட்டான், அவன் எப்படி அறநெறியில் நிற்குமாறு ஏவப்பட்டான், பிறகு அவன் எப்படி நெறி பிறழ்ந்தான், இறுதியில் அவன் ஆண்டவன் அருளால் எப்படி உய்ந்தான் என்பவையே விவிலிய நூலின் நோக்கங்களாகும். ஒளி ஆண்டவனுக்கு அடிபணியும் தெய்வங்களைக் குறிக்கும்; இருட்டோ அவன் அருளுக்கு மாறாக நடக்கும் பேய்களைச் சுட்டும். இராமாயணத்தில் சித்திரிக்கப்பட்டிருக்கும் பொருள் ஒளிக்கும் இருட்டிற்கும் நிகழ்கின்ற வெம்போரேயாகும் என்று கருத இடமுண்டு. இவ்வண்ணமே விவிலிய நூலில் காணப்படும் நிகழ்ச்சிகளை ஆய்கின்றார்.

மேலும், இவர் உரைப்பது இங்கு கருதற்குரியது. 'மற்றவர்களால் பயனற்றதாகக் கருதப்படும் படிப்பையும் நான் வெறுக்கிறதில்லை. இடக் கணிதத்திலும் நான் திளைப்பேன். கூதிர் காலத்து வானத்தையும் நான் நோக்குவேன். என்னுடைய வீணையையும் மீட்டுவேன்.'

இம் மொழிகளிலிருந்து இவர் கலைகளின் இன்பத்தைத் துய்க்கும் இயல் புள்ளவர் என்பது நன்கு புலனாகின்றது. ரிச்சேர்டும் பாரிஸ் மாநகரத்திலுள்ள ஞானி விக்டர் மடத்தைச் சார்ந்தவரே ; இளம்பிராயத்தே இவர் அம் மடத்தில் புகுந்தார். 1173ஆம் ஆண்டு இவர் உயிர்நீத்தார். இவர் ஸ்காட்லண்டில் பிறந்ததாகத் தெரிகின்றது. இவர் ஹியூகோவின் மாணவராவர் ; அவருக்குப் பிறகு அவர் ஆற்றிய பணியில் இவரும் இறங்கினார். ஹியூகோவைப் போலவே இவரும் பல துறைகளில் திளைத்த செய்தியை நாம் அறிவோம். ஞானி ஆன்ஸெல்ம் கடவுளின் இருப்பைப் புலச்சார்பற்ற கொள்கையின் வாயிலாக விளக்குகின்றார். ஆனால், இவரோ காரணகாரியங் காட்டித் தெளிவுறச் செய்கிறார்.

இவருடைய அடிப்படைத் தத்துவம் பன்மைக் கொள்கையே. கருத் துண்மைக் கொள்கையை ஓரளவுக்கு ஏற்கிறார் (Moderate realism) என்பது உண்மையே.

புலனுணர்ச்சி (sensation) ஆட்சி புரிவதற்கு உடல் தத்துவம் தேவையே. பகுத்தறிவு உடலின் முக்கிய இயல்பை அறிகின்றது ; புலனுணர்ச்சியின் உதவியை நாடாமலேயே அபிராகிருதமான, அசரீரியான சின்மயத்தைப் பகுத் தறிவு நண்ணிவிடக்கூடும். ரிச்சேர்ட் அகத்தே உறையும் ஆன்மிக ஒளியைப் பற்றிப் பேசுகின்றார். அது எத்தன்மையது என்று அவர் விளக்கவில்லை என்று உல்ஃப் (Wulf) உரைக்கின்றார். அதை யார்தான் சொற்கொண்டு சித்திரிக்க முடியும்? சின்மயத்தைப்பற்றி முரணின நியதியைக் (the law of contradiction) கொண்டும், காரணகாரியத்தைக் கொண்டும்தாம் நாம் ஒரு முடிவுக்கு வரமுடியும். மேலும், உடல் சம்பந்தமான அருவமான பொதுக் கருத்துகள் (abstract concepts) உடலில் இயற்கையாய் எழுகின்ற செயலின் விளைவேயாகும் என்று ஞானி அகஸ்டைன் நவில்கின்றார்.

ஓர் உலோகம் ஒரு பதிவைப் பெறுகிறது. அந்த உலோகத்திற்குப் பிரதி நிதியாக அந்தப் பதிவு திகழ்கின்றது. அவ்வண்ணமே புறவுலகத்தின் வடிவை ஆன்மா போர்த்து நிற்கின்றது. செயல்முறைகளைக் கொண்டும் நாம் ஆன்ம அறிவைப் பெறலாம். ஆன்ம அறிவு ஆண்டவனுடைய அழியா உண்மை இயல் பிற்கு நம்மை அழைத்துச் செல்லும் என்று இவர் உரைக்கின்றார். ஆண்டவன் அருட்பாதையை நண்ணுவதற்கு உளநூலும் பயன்படுகின்றது என்றும் சாற்றுகிறார். அனுபூதி நெறியில் இவருக்கு ஒரு பெரும் ஈடுபாடு உண்டென் பதில் யாதோர் ஐயமுமில்லை.

சாலிஸ்பெரியைச் சார்ந்த ஜான் (John of Salisbury) 1115ஆம் ஆண்டு அல்லது 1120 — இவற்றின் இடையே பிறந்ததாகத் தெரிகின்றது. 1136ஆம் ஆண்டு இவர் தம் மிக இளம்பிராயத்தே பாரிஸ் மாநகரத்திற்குச் சென்றார். அக் காலத்துப் பேராசிரியர்கள், முரணாய்வு வித்தகர்கள், இறையியல் வல்லுநர்

கள் இவர்கள் ஆற்றிய சொற்பொழிவுகளை இவர் தொடர்ந்து கேட்டதாக இவர் சுயசரிதம் மொழிகின்றது. அபிலார்ட், கான்செஸைச் சார்ந்த வில்லியம் (William of Conches) முதலியோருடைய நூல்களின் நலன்களை இவர் பருகியதாக நாம் அறிகின்றோம். ஞானி பர்னுடோவின் உதவியைப் பெற்று, கான்டர்பெரியின் ஆர்ச்பிஷப்பான தியோபால்டின் (Theobald) செயலாள ராகத் திகழ்ந்தார். 1162ஆம் ஆண்டு தாமஸ் பெக்கட்டின் செயலாளராய் மிளிர்ந்தார். வேந்தனுக்கும் பெக்கட்டிற்கும் நிகழ்ந்த சச்சரவில் பெக்கட்டிற்கு இவர் உதவி புரிந்தார். பெக்கட் நாடுகடத்தப்பட்டபொழுது, இவரும் அவரைத் தொடர்ந்து அன்னிய நாட்டிற்குச் சென்றதை வரலாறு தெரிவிக் கின்றது. கான்டர்பெரியில் பெக்கட் கொல்லப்பட்ட கோரமான காட்சியை இவர் நேரில் கண்டவர். 1176ஆம் ஆண்டு சார்டிரஸ் (Chartres) என்னும் மடத்திற்கு பிஷப்பானார். 1180ஆம் ஆண்டு இவர் மாண்டார்; அதுவரையில் அந்த மடத்திலேயே தம் வாழ்நாட்களைக் கழித்தார். அக் காலத்து அறிஞர் களுள் இவர் ஒரு மிகச்சிறந்த அறிஞர் என்பது உண்மையே. இவர் ஓர் அரசியல் வித்தகர் (Statesman); மக்கண்மைக் கொள்கையர் (Humanist); ஓர் எழுத்தாளர்; ஒரு தத்துவ வல்லுநர். நுண்கலைகளை—உளத்தை விரியச் செய்யும் கலைகளைப் போற்றினார். இவர் இலக்கணத்தை வெறுக்கவில்லை; ஆனால், சுவையற்ற இலக்கணக் குப்பையிலேயே உழல்கின்றவர்களைப் புறக் கணித்தார். லத்தீன் மொழிகளில் கோயில்கொண்டிருக்கும் சிறந்த நூல்களில் திளைத்த காரணத்தாலும், சிசிரோ படைத்த இலக்கியங்களைப் பருகின ஏதுவாலும் லத்தீன் மொழியில் இவர் ஓர் உயர்ந்த எழுத்தாளராய் அக் காலத்தில் விளங்கத் தொடங்கிவிட்டார். விவிலிய நூல்களைத் தவிர மற்றதைக் கையாலும் தொடமாட்டோம் என்று நோன்பு பூண்டவர்கள் இவருடைய வசை அம்புகளுக்கு இலக்காகிவிட்டார்கள்.

முரணாய்வு வித்தகரானபடியால், முரணாய்வின் சிறப்பிற்குப் புகழ்மாலை சூட்டி கின்றார். இலக்கணம், அணியியல், தருக்கம் — இந்த மூன்றிற்கும் (trivium) அரசியாய் விளங்குவது முரணாய்வு. அரிஸ்டாட்டிலில் கண்ட பிரிவை இவர் ஏற்கின்றார். தருக்க இயலையே போற்றி மற்றதை நீக்க ஒருவன் முற்பட்டால் அது தவறு என்று கருதுகின்றார். தத்துவ வரலாற்றுப் புலவர் எந்த முறையிலும் எதற்கும் சட்டென ஒரு முடிவை மொழிந்துவிடமாட்டார். உண்மை ஒளியை நாடுவதே இவருடைய நோக்கமாகும். எல்லாவற்றையும் சல்லித்துச் சல்லித்துப் பார்க்கும் மனப்பான்மையுடையவர். எதையும் ஐயக்கண்ணோடு பார்க்க வேண்டும் என்றும், முடிவில் உண்மை காணமுடியாது என்றும் கூறும் ஆசிரியர் கூட்டத்தைச் சார்ந்தவரல்லர். பொருள் என்றால் என்ன, கருத்துண்மைகள்—பொதுமைகள் என்றால் என்ன, தெய்வத் திருவுளம் (Providence) என்றால் என்ன — இத்தகைய வினாக்களை எழுப்பி, அவற்றிற்கு விடைகளையும் நல்கு கின்றார். பிளேட்டோ தேர்ந்த தத்துவப் பிரிவுகளை இவர் ஆமோதித்தாலும், அரிஸ்டாட்டில்தான் இவர்மீது ஆட்சிபுரிகின்றார். பொதுமைகள்தாம் இவருடைய ஆராய்ச்சிக்குச் சிறந்த பொருளாகக் காட்சி அளிக்கின்றன. கருத்துண்மைக்

கொள்கையை அப்படியே கொள்ளக்கூடாது. அதில் ஒரு மிதம் வேண்டுமென்று கூறுகின்றார். புலனறிவுகொண்டுதான் எதையும் ஆயவேண்டும். கட்புலனுக்குரிய பொருள்களை வைத்தே பேரினம், அதன்கண் அடங்கிய சிற்றினம் என்று உரைக்கலாமே தவிர, வெறும் அருவ உலகத்தில் திரிவதில் புண்ணியமில்லை என்று இவர் புகல்கின்றார். புலன்கள் அளிக்கின்ற விவரங்கள்தாம் (data—தரப்பட்ட விவரங்கள்) நமக்கு அடிப்படையாய் விளங்குகின்றன. பௌதிகம் (Physical), கணிதம் (Mathematical), அடிப்படைத் தத்துவம் (Metaphysical)—இவற்றின் மூலமாகவே அருவக் கருத்துகள் (abstractions) தோன்றும். ஆன்மீகத்துறையிலும் நுழைந்து ஆராயவேண்டும். கடவுளை அடிப்படையாக வைத்து எல்லா விவரங்களையும் ஒருமைப்படுத்துதல் சாலவும் நன்று.

தம் அறவியலில் எபிக்கூரஸ் (Epicurus) என்னும் ஆசிரியர் கண்ட உண்மையை வாய் கைப்புறப் பேசுகின்றார். தீக்குணங்களைப்பற்றி ஒரு விரிவானதும் நுணுக்கமானதுமான சித்திரத்தை நமக்கு அளிக்கின்றார். ஆண்டவன் திருவுள்ளத்தைப்பற்றியும் (Providence), ஆண்டவனுடைய வருங்கால தெய்வ அறிவைப்பற்றியும் இவர் இயம்புகின்றார். அரசியல் தத்துவக் கொள்கையைப்பற்றி (Political theory) இவர் ஒரு நூல் எழுதியுள்ளார். 11ஆம் நூற்றாண்டில் பிறந்த அரசியல் நூல்களுக்கு இது சிகரமாயுள்ளது என்று உல்ப் (Wulf) உரைக்கின்றார். ஞானி பர்னார்ட்மீது அளவு கடந்த மரியாதை காட்டுகின்றார். பிளேட்டோ, அரிஸ்டாட்டில் — இவர்களுக்கிடையே பர்னார்ட் ஒரு பாலம் அமைப்பது ஒரு படுதோல்வியே என்று இவர் கருதுகின்றார். அபிலார்டின் நுண்ணிய அறிவை வியந்தாலும், அவருடைய பொதுமைகளை (universals) எள்ளி நகையாடுகின்றார். ராஸலின் என்னும் ஆசிரியரும் இவர் தாக்குதலுக்கு இலக்காக அமைகின்றார்.

இந்த 12ஆம் நூற்றாண்டில் மொழிபெயர்ப்புகளால் கிரேக்க நூல்களின் தொகை வளர்ந்தது. கான்ஸ்டான்டிநோபில் (Constantinople), பாலர்மோ (Palermo), டாலிடோ (Toledo)—இந்தச் சிறந்த மூன்று இடங்களும் மொழிபெயர்ப்புகளுக்குத் தாயகங்களாய்த் திகழ்ந்தன. டாலிடோவின் ஆர்ச்சுபிஷப்பான ரெய்மண்ட் (Archbishop of Raymond) மொழிபெயர்ப்பாளர் கல்லூரி ஒன்றை நிறுவினார். இதன் விளைவின் சிறப்பு போற்றுதற்குரியது. 1128ஆம் ஆண்டு வெனிஸ் என்னும் நகரத்தைச் சார்ந்த ஜேம்ஸ் (James of Venice) என்பவர் அரிஸ்டாட்டிலின் 'பகுமுறை' (Analytics) என்னும் நூலையும் தருக்கத்துக்குரிய பொருள்களையும் (Topios) மொழிபெயர்த்தார். ஆதிக்கியத்தை விரும்பிக் கிறித்துவ சமயம் புரிந்த போராட்டத்தின் விளைவே புலமைக் கொள்கை என்று ரஸ்ஸல் கருதுகின்றார்.

# 16. பல்கலைக்கழகங்களின் தோற்றம்

பண்டைய பல்கலைக்கழகங்கள் என்று நிறுவப்பட்டன என்பதை வரையறுத்து இயம்ப இயலாது என்று தம்முடைய இடைக்காலத்துத் தத்துவ நூலில் கோப்லஸ்டன் (Copleston) குறிக்கின்றார். 1200ஆம் ஆண்டு பிலிப் அகஸ்டஸ் (Philip Augustus) பாரிஸ் நகரத்துப் பல்கலைக்கழகத்திற்குத் தம் பட்டயத்தை —தனியுரிமைப் பத்திரத்தை அளித்தார். அதன்கண் அடங்கியுள்ள சட்ட திட்டங்கள் 1213ஆம் ஆண்டு போப்பாண்டவரின் தூதரான ராபர்ட் என்பவரால் ஆமோதிக்கப்பட்டன.

உற்றுநோக்குமிடத்து, பாரிஸ் மாநகரத்திலுள்ள பள்ளிகள் அனைத்தும் இணைந்து ஒரு பல்கலைக்கழகமாயிற்று என்று உரைக்கலாம். 12ஆம் நூற்றாண்டின் பிற்பகுதியில் இந்தப் பல்கலைக்கழகத்தில் பல ஆராய்ச்சித் துறைகள் வகுக்கப்பட்டன. அண்மையிலிருந்தும் சேணிலிருந்தும் மாணவர்கள் கல்வி வேட்கை உந்த, இந்தப் பல்கலைக்கழகத்திற்கு அலைமேல் அலையாய் வந்து மோதினார்கள். வேந்தர் உரிமை பெற்றோ அல்லது போப்பாண்டவர் உரிமை பெற்றோ பல்கலைக்கழகங்கள் தோன்றின என்பது முழு உண்மையன்று. இடைக்காலத்தில் ஆசிரியர்களும் மாணவர்களும் ஒரு நகரில் சேர்ந்து உறைந்து கல்வித் துறைகளில் ஈடுபட்டிருப்பார்கள். உரிமைப் பத்திரமும் வரையறுக்கப் பட்ட சட்ட திட்டங்களும் பிறகுதான் அந்தக் கூட்டத்திற்கு அளிக்கப் பட்டிருக்கும். பிறகுதான் உரிமைகளையும் அதிகாரங்களையும் பெற்றுத் தனிக் குழுவாய் அது பொலிவுறும். பாரிஸ் நகரத்துப் பல்கலைக்கழகம் நிறுவப் பட்ட பிறகு ஆக்ஸ்போர்ட் பல்கலைக்கழகம் பிறந்தது என்று மொழியலாம். ஆனால், பல்கலைக்கழகங்கள் வெறும் பாழிலிருந்து சட்டெனத் தோன்றிவிட வில்லை ; நீண்ட கால முயற்சிகளின் விளைவே இவை என்று ஐயமறச் சாற்றலாம். ஆக்ஸ்போர்ட்போன்ற நகரங்களிலுள்ள பல பள்ளிகள் அறிவுச் சுடரைப் பரப்பிக் கொண்டேவந்தன. இறுதியில் இவை ஒன்றாய்க் கரைந்து ஒரு பல்கலைக் கழகமாய் மாறிவிட்டன என்பதுதான் சாலப் பொருத்தமாகும்.

இறையியலிலும் தத்துவ ஆராய்ச்சியிலும் 13ஆம் நூற்றாண்டில் தலைசிறந்த தாகத் திகழ்ந்தது பாரிஸ் மாநகரத்துப் பல்கலைக்கழகமாகும் என்று தயக்க மின்றிக் கூறலாம். இறையியலையும் தத்துவத்தையும் எப்படி முரண்பாடு இன்றி

இணைக்கலாம் என்பதே போப்பாண்டவர்களின் குறிக்கோளாகும். அக் காரணம் பற்றியே கிறித்துவ சமயக் கொள்கைக்கு மிக அரணுயுள்ளது பாரிஸ் மாநகர மென்று இயம்பலாம். பொலோனுவிலுள்ள ( Bologna ) பல்கலைக்கழகமும் நம் சிறப்புடைய சிந்தையைக் கவராமற்போகாது. சட்ட இயலிலும், கிறித்துவ மடத்து அலுவல்களிலும், சமுதாயத்திற்குரிய செயல்களிலும் அந்தப் பல்கலைக் கழகம் ஈடுபட்டது. ஆய்விலா இறையியலிலும் (Dogmatic Theology) தத்துவத்திலும் இது அத்தனை அக்கறை காட்டவில்லை என்று நாம் அறி கின்றோம். கிறித்துவ இறையியலும் கிரேக்க – முகமதிய தத்துவமும் பாரிஸ் பல்கலைக்கழகத்தில் பயிலப்பட்ட காரணத்தாலும், இவற்றின் தொடர்பாலும் தத்துவ உலகத்தில் மாபெரு விளைவுகள் கிளர்ந்து எழுந்துவிட்டன. ஆக்ஸ்போர்டில் இறையியலையும் தத்துவத்தையும் படிப்போர்கள் இயல்பிலேயே பழமை பேணும் கட்சியாளர்கள் (conservatives). இவர்கள் ஞானி அகஸ்டைன் தொடங்கிய மரபைச் சார்ந்தவர்களானுலும், கணிதநூலையும் நுகர்ச்சி வழி முறையைப் பின்பற்றும் விஞ்ஞானத்தையும் (Emperical Science) அவர்கள் புறக்கணிக்கவில்லை. இதற்குச் சான்றுக ரோஜர் பேக்கனின் (Roger Bacon) ஆற்றலை நாம் குறிக்கலாம். டாமினிக் நெறியைப் பின்பற்றுபவர்களும் (Dominicans), ஞானி ஃபிரான்ஸிஸ் (Francis) கொள்கையைப் பின்பற்றுபவர் களும் பாரிஸ் மாநகரத்துப் பல்கலைக்கழகத்தில் சேர்ந்துகொண்டு சிறந்த பணிகளாற்றினுர்கள். இறையியலைப் படிக்கவேண்டும் என்று டாமினிக் கொள்கையினர் வற்புறுத்தினுர்கள். ஞானி ஃபிரான்ஸிஸ் (St. Francis of Assisi) இயேசுநாதர் கண்ட நெறியை — வறுமையே தனக்கு அணிகலமாய்ப் பூண்ட இயேசுநாதர் நெறியைப் பின்பற்றித் துறவற வாழ்க்கையைத் தமக்குக் குறிக்கோளாகக் கருதினுர்.

சிறந்த ஆசிரியர்கள் என்னும் தலைப்பின்கீழ் அபிலார்டின் வரலாறு குறிப் பிடப்பட்டிருக்கிறது. இவ் வரலாறு கேப்பிரியல் கம்பேர் (Gabriel Campayre) என்னும் ஆசிரியரால் மிகக் கவின்பெறச் சித்திரிக்கப்பட்டிருக்கிறது. பாரிஸ் மாநகரத்துப் பல்கலைக்கழகத்தை நிறுவுவதற்கு மிகவும் துணைபுரிந்தவர் அபிலார்ட் என்றே இவர் எண்ணுகின்றுர். அந்தக் கருத்தை வலியுறுத்தத்தக்க சான்றுகள் தருகின்றுர். கார்டினல் நியூமன் என்னும் பெரிய ஆசிரியரும் இக் கொள்கைக்கு ஆதரவு காட்டுகின்றுர்.

வெறும் வேந்தர்களும், சமயிகளும், போப்பாண்டவர்களும் பல்கலைக்கழகங் களை நிறுவிவிட முடியாது என்பது உண்மையே. ஒரு சான்றேன் தோன்று கின்றுன். பல்லாயிரக் கணக்கான மாணவர்கள் வான் வரைகளையும், பரந்த காடு களையும், விரிந்த ஆறுகள் முதலியவற்றையும் கடந்து யாதோர் இன்னலையும் இடுக்கணையும் பாராது அவனை நாடிச் செல்லுகின்றுர்கள். அறிவின்பால் எழுகின்ற பசியும் தாகமும்தாம் பல்கலைக்கழகங்களுக்கு அத்திவாரமாயுள்ளன என்பதை நாம் மறக்கக்கூடாது. காட்டில் எங்கேயோ ஒரு மலர் பூக்கின்றது. அதன் தீஞ்சுவைத் தேனை நாடிப் பல வண்டுகள் செல்லுகின்றன. இவ்வண்ணமே

அறிவாம் தேனை விரும்பியே கற்பக மலரனைய சான்றோர்களை நண்ண மாணவர்கள் பல திசைகளிலிருந்தும் திரண்டு வருகிறார்கள். பாரிஸ் மாநகரத்துப் பல்கலைக் கழகம், போலோனு நகரத்துப் பல்கலைக்கழகம், ஆங்கில நாட்டு ஆக்ஸ்போர்ட், கேம்பிரிட்ஜ்போன்ற பல்கலைக்கழகங்கள், ஸ்பெயின் நாட்டு ஸலமாங்காப் பல்கலைக் கழகம் — இவை யாவும் நம் உள்ளங்களைக் கவராமற்போகா. மாணவர்கள் எல்லா உரிமைகளையும் பெற்றிருந்தார்கள். அவர்கள் குற்றங்கள் புரிவார்களேயாகில், மடத்தைச் சார்ந்த நீதிமன்றங்கள் தாம் முடிவு கூற வேண்டும். மாணவர்கள் தத்தம் நாடுகளுக்குரிய சின்னங்களை அணிந்து கொண்டார்கள். மாணவர்கள் கல்வியையே தமது அஞ்ஞான இருளை வெட்டி வீழ்த்துதற்குரிய கருவியாகக் கருதவேண்டும்; போர்களுக்குச் செல்லுதற் பொருட்டு அவர்களைப் படைஞர்களாகத் திரட்டக்கூடாது என்னும் விதியையும் வகுத்தார்கள்.

அதிகாரச் சட்டதிட்டங்களால் தங்கள் மனம் நொந்துபோகுமானால், ஒத்துழையாமை இயக்கத்தை அவர்கள் மேற்கொள்ளலாம். பல ஒத்துழையாமை இயக்கங்கள் பல இடங்களில் நிகழ்ந்ததை நாம் அறிவோம்.

இடைக்காலத்துப் பல்கலைக்கழகங்களைப் பல குடியரசுகள் என்று கூறி விடலாம். பாரிஸ் பல்கலைக்கழகத்துத் தலைவன் (Rector) தேர்ந்தெடுக்கப் பட்டான். தேர்ந்தெடுக்கப்படும் பல்கலைக்கழகத் தலைவனுக்குரிய வயது வரை யறுக்கப்படவில்லை. ஆனால், தேர்ந்தெடுக்க முன்வருவோர்களுக்கு வயது முப்பது இருந்தே தீரவேண்டும். போலோனுவில் மாணவர்களால் தேர்ந்தெடுக் கப்பட்ட கழகத் தலைவன் 25 வயதுள்ளவனாகவும், ஒரு மாணவனாகவும் இருத்தல் வேண்டுமென்பது ஒரு சட்டமாகும். பாரிஸ் மாநகரத்தில் பற்பல கலைகளைக் கவனிப்பதற்குரிய பேராசிரியர்கள்தாம் குழுக்களில் அங்கத்தினராவார்கள். அவ்வொவ்வொருவரும் எம்.ஏ., பட்டம் பெற்றவராய்த் திகழவேண்டும்.

இக் காலத்தில் பட்டங்கள் வழங்கப்படுதல், பரீட்சைகள் நடத்தப்படுதல்— இவற்றை நாம் நோக்குகின்றோம். இவை இடைக்காலத்துப் பல்கலைக்கழகங்கள் நல்கிய வளங்களேயாகும் என்பதை நாம் உணரவேண்டும்.

இறைவழிபாடுகளுக்குப் பிறகே பாடங்கள் தொடங்கப்படும். இலக்கணமும் தருக்கமும் போதிக்கப்படும். பல நூல்களை முன்பு பரப்பிவைத்துக்கொண்டே ஆசிரியர்கள் பாடங்களைச் சொல்லுவார்கள்; சில இடங்களில் யாதொரு குறிப் பின்றியும் சொல்மாரியைப் பெய்வார்கள்; வேறு சில இடங்களில் பொருள்களை எழுதியே படிப்பார்கள்; மற்றுஞ் சில இடங்களில் தாம் எழுதிவைத்ததை மாணுக்கனுக்கு அளித்து அதைப் படிக்கச் செய்வார்கள்.

ஒரு பகுதிக்கு இரண்டு அல்லது மூன்று விளக்கங்கள் அளிக்கும்படி நேர்ந்தால், இவற்றைக் கூறி ஆசிரியர் தம் விளக்கத்தை இறுதியில் தருவார்.

இம் முறை அபிலார்ட் என்னும் பேராசிரியரால் கையாளப்பட்டது. கலைகளின் ஆராய்ச்சிகூட அத்துணை போற்றப்படவில்லை. இறையியல்தான் இடைக் காலத்துச் சான்றோர்களின் கவனத்தை ஈர்த்தது என்று இயம்பலாம். இறையியலைச் சட்டென முடித்துவிட முடியாது. சட்டப் படிப்பையோ மருத்துவத்தையோ 26 அல்லது 27ஆம் பிராயத்தில் ஒருவன் கற்றுப் பட்டம் பெற்றுவிடலாம். 35ஆம் ஆண்டு நிறைவேறியபிறகே இறையியலில் ஒருவன் பட்டம் பெறமுடியும் என்னும் நெறியும் வகுக்கப்பட்டுள்ளது. இறையியலைப் போற்றிவரும் சார்போன் (Sorbonne) என்னும் பல்கலைக்கழகம் ஒன்பதாம் லூயியிக்குப் பாதிரியாயிருந்த சார்பன் என்னும் இடத்தைச் சார்ந்த ராபர்ட்டால் 1257ஆம் ஆண்டில் நிறுவப்பட்டது. இத்தாலிய நாட்டிலும் போலோனு என்னும் இடத்திலும் ரோம சட்ட இயல் கற்பிக்கப்பட்டது. இடைக்காலத்தில் மருத்துவ இயல் தழைத்தோங்கவில்லை. பாதிரிகள் மருத்துவத்தை வெறுக்க வில்லை. இறைவனை வழிபடுவதாலும் புண்ணியத் தலங்களுக்குப் போவதாலும் நோய்கள் அகன்றுவிடும் என்று கிறித்துவ சமயிகள் சாற்றினர்கள். மருத்துவம் வளர்வதற்கு அதற்குற்ற ஆராய்ச்சிசாலைகள் வேண்டுமல்லவா? இத்தகைய ஆராய்ச்சிசாலைகளுக்குரிய சூழ்நிலை 16 அல்லது 17ஆம் நூற்றாண்டுகளில் தாம் அமைந்தது என்று ஐயமறச் சாற்றலாம். மருத்துவத்தின்மீது ஐயக்கண் விழுந்தாலும், பல்கலைக்கழகங்களில் மருத்துவ இயல் இடம்பெற்றுவிட்டது என்று வரலாற்று நூல் சான்று பகர்கின்றது. சாலிஸ்பெரியைச் சார்ந்த ஜான் என்பவரும், 14ஆம் நூற்றாண்டில் தோன்றிய பெட்ரார்க் (Petrarch) என்னும் கலைஞரும் இடைக்காலத் தத்துவ நூற் பல்கலைக்கழகங்களுக்குப் புகழ்மாலைகள் புனைந்திருப்பதை நாம் நன்கறிவோம். அறிவுச் சுடருக்கே வணக்கஞ் செய்கின்ற மாணவர்களின் ஆர்வமாம் வெள்ளம் எங்கும் பொங்கிப் பரந்தது. ஆசிரியர் களுக்கும் மாணக்கர்களுக்கும் நெருங்கிய தொடர்பு இருந்தது. மாணவர் அவை களில் இனி வரப்போகும் மாந்தர்களின் கடமைகளை மாணவர்கள் நன்கு கற்றுக் கொண்டார்கள். ஒத்துழைப்புணர்ச்சியும் பொறுப்புணர்ச்சியும் அவர்களுடைய குருதியில் ஓடத்தொடங்கிவிட்டது. சட்டத்தின்முன்பு அனைவரும் சமமே என்னும் மனப்பாங்கு சமூகத்தில் தோன்றுமலிருந்தபோதிலும், பல்கலைக்கழகங் களில் ஏழைகள், செல்வம் படைத்தோர்கள் — இவர்கள் வேற்றுமை பாராது ஒன்றுய்ப் பழகிவந்தார்கள். கலைத்தேவியின்முன் நிற்போர் யார் பெரியர்? யார் சிறியர்? உன்னிப்பாருங்கள். கல்லூரிகள் திகழ்கின்ற பெருநகரங்களில் எப்பொழுதுமே அமைதி ஆட்சிபுரிந்துவந்தது என்று சொல்லுவதற்கு இடமில்லை. இந்தக் கலை பெரிதா? அந்தக் கலை பெரிதா? என்னும் போராட்டங்களும் பூசல் களும் சிற்சில சமயங்களில் தலைவிரித்தாடின; மாணவர்கள் எஞ்ஞான்றுமே கல்வித் துறைகளில் ஆழ்ந்திருந்தார்கள் என்று சொல்லுவதற்கில்லை. கிளரொளி இளமையின் உணர்ச்சி வெள்ளம் வேறு துறைகளிலும் பாய்ந்தோடுவதில் யாதொரு வியப்புமில்லை. கலகங்களில்மட்டும் அவர்கள் திளைக்கவில்லை; பால் உணர்ச்சி அவர்களை உந்த, காதல் நாடகங்களிலும் அவர்கள் கலந்துகொண் டார்கள். யாவரே அணைபோடவல்லார் காதல் வெள்ளத்திற்கு?

நடனமாடுவதற்கோ சூதாடுவதற்கோ இடந்தராத காரணத்தால், வேறு முறையில் மாணவர்களின் உணர்ச்சி வடிவெடுப்பதில் விந்தையில்லை. மிகக் கடுமையான துறவற நியதிகளை மாணவர்கள்மீது சுமத்தினதால், உணர்ச்சி அலைகள் நிபந்தனையாம் கரைகள்மீது மோதத்தானே செய்யும்? மேலும், அடியாத மாடு படியாது என்னும் கொள்கையில் வேரூன்றியவர்கள் கசையடி அடிக்காமல் என் செய்வார்கள்? அனுபூதி நெறியின்பால் இடைக்காலத்து மாந்தர்களின் இயல்பு விரைந்தது. மாந்தரின் இயல்பில் நம்பிக்கை தேய்ந்துகொண்டே வந்தது; அதை அடக்குவதே அவர்களுடைய குறிக்கோளாகத் திகழ்ந்தது. இந் நிலையில் எப்படிக் குற்றங்குறைகளை நீக்கவேண்டும் என்பதை அவர்கள் ஓர்ந்திலர். இந் நிலையில் எப்படி அவர்கள் மாணவர்களோடு நடந்துகொள்ள வேண்டும் என்பதையும் அவர்கள் அறிந்தார்களில்லை. குற்றத்திற்கேற்ற தண்டனையை வழங்குவதில் ஒரு மிதம் வேண்டுமன்றோ?

மாணவர்கள்தாம் பேராசிரியர்களைத் தேர்ந்தெடுத்தார்கள். அக் காரணத்தால் ஆசிரியர்கள் மாணுக்கர்களின் நோக்கத்தை நாடி நிற்கவேண்டியிருந்தார்கள். பெரும்பாலான பல்கலைக்கழகங்களில் பேராசிரியர்கள் தம் மாணவர்களிடமிருந்தே காணிக்கைகள் பெற்றதாகத் தெரிகின்றது. போலோனுவில் பேராசிரியர்கள் மாணவர்களுக்குப் பணவுதவி புரிந்தார்கள். பல்கலைக்கழகங்கள் அறிவுச் செல்வக் களஞ்சியங்களாய்த் திகழ்ந்த காரணத்தால், எல்லாத் துறைகளிலும் மக்கள்மீது ஆட்சிசெய்தன. நூல்நிலையங்கள், பத்திரிகைகள், அச்சு இயந்திரங்கள், விமரிசனங்கள்—இவை இல்லாத அக் காலத்தில் பல்கலைக்கழகங்கள் தாம் மக்களின் பண்பாட்டை உருவாக்க முன்னணியில் நின்றதில் வியப்பில்லை.

அரிஸ்டாட்டில் கண்ட அரசியலைப் பின்பற்றி அரசியல் பிரச்சினைகளில் பல்கலைக்கழகங்கள் ஈடுபட்டன. பாரிஸ் மாநகரத்துப் பல்கலைக்கழகம் சமயச் சழக்குகளிலும் அரசியல் வாதங்களிலும் கலந்துகொண்டது. ஜெர்மன் நாட்டுப் பல்கலைக்கழகங்கள் அரசியலில் மிகுந்த ஆர்வத்துடன் பங்கு கொண்டன என்று கம்பேர் (Compayre) மொழிகின்றூர்.

கல்வித் துறையில் மாணவர்கள் பின்பற்றவேண்டிய முறைகளும் குறிப்பிடப்பட்டிருக்கின்றன. (1) 'கொடுக்கப்பட்ட பாடத்தில் ஒரு மணிநேரம் ஆழ்வது அழகாகும்; (2) படித்ததைப்பற்றி நெடிது சிந்தித்தல் இன்றியமையாதது; (3) தாம் படிக்கும் தறுவாயில் ஏதாவது நல்ல கருத்து எதிர்ப்படுமாயின், அதைத் தம் மனப்பலகையில் செதுக்கிவிடுதல் ஒரு கடமையாகும்; (4) படித்ததன் சுருக்கம் ஒன்றை அமைத்துக்கொள்வது போற்றுவதற்குரியது; (5) ஒத்த மாணவர்களோடு உரையாடுதல் வாயிலாக ஒருவன் தன் ஐயப்பாடுகளையும் சிக்கல்களையும் அறுத்துத் தள்ளி மனத்தெளிவை அடையலாம்; (6) இறைவழிபாடே படிப்பு ஓங்கி வளர்வதற்குற்ற கருவியாகும்' என்று ஞானி பெர்னூர்ட் உரைக்கின்றூர்.

இருட்காலம் என்று இயம்பப்படுகிற இடைக்காலத்திலேயே இத்தகைய பல்கலைக்கழகங்கள் அஞ்ஞான இருள் ஓட்டும் ஞான நல்விளக்குகளாய் ஒளிவிடுகின்றன என்று கூறினல், அது மிகையாகாது.

## 17. பதின்மூன்றாம் நூற்றாண்டு

பதின்மூன்றாம் நூற்றாண்டின் சிறப்பைத் தம் மேனாட்டுத் தத்துவ வரலாற்றில் ரஸ்ஸல் சித்திரிக்கிறார். ரோம சாம்ராச்சியம் விழுந்ததுமுதற்கொண்டு எழுந்து வந்த பல சக்திகள் — பல துறைகளில் வளர்ந்துவந்த ஆற்றல்கள் — இவற்றின் தொகுப்பை (synthesis) பதின்மூன்றாம் நூற்றாண்டு கண்ணுற்றது; தாபனங்களின் சிதைவுகளையும் தத்துவங்களின் குலைவுகளையும் பதினான்காவது நூற்றாண்டு மக்கள் உணர்ந்துவிட்டார்கள். மூன்றாம் இன்னஸன்டு (Innocent III), ஞானி ஃபிரான்ஸிஸ் (St. Francis), இரண்டாம் ஃபிரெடரிக் (Frederick II), ஞானி தாமஸ் அக்கியுனஸ்—இவர்கள்தாம் பதின்மூன்றாம் நூற்றாண்டில் வானளாவி நிற்கும் சான்றோர்கள் என்று இயம்பலாம். கட்டடத் துறையில் காத்திக் முறையில் சமைந்த ஃபிரெஞ்சு நாட்டு மாவட்டத் தலைமைக் கிறித்துவக் கோயில்களும் (Gothic Cathedrals) சிறப்புற்றுத் திகழ்ந்தன. ஆர்தர் (Arthur), சார்ல்மேன் (Charlemagne) — இவர்களைச் சுற்றி எழுந்த புதுமை உணர்வூட்டும் (Romantic) இலக்கியமும், நிபிலங்கன் (Neebelungen) வேந்தர்களைப்பற்றிய பாடல்களும் இலக்கிய உலகத்தை அணி செய்கின்றன என்பதை நாம் மறுக்க இயலாது. அரசியல் துறையில் சட்டபூர்வமாக நடக்கும் அரசாங்கத்தின் விடிவெள்ளியை நாம் பார்க்கின்றோம். மாபெரும் அரசியல் அமைப்புச் சட்டம் மாக்ன கார்ட்டா (Magna Carta) பிறந்ததும் இந்த நூற்றாண்டில்தான். மக்கள் சட்டசபையின் தோற்றத்தையும் நாம் உணர்கின்றோம்.

போப்பாண்டவர் (1198—1216) மூன்றாம் இன்னஸன்டு என்பவர் நுண்ணறிவு படைத்த அரசியல்வாதி; வரம்பு கடந்த ஆண்தகையோர்; போப்பாண்டவர்களுக்கு எல்லா உரிமைகளும் உண்டென்னும் கொள்கையில் குலையாத நம்பிக்கையுள்ளவர். ஆனால், கிறித்துவர்களுக்குரிய சிறந்த பண்பாடான பணிவு என்பது அவரிடத்தில் இல்லை என்று ரஸ்ஸல் இயம்புகின்றார். அவர் பட்டத்திற்கு வந்ததும், இந்த வரியைத்தான் அவர் ஓதினார். ‘நாடுகளின்மீதும் அவற்றை ஆள்கின்ற வேந்தர்களின்மீதும் ஆட்சி புரியும்படி ஒரு சிறந்த திட்டம் வகுத்துவிட்டேன். வேந்தர்களை அழிக்கவோ, இராச்சியங்களை நிறுவவோ உனக்கு அதிகாரமுண்டு.’ தம்மை மன்னர்களுக்குள் ஒரு மாமன்ன

னென்றும், பிரபுக்களுக்குள் ஒரு சிறந்த பிரபு என்றும், கிறித்துவப் பாதிரிக்குள் மிகத் தூய பாதிரி யென்றும் அழைத்துக்கொண்டார். இதைக் கருத்தில் இருத்திக்கொண்டு தமக்குக் கிடைத்த வாய்ப்புகள் அனைத்தையும் பயன் படுத்திக்கொண்டார். ஆறும் ஹென்றி (Henry VI) சக்கரவர்த்தியானவர் ஸிஸிலியை (Sicily) வென்றார். இவர் நார்மானிய வேந்தர்கள் வீட்டு அரசியான கான்ஸ்டன் ' என்னும் பெண்ணை மணந்துகொண்டார். ஹென்றி 1197ஆம் ஆண்டு இறந்துபோனார். அந்தச் சமயம் இவருடைய பிள்ளை ஃபிரடரிக்கிற்கு வயது மூன்றே. அந்தக் குழப்பமான காலத்தில் தன் மகனைப் போப்பாண்டவரான மூன்றும் இன்னஸன்டிடம் ஒப்படைத்ததோடு நிற்காமல், போப்பாண்டவரின் ஆதிக்கியத்தையும் ஏற்றுக்கொண்டார். போர்ச்சுகல் (Portugal), அரகன் (Aragon) முதலிய நாட்டிலுள்ள மக்கள் இவருடைய ஆட்சிக்குத் தலைவணங்கி னார்கள். ஆங்கில நாட்டு மன்னனான ஜான் போப்பாண்டவருடைய பாதத்தில் தன் இராச்சியத்தை அர்ப்பணித்துவிட்டுக் கப்பங்கூடக் கட்டிவிட்டான். அதிகார நறவுண்ட இவரைக் கண்ட அந்தக் காலத்துத் தூய சான்றோர்கள், இவருடைய ஆட்சிவெறியை எதிர்க்கவும் செய்தார்கள். போப்பாண்டவர்களின் அதிகார ஆட்சியில் அது குன்றுவதற்குற்ற விதைகளும் விழுந்துவிட்டன என்பது உண்மையே. மூன்றும் இன்னஸன்டு ஆதரித்த ஃபிரடரிக் 1212ஆம் ஆண்டு ஜெர்மன் நாட்டிற்குச் சென்றார். ஆட்டோவுக்குப் பிறகு ஃபிரடரிக் மக்களால் தேர்ந்தெடுக்கப்பட்டார். இந்தத் துறையில் இன்னஸன்டு இவருக்கு உதவி புரிந்தார் என்பதில் ஐயமில்லை. போப்பாண்டவரின் ஆட்சிக்கு மாறாக வெம் பகைப் புயலை இவர் எழுப்பப்போகிறார் என்பதை இன்னஸன்டு எப்படி உணரக்கூடும்!

ஃபிரடரிக் தம்முடைய குழவிப் பருவத்தையும் கிளரொளி வாலிபத்தையும் இன்னல்களும் இடுக்கண்களும் மண்டியுள்ள சூழ்நிலையில் கழித்தார். ஸிஸிலித் தீவில் முகமதியர்களின் கலகங்கள் தலைவிரித்தாடின. பிசா நகரத்து மாந்தர் களும் ஜினீவோ மாந்தர்களும் இந்தத் தீவைக் கைப்பற்றும் முறையில் வெம் போர்கள் புரிந்தார்கள். ஸிஸிலி பல கலைகளுக்கும் பல நாகரிகங்களுக்கும் உறைவிடமாயிருந்தது. ஃபிரடரிக் பல்கலைத் தொட்டில்களில் தாலாட்டப்பட்டார் என்று தெரியவருகின்றது. ஆறு மொழிகளை இவர் பேசவல்லவராம். அக் காலத்து மாந்தர்கள் இவருடைய அறிவையும் கல்வித்திறனையும் கண்டு வியந் தார்கள். அரேபியர்கள் வகுத்த தத்துவ சாத்திரங்களிலும் இவர் ஈடுபட்டார். முகமதியர்களோடு இவர் உறவாடினார். தூய கிறித்துவர்கள் இவர் புரியும் செயல்களைப் பார்த்து வெகுண்டார்கள். இவர் வாழ்ந்த காலத்திலேயே இவரைச் சுற்றிப் புராணங்கள் எழுந்துவிட்டன. 'மூன்று ஏமாற்றுக்காரர்கள்' என்று இவர் ஒரு நூல் எழுதினதாகப் பலர் கருதினார்கள். மோசஸ், இயேசு நாதர், முகமது நபி — இம் மூவரும் மோசம் செய்யும் இயல்புள்ளவர்கள் என்று ஸ்பினோஸா இயம்பினதாக ஒரு பொய்க்கதை புனைந்துவிட்டதாக அறிகின்றோம்.

கியுல்ஃப் (Guelf), கிபிலின் (Ghibelline) என்னும் இரண்டு கட்சியினர்களால் எழுப்பப்பட்ட வெம்பூசல்கள் இத்தாலியா நாட்டின் அமைதியைக் குலைத்து விட்டன. மேலும், போப்பாண்டவர்களுக்கும் ஃப்ரடரிக்குக்கும் வெடித்தெழுந்த மாபெரும் போர் போப்பாண்டவர்களுடைய பொறுமையை மிகவும் சோதித்து விட்டது. ஃப்ரடரிக் புதியதொரு சமயத்தை நிறுவுவதாகத் தீர்மானமும் செய்தார்கள். கிறித்துவர்கள் பின்பற்றும் முறையை இவர் ஏற்காமல் சிற்றின்ப போகங்களில் தம் காலத்தைக் கழித்துவந்தார். அலிகள் காவல் புரியும் அந்தப்புரமும் இவருக்குச் சமைந்திருந்ததாக நாம் அறிகின்றோம் என்று ரஸ்ஸல் மொழிகின்றார். கிறித்துவர்களுடைய பண்டைய மரபுக்கு முரண்பட்ட வாதியர்கள் (Heretics) தோன்றிவிட்டார்கள். கதாரி (Cathari) என்னும் குழுவினரை ஃபிரெஞ்சு நாட்டின் தென்பகுதியில் அல்பிகின்ஸஸ் (Albigenses) என்று அழைக்கப்பட்டார்கள். சிலுவைப் போர்கள் வாயிலாகக் கிறித்துவ மடங்கள் அளவுகடந்த செல்வங்களைப் பெற்றுவிட்டன. மேலும், பாதிரிகள் நெறிபிறழ்ந்த வாழ்க்கையில் இறங்கிவிட்டார்கள். சிற்றின்பங்களிலும் அவர்கள் திளைத்தார்கள். பாதிரிகள் வறுமையைத் தமக்கு ஓர் அணிகலமாய்க் கொள்ளவேண்டும் என்று கதாரிக் குழுவினர் சாற்றினார்கள். பழைய ஏற்பாட்டில் (Old Testament) அவர்களுக்கு நம்பிக்கை இல்லை. புதிய ஏற்பாட்டிற்குத்தான் (New Testament) அவர்கள் செவிசாய்த்தார்கள். தீயோர்களுக்கு மறுபிறவிகள் உண்டு. அவர்கள் விலங்கின வடிவங்களை எடுப்பார்கள். அக் காரணம்பற்றியே முட்டை, பாலடைக்கட்டி, பால் இவற்றையும் அவர்கள் நீக்கினார்கள். மணச் சடங்குகளை அவர்கள் அறவே வெறுத்தார்கள். மணச்சடங்கு பிறர் மனை நோக்கும் தீதைக் காட்டிலும் இழிவான செயல் என்று கருதினார்கள். தற்கொலை செய்துகொள்ளும் விஷயத்தில் அவர்களுக்கு யாதொரு மறுமாற்றமும் இல்லை என்று தெரியவருகிறது. வால்டனிஸஸ் என்னும் குழுவினரும் நம் மனத்தைக் கவராமற்போகார். பீட்டர் வல்டோ (Peter Waldo) என்னும் சான்றோனை அவர்கள் பின்பற்றினார்கள், 1170ஆம் ஆண்டு இவர் இயேசுநாதர் கண்ட நியதிகளை எல்லாக் கிறித்துவர்களும் செயல்முறையில் கொண்டுவரவேண்டும் என்று ஒரு பெருங் கிளர்ச்சியை எழுப்பினர். தம்முடைய சொத்துசுதந்திரங்கள் யாவற்றையும் வறுமை மிக்க மக்கட்கு ஈந்தார். லயன்ஸைச் சார்ந்த ஏழைமை மக்களின் குழு (Poor Men of Lyons) தாபனத்தை நிறுவினார். முதன் முதலாக இக் குழு போப்பாண்டவரின் ஆதரவைப் பெற்றது. இக் குழுவினர் பாதிரிமார்களின் நெறி பிறழ்ந்த நிலையைத் தாக்கினார்கள். கிறித்துவ மடத்துப் பாதிரிகள் இவர்களைப் புறக்கணித்த காரணத்தால், தாங்களே சமயப் பணிகளில் இறங்கி இவர்கள் அறிவுரை வழங்கத் தொடங்கிவிட்டார்கள். கிறித்துவ மடத்திற்குப் பேரின்னல்கள் வந்துவிடுமோ என்று அஞ்சி நின்ற காலத்தில், ஞானி ஃபிரான்ஸிஸ் (St. Francis), ஞானி டாமினிக் (St. Dominic) — இவ்விரு சான்றோர்கள் தோன்றித் தூய தாபனங்களை நிறுவினார்கள். இவ்விருவர்களுடைய பெருமுயற்சிகளால் ஊழல் மண்டிக் கிடந்த கிறித்துவ மடம் செம்மையுற்றது.

## ஞானி ஃபிரான்ஸிஸ் (St. Francis of Assise)

(1182—1226)

இச் சான்ருேனை நினைக்குந்தோறும், அன்பே கனிந்து உருகி ஒரு வடிவு எடுத்த ஒரு புண்ணியனை நம்முன் தோன்றுவதை நாம் கண்ணுறுகின்ருேம். நீரும் நிலனும், செடியும் கொடியும். பறவைகளும் விலங்குகளும் — இவை வணங்குந் தெய்வங்களாய்த் திகழ்ந்தன.

ஞானி பெர்ஞர்ட் இறந்த 29 ஆண்டுகளுக்குப் பிறகு இவர் அம்பிரியன் என்னும் குன்றுசூழ் அஸிஸி என்னும் நகரத்தில் 1182ஆம் ஆண்டு தோன்றினர். போர்ட்டின்குலா (Portincula) என்னும் சிறிய மாதாகோயிலில் 1226ஆம் ஆண்டு இவர் உயிர்நீத்தார். பெர்ஞர்டும் இவரும் அறிவுத்துறைகளில் மிகுந்த சிறப்புற்றவர்கள் என்று இயம்புவதற்கு இடமில்லை. ஃபிரான்ஸிஸ் குழந்தையுள்ளம் படைத்தவர். இவருடைய எல்லையற்ற அன்பு, பணிவு, உலகத்தையே கட்டித் தழுவும் பரிவு—இவை யாவும் நம் உள்ளங்களைக் கொள்ளைகொள்ளாமற் போகா. மடங்களில் கரந்து நுழைந்துள்ள ஊழல்களை பெர்ஞர்ட் அகற்றும் துறையில் ஆழ்ந்தார். இவரோ அத்தகைய பணிகளில் ஈடுபடவில்லை. அரசியலில் எழும் குழப்பங்களோ, மடத்திற்கு மாருக வெம்போர் புரியும் கொள்கையினர் தூண்டிவிடும் பூசல்களோ இவர் தூய மனத்தை ஈர்க்கவில்லை. வாழ்க்கைச் சுழல்கள், குழப்பங்கள், கொந்தளிப்புகள் — இவை யாவும் இவருடைய பேரமைதியைக் குலைக்கவில்லை. மாந்தர்கள் உய்யத் தாம் வெஞ்சிலுவைமீது ஏறிய உத்தமனை இயேசுநாதரின் இலட்சியமாம் சுடர்தான் இவர்முன் இடையருது ஒளிவிட்டுத் திகழ்ந்தது. இடைக்காலத்துச் சூழ்நிலையின் ஆட்சிக்கு இவர் உட்பட்டிருந்தாலும், காலம் கடந்து எங்கும் மிளிர்ந்து நிற்கும் அன்புநெறி ஒன்றுதான் இவர் பின்பற்றும் நெறியாகும். விவிலிய நூலில் கோயில்கொண்டிருக்கும் இயேசுநாதரின் வீரவாழ்வுதான்—அன்பே கோயிலாகக்கொண்ட அவர் வாழ்வுதான் இவருடைய உண்ணும் சோறும் பருகும் நீருமாய் அமைந்தது என்று கூறினுல், அது மிகையாகாது. விவிலிய நூலின் நற்செய்திக்கே (Gospel) இவருடைய வாழ்வு ஒரு பெரு விரிவுரையாய் மிளிர்ந்தது.

ஞானி ஃபிரான்ஸிஸ் வாழ்க்கை ஒரு தனிப்பட்ட வாழ்க்கையாய் விளங்கினுலும், அஸிஸி நகரத்தின் சூழ்நிலையை இவருடைய வரலாற்றின் வாயிலாக நாம் சித்திரிக்க இயலும். ஃபிரான்ஸிஸின் தந்தையான பீட்டர் பெர்ஞர்டன் (Peter Bernardone) ஒரு மிகப் பிடிவாதமான இயல்புள்ளவர்; கடுமையான சிந்தை வாய்ந்தவர். அடிக்கடி தொழில் முறையைக் கருதி ஃபிரெஞ்சு நாட்டிற்குச் செல்வார். ஃபிரெஞ்சு நாட்டில் தங்கியிருந்தபொழுது இந்தச் சான்ருேன் பிறந்த காரணத்தால், இவருக்கு ஃபிரான்ஸிஸ் என்னும் நாமத்தைச் சூட்டினர். ஜான் (John) என்றே இவரை இவருடைய அன்னையார் அழைத்தார். இவருடைய தாயை பிக்க (Pica) என்று கூறுவார்கள். ஃபிரான்ஸிஸ் கற்ற கல்வி ஃபிரான்சு, இத்தாலி இவ்விரு நாடுகளில் நிலவிய கல்வியேயாகும்.

ஃபிரெஞ்சு இசைமொழிகளை — தாம் அமைத்த இசைகளைப் பாடும் வழக்கம் தம் ஆயுள் முழுவதும் இவரைத் தொடர்ந்துவந்தது. எளியவர்களிடத்தும் செல்வம் படைத்தவர்களிடத்தும் உள்ளங்கவரும் மரியாதையோடு நடந்து வந்தார். நல்ல ஆடைகளை உடுத்தி இன்புறுவார். அளவு கடந்த வள்ளல் தன்மை இவரிடம் திகழ்ந்தது. பணத்தைச் செலவு செய்யும் இவருடைய இயல்பைத் தந்தை போற்றியே வந்தார். தம் சேய் பணம் மிகுதியாய்ச் செலவு செய்துவந்தால் தம் குடும்பம் மிகுந்த செல்வம் படைத்த குடும்பமென்று இவ் வையகம் கருதுமென்று அவர் உன்னினுர் போலும் !

தன் மைந்தன் ஆண்டவன் அருளால் அவன் சேயாக மாறிவிடுவான் என்று இடையருது இவருடைய அன்னை கூறிக்கொண்டேயிருப்பாள். சிறந்த கற்பனை இவர்மீது ஆட்சிபுரிந்துவந்தது. புலன் காணும் நுகர்ச்சிகளை வெறுக்கவில்லை. இந்திரியப் பலகணிகளை இவர் மூடிவிடவில்லை. அவ்வழிகளெல்லாம் ஆண்டவன் வடிவங்களென்று உணர்ந்தார்போலும் ! இவர் வான்கவிதைகளை இயற்ருமற்போனுலும், அன்பு நிறைந்த—கற்பனை ஊற்றுகள் மிளிர்ந்த இவ ருடைய வாழ்வே தீஞ்சுவைக் கவியின்பமாய் இலங்கிற்று என்று இயம்பலாம்.

பெருகியாவோடு (Perugia) போர் எழுந்துவிட்டது. அஸிஸியிலுள்ள போர்க் குதிரைவீரர்கள் அண்மையிலுள்ள இருள் மண்டிய அறைகளில் சிறை வைக்கப்பட்டார்கள். இத்தகைய சிறைகளுக்குச் சென்றவர்களுள் ஃபிரான்ஸிஸ் ஒருவராவர். மற்றவர்கள் சிறைகளில் புலம்பி அழுதாலும், இவருடைய முகத்தை விட்டுப் புன்முறுவல் அகலவேயில்லை. கலப்பற்ற உண்மைதான் இவருடைய உள்ளத்தில் களிநடனம் புரிந்தது.

இப்படி உவகை நறவுண்டு மகிழ்ச்சியுறும் இவரைக் கண்ணுற்று சிறைவாசி கள், இவரை ஒரு பித்தன் என்று எள்ளி நகையாடினுர்கள். சிறையிலுள்ள எல்லோரும் வெறுத்தார்கள். அவர்பால் அன்பைப் பொழியவேண்டுமென்று ஃபிரான்ஸிஸ் மன்ருடினுர். அனைவரும் ஆண்டவரின் அருட் குழந்தைகளல்லவா ;

சிறையிலிருந்து வந்ததும், இவருடைய உடல்நலம் குன்றிப்போய்விட்டது. வயல்களும் பொழில்களும் இவருடைய சிந்தையை இப்பொழுது கொள்ளை கொள்ளாமல் நிற்கவே, தம்மைப்பற்றியே ஓர் ஐயம் இவர் மனத்தகத்தே எழுந்து விட்டது.

ஓர் இரவு இவர் வீடு முழுதும் போர்க்கருவிகள் நிரம்பியிருப்பதைக் கண்டார். பொழுது புலர்ந்தது. இவரும் போர்க்கோலம் பூண்டு மற்றைய படைஞரகளோடு புறப்பட்டுவிட்டார். அப்பொழுது இவருக்கு வயது 23 தான். எல்லாப் பொருள்களின்மீதும் இவர் அன்பு சொரியும் இயல்பு வாய்ந்தவர்; புகழையும் இவர் உள்ளம் நாடிற்று. பிறகு சட்டென ஆண்டவன் அருள் ஒலி இவருடைய அச்சசெவியில் விழுந்தது. 'உலகப் பற்றையெல்லாம் அகற்றி

என் பக்கம் வருவாயாக' என்னும் ஆணையும் பிறந்தது. அஸிஸியில் ஒரு நாள் ஒரு மாவிருந்து நடந்துகொண்டிருக்கும்போது, ஆண்டவனுடைய அருள் ஒளி வெள்ளம் இவருடைய அகத்தே மீண்டும் பாயத் தொடங்கிற்று. இதற்குப் பிறகு தன் தந்தை வெளியிடங்களுக்குப் பயணமானபோது, ஏழை மக்களுக்கு இவர் உணவளித்தார். தொழுநோயால் வருந்துபவர்களையும் தழுவி முத்த மிட்டார். அவர்கள் உண்ணும் கப்பரைகளிலிருந்தே தாமும் உணவு அருந்தினர். ஒரு சமயம் ரோமாபுரியிலுள்ள ஞானி பீட்டர் மாதாகோயிலுக்குச் சென்றார். அங்கே இருந்தவர்கள் தக்க காணிக்கை செலுத்தாத காரணத்தால், தம் பையிலுள்ள அத்தனை பணத்தையும் கண்டோர் வியக்க வாரி இறைத்தார். பிறகு பிச்சைக்காரர்களின் உடையை அணிந்து தாமும் இரக்கலானர்.

ஞானி டேமியன் கோயிலுக்கு அண்மையில் ஃபிரான்ஸிஸ் சென்றபொழுது, இயேசுநாதரைத் தொழவேண்டும் என்னும் பேரார்வம் இவரை உந்திற்று. அவர் தொழுதுகொண்டிருக்கும்பொழுது, 'என்னுடைய இல்லம் பாழடைந்ததை நீ கண்ணுறவில்லையா?' என்ற தெய்வக் குரல் இவருடைய செவியில் ஒலித்தது. சிலுவைக்கு முன்பு ஏற்றிவைக்கும் விளக்கின் எண்ணெயின் பொருட்டுப் பாதிரிக்கும் பணம் ஈந்தார். அந் நாள் முதற்கொண்டு சிலுவையில் ஏறி உயிர் நீத்த இயேசுநாதரின் உருவம் இவரை எப்பொழுதும் தொடர்ந்தது. அவர் பெற்ற புண்களைத் தம் உடலிலும் இருக்க உணர்ந்தார். போர்ட்டின்குலி கோயிலண்டை அழுத கண்ணீருடன் நின்றார். ஏன் இப்படி நிற்கிறீர் என்று வினவிய பாதிரிக்கு இவர் அளித்த விடை சிந்திப்பதற்குரியது:

'நான் இங்குமட்டும் அழுதுகொண்டு நிற்பேன் என்று கருதாதீர்; அழுது கொண்டே நான் உலகமெல்லாம் திரிவேன். நமக்காக அவர் அடைந்த மாபெருந் துயர் நம்மை வாட்டாமல் என் செய்யும்' என்றார். ஞானி டேமியன் மடத்திற்கு ஃபிரான்ஸிஸ் மிகுந்த ஆதரவு காட்டினர். அதற்காகத் தம் செல்வங்களை வாரி வழங்கினர். இக் காரணத்தால் இவர்க்கும் இவர் தந்தைக்கும் பெரும் பூசல் ஏற்பட்டுவிட்டது. ஃபிரான்ஸிஸை இவர் தந்தையாரான பெர்னர்டன் துரத்திக் கொண்டு வந்தார். அவர் கையில் சிக்காது இவர் ஒரு குகையில் நுழைந்து அங்கே தஞ்சம் புகுந்தார். பிறகு அந்தக் குகையைவிட்டுத் திரும்பி ஊருக்கு வந்ததும் இவருக்குப் பித்தேறிவிட்டது என்று இவர்மீது நகர மாந்தர்கள் கற்களைப் பொழியலுற்றார்கள். இந்தச் சந்தடிகளைச் செவியுற்ற இவருடைய தந்தை இவரைக் கைப்பற்றி அடிக்கவுஞ் செய்தார். தம் வீட்டிலேயே இவரைச் சிறைசெய்தார். தம் கணவர் வெளியிலே சென்ற தருணம் பார்த்து, இவரைத் தளைகளிலிருந்து நீக்கிவிட்டார் இவருடைய அன்னையார். மீண்டும் இவர் ஞானி டேமியன் மடத்திற்குச் சென்றார். இவர் தந்தை இவர்மீது வழக்குத் தொடர்ந் தார். சாதாரண அரசாங்க அதிகாரிகள் தம்மீது உள்ள வழக்கைத் தீர்க்கத் தகுதியற்றவர்கள் என்று கூறவே, பிஷப்புமூலம் தமக்கு நியாயம் கிடைத்தற் பொருட்டு பிஷப்பை நாடினர். 'உன் தகப்பன் சொத்தை உன் தந்தையிடம் அளித்துவிடு' என்று பிஷப் மொழிந்தார்.

எனக்கு அவர் நல்கிய ஆடை முதற்கொண்டு இப்பொழுதே துறந்து விடுகிறேன் என்று புன்முறுவல் முகத்தில் தழுவ ஈந்தார்.

'எனக்குத் தந்தை விண்ணிலுள்ள எம்பிரான்தான்; பெர்னூர்டன் என் தந்தையல்லர்' என்று இயம்பிவிட்டார். இவ்வுரை கேட்ட பாதிரி வியப்பில் ஆழ்ந்து, இவருடைய பித்தச் சுடரைப் புகழ்ந்தார். எல்லாவற்றையும் துறந்து ஞானி டேமியன் மாதாகோயிலுக்குப் பேருவகையோடு மீண்டும் போனுர். துறவிக்குரிய உடை பூண்டு ஆண்டவன் புகழ் பாடித் தெருவெல்லாம் திரிந்தார். கோயிலைச் செப்பனிடக் கற்களை மக்களிடத்தே இரந்தார். தமக்கு வேண்டிய உண்டியையும் யாசித்தார். இயேசுநாதர் அடிச்சுவட்டைப் பின்பற்றியே அவர் நடந்தார். வறுமையாம் மணமகளைத் தாம் ஏற்றுக்கொண்டார்.

துறவறம் மேற்கொள்ளுவதற்குரிய பெருந்தகைமையும் வள்ளல்தன்மையும் நம்மிடத்தில் இல்லை என்று செஸ்டர்டன் தம்முடைய 'அஸிஸியைச் சார்ந்த ஞானி ஃபிரான்ஸிஸ்' என்னும் வரலாற்று நூலில் குறிக்கின்றூர். தன்னல மறுப்பு ஓர் ஆர்வமாய் இவரிடம் திகழ்ந்தது. உண்ணுவிரதத்தை உண்டி அருந்துபவன் காட்டக்கூடிய இன்பத்தைப்போலப் பின்பற்றினூர். தங்கத்தைத் தோண்டி எடுப்பவன்போல வறுமையாம் சுரங்கத்தில் ஆழ்ந்தார் என்று இந் நூலாசிரியர் உரைத்தது இங்கு நோக்கத்தகுந்தது. ஃபிரான்ஸிஸைப் பின்பற்றுபவர்களைப் பார்த்து அஸிஸி ஊருக்கு பிஷப்பானவர் பின்வருமாறு மொழிந்தார்: 'வாழ்க்கையின் இன்பங்கள் ஒன்றையும் நுகராது, கண்ட இடத்தில் உண்டி அருந்துவதும், கண்ட இடத்தில் துயிலுவதுமான கடுநோன்பை ஏன் மேற்கொண்டீர்கள் என்று கேட்டேன். சொத்துசுதந்திரங்கள் இருந்தால், அவற்றைக் காப்பாற்றப் போர்க் கருவிகளும் சட்டதிட்டங்களும் வேண்டுமல்லவா' என்று அவர் விடையளித்தார்.

ஃபிரான்ஸிஸ் உலகத்திற்கு ஓர் அறிவிலிதான்; ஆனுல், ஆண்டவன் அவையில் அவர் ஒரு விதூஷகனுய்க் காட்சி அளிக்கின்றூர் என்று செஸ்டர்டன் செப்புகின்றூர். இயேசுநாதரின் வரலாற்றை வைத்துக்கொண்டு ஃபிரான்ஸிஸின் வரலாற்றிற்கு விளக்கம் தருவார்கள். இயேசுநாதரின் வரலாற்றிற்கு ஞானி ஃபிரான்ஸிஸின் தூய வாழ்வுகொண்டு விளக்கந் தரலாம் என்பதை மாந்தர்கள் மறந்தார்கள்போலும்! இவர் அவருக்குக் கண்ணுடியாயிருக்கிறூர்; அவர் இவருக்குக் கண்ணுடியாயிருக்கிறூர் என்று இயம்பினுல், அது மிகையாகாது.

தன் அகத்தை மாய்த்துக்கொண்டவனுக்கே இவ் வையகத்தின் செல்வ மனைத்தும் வந்துசேரும் என்பதில் ஒரு பேருண்மை திகழ்வதைக் காண்போம். இவருடைய வள்ளல்தன்மை, பெருந்தகைமை இவையாம் மலைச்சிகரம் எல்லோரும் சமம் என்னும் சம பீடபூமியிலிருந்துதான் எழுந்தது என்பதில் ஐயமில்லை. தம் வாழ்வின் குறிக்கோளை அறிவதற்கு விவிலிய நூலில் விரலை விட்டுப் பரீட்சை செய்தார். 'இம் மூன்று தடவைகளிலும் பணக்காரனுக்குப் பரம்பொருள் கிட்டாது. சிறு கதவு வழியாக ஓர் ஒட்டகம் நுழைந்துவிடக்கூடும்;

ஆனுல், செல்வம் படைத்தோர்களுக்கு ஆண்டவன் அருட்கதவு திறக்காது. எல்லாவற்றையும் துறந்துவிட்டு என் சிலுவையைக் கையிலேந்தி என்னைப் பின் பற்றி நடப்பாயாக. நாளைக்கென்று ஒன்றையும் சேமித்துவைத்துக்கொள்ளாது வெறுங் கையோடு எங்கும் திரிவீர்களாக.' இந்தப் பொன்மொழிகள் இவருடைய வாழ்க்கையாம் புத்தகத்தில் புதிய வானுயர் அத்தியாயங்களைத் திறந்துகாட்டிவிட்டன என்று சாற்றலாம்.

காட்டில் இவர் ஆண்டவனுடைய அருளைப் பார்த்தார். காற்றும் இவருடைய உடன்பிறந்தோனுகும். தண்ணீர் இவருடைய சகோதரன். தம்முடைய உடலைத் 'தன்னைத் தாங்கும் கழுதையாம் உடன்பிறந்தோன்' (My brother ass) என்று இவர் கூறினது யாவரும் அறிந்ததே.

இவர் தம் மடத்தை நிறுவிய வரலாற்றைச் செஸ்டர்டன் சித்திரிக்கிருர். ஞானி ஜான் லேட்டரன் (St. John Lateran) என்னுங் கோயிலின் மேன் மாடத்தின்மீது போப்பாண்டவரான மூன்ரும் இன்னஸன்டு உலாவிக்கொண் டிருந்தார். அந்தச் சமயத்தில் ஃபிரான்ஸிஸ் தம்முடைய நண்பர்களோடு அங்கு சென்ருர். இன்னஸன்டு இவர்களைக் கவனிக்காது புறக்கணித்துவிட்டார். அன் றிரவு இன்னஸன்டு ஒரு கனவு கண்டாராம். அந்தக் கோயில் இடிந்து விழுவ தாயும், அன்று இடையன் உடையில் வந்த சான்ருேனே அதைத் தாங்குவ தாயும் அவர் கண்ணுற்ருர். ஃபிரான்ஸிஸ் கண்ட நெறியைப் பின்பற்று பவர்களுக்கு மடம் கட்டுவதற்குரிய அனுமதியைத் தந்ததாகப் பொனவென்சுரா (Bonaventura) கூறுகின்ருர்.

இயேசுநாதர் பெற்ற புண்களும் இவரிடம் காணப்பட்டன என்னும் நிகழ்ச்சியைப்பற்றிப் பல புராணங்கள் தோன்றிவிட்டன. தம்முடைய ஊருக்கு வந்து, இவர் வணங்கும் கோயிலின் வெறும் தரையில், தம்மை ஒரு சிலுவை வடிவில் அமைத்துக்கொண்டு உயிர்நீத்தார் என்று வரலாறு கூறுகின்றது. இவரைச் சுற்றி இவருடைய நெருங்கிய நண்பர்கள் இறைஞ்சும் கரங்களுடன் நின்ருர்கள். அவர்களுடைய மன அரங்கில் எத்தகைய காட்சிகள் தோன்றி மறைந்தனவோ! யார் அறிவார்?

புல்லை நகையுறுத்திப் பூவை வியப்பாக்கிக் காணும் காட்சிகள் அனுபூதிச் செல்வர்களுக்குத்தான் கிடைக்கும். நம்மாழ்வாருக்கு எல்லாம் ஆண்டவன் வடிவங்களாய்த் திகழ்ந்தன:

**"மண்ணை யிருந்து துழாவி வாமனன் மண்ணிது வென்னும்**
**விண்ணைத் தொழுதவன் மேவு வைகுந்த மென்று கைகாட்டும்"**

**"ஒன்றிய திங்களைக் காட்டி யொளிமணி வண்ணனே யென்னும்**
**நின்ற குன்றத்தினை நோக்கி நெடுமாலே வாவென்று கூவும்**
**நன்று பெய்யும் மழைகாணில் நாரணன் வந்தானென் ருலும்"**

**"அறியும் செந்தீயைத் தழுவி அச்சுத னென்னும் மெய்வேவாள்**
**எறியும் தண்காற்றைத் தழுவி யென்னுடைக் கோவிந்த னென்னும்"**

என்று நம்மாழ்வார் இசைக்கும் பாடல்கள் ஈண்டு ஆழ்ந்து சிந்திப்பதற்குரியவை.

## ஞானி டாமினிக் (St. Dominic)

(1170—1221)

ஞானி ஃபிரான்ஸிஸைப்போல் இவர் அவ்வளவு நம் உள்ளத்தைக் கவர வில்லை. இவர் காஸ்டைலைச் சார்ந்தவர் (Castilian). இயேசுநாதர் கொள்கைக்கு — கிறித்துவ மடம் பின்பற்றுகிற கொள்கைக்கு — முரண்பட்ட முறையைத் தாக்குவதே இவருடைய முக்கியக் குறிக்கோளாகும். இந்தக் குறிக்கோளை நிறைவேற்றுவதற்கே இவர் வறுமையை ஏற்றார். கிறித்துவர் அல்லாதவர்களைத் தம் பக்கலில் சேர்த்தற்பொருட்டுப் புரிந்த சித்திரவதையில் (inquisition) டாமினிக் கொள்கையினர்கள் ஈடுபட்டார்கள். ஃபிரான்ஸிஸ் கொள்கையினர்கள் அவ்வளவு சித்திரவதையில் ஈடுபடவில்லை. ஞானி டாமினிக்குக்குப் படிப்பில் ஆர்வமில்லை எனினும், வையகத்தோர்களுக்குப் படிப்புத்துறையில் சிறந்த தொண்டை அவரைச் சார்ந்தவர்கள் ஆற்றிவிட்டார்கள். உடல் வருந்திச் செய்யும் வேலை அவர்களுக்குற்ற கடமைகளுள் ஒன்று அன்று. தியானத்திற் குரிய பொழுதுகளையும் குறுக்கிவிட்டார்கள். படிப்பில்தான் பெரும்பாலான காலம் கழிந்தது. அரிஸ்டாட்டில் கொண்ட தத்துவத்தையும் இயேசுநாதர் அருளிய மொழிகளையும் சமரசப்படுத்த இவர்கள் முயன்றார்கள். ஆல்பெர்ட்டஸ் மாக்னஸ் (Albertus Magnus), தாமஸ் அக்யுனஸ்—இவ்விருவரும் ஞானி டாமினிக் மடத்தைச் சார்ந்தவர்கள். தாமஸ் அக்யுனஸ் தத்துவத்துறையில் அருஞ் செயல் ஆற்றினார் ; இவரைப்போல மற்றைய டாமினிக் அடியார்கள் அத்தகைய பணி ஆற்றவில்லை. ஞானி ஃபிரான்ஸிஸ் படிப்பை வெறுத்தவரே. ஆனால், இவர் மடத்தைச் சார்ந்தவர்கள் படிப்புத்துறையில் மிகுந்த புகழ்பெற்றுத் திகழ்ந்தார்கள். ரோஜர் பேக்கன் (Roger Becon), டன்ஸ் ஸ்கோட்டஸ் (Duns Scotus), ஒக்கம் என்னும் ஊரைச் சார்ந்த வில்லியம் (William of Occam)—இவர்கள் யாவரும் ஞானி ஃபிரான்ஸிஸ் மடத்தைக் கவினுறச் செய்த சிறந்த அறிஞராவார்கள். துறவற மடத்தில் சில தூய மாறுதல்கள் நிகழ்வதற்கு ஞானி ஃபிரான்ஸிஸ் தம்முடைய வானன்பின் சிறப்பால் துணைபுரிந்தார் என்பதில் யாதோர் ஐயமுமில்லை. பணிவு, அன்பு, கீழ்ப்படிதல், தூய்மை இவற்றிற்கே இவருடைய வாழ்வு ஒரு விரிவுரையாய் மிளிர்ந்தது என்பதை இவ் வையகம் அறியும். மனிதன் வெறுந் தியானத்தோடுமட்டும் இருந்தால் போதாது ; செயல்முறைகளிலும் இயேசுநாதர் கண்ட உண்மைகளை உருவாக்கவேண்டுமென்று ஞானி டாமினிக், ஞானி ஃபிரான்ஸிஸ் இவ்விருவரும் அரும்பாடுபட்டார்கள்.

ஃபிரான்ஸிஸின் வாழ்வோ அன்பே உருக்கொண்ட ஒரு கவிதையாகும். ஆனால், இவரோ இறையியலைப் பரப்பும் ஒரு ஞானப்பணியாளர். இயேசுநாதரிடம் அளவுகடந்த பக்திபூண்டு கண்ணீர் வடிக்கும் இயல்புள்ளவர். இவருடைய அடியார்கள் மக்களைத் துன்புறுத்திக் கிறித்துவ சமயத்தில் சேர்த்தார்கள். அத்தகைய சமயச் சித்திரவதை (inquisition) தாபனத்தை இவர் நிறுவவில்லை என்பது திண்ணம். இக் கொடுஞ்செயலைப் புரிந்தது இவருடைய அடியார்களே. அதற்கு இவர் என்ன செய்ய இயலும் ?

# 18. சலிம்பினி (Salimbene) கண்ட உலகம்

தாய்தந்தையர், உற்றார் உறவினர் இவர்களனைவரையும் நீத்து, ஆண்டவனையே தமக்குத் தஞ்சமாகக்கொண்ட சான்றோர்களுள் சலிம்பினி ஒருவர். இடைக் காலத்து நூல்கள் பெரும்பாலும் துறவிகளால் வரையப்பட்ட காரணத்தால், ஏதோ சில அமிசங்கள்தாம் அவர்கள் வாயிலாகப் புலனாகும். தியானத்தில் ஆழ்ந்து வாழ்க்கையை நடத்திவந்தார்கள். அவர்கள் அகக்கண் திறந்துவிட்டது; புறத்திலே நிகழ்கின்ற செய்திகள்மீது அவர்களுடைய பார்வை விழுகிறதில்லை. இந்த முறைக்கு விலக்கு உண்டென்பதை நாம் ஓர்ந்துகொள்ள வேண்டும். தியானத்தில் ஆழ்ந்தும் உலக இயல்புகளைக் கவனித்த சான்றோன் சலிம்பினி என்று சாற்றினால், அது மிகையாகாது.

மக்கண்மை இயல்பு (Humanism) என்பது நகரங்கள் தந்த கவினுர் வனமாகும். பெட்ரார்க் (Petrarch) தோன்றுவதற்கு முன்பே இந்த மக்கண்மை அரும்பிவிட்டது என்று மொழியலாம். அக் காலத்தில் நகரம் பரிவுக்கும் இரக்கத்துக்கும் ஒரு தாயகமாயிருந்தது. இயற்கையைக் கண்டு மகிழ்வதிலும், ஆடவர்களிலும் பெண்களிலும் தெய்வ வடிவங்களை உணர்ந்து அன்பு பூணுவதிலும், பறவைகளிலும் விலங்குகளிலும் கடவுளின் உருவங்களைத் தேர்ந்து அவற்றைத் தம் உடன்பிறந்தோர்களென்று அழைப்பதிலும் திளைத்த ஃபிரான்ஸிஸ் மடத்தைச் சார்ந்து, அவருடைய அடிச்சுவட்டைப் பின்பற்றிச் சென்ற சலிம்பினியின் தெய்வ வாழ்க்கை நம் மனத்தைக் கொள்ளைகொள்ளாமற்போகுமோ?

1221ஆம் ஆண்டு இவர் பார்மாவில் (Parma) பிறந்தார். இவர் பிறந்த ஐந்து ஆண்டுகளுக்குள் ஞானி ஃபிரான்ஸிஸ் திருநாட்டை அலங்கரித்துவிட்டார். இவர் பிறந்த ஆண்டே ஞானி டொமினிக் மாண்டுவிட்டார். பேர்ப்பாண்டவர்களுக்கும் சக்கரவர்த்திகளுக்கும் இடையே வெம்போர்களும் சர்ச்சைகளும் நடந்த சூழ்நிலையில் இவர் தாலாட்டப்பட்டார்.

இத்தாலிய நாட்டு நகரங்கள் ஒன்றை ஒன்று பகைத்துக்கொண்டு பூசலிட்டன. இரண்டாம் ஃபிரடெரிக் சக்கரவர்த்தியோ சிற்றின்பத்தில் ஆழ்ந்து உலகத்தையே மாசுபடுத்திய கயவன் என்று சலிம்பினி சாற்றியதை நாம் அறிவோம்.

1238ஆம் ஆண்டு இவர் ஞானி ஃபிரான்ஸிஸ் மடத்தைச் சேர்ந்துவிட்டார். இவருடைய தந்தைக்கு மிகுந்த சீற்றம் வந்தது. தமக்கும் தம் தந்தைக்கும் எழுந்த போராட்டத்தை இவரே தம் சுயசரிதத்தில் சித்திரிக்கின்றார் :

'நீ என்னோடு வீடு திரும்புகின்றாயா என்று என் தந்தை கேட்டார். உழுவதற்காக இறங்கியவன் திரும்பிப் பார்ப்பானா? ஆண்டவன் அருள் நகரத்தை நாடுகின்றவன் வீடுவாசலை விழையான் என்றேன்.'

'நீ உன் தந்தையையும் தாயையும் கவனிக்கவில்லையே என்று என் தந்தை வினவினார்.'

'எனக்குத் தந்தையும் தாயுமாய் நிற்கின்றவர் விண்ணிலுள்ள என் ஆண்டவன்தான்' என்றேன். ஆண்டவன் பணியைக் கருதி எல்லாவற்றையும் ஒருவன் துறக்கத்தானே வேண்டும். என்னுடைய நன்மையை—என்னுடைய பேரின்ப வாழ்வை அவர்கள் கவனிக்காத காரணத்தால், ஆண்டவன் என்மீது கருணையைப் பொழிந்துவிட்டான் என்று கூறிவிட்டேன். "ஓர் இரவு கனவு கண்டேன். கன்னி மேரி என்மீது அருள் காட்டிவிட்டார். அவருடைய மடியில் ஒரு தெய்வக் குழவி அமர்ந்திருந்தது. 'அச்சமின்றி என் குழந்தையை முத்தமிடுவாயாக' என்றார் அவரும். அந்தக் குழந்தையும் தன் திருக்கரங்களை நீட்டிற்று. நானும் தயக்கமின்றி உலக அன்னை பணித்தவாறு செய்தேன்" என்று இவர் குறிக்கின்றார். அத்தகைய அனுபூதிக் காட்சி ஏற்பட்டதும், ஞானி ஃபிரான்ஸிஸ் மடத்திற்குத் தளராத பணிகளை ஆற்றத் தொடங்கிவிட்டார். ஒரு நாள் பார்மாவிலிருந்து வந்து என்னை வாய் கைப்புற வைதார். 'உன் பணிக்காகக் கணக்கிலாதவர் காத்துக்கொண்டிருக்கவும், ஏனோ வீடுகள்தோறும் இரக்கத் தொடங்கிவிட்டாய்! உன் தந்தையோ ஆற்றொணாத் துயரால் உடல் மெலிந்துபோய் விட்டார். உன்பால் வைத்த அன்பின் மிகுதியால் தெய்வத்தின்மீதுள்ள நம்பிக்கையும் அவருக்குத் தேய்ந்துவிட்டது' என்று என்னிடம் சொன்னார். அன்றிரவு நான் கண்வளர்கிறபொழுது ஆண்டவன் கனவில் தோன்றி எனக்கு ஆறுதல் அளித்தார். இவர் அந்தக் காலத்துப் பாதிரிகளின் போலி வாழ்க்கையைக் கண்டு உள்ளம் நைந்தார். ஃபிரான்ஸிஸ் மடத்தில் அறிவிலும் தூய்மையிலும் கார்டினல்களைக் காட்டிலும் எவ்வளவோ மடங்கு உயர்ந்தவர்கள் இருக்கின்றார்கள் என்று அச்சமின்றிச் சாற்றினார். கிறித்துவர்களிடத்தே உண்மையான சான்றாண்மை இல்லாததுபற்றி உளம் சாம்பினார். இவருடைய சுயசரிதம் அந்தக் காலத்து நிலையை நன்கு சித்திரிக்கின்றது.

## போனவென்சுரா (Bonaventura)

13ஆம் நூற்றாண்டின் அறிவுத்துறைகளின் சிறப்புகளை ஞானி போனவென்சுரா, ஆல்பர்ட்டஸ் மாக்னஸ் (Albertus Magnus), ஞானி தாமஸ் அக்யுனஸ் (St. Thomas Aquinas), ரோஜர் பேக்கன் (Roger Becon)—

இவர்கள் இயற்றிய நூல்கள் வாயிலாகவும் புரிந்த அருஞ்செயல்கள் மூலமாகவும் நாம் உணரமுடியும். ஞானி போனவென்சுரா திரியும் உலகமும் ரோஜர் பேக்கன் உலாவுகின்ற வட்டமும் மாறுபட்டதேனும், இவ்விருவரும் ஞானி ஃபிரான்ஸிஸ் மடத்தைச் சார்ந்தவர்கள் என்பதை நாம் மறக்கக்கூடாது. ஆல்பர்ட்டஸ், ஞானி தாமஸ்—இவ்விருவரும் ஞானி டாமினிக் மடத்தினர்கள் என்பதை நாம் நன்கறிவோம்.

ஞானி போனவென்சுராவின் நூல்கள்மீது 2ஆம் நூற்றாண்டின் அறிவுத் துறையின் சாயைதான் படர்கின்றது என்று இயம்பலாம். மேலே குறிப்பிட்ட அறிஞர்கள் அனைவரும் சமகாலத்தவர்களே. ரோஜர் பேக்கனைத் தவிர மற்றையவர்கள் ஒருவரை ஒருவர் அறிவார்கள். ஞானி தாமஸ், ஆல்பர்ட்டின் மாணுக்கராவர். பாரிஸ் மாநகரத்துப் பல்கலைக்கழகத்தில் இறையியல் ஆசிரியர்களாகத் தாமஸ், போனவென்சுரா—இவ்விருவரும் திகழ்ந்தார்கள் என்று வரலாறு கூறுகின்றது. ஆல்பர்ட்டஸும் போனவென்சுராவும் ஒருவரையொருவர் அறிந்திருக்கக்கூடும். பேக்கனும் பாரிஸ் நகரத்தில் படித்தும் ஆசிரியத் தொழில் நடத்தியும் தம் பொழுதினைப் போக்கியவர்; ஆதலால், அறிந்திருக்கலாம் என்று ஐயமின்றிச் சாற்றுவதற்கு இடமில்லை. ஆல்பர்ட்டஸும் தாமஸும் வேந்தர் குலத்தில் பிறந்தவர்கள். இறையியலைப் பரப்புதற்பொருட்டுத் தங்கள் நீள்திருவை நீத்துவிட்ட உயர் தியாகிகள் என்று மொழியலாம். பேக்கன் பிறந்த குடும்பம் செல்வம் படைத்த குடும்பமாகும்; 'போனவென்சுரா' தோன்றிய குலம் மிகத் தாழ்ந்த குலமாகும். 'ஃபிடன்ஸாவைச் சார்ந்த ஜான்' (John of Fidanza) என்பதுதான் இவருக்குச் சூட்டிய நாமமாகும். இவர் தம்மைப் 'போனவென்சுரா' என்று அழைத்துக் கொண்டார். கார்டினல் பதவியை அடைந்தார்; ஞானியாகவும் மிளிர்ந்தார். இத்தகைய சான்றோன் டஸ்கனிலுள்ள பாக்னொரியா (Tuscan, Village of Bagnorea) என்னும் சிற்றூரில் 1221 அல்லது 1222ஆம் ஆண்டில் பிறந்தார். இவர் குடும்பத்தில் பாதிப் பேர்கள் இத்தாலி மொழியில் பேசக்கூடும் இயல்புள்ளவர்கள்; பாதிப் பேர்கள் லத்தீன் மொழியைத் தமக்குத் தாய்மொழியாகக் கொண்டவர்கள். இவர் தட்டுத்தடங்கலின்றி லத்தீன் மொழியில் தம் கருத்துகளை வெளியிட்டார். 1243ஆம் ஆண்டிலிருந்து 1245ஆம் ஆண்டுவரையில் பாரிஸ் மாநகரத்தில் இறையியலைக் கற்றார். 1245ஆம் ஆண்டு பி. ஏ. பட்டம் பெற்றார். ஹேல்ஸைச் சார்ந்த அலக்ஸாண்டர் (Alexander of Hales) ஆற்றிய சொற்பொழிவுகளைக் கேட்டு உள்ளம் தெளிந்தார். தம்முடைய 17ஆம் ஆண்டில் ஃபிரான்ஸிஸ் மடத்தில் சேர்ந்துவிட்டார். தம் மடத்தின் உரிமைகளுக்காகப் போராடினார். உலக இயலில் (Seculars) ஆழ்ந்தவர்களோடு இவர் போராடாமல் இருக்க இயலுமோ?

இடைக்காலத்து இறையியலில் ஒரு சிகரமாய் நிற்பவர் ஞானி அகஸ்டைன் என்பவர் என்பதில் யாதோர் ஐயமுமில்லை. தத்துவத்திற்கே ஓர் அரசியாகத் திகழ்ந்து காட்சியளிப்பது இறையியலேயாகும். ஞானி அகஸ்டைன்

மீது பிளேட்டோ கண்ட தத்துவம் ஆட்சிபுரிந்ததை நாம் அறிவோம். புது முறை பிளேட்டோ கொள்கைமீது அரிஸ்டாட்டிலின் தத்துவ நிழல் படராமல் இல்லை. ஆனால், ஞானி அகஸ்டைன் தேர்ந்த உண்மை ஸ்டாயிக் கொள்கை அன்று; அரிஸ்டாட்டில் கண்ட தத்துவமன்று.

நாம் நல்லவர்களாயிருந்தால் போதும்; உண்மை தானே உதயமாகும். அறிவைக்கொண்டு ஆண்டவனை நண்ண முடியும் என்று ஞானி தாமஸ் அக்யுனஸ் கூறுகின்றார். ஆண்டவன் அருட்கோயிலை நண்ணுவதற்கு அன்பும் அறமும் போதுமென்று போனவென்சுரா மொழிகின்றார். 'அறிவு, ஆண்டவன் கோயிலின் புறத்தைக் காட்டிவிடும்; ஆனால், அன்புதான் அவன் வீற்றிருக்கும் அரியாசனத்திற்கு நம்மை அழைத்துச் செல்லும்' என்று இராமகிருஷ்ண பரமஹம்சர் அருளியது நெடுங்காலம் சிந்திப்பதற்குரியது. புலனறிவைக் கொண்டு கட்புலன் வட்டத்தில் மிதந்துவருகின்ற உலகத்தின் பொருளைக் கொண்டு ஆண்டவனை நண்ணுதற்கு முடியாது. அகத்தில் உறைந்து நிற்கின்ற அவன் அருட்சோதி கொண்டுதான் அவன் தாள்களை நாம் அடைய முடியும். 'நான் ஓர் அறிவுக் கனியாய் விளங்குவது என்னுடைய அறிவாலன்று; என் உள்ளத்தே நின்று நீ தூண்டுகின்ற அறிவுச் சுடரைக்கொண்டுதான் உன்னுடைய இயல்பை நான் அறிகின்றேன்' என்று தாயுமானவர் கூறுகின்றாரன்றோ. கடவுளின் அருளொளி தேவையில்லை என்று அரிஸ்டாட்டில் சாற்றுகின்றார். ஆண்டவனுடைய அருளொளி இல்லாமல் அவனுடைய அருளைப் பெறமுடியாது என்று ஞானி அகஸ்டைன் இயம்புகின்றார்.

போனவென்சுரா, ஞானி அகஸ்டைனின் அடிச்சுவட்டைப் பின்பற்றுகின்றார். இவருடைய தத்துவத்தைக் கிறித்துவ தத்துவம் (Christian philosophy) என்று மொழியலாம் என்று கோப்லஸ்டன் (Copleston) கருதுகின்றார்.

'நான் இயேசுநாதரின் தந்தையான ஆண்டவனுக்கு வணக்கம் செய்கின்றேன். உங்களுடைய குலையாத நம்பிக்கையால் உங்களுடைய இதயங்களில் இயேசுநாதர் உறையட்டும். மனித அறிவைக்கொண்டு எல்லாவற்றிற்கும் மூலமான ஆதிச்சோதியை உணரமுடியாது; அவன்தான் தன்னைப் புலப்படுத்திக்கொள்ள வேண்டும். அவனுடைய ஞானச்சுடர் வெள்ளம் அவனருளால்தான் நம் உள்ளத்தில் பாயவேண்டும்.' என்று கூறுகின்றார். ஞானி ஃபிரான்ஸிஸ் கண்டதுபோல, இவரும் இவ் வையகத்திலுள்ள பொருள்களனைத்திலும் ஆண்டவன் வடிவு காணவேண்டுமென்கிறார். இயற்கைக் காட்சிகளிலும் ஒலிகளிலும் ஆண்டவன் அருட்காட்சியை ஓர்கின்ற ஓர் அனுபூதிச் செல்வர் இவர் என்று கூறலாம்.

'இயேசுநாதர்தாம் ஆண்டவனை அடையக்கூடிய நம் பாதை ஆவார்; அவருடைய கோயிலின் கதவாயும் அவர் திகழ்கின்றார்' என்று இவர் அருளும் மொழிகள் நம் சிந்தையைக் கவராமற்போகா.

கடவுளின் இருக்கைதான் இவர் கண்ட தத்துவத்தின் நடுநாயகமாய்த் திகழ்கின்றது. அவன் இல்லை என்று கூறுவது அறிவீனமாகும். சற்றுச் சிந்தித்து ஆன்மா தன்னை உணர்ந்தால் ஆண்டவன் அருட்காட்சி அரும்பி விடும். ஆன்ம வடிவு புலனாகுமாயின், ஆன்மாவுக்கும் பரமான்மாவுக்கும் உள்ள தொடர்பு தோன்றும் என்று நம் வைணவ சித்தாந்தமும் செப்பு கின்றது. சஞ்சலப்படுகின்ற மனத்தின்கண் குலையாத அறிவுச் சுடராய் விளங்குவதுதான் கடவுளாகும் என்கிறார். இயற்கை அனைத்தும் கடவுள் உண்டென்று முரசடிக்கின்றன. ஆனால், கடவுளின் இருப்பை மெய்ப்பிப்பதற்கு உலக இயலை ஆராய்ச்சி செய்யத் தேவையில்லை என்று போனவென்சுரா மொழிகின்றார். வரம்புள்ள வியக்திகள் (Beings) ஆண்டவனிடமிருந்து வேறுபட்டவை. அவை யாவும் ஆண்டவனுடைய நிழல்கள்தாம்; வடிவங்க ளென்றும் இயம்பலாம். படைக்கப்பட்டதோடு படைப்போனும் எப்படிப் பிணைந்திருக்கிறான் என்பதுதான் போனவென்சுராவின் இடையறாத சர்ச்சை யாகும். எல்லா அறிவுத்துறைகளைக் கற்பதும் அவற்றைக் கற்பதன்பொருட்டே யன்று. ஆண்டவனைக் காணுதற்பொருட்டு அவை துணை புரிகின்றனவா என்பதைத்தான் நாம் கருதவேண்டும்.

ஆன்மாவிற்கும் உடலுக்கும் உள்ள தொடர்பைப்பற்றி இவர் இயம்பு கின்றார். ஆனால், ஆன்மாவின் ஒளியால்தான் உடல் இலங்குகின்றது என்னும் உண்மையில் வேரூன்றியவர். ஆன்மா தனித்து நிற்கின்றது ; அது அழிவற்றது ; ஆண்டவனை அது நாடுகின்றது. ஆண்டவனை அடையக்கூடிய படிகளையும் போனவென்சுரா சித்திரிக்கிறார்.

ஊனக்கண், அறிவுக்கண்—இவற்றைத் தவிர தியானக் கண்ணும் நமக்கு ஆண்டவனால் நல்கப்பட்டிருக்கிறது. ஐம்புலன்களாலும் கற்பனையாலும் கடவு ளின் வடிவங்களை நாம் ஓர்கின்றோம். நினைவு, பகுத்தறிவு, சங்கற்பம் (memory, reason, will) இவை துணைபுரிகின்றன. இம் முதல் மூன்று படி களிலும் ஆண்டவனுடைய அருள் நமக்கு உதவியை அளித்தாலும், நம்மிடத் திலேயே கடவுளைக் காணும் நிலையில்தான் மிகுதியான ஆண்டவனுடைய அருளை நாம் பெறுகின்றோம். அவனுடைய இருக்கை (Being), அவனுடைய பெருநலம் (goodness), முத்தத்துவத்தின் மர்மம் (the mystery of the Holy Trinity) ஏழாம் நிலையில் சொற்கடந்த பேரின்பத்தையும் அமைதியையும் பாய்ச்சுகின்றன. ஆனால், இவற்றை அவன் அருள் நமக்குப் புலப்படுத்துகின்றது.

இந்தப் பேரன்பின் வெள்ளத்தில் ஆன்மாவுக்கும் பரமான்மாவுக்கும் உள்ள மாறுபாடு கரைந்துவிடுகிறதில்லை என்பதை நாம் உணரவேண்டும் என்று இவர் உரைக்கின்றார். போனவென்சுரா ஒரு தத்துவ வித்தகர் மட்டு மில்லை; இவர் ஓர் அனுபூதிச் செல்வராயும் மிளிர்கின்றார் என்பது மெய்யே.

## போனவென்சுராவின் அடிச்சுவட்டிலே

அக்லியஸ் பார்டாவைச் சார்ந்த மாத்யூவும் (Mathew of Agnias Parta) ஜான் பெக்காமும் (John Peckham) இவருடைய சீடர்களாவார்கள். 1235ஆம் ஆண்டிலிருந்து 1302ஆம் ஆண்டுவரையில் இவர் உயிர்வாழ்ந்துவந்தார். பாரிஸ், பொலொஞ இவ்விடங்களில் எம்.ஏ. பட்டங்கள் பெற்று ஆசிரியராய்த் திகழ்ந்தார். 1288ஆம் ஆண்டு கார்டினலாய் அமைக்கப்பட்டார். 'வினுக்களின் தொகுதி' (A Collection of Questions) என்னும் நூலின் வாயிலாக இவருடைய ஆழ்ந்த கருத்தும், தெளிவான உரைநடையும், திருந்திய சொல்வன்மையும் புலனுகின்றன. டன்ஸ் ஸ்கோடஸ் (Duns Scotus) என்னும் சிறந்த ஆசிரியர் மாத்யூவிடமிருந்து பெற்ற கருத்துகள் கொஞ்சநஞ்சமல்ல. அடிப்படையான நம்பிக்கைக்கும் அறிவுக்கும் உள்ள தொடர்பை ஆராய்கின்ருர். இவர் இயற்றிய நூலின் ஒவ்வொரு பக்கத்தின்மீதும் ஞானி அகஸ்டைனின் தத்துவச் சாயல் படர்வதைப் பார்க்கின்ருேம். அடியிலிருந்து அறிவு தொடங்கி மேலிருந்து பொழிகின்ற ஆண்டவனுடைய அருளை நாடுகின்றது. ஆண்டவனுடைய வடிவத்தை அவன் படைப்பில் ஒருவன் உணர்கின்ருன். ஆண்டவனுடைய நேர்க்காட்சியைக் காண்பது என்பது ஒவ்வோர் ஆன்மாவின் இயல்பைப் பொறுத்ததாயிருக்கிறது. அருட்காட்சி அறிவுக்குப் பொருளில்லை. மற்ற விஷயங்களை அறிவதற்குற்ற துணையாய் அது திகழ்கின்றது. எல்லாவற்றிற்கும் அடிப்படையான உண்மையாயிருப்பது ஆண்டவன் அருளேயாகும். உலக அனுபவம் நம்மிடத்தே இயற்கையாய் அமையவில்லை. புற உலக அறிவு நமக்கு ஐம்புலன்கள் வாயிலாகத்தான் வருகின்றது. ஆனல், புறப்பொருள் நம்முடைய ஆன்மாவைப் பாதிக்கிறதில்லை. ஆனல், ஆன்மா புற உலகத்தின் உதவியில்லாமலேயே கருத்துகளை அழைத்துக் கொள்ளும் ஆற்றல் பெற்றிருக்கிறது. தாமஸ் கொண்ட கருத்தை இவர் அலசிப் பார்க்கின்ருர். அத்தகைய கருத்தில் முழு உண்மை இல்லை என்கிருர். ஆன்மாவுக்குத் தன்னைத் தான் அறிந்துகொள்ளும் வன்மையிருக்கிறது. புறச் செயல்கள் வாயிலாக அறிந்துகொள்ளவேண்டிய நியதியில்லை; ஐம்புலன்கள் வழியாகத்தான் அறிந்துகொள்கிறது என்று தாமஸ் அளிக்கும் கருத்தை இவர் எதிர்க்கிருர். இங்கு ஞானி அகஸ்டைன் கண்ட கருத்தைத்தான் இவர் வலியுறுத்துகின்ருர் என்பதுதான் உண்மையாகும். ஆன்மாவுக்கும் உடலுக்கும் நெருங்கிய தொடர்பு இருந்தாலும், ஆன்மா தனித்து நின்ற பரமான்மாவின் இடையருத தொடர்பால் அனுபூதிச் செல்வத்தை எய்துதல் இயலும் என்று இவர் இயம்புகின்ருர்.

ஜான் பெக்காம் (John Peckham) பாரிஸ் மாநகரில் ஞானி போனவென்சுராவின் மாணுக்கராய்த் திகழ்ந்தார். ஆக்ஸ்ஃபோர்ட்டில் எம்.ஏ. பட்டம் பெற்ருர். 1279ஆம் ஆண்டிலிருந்து 1292ஆம் ஆண்டுவரையில் காண்டர்பெரியின் ஆர்ச் பிஷப்பாய் விளங்கினர். புற உலகை அறிவு சிந்தித்து அறிகின்றது. ஆனல், அந்த அறிவு ஆண்டவனல் ஒளியுறுகின்றது. கடவுளின் இருப்பையும், ஆன்மாவின் இயல்பையும், எல்லா அறிவையும் இயக்குவிக்

கிறதும், என்றும் மாறுதலில்லாததுமான ஒரு தத்துவத்தையும் அது யாதோர் உதவியுமின்றி நேரிடையாக அடைந்துவிடுகின்றது. ஆன்மா அழிவற்றது. உடலோடு தொடர்பு பெற்றிருந்தாலும், அது தனிப்பட்டுத் திகழ்கின்றது. அழிவற்ற அதற்கு எப்படி பிரகிருதியின் தொடர்பு வந்தது என்னும் கேள்விக்கு இன்னும் முடிவுகாண முடியவில்லை; எஞ்ஞான்றும் காண முடியாதுதான். பிறப்பும் இறப்புமற்ற ஆன்மாவுக்குக் கருமத்தளை வருவானேன் என்னும் வினவிற்கு விடையளிக்க இயலாது. அது சொற்கடந்தது.

## பீட்டர் ஜான் ஒலிவி

## (Peter John Olivi)

இவர் ஞானி போனவென்சுராவின் குழுவைச் சார்ந்தவர். ஸெலிக்னன் (Selignan) என்னும் இடத்தில் 1248ஆம் ஆண்டோ அல்லது 1249ஆம் ஆண்டோ பிறந்ததாகத் தெரியவருகின்றது. இவர் இயற்றிய 'வினாக்கள்' என்னும் நூல் 1878ஆம் ஆண்டு வெளி வந்தது. இந் நூல் வாயிலாக, இவர் அரிஸ்டாட்டில், ஞானி அகஸ்டைன், அரேபியர்கள்—இவர்கள் கண்ட தத்துவங்களை நன்கு அறிந்தவர் என்பது நன்கு புலனாகின்றது.

படைப்புச் செயல் பரிபூரணனுக்கே உரியது என்பதை நிலைநாட்டுகின்றார். இத்தகைய அருஞ்செயலை ஆற்றும் சக்தி அவருக்கே உரியது. தனிப்பொருள்கள்தாம் இருக்கின்றன. பொதுமை (universal) என்பது கருத்துப் பொருள்தான் (concept). படைக்கப்பட்ட பொருள்கள் யாவும் பிரகிருதியும் அதில் கரந்து நிற்கின்ற உருவங்களுமாகும். நிமித்த காரணத்தைப் பற்றியும் சலனத்தைப்பற்றியும் இவர் நீண்டதோர் ஆராய்ச்சி செய்கின்றார். உடலைப்பற்றியும் ஆன்மாவைப்பற்றியும் இவர் சிந்திக்கின்றார். உடல் பூத சம்பந்தமானது; ஆன்மாவோ பிரகிருதி சம்பந்தமற்றது. அதற்குள் மூன்று வடிவங்கள் இருக்கின்றன. அன்னமயம் (vegetative), உணர்கின்ற மனோமயம் (sensative), விஞ்ஞானமயம் (intellectual life)—இம் மூன்றும் சேர்ந்துதான் மனித ஆன்மாவாகின்றது என்று இவர் இயம்புகின்றார். அன்னமயம், பிராணமயம், மனோமயம், விஞ்ஞானமயம், ஆனந்தமயம்—இவற்றிற்கு அப்பால் அந்த ஆன்மா இலங்குகின்றது என்று நாமும் சாற்றுகின்றோம். இதில் ஒன்றும் புதுமையில்லை. பன்மை உருவங்கள் வாதம், பிரகிருதி சம்பந்தமற்ற ஆன்மப் பொருள் வாதம்—இந்த இரண்டு வாதங்களையும் இடைக்காலத்துத் தத்துவ ஆராய்ச்சி உலகத்தில் நாம் பார்க்கின்றோம். இவர் ஞானி அகஸ்டைன் கூறினதை ஏற்றுக்கொள்ளவில்லை. ஞானி தாமஸ் அக்யுனஸ் பெயரைச் சொல்லாமலேயே அவரைத் தாக்குகின்றார். ஆண்டவன் அருட்சக்தியிலிருந்து எல்லாம் வெளிக்கிளம்புகின்றன என்னும் புது பிளேட்டோ தத்துவக் கொள்கையினரின் கருத்தும் இவருக்கு உடன்பாடில்லை. மேலும், ஆன்மாவிலுள்ள அறிவுச் சக்தி உடலை இயக்குதற்குரிய சக்தியாய் அமையவில்லை. அன்ன

மயமும் மனோமயமுந்தாம் உடலுக்கு உருவம் கொடுக்கின்றன. அறிவு ஒரு பொருளாய்த்தான் இலங்குகின்றது. இந்த அறிவு அந்த உடலை ஊடுருவிச் செல்லாது. இவற்றின் வாயிலாக அன்னமயம் மனோமயம் வாயிலாகத்தான் இதன்மீது செயல் புரிகின்றது. ஆன்மா என்பது உடலுக்குப் புறம்பாய் உள்ள ஒரு பொருள். ஏதோ இவ்வுடலோடு ஒரு தொடர்பு ஏற்பட்டிருக்கிறது. இந்த ஆன்மா இந்த உடலை உருவாக்கவில்லை என்னும் கொள்கையை இவர் வெளியிட்டார். இதற்கு எதிர்ப்பும் எழுந்தது. ஹேல்ஸைச் சார்ந்த அலக்ஸாண்டர், ஞானி போனவென்சுரா இவர்களிடமிருந்து மேற்கோள்கள் காட்டினாலும், இவர் தனியாய்த் தம் சிந்தனைப் பாதையில் செல்லும் இயல்பினர் என்பதில் யாதோர் ஐயமுமில்லை.

## ஆல்பெர்ட் பெரியார்
## (Albert the Great)

இவர் 1195ஆம் ஆண்டு லாயுங்கன் (Lauingen) என்னும் இடத்தில் பிறந்ததாகத் தெரிகின்றது. 1206 அல்லது 1207ஆம் ஆண்டிலோ தோன்றினதாக வேறு சிலர் கூறுவர். 1223ஆம் ஆண்டு டாமினிக்கன் மடத்தைச் சேர்ந்தார். 1240ஆம் ஆண்டு சாக்ஸனியில் ஒரு வால்நட்சத்திரத்தைக் கண்டதாக மொழிகின்றார். உலோகங்களின் இயல்புகளைத் துருவி ஆராய்தற் பொருட்டு இவர் வெளிநாடுகளுக்குச் சென்றார். இயற்கைக் காட்சிகளை விஞ்ஞான முறையில் நோக்கும் பண்பாடு உடையவர் என்பது நன்கு புலனாகின்றது. பல பல்கலைக்கழகங்களில் பேராசிரியராகத் திகழ்ந்த செய்தியை நாம் அறிவோம். 1245ஆம் ஆண்டிலிருந்து 1249ஆம் ஆண்டுவரையில் பாரிஸ் மாநகரத்தில் இவருடைய புகழ் உச்சநிலையை அடைந்துவிட்டது என்று சாற்றலாம்.

இவரை ஒரு விஞ்ஞானி என்று இடைக்காலம் போற்றிற்று. ரோஜர் பேக்கன் இவர்மீது அன்பு வைக்காதுபோயினும் இவருடைய மாபெரும் புகழுக்குச் சான்று நல்குகின்றார். ஞானி தாமஸ் அக்யுனஸ் இவருடைய மாணாக்கராவார்.

ஆல்பர்ட்டின் படிப்பில் விரிவு இருந்ததே ஒழிய ஆழமில்லை என்று தில்லி (Thilly) உரைக்கின்றார். ஆழ்ந்த சிந்தனையிலும், எதையும் துருவி ஆராயும் நுண்ணறிவிலும் ஞானி தாமஸ் அக்யுனஸ், ஆல்பெர்ட்டைவிடச் சிறந்தவர் என்பதில் ஐயமில்லை.

அரிஸ்டாட்டில் எழுதிய நூல்களுக்கு ஆல்பெர்ட் விரிவான உரைகள் எழுதியுள்ளார். அரேபிய நாட்டுத் தத்துவ வித்தகர்களின் நூல்களும் புது முறைப் பிளேட்டோவின் கருத்துகளைப் பின்பற்றுகிற சான்றோர்களின் நூல்களும் இவருடைய சிந்தையைக் கவர்ந்தன. விஞ்ஞானத்துறையில் இவர் மற்றவர்களுக்கு ஒரு பெரும் ஊக்கத்தை அளித்தார். எல்லாவற்றையும்

கூர்ந்து பார்க்கவேண்டுமென்றார் (observation). கண்டவற்றைச் சோதித்துப் பார்த்தால்தான் (experiment) விஞ்ஞானத்திற்கு அழகு என்று தேர்ந்தார். தொகுப்பு வழிமுறையைப் (inductive method) பின்பற்றினார். பூகோளம், வானநூல், உலோக இயல், இரசவாதம், மருத்துவம், விலங்கியல் முதலியவற்றில் இவர் ஆழ்ந்தார் என்றால், இவர் விஞ்ஞானத்தின்பால் வைத்த அன்பு புலனாகமற்போகுமோ ?

அரிஸ்டாட்டில் கண்டவற்றைப் புலமைக் கொள்கைக்கு ஏற்றவாறு அமைத்தார். கடவுளை எல்லாவற்றையும் இயக்குவிக்கும் ஆதிசக்தி (First mover) என்கிறார் அரிஸ்டாட்டில். *அதற்கு மாறாக, 'வரம்பற்ற பரம்பொருள்' என்று* இவர் இறைவனுக்கு இலக்கணம் வகுத்தார். பல விஷயங்களில் ஞானி அகஸ்டைனின் அடிச்சுவடுகளைப் பின்பற்றுகின்றார். 'பிரகிருதியும் வடிவமும்' என்னும் கொள்கைக்கு இவர் ஆதரவு காட்டுவதையும் நாம் உணர்கின்றோம். பன்மை வடிவக் கொள்கையைத் (plurality of forms) தம் அப்பாலைத் தத்துவத்திலிருந்து (Metaphysics) இவர் விலக்கிவிடவில்லை. வெறும் கருத்துகளைத் துருவி ஆராய்வதால்மட்டும் இறைவன் இருப்பைத் தேர்தல் இயலாது. புலன் சார்வைக் (a posteriori) கொண்டுதான் ஆண்டவன் இருக்கிறான் என்பதை நிறுவ முடியும். உலக இருப்பைக்கொண்டு இதை இயக்குவிக்கும் ஒரு சக்தி இருக்கின்றது என்று நாம் அறிகின்றோம் என்பது தான் உண்மையாகும். 'கடவுள் உயர்வற உயர்ந்த ஒரு பரம்பொருளாகும். அது சின்மயமானது. கீழான பலவற்றையும் அது படைத்தாலும், அவற்றிலும் அதனுடை ஓர் பேரறிவு விளங்கக் காண்பீர்' என்று இவர் உரைக்கின்றார். பிரகிருதி அனாதியானது என்று அரிஸ்டாட்டில் கூறும் தத்துவத்தை இவர் எதிர்த்துதான் வாதாடுகின்றார். உலகம் அனாதியென்றோ அல்லது எப்பொழுது தோன்றிற்று என்றோ மனித அறிவு கூற இயலாது என்று இவர் இயம்புகின்றார். மேலும், தத்துவ ஆராய்ச்சிக்குரிய விஷயங்கள் தத்துவ ஆராய்ச்சி முறையில் ஆராயப்படவேண்டும். இறையியல் கருதுகின்ற பொருள்களை இறையியல் முறையிலேதான் நாம் உய்த்து உணரவேண்டும் என்று இவர் உரைக்கின்றார். சான்றாக முக்கொள்கை (Trinity), அவதாரம் (Incarnation)—இவற்றைத் தருக்க அறிவுகொண்டு விளக்க இயலாது. வெறும் பாழிலிருந்து ஒன்றும் தோன்றிவிடாது என்று விஞ்ஞானம் கூறலாம். ஆனால், இத்தகைய கருத்து இறையியலுக்குப் பொருந்தாது. கடவுள் வெறும் பாழிலிருந்து எதையும் படைக்கலாமன்றோ ! ஆண்டவன்பால் நம்பிக்கை வைப்பதுபோன்ற பொருள்களில் நமக்கு வழிகாட்டியாயுள்ளவர் ஞானி அகஸ்டைனாகும். விஞ்ஞானத்துறையில்—அறிவு புகுந்து ஆற்றல் செய்யும் துறையில்—நாம் அரிஸ்டாட்டிலைப் பின்பற்றவேண்டும் என்று இவர் மொழிகின்றார். மேலும், மேரி அம்மையை வழிபடுவதை இவர் வற்புறுத்திப் பேசுகின்றார். மனிதனுக்காக இந்த அம்மை ஆண்டவனிடம் பரிந்து பேசுகின்றார் என்று கூறுகின்றார். பிராட்டி மாந்தர்களுக்காக ஆண்டவனிடம் பரிந்து பேசுகின்றார் என்ற தத்துவத்தில் வைணவர்களும் வேரூன்றியவர்கள்தாமே.

# 19. ஞானி தாமஸ் அக்யுனஸ்

மேல்நாட்டு ஞானி தாமஸ் அக்யுனஸ் இடைக்காலத்துத் தத்துவ வரலாற்று உலகத்தில் ஒரு சிகரம்போலத் திகழ்கின்ருர் என்பது உண்மையே. இவர் இருந்த காலத்தில் ஆல்பர்ட் பெரியார் (Albert the Great), ஞானி போன வென்சுரா (St. Bonaventura), டன்ஸ் ஸ்கோடஸ் (Duns Scotus) முதலிய மாபெருஞ் சான்ரோர்கள் ஞான ஒளிவிட்டுத் திகழ்ந்தாலும், இவருடைய அறிவுச் சுடர் மங்கிப்போய்விடவில்லை.

ஞானி அகஸ்டைன் காலத்திலிருந்து ஞானி தாமஸ் அக்யுனஸ் காலம் வரையில் பிளேட்டோவின் தத்துவம் ஆட்சிபுரிந்தது என்பது மெய்யே ; ஆனல், தாமஸ் அக்யுனஸ் முன்பு அரிஸ்டாட்டிலின் கொள்கையைப் போற்றின அறிஞர் கள் இல்லை என்பது உண்மையன்று. தாமஸ் அக்யுனஸ் அரிஸ்டாட்டிலின் அடிச் சுவட்டைப் பின்பற்றிக் கிறித்துவ சமயத்திற்கு அதை ஒட்டி ஒரு விளக்கம் நல்கு கின்ருர்.

பகுத்தறிவுக்கும் நம்பிக்கைக்கும் வெம்போர் நிகழ்ந்தது ; ஏன், இப் பொழுதுந்தான் அந்தப் புயல் ஓய்ந்தபாடில்லை. அநுபூதி நெறியா (the mystic way) அல்லது அறிவு வகுக்கின்ற பாதையா நாம் பின்பற்றுவது என் னும் வினவிற்கு இன்னும் ஒரு முடிவு கண்டிலோம். அனுபூதி நெறி பகுத்தறிவுப் பாதைக்கு முரண்பாடில்லை ; பகுத்தறிவின் உயர்ந்த நிலைதான் அனுபூதி நெறி என்று செப்புவாரும் உளர். பிளேட்டோவிடம் கனிந்த ஞானம் மிளிர்ந்தது ; அரிஸ்டாட்டிலிடம் வெறும் அறிவுதான் திகழ்ந்தது. ஞானம் அறிவைவிடப் பெரி தன்ருே ?

ஞானி அகஸ்டைன் உள்ளொளித் தத்துவத்தில் வேருன்றியவர் ; மேலும், ஆன்மா உடலாம் சிறையில் சிக்கிக் கிடக்கின்றது ; ஆன்மாவுக்கும் உடலுக்கும் யாதொரு தொடர்பும் இல்லையென்று பிளேட்டோ கொள்கையினர் கூறுகின் றனர். ஆனல், ஞானி தாமஸ் அக்யுனஸ் சான்ருேனுக்கு இத்தகைய கொள் கையில் சற்றும் நம்பிக்கையில்லை. உடலும் ஆன்மாவும் ஒன்ருய் அமைந்த ஒரு தத்துவமென்று அவர் கருதுகின்ருர்.

ஐம்புல நெறியின் நுகர்ச்சிகொண்டு நாம் உண்மையை நாடமுடியும். அக வொளிச் சான்றுகொண்டுதான் ஆண்டவனை அடையவேண்டும் என்னும் நியதி இல்லை என்னும் உண்மையை ஞானி தாமஸ் அக்யுனஸ் வற்புறுத்துகின்றார். ஆனால், உண்மையை உரைக்குமிடத்து, பிளேட்டோ கொண்ட தத்துவத்தின் ஒளியைக்கொண்டும் அரிஸ்டாட்டிலின் தத்துவச் சுடரைக்கொண்டும் ஈறில் கடவுளின் அருள்நகரை ஞானி தாமஸ் அக்யுனஸ் அடைந்தார். கீழ் உலகத்திற்கு வர்ஜிலைப்போல வழிகாட்டியாக அரிஸ்டாட்டில் அமையலாம்; ஆனால், விண்ணவர் நாட்டை எய்துவதற்குப் பிளேட்டோவும் ஞானி அகஸ்டைனும் நமக்கு வேண்டும் என்று பிளேட்டோவைப் பின்பற்றுகிற ஓர் அறிஞர் கூறினாராம்.

வர்ஜில், தாந்தேயிக்கு விண்ணவர் வாயில்வரையில் நெறி காட்டிவந்தார்; ஆனால், அவர் அந்த நாட்டில் புகமுடியாது; ஏனெனில், அவர் கிறித்துவரல்லர். அதுபோல அரிஸ்டாட்டில் தத்துவமாம் நீண்ட நெறியில் ஞானி தாமஸ் அக்யுனஸ் என்னும் பெரியாருக்கு நண்பராய்த் திகழ்ந்தார்; ஆனால், அமரநாடு புகுவதற்கு அகஸ்டைன் உதவியைத்தான் அவர் நாட நேர்ந்தது என்று கூறிய அறிஞரிடத்தில் ஓர் உண்மை இல்லாமலில்லை. அகஸ்டைனின் தத்துவச் சுடரும் அரிஸ்டாட்டிலின் பகுத்தறிவு நெறியும் ஞானி தாமஸ் அக்யுனஸ் பெரியாருக்குத் துணைபுரிந்தன என்பதுதான் பேருண்மையாகும். பகுத்தறிவுக்கு ஒரு சிறப்பை அளித்த பேறு ஞானி தாமஸ் அக்யுனஸைச் சார்ந்ததாகும். இத்தகைய சான்றோனின் வாழ்க்கை வரலாற்றைச் சற்று ஆராய்வோம்.

ஞானி தாமஸ் அக்யுனஸின் வரலாற்றில் மாபெரு நிகழ்ச்சிகளைக் காண முடியாது. ஞானி ஃபிரான்ஸிஸ் வரலாறு கவிதை நயம் ததும்பியோடும் நிகழ்ச்சி களைக் கொண்டதாய்த் திகழ்கின்றது. சாக்ரடீஸின் வீர வாழ்க்கையைப் போல இவருடைய வாழ்க்கை அமையவில்லை என்பதும் உண்மையே.

நீட்சேயின் (Nietzsche) வியத்தகு தனிப்பட்ட உருவம்போல இவருடைய உருவம் காட்சியளிக்கவில்லை. அக்யுனஸ் பல்கலைக்கழகத்துப் பேராசிரியராய் விளங்கினர். நல்லுரை வழங்கும் ஆசிரியராய் மிளிர்ந்தார். உளத்தைக் கவரக் கூடிய நாடக இயல்புபோன்ற ஒரு வரலாற்றை இவருடைய வாழ்வு நல்கக் கூடுமோ, உன்னிப் பாருங்கள்.

இவருடைய பிறந்த நாள் தெரியவில்லை. 1225ஆம் ஆண்டு தோன்றின தாக அறிகின்றோம். லம்பார்ட் (Lombard) குடும்பத்தில் உதித்தவர். ரோக்க செக்கா (Roccasecca) என்னும் கோட்டையில் பிறந்தார். இக் கோட்டை அக்யுனோ என்னும் சிறிய நகரத்தின் அண்மையிலுள்ளது. அக்யுனோ நகரமோ நேப்பிள்ஸ், ரோமாபுரி—இவ்விரு நகரங்களுக்கு இடையே இருக்கிறது. பெனி டிக்ட் மடத்தைச் சார்ந்த மான்டி காஸினோ (Monte Cassino) என்னும் பள்ளியில்தான் இவருடைய தொடக்கக் கல்வி ஆரம்பமாயிற்று. இவர் தம் பெற்றோர்களுக்கு ஏழாவது பிள்ளையாய் மிளிர்ந்தார். தாய் வழியிலுஞ்

சரி, தந்தை மரபிலுஞ் சரி, இவருடைய குடும்பம் மிகவும் புகழ்பெற்ற குடும்பம் என்பதில் யாதோர் ஐயமுமில்லை. தெட்டேவைச் சார்ந்த இவருடைய தாய் தியோடோரா (Theodora of Theate) நார்மன் மரபைச் சார்ந்தவர்; இவருடைய தந்தை லம்பார்ட் பிரபுக்கள் குலத்தில் உதித்தவர். அக்யுன ஸிடம் வடநாட்டுக் குருதியும் தென்னாட்டு இரத்தமும் கலந்து ஓடின. இவரைப் பார்த்தால் ஓர் இத்தாலியா நாட்டு மனிதன் என்று சொல்லுவதற்கு இயலாது. உடல் இவருக்கு மிகப் பெருத்ததாய் அமைந்தாலும், இவருடைய மனத்தின் கூர்மையும் இவருடைய பெருநோக்கும் நம்மை வியப்பில் ஆழ்த் தாமற்போகா.

1239ஆம் ஆண்டு இவர் நேப்பிள்ஸ் பல்கலைக்கழகத்திற்குப் படிக்கச் சென்றார். இங்கே டாமினிக்கன் மடத்தில் சேர்ந்துவிட்டார். இச் செய்தி இவருடைய பெற்றோர்களின் சீற்றத்தை எழுப்பிவிட்டது. சில காலம் இவருடைய பெற்றோர்கள் இவரைக் காவலில் வைத்திருந்தார்கள். பிறகு தம் சுதந்திரத்தைப் பெற்று ஆல்பெர்ட் பெரியாரிடம் (Albert the Great) படிக்கச் சென்றார். பாரிஸ் மாநகரத்திலும் கோலோன் என்னும் இடத்திலும் இவருடைய படிப்பு செவ்வனே பயிலப்பட்டது. 1252ஆம் ஆண்டுமுதல் 1254ஆம் ஆண்டு வரையில் விவிலிய நூலின் நயங்களைப்பற்றிச் சொற்பொழிவு நடத்தினர். 13ஆம் நூற்றாண்டு 14ஆம் நூற்றாண்டு—இந்த நூற்றாண்டுகளில் தத்துவ வித்தகர் களும் இறையியல் ஆசிரியர்களும் சொற்பொழிவுகள் ஆற்றியும் சிறந்த நூல் களுக்கு விரிவான உரைகள் எழுதியும் தம் காலத்தைப் போக்கினர்கள். அக்யுனஸ், டன்ஸ் ஸ்கோடஸ், ஒக்ஹாம் என்னும் ஊரைச்சார்ந்த வில்லியம் (William of Ockham) முதலியோர்கள் இத்தகைய துறைகளில் இறங்கிச் சிறந்த பணிபுரிந்தார்கள் என்று அறிகின்றோம்.

1256ஆம் ஆண்டு அக்யுனஸ் இறையியல் ஆசிரியராய் பாரிஸ் மாநகரத்தில் முறையாய்ப் பாடம் கற்பிக்கத் தொடங்கினர்; 1259ஆம் ஆண்டிலிருந்து 1269ஆம் ஆண்டுவரையில் இத்தாலியா நாட்டில் உறைந்து சொற்பொழிவுகள் ஆற்றிவந்தார். 1269ஆம் ஆண்டு மீண்டும் பாரிஸ் மாநகரத்தில் இறையியல் சொற்பொழிவுகளைத் தொடங்கினர். ஊர்ஊராய்ச் சுற்றித் திரியும் வாழ்வு இவருடைய மனத்திற்கு உவந்ததன்று. ஆனல், இவருடைய இடையறாத உழைப் பின் பயனாகத் தம் குறுகிய 49 ஆண்டுகளுக்குள் பற்பல நூல்களை இயற்றி விட்டார். படிப்பதிலும் எழுதுவதிலும் பேசுவதிலும் மெய்ம்மறந்த காரணத் தால், சூழ்நிலையை இவர் ஓரமாட்டார். பாதிரியாய்ப் பணியாற்றுகிறவர்களுக்கு இவர் ஓர் எடுத்துக்காட்டாக ஒளிவிட்டார். இவர் பிறர்பால் பேரன்பு காட்டும் இயல்புள்ளவர். இவருடைய இறுதி நாட்களில் இவருக்கு விலையிலா அனுபூதிச் செல்வம் கிடைத்தது. 1273ஆம் ஆண்டு டிசம்பர் திங்களில் ஒரு நாள் அனு பூதிச் செல்வத்தின் பேரொளி இவருடைய உள்ளத்தில் அருவி பாய்ந்தது. அச் சமயத்தில் தம் செயலாளரிடம் இவர் கூறியது போற்றுதற்குரியது: ‘இந்தப்

பெரிய அனுபூதிக்குப் பிறகு நான் இனி ஒன்றும் எழுதவேண்டியதில்லை. என்னுடைய நூல்களுக்கு நான் முற்றுப்புள்ளி போடவேண்டியதுதான். ஆண்டவனுடைய அருட்சோதியைக் கண்டபிறகு, எனக்கு அவனுடைய அன்பு உதயமாகியபிறகு, நான் எழுதிய யாவும் வெறும் பதரென ஓர்கின்றேன்.'

1323ஆம் ஆண்டு ஜூலை திங்கள் 18ஆம் நாளில் இவருக்கு 'ஞானி' என்னும் பெரும் பதவியை அளித்தார்கள். இவர் ஜான் என்னும் மாணாக்கனுக்கு அளித்த நல்லுரைகள் ஆழ்ந்து சிந்திப்பதற்குரியவை :

'இயேசுநாதரின் அருளை முன்னிட்டு நீ வினவிய காரணத்தால் உனக்கு யான் சில நன்மொழிகளை நவிலுகின்றேன். அறிவுச் செல்வத்தை அடையும் நெறியை யான் உனக்கு வகுத்துக் கூறுகின்றேன். கொஞ்சங்கொஞ்சமாக நீ அறிவைப் பெறவேண்டும். உடனே சட்டெனக் கடலில் குதித்துவிடாதே. சிறிய அருவிகளில் நீந்திப் பழகியே மாபெரும் ஆர்கலியில் இறங்கத் துணிவாய். எளிய துறையிலிருந்தேதான் கடுமையான துறைகளுக்கு மனிதன் முன்னேறிச் செல்லவேண்டும் என்பதை நன்கு உணர்வாய். நாவை அடக்குவாயாக; பேச்சில் ஒரு சிக்கனம் இருக்கவேண்டும். பேசுமிடத்திற்கு அடிக்கடி செல்லாதே; அங்கே போவது அத்தி பூத்ததுபோலத் திகழட்டும். உன்னுடைய அகச்சான்றை எஞ்ஞான்றும் மாசுபடுத்தாதே. இறைவழிபாட்டில் சற்றும் அயர்வுறாதே. உன்னுடைய அறையிலேயே தியானத்தில் வாழ்நாட்களைக் கழிப்பாயாக. ஞானத்தேனை அப்பொழுதுதான் உன்னால் அடையமுடியும். எல்லோரிடமும் அன்பைச் செலுத்துவாயாக. பிறர் செயல்களைப்பற்றி நீ அல்லற்படாமலிருப்பது அழகாகும். நெருங்கிப் பழகினால் அருவருப்பு நேரிடக்கூடும்; உன் படிப்பிற்கும் அது ஓர் இடையூறாக அமைந்தாலும் அமையும். நாட்டு மாந்தர்களோடு சேராமல் விலகி நிற்பது நலமாகும். உன் மடத்தைவிட்டு ஊர்ஊராய்த் திரியாதே. யாரிடமிருந்து அறிவுரை வருகிறது என்பதை ஆராயாமல், மொழியப்பட்ட நலத்தைமட்டும் பொன்னேபோல் போற்றுவாயாக. நீ எதைப் படிக்கின்றாயோ, எதைக் கேட்கின்றாயோ, அவற்றைத் துருவி ஆராய்ந்து உண்மை மொழியை நாடுவாயாக. உன் உளமாம் அறைக்குள் எத்தனை அறிவுரைகளைத் திரட்டிச் சேர்க்க முடியுமோ, அத்தனை அறிவுரைகளையும் சேமித்துவைப்பாயாக. அயிர்க்கும்பொழுதெல்லாம் உன் உளம் அறிவுச் சுடரை விரைந்து தேடட்டும். உன் அறிவின் சுவர்களுக்கப்பால் உளதை இப்பொழுது ஆராயாது விடுதல் நலமே. நான் இயம்பிய மொழிகளின் அடிச்சுவடுகளை நீ பின்பற்றுவாயாயின், ஆண்டவனுடைய—விண்ணவர்கோனுடைய கற்பகக்காவில் நீ விரும்பிய நறுமலர்களையும் தீஞ்சுவைக் கனிகளையும் பெற இயலும். ஆண்டவன் அருள் முகில் உன்மீது பெய்யட்டும்.'

இத்தகைய பொன்மொழிகளுக்குத் தம் சிறந்த வாழ்வே ஒரு பெரு விரிவுரையாய்த் திகழ்ந்து நிற்கின்றது என்று இயம்பினால், அது மிகையாகாது. தம்

முடைய நாற்பத்தொன்பது ஆண்டுகளுக்குள்ளே முப்பது பெரிய நூல்களை வரைந்திருக்கின்றார் என்றால், இவருடைய பேருழைப்பை என்னென்று பகர்வது! ஒரே சமயத்தில் எழுதுபவர் பலருக்கு இவர் பொருள் வழங்கினார் என்னும் கூற்றில் உண்மை இல்லாமல் இருக்கமுடியுமோ! 1274ஆம் ஆண்டில் பத்தாம் போப்பாண்டவர் கிரகரி என்பவர் லையன்ஸ் (Lyons) என்னும் ஓரிடத்தில் சமயப் பேரவை ஒன்றைக் கூட்டினார். அதற்கு அக்யுனஸை வரும்படி திருமுகம் அனுப்பியிருந்தார். இரண்டு கோவேறு கழுதைகள்மீது முறையே அமர்ந்து அக்யுனஸும் ரெஜினல்டும் (Reginald) புறப்பட்டார்கள் கம்பானி யாவிலுள்ள (Compania) கன்னி மடத்தில் ஞானி சகோதரியைப் பார்க்கச் சென்றார்கள். அங்கே அக்யுனஸ் மிகவும் தளர்ச்சியுற்ற காரணத்தால் மேலே பயணத்தைத் தொடங்க இயலாதுபோயிற்று. அண்மையிலுள்ள ஃபாஸனுவா (Fossanuova) என்னும் மடத்திற்கு, இவர் இறைஞ்சிக் கேட்டதற்கு இணங்கி இவரை அழைத்துச் சென்றார்கள். அங்கே இவரை மிக்க அன்புடனும் மட்டு மரியாதையுடனும் அங்குள்ள துறவிகள் உபசரித்தார்கள். இறந்துகொண்டே யிருக்கும் தறுவாயில் 'இசைக்கோர் இசையாய்' (Song of Songs) இலங்கும் பாட்டை ஓதினார்கள். இறுதிக் காலத்தில் அளிக்கவேண்டிய புனித ரொட்டியை நல்கினார்கள். அப்பொழுது கண்களில் நீர்மல்க உரக்க ஆண்டவனை இறைஞ்சி னார். 'என் ஆன்மா கடைத்தேறும்பொருட்டு உயிர்நீத்த பெரும! நான் உன் திருவடி நிழலை ஏற்றுக்கொள்கிறேன். உன்பால் வைத்த பேரன்பால்தான் படித்தேன்; கண்விழித்தேன்; சொற்பொழிவாற்றியே அறிவுரை வழங்கினேன். உன் திருவருளுக்கு மாறாக ஒன்றையும் நான் உரைத்தேன் அல்லேன். இது உன் திருவுளம் அறியும்' என்று மொழிந்தே ஆவி பிரிந்தார். இவர் மாண்டபோதிலும், இவர் போதித்த அறிவுரைகளைச் சுற்றி எழுந்த சொற்போர்ப் புயல்கள் அவிந்த பாடில்லை. இவருடைய குணச்சித்திரம் நோக்குதற்குரியது.

இவருடைய நூல்களின் வாயிலாக இவருடைய அந்தரங்க வாழ்வைப்பற்றி நாம் ஒன்றும் உணரமுடியவில்லை. அந்தக் காலத்துக் கட்டடங்களை—வான் நிமிர்ந்த கட்டடங்களை நிறுவியவர் யாவர் என்பதை நாம் தெரிந்துகொள்ள இயலாது. அவ்வண்ணமே இவருடைய வாழ்வு திகழ்கின்றது. தன்னை மறைத்துக்கொள்ளும் இயல்பை இவரிடம் நாம் கண்ணுறுகிறோம். இவருடைய அமைதியான வாழ்வையும் விரிந்த பண்பாட்டையும் நாம் ஒருவாறு அறிந்து கொள்ள முடிகின்றது. மிகுதியான பணிவால் இவருடைய நூல்கள் சற்றுச் சுவையற்றதாகவே காட்சி அளிக்கும். ஞானி அகஸ்டைனின் கழிவிரங்கல்கள் போலும் (Confessions) மார்க்கஸ் அரீலியஸின் சிந்தனைச் சுடர்கள்போலும் இவருடைய நூல்கள் மிளிரவில்லை என்பது உண்மையே. தம்முடைய உணர்ச்சிப் புயல்களை இவருடைய நூல்களில் அடிக்கும்படி இவர் செய்யவில்லை. முருகுக் கலையின் உணர்ச்சிப் பெருக்கையும் இவரிடம் பார்ப்பதரிது. அனுபூதி நெறியின் வாயிலாகப் பிறக்கும் தியானத்தையும் சுவையற்ற அடிப்படைத் தத்துவமுறையில்

விளக்கிக் காட்டுகின்றார். தம்முடைய சுய அனுபவத்தைக் காட்டக்கூடிய சந்தர்ப்பங்கள் வந்தாலும், தம்முடைய உள்ளக் கிடக்கைகளை மறைத்தே உரைக் கின்றார்.

தம்முடைய அறைகளிலிருந்து மலையை அவர் நோக்குகின்றார் ; 'நிலமங்கை உன் செயலைக் கண்டு உளம் உவகை கொள்கிறாள்' என்னும் உரை ஞானி தாமஸ் அக்யுனஸுக்கே பொருந்தும். இந்த ஞானியைப் பார்க்குந்தோறும் ஒரு வரையின் நினைவுதான் நம் சிந்தையில் பாயும். மாபெரும் அரக்கன்போலக் காட்சி அளித்தாலும், பேரமைதி நிலவும்—ஆண்டவன்பால் இடையறாது அன்பு பாயும் உளங்கொண்ட சான்றோன் என்பதில் ஐயமே இல்லை. இவரை ஒரு வாயில்லா எருது (dunt ox) என்று அழைப்பார்கள். அக் காரணங்கொண்டு உலகமறியா ஓர் அறிவிலி என்று கருதற்க. இயல்பிலேயே இவர் பெருந்தன்மையுள்ளவர் ; அஞ்சா நெஞ்சம் படைத்தவர். இவருடைய மனம் எஞ்ஞான்றும் நேர்வழியிலே போகும் தன்மை உள்ளது. அடிக்கடி மெய்ம்மறந்துபோவது அளவு கடந்த ஓர் ஆழ்ந்த தியானத்திலே தவிரப் பிறிதில்லை என்பதை நாம் மறக்கக்கூடாது. உலக நிகழ்ச்சிகளைக் கூர்ந்து நோக்கும் அறிவுள்ளவர். தோட்டியிலிருந்து தொண்டைமான்வரையில் நிலவுகின்ற மக்களுக்கு நல்லறிவுச் சுடர் கொளுத் தும் ஆற்றல் வாய்ந்தவர். தம்முடைய சமயத்துறையில் மிகவும் ஒழுக்கமான பழக்கங்களை உடையவர். இவருக்கு மேலுள்ளோர், கனிந்த உலக அனுபவம் இவருக்கு இருக்கின்றது என்று புகழ்மாலை சூட்டியிருக்கின்றார்கள். தாங்கள் அமைக்க விழையும் பெருஞ் செயல்கள் சம்பந்தமாகப் பல போப்பாண்டவர்கள் இவருடைய அறிவொளியை நாடினதாகத் தெரிகின்றது. இவருக்கு உலக அலுவல்களில் சற்றும் பற்று இல்லை என்பதை யாவரும் மறுக்க இயலாது. 'உங் களுக்கும் போனவென்சுராவுக்கும் கார்டினல் பட்டங் கிடைத்தால் எங்கள் மடத்திற்குச் சீரும் சிறப்பும் இல்லையா ?' என்று ஒருவர் இவரை வினவியபொழுது, 'நான் பணியாற்றிவருகிற இடமே எனக்குப் போதும்' என்று இவர் புகன்ற பொன்மொழி நம் சிந்தையைவிட்டு அகலுமோ ! தம்முடைய குடும்பத்தில் நடந்த செயல்களை இவர் குறிக்கவில்லை. மன்னர்மன்னர்களுக்கும் போப்பாண்டவர் களுக்கும் நிகழ்ந்த சர்ச்சைகளையும் சழக்குகளையும் இவர் கண்ணுற்றாரில்லை. தம்முடைய இறந்த சகோதரியின் துறவறம் பூண்ட தூய உருவம் இவர் அகக் கண்முன் தோன்றும்; ஆனால், அதைப்பற்றித்தான் உலகத்தாருக்கு உரைத் தாரா? — இல்லை. இரண்டாம் ஃபிரடரிக் (Frederick II) கையில் மாண்ட தம் ரெஜினல்டைப்பற்றி நீண்ட காலம் சிந்தித்தது உண்டு. அதை ஆண்டவன் தான் அறிவான். ரெஜினல்டிற்குத் (Reginald) தம்முடைய இறையியலின் சுருக்கத்தை 'Compendium Theologies' என்னும் நூலைச் சமர்ப்பித்தார். ஆல்பர்ட்டோடு இவர் கொண்ட தொடர்பு இடைக்காலத்துப் புதுமைக் கதை போலக் (Medieval Romance) காட்சி அளிக்கின்றது. இளம் பிராயத்தில் மிகுந்த நாணத்தோடு வாழ்க்கைப் பாதையில் நின்ற அக்யுனஸுக்கு ஓர்

அரனுய் ஆல்பர்ட் நின்றார். தம்முடைய நீண்ட அகக்கண் கொண்டு இவருடைய பெருமையை முன்னமேயே உணர்ந்து இவ் வையகத்திற்கு எடுத்துக்காட்டினர். அவன் பக்கலில் நின்று இவருக்காக மாபெரு வாதப்போர் நடத்தினர்; இவர் மாண்ட பிறகும் இவர் பேணி வளர்த்த கொள்கையைத் தக்க தருக்க அறிவு கொண்டு நிலைநாட்ட அல்லும் பகலும் அரும்பாடுபட்டார். இவருடைய தூய உருவம் தம் கண்முன் உலாவும்போதெல்லாம் கண்ணீர் வடித்தார். இதற்கெல்லாம் மூலம் இவருடைய தூய தெய்வத்தன்மையே என்று இயம்பிவிடலாம். இடைக்கால உலகம் இவரை ஒரு ஞானி என்று போற்றிற்று. இவருக்கு ஞானி என்ற பட்டத்தையும் அது சூட்டிற்று.

'நான் இவரிடம் கண்ட அற்புதங்களை இந்த ஞாலத்திற்கு முரசடிக்காதே என்று என் குருநாதன் என்னைக் கேட்டுக்கொண்டார்' என்று ரெஜினல்ட் (Reginald) கூறுகின்றார். தமக்கு அறிவுச் செல்வம் வந்தது தம்முடைய மனத்திண்மையினாலன்று; அதன் ஆற்றலினாலும் அன்று; ஆண்டவனை இடையறாது இறைஞ்சித் தொழுத பயனென இவர் கொண்டார். படிக்கத் தொடங்கினாலும் சரி, சர்ச்சைகளில் இறங்கினாலும் சரி, பாடங் கற்பித்தாலும் சரி, எழுதினாலுஞ் சரி அல்லது சொல்லி எழுதும்படி செய்தாலும சரி, ஆண்டவனைத் தொழுத பிறகே எதையும் தொடங்குவார். ஜபமுகில் படர நின்றவர்க்கு உண்மை ஒளி மின்னலடிக்கும்; ஐயங்கள் யாவும் தீர்ந்து ஞானப்பாலைப் பருகுவார் என்பது திண்ணம். தம் அகமன அறையில் அவர் ஆண்டவரோடு உறைந்தே இருந்தார் என்பது தான் மெய்; அனுபூதிநெறியில் எழும் இறைவனின் சேர்க்கை இன்பத்தை இவர் நுகர்ந்தார் என்பதில் இறையளவும் சந்தேகமில்லை. இவருடைய வரலாற்றை வரைந்த டாக்கோ (Tocco) கூறுவது இங்குச் சிந்திப்பதற்குரியது; 'அவர் மெய்ம்மறந்துபோகாத நாளே இல்லை. மடத்தில் அடிக்கடி ஆழ்ந்த தியானத்தில் மூழ்கிவிடுவார்; தன்முன் எந்த உண்டி வைக்கப்பட்டிருக்கிறது என்பதையும் அவர் மறந்து போய்விடுவார். இரவில் இறைவனைச் சிந்தித்தபடியே பொழுதைப் போக்குவார்.'

இடைக்காலத்தில் பல வண்ணமான மாபெரு வீரர்கள் தோன்றியிருக்கின்றார்கள். ஞானி லூயி நியாயத்தின் வடிவாயும், வேந்தர்களுக்குள் ஒரு ஞானியாயும் திகழ்ந்தார். கிறித்துவ நல்லுரைகளில் கோயில்கொண்டிருக்கும் ஒரு சான்றோனின் இயல்பை நாம் நன்குணர்வோம். பிறர் நன்மையின்பொருட்டு வறுமையே அருங்கலமாக ஒருவன் கொள்ளவேண்டுமென்று இயேசுநாதர் பணித்த அறிவுரையையும் நாம் அறிவோம். அத்தகைய சான்றோனாக ஞானி ஃபிரான்சிஸ் மிளிர்ந்தார் என்பது உண்மையே. கிறித்துவத் தூய அறத்தைக் கைப்பற்றுவதால் எழும் ஞானத்தின் உருவமாக அக்யுனஸ் விளங்கினார். அகத் தூய்மையைப் பிளேட்டோவும் இப்புளோட்டைனஸும் வற்புறுத்தியிருக்கிறார்கள்; ஆனால், அகண்டாகாரத்தில் எல்லாம் கரைந்துவிடுகின்றன என்று அவர்கள் சாற்றினார்கள். அக்யுனஸ் கிறித்துவ சமயத்தில் காணப்படும் அவதார தத்துவத்தில் வேரூன்றியவர் என்பதை இவர் வாழ்க்கை வலியுறுத்துகின்றது.

அக்யுனஸ் வாதித்த தத்துவங்களிலிருந்து இவருடைய சமயக் கொள்கைகளையும் பிரித்துவிடலாம். ஆனால், ஆண்டவன் அருட்சோதியின்முன் இவர் கண்ட தத்துவ ஆராய்ச்சியெல்லாம் வெறுங் குப்பைகூளங்களாகக் காட்சி அளித்தன. ஒரு நாள் சிலுவைமுன் நின்று தியானத்தில் ஆழ்ந்து அமர்ந்திருக்கும்பொழுது ஒரு தெய்வக் குரல் கேட்டதாம். 'நீ என்னைப்பற்றி விரிவாய் எழுதியிருப்பது உண்மையே. ஆனால், அதற்கு நீ வேண்டும் பரிசு யாதோ?' என்று வினவிற்று அக் குரல். 'உன்னைத் தவிர வேறு பரிசை வேண்டேன்' என்று இச்சான்றோன் கூறினாராம். இத்தகைய பெரியோன் அருளிய தத்துவம் ஆராய்ச்சிக்குரியதன்றோ?

## ஞானி தாமஸ் அக்யுனஸும் அவருடைய சூழ்நிலையும்

கிரேக்க நாட்டுத் தத்துவம் இப்புளோட்டைனஸோடு முடிவடைந்தது என்று மொழியலாம். இவருடைய தத்துவ ஆராய்ச்சிக்கூடத்தில் பிளேட்டோ, அரிஸ்டாட்டில், ஸ்டாயிக் வித்தகர்கள்—இவர்களுடைய தத்துவங்கள் எல்லாம் ஒன்றாய்க் குறைந்து ஒரு தூய வடிவம் எடுத்துவிட்டது என்று இயம்பலாம். இவருடைய தத்துவத்தை அத்துவைதக் கொள்கை—ஒருமைக் கொள்கை (Monism) என்று உரைக்கலாம். எல்லாம் ஒன்றிலிருந்துதான் தோன்றுகின்றன; அந்தப் பரம்பொருளோடு நாம் ஒரு பெருநிலையில் ஒன்றாய்ப்போகக்கூடும். இந்தத் தத்துவத்தை இப்புளோட்டைனஸின் மாணாக்கரான பார்ப்பைரஸ் (Porphyrus) என்பவர் வளமுறச் செய்தார். கிரேக்க தத்துவம் இவரோடு மாய்ந்துபோய்விடவில்லை. ஞானி பாலினிடமும் கிரேக்க தத்துவ நிழல் படரக் காண்கின்றோம். ஞானி அகஸ்டைன் முதலியோர்கள் வெறும் தத்துவ ஆராய்ச்சி செய்யவில்லை. அவர்களுடைய குறிக்கோள் சமய தத்துவமூலமாக இறைவனின் அருளைப் பெறுதலே.

பகுத்தறிவுக்கும் நம்பிக்கைக்கும் பெரும் போராட்டம் இல்லாமல் இல்லை. புலனறிவுகொண்டே ஆண்டவனின் இருப்பை மெய்ப்பிக்கக்கூடும் என்று அபிலார்ட் முதலியோர்கள் முயன்ற விஷயத்தை நாமறிவோம். ஹேல்ஸைச் சார்ந்த அலெக்ஸாண்டர் இந்தத் துறையில் அரும்பாடுபட்டார். அரிஸ்டாட்டிலை ஏற்றது வெறும் மூடநம்பிக்கையில் தோன்றிய வழிபாடன்று; அரிஸ்டாட்டில் கூறியது பகுத்தறிவுக்கும் பொருத்தமாயிருந்ததால், அவருடைய அடிச்சுவடுகளை இந்தக் கிறித்துவ சமயிகள் பின்தொடர்ந்தார்கள். பன்னிரண்டாம் நூற்றாண்டிலேயே அரிஸ்டாட்டிலின் மொழிபெயர்ப்புகள் அலர்ந்துவிட்டன. இவற்றையெல்லாம் கிறித்துவ சமய வித்தகர்கள் பயன்படுத்திக்கொண்டார்கள். கிறித்துவ சமயத்திற்கும் கிரேக்க தத்துவத்திற்கும் இடையே எழுந்த முரண்பாடுகளை ஞானி போனவென்சுரா நன்கு எடுத்துக்காட்டுகின்றார். அரிஸ்டாட்டில், பிளேட்டோ கொண்ட மூல மாதிரிகளை (archetypes), மூல உருக்களை, மூலக்கருத்துகளை (ideas) ஏற்கவில்லை. இது ஒரு தவறாகும். கடவுள் தன்னைப்பற்றி அறிவாரே தவிர, தனிப்பட்ட விஷயங்களைப்பற்றி யாதொன்றும் அறியமாட்டார்.

தனிப்பட்ட விஷயங்களை அவர் அறியாத காரணத்தால், அவர் எல்லாம் அறிந்தவர் என்று கூறுவதற்கில்லை. அவற்றின்மீது தம் ஆட்சியையும் அவர் செலுத்த முடியாதன்றோ? அவர் ஆட்சி புரியாதவிடத்து எல்லாவற்றையும் ஒரு குருட்டுச் சக்தி ஆட்டிவைக்கின்றது அல்லது ஒரு விதிதான் எல்லாவற்றிற்கும் காரணம் என்று சொல்லும்படியான நிலை வந்துவிடும். ஏதோ ஓர் அறிவுதான் ஆட்சிபுரிகின்றது என்று அரேபிய நாட்டுத் தத்துவ வித்தகர்கள் நவில்கின்றார்கள். கடவுள் இல்லை என்னும் கொள்கை பிறந்துவிடும். அறம் புரிந்தோர்களுக்கு விண்ணவர் நாடும் தீச்செயல் புரிந்தோர்களுக்கு நிரயமும் உண்டு என்னும் கொள்கையை வேரொடு மாய்த்ததாகும். அவரோஸ் (Averroes) அளிக்கும் விளக்கம் ஈண்டுச் சிந்திக்கத் தகுந்தது. இப் பிரபஞ்சத்திற்குத் தொடக்கமும் இல்லை; முடிவும் இல்லை. இது என்றுமே நிலையாய்த் திகழ்ந்து நிற்கின்றது. 'எல்லாவற்றிலும் ஓர் ஆன்மா தான் மிளிர்கின்றது, ஒரு சைதன்னியந்தான் எங்கும் ஒளிவிடுகின்றது' என்னும் இவருடைய தத்துவத்தை ஒப்புக்கொண்டால், தனிப்பட்ட அமர வாழ்வில்லை, பாவமுமில்லை புண்ணியமுமில்லை, நரகமுமில்லை சுவர்க்கமுமில்லை என்ற கருத்து முளைத்துவிடுமன்றோ!

அரிஸ்டாட்டில் வழங்கிய தத்துவத்திற்குத் தக்க விளக்கம் தரவில்லை என்று ஞானி தாமஸ் அக்யுனஸின் ஆசிரியரான ஆல்பர்ட் பெரியார் தம் கருத்தை உலகங் கேட்கச் சாற்றினர். ஞானி தாமஸ் அக்யுனஸ் இவருடைய அடிச்சுவடுகளைப் பின்பற்றினர். ஞானி தாமஸ் அக்யுனஸ் திருநாட்டை அலங்கரித்த பிறகும் இவர் அந்த ஞானச்சுடர் அவியாமல் வாதப்போர்களாம் வெம்புயல்களிலிருந்தும் காப்பாற்றின செய்தி இவ் வையகம் அறியுமன்றோ? ஒருபால் ஞானி தாமஸ் அக்யுனஸ் கிறித்துவ மடத்தைச் சார்ந்த ஒரு ஞானியாய்க் காட்சி அளிக்கின்றார்; மனித இயல்பைக் கருதி நோக்குமிடத்து, ஒருபால் இவர் ஓர் இறையியல் வித்தகராயும் தத்துவ ஆராய்ச்சியாளராயும் திகழ்கின்றார்; தியானக் கடலில் ஆழ்ந்திருக்கும்போது, ஒருபால் இவர் ஓர் அனுபூதி நெறிச் செல்வராய் விளங்குகின்றார். தாம் அருந்தியானத்தில் கண்ட தத்துவங்களைச் செயல்முறைப்படுத்துகின்றார். ஞானயோகம், கருமயோகம், பக்தியோகம் இம் மூன்று யோகங்களும் இவரிடத்தில் மிளிர்ந்து நிற்பதைப் பார்க்கின்றோம். ஞானி அகஸ்டைன், ஞானி போனவென்சுரா, பாஸ்கல் முதலியோர்கள் உலக் இயல் அறிவை (secular knowledge) ஐயக்கண்களோடு நோக்கினர்கள். ஆல்பர்ட் பெரியார், ஞானி தாமஸ் அக்யுனஸ், ரோஜர் பேக்கன் (Roger Becon) முதலியோர்கள் இதற்கு மாறாக அந்தப் பேரின்ப வீட்டிற்கு ஓர் ஏணியாகக் கருதினர்கள். தத்துவத்தின் குறிக்கோளை ஆராய்வது நம் கடமையாகும். வெறும் தத்துவ வித்தகர்கள் பகுத்தறிவு ஊற்றில் உண்மையைத் தேடுகின்றார்கள். ஞானி தாமஸ் அக்யுனஸ் இறையியலைப் பயின்ற காரணத்தால் ஆண்டவன் அருள்மொழியில் நம்பிக்கைவைக்கின்றார்; அந்த நம்பிக்கையை வலியுறுத்துவதற்குப் பகுத்தறிவாம் கவசத்தையும் பூணுகின்றார். ஒன்றிற்காக ஒன்றைப் பலியிடுவதா அல்லது ஒன்றிற்கு மற்றொன்று துணைபுரியவேண்டுமென்று கருதுவதா என்னும் பிரச்சினை எழத்தானே செய்யும்.

ஞானி தாமஸ் அக்யுனஸ் என்னும் சான்றோனிடம் அகவுயிர் வளர்ச்சிக்கும் பகுத்தறிவு துணைபுரிகின்றது என்று இயம்பலாம். ஞானயோகமும், கரும யோகமும், பக்தியோகமும் இறைவனின் அருட்சோலையில் கைகோத்துக் களி நடனம் புரியவேண்டும்.

தத்துவத்தின் குறிக்கோளை நாம் ஆராயவேண்டும். உண்மை ஒளியைத் தேடப் பகுத்தறிவுப் பாதையில் செல்லுவதா, அல்லது ஆண்டவன் அருள் மொழியை, அறிவு கடந்த அந்தத் தெய்வ மொழியை நமக்குக் கண்களாய் வைத்துக்கொள்ளுவதா என்னும் இடையறுத பிரச்சினை எழுந்துகொண்டேதான் இருக்கும்.

பழுத்த ஞானத்தின் நோக்கம் பிரபஞ்சத்தில் முடிவை நாடுவதே. இந்தப் பிரபஞ்சத்தின் மூலகாரண ஆராய்ச்சிதான் தத்துவத்தின் குறிக்கோளாகும். ஒரு பேரறிவுதான் இந்தப் பிரபஞ்சத்தை இயங்கும்படி செய்கின்றது. அந்தப் பேருண்மைதான் தத்துவத்தின் குறிக்கோள் என்று அரிஸ்டாட்டில் சாற்றினர். அந்தப் பேருண்மைதான் எல்லா உண்மைகளுக்கும் மூலமாய்த் திகழ்கின்றது.

நம்முடைய ஐம்புல அறிவு, கடவுள் இருக்கிறார் என்பதை வலியுறுத்து கின்றது. ஆண்டவன் காரணமானல் இப் பிரபஞ்சம் காரியமாகும். காரணகாரிய தத்துவத்தைக்கொண்டு இப் பிரபஞ்சமான காரியத்திற்கு ஒரு காரணம் இருக்க வேண்டும் என்று உரைக்கின்றோம். பகுத்தறிவு காணக்கூடிய உண்மைகளும் உண்டு. அதையும் கடந்த உண்மைகளும் இருக்கின்றன என்பதை நாம் ஓரவேண்டும். பகுத்தறிவு காணுத ஒன்றை ஆண்டவனின் அருளில் வேரூன்றிய நம்பிக்கை நமக்கு உணர்த்திவிடும் என்று ஞானி அகஸ்டைன் உரைக்கின்றார். உளம்; உரை, செயல்—இம் மூன்றையும் பெற்று ஒளிவிடுகின்றது ஆண்டவன் அருட்சோதி என்று உணர்ந்தால்தான் ஆண்டவனின் இயல்பு நன்கு புலனுகும். பகுத்தறிவு வகுத்த வழியிலே சென்றால் அது உண்மை ஒளியைக் காட்டிவிடும் என்னும் சிதையாத நம்பிக்கை உடையவர் ஞானி தாமஸ் அக்யுனஸ் என்பதில் யாதோர் ஐயமுமில்லை. கிறித்துவ சமயம் என்பதைக்கொண்டு அதை ஏற்கவில்லை; அது உண்மையை உணர்த்துகின்றது என்னும் காரணத்தாலேயே அதைத் தழுவிப் பேசுகின்றார். அரிஸ்டாட்டில் கண்ட தத்துவத்தை ஆராயாது கண்மூடித்தனமாய்ப் பின்பற்றவில்லை; தம்முடைய பகுத்தறிவுக்கு ஏற்றதாய் அது மிளிர்ந்த காரணத் தாலேயே அதன் ஒளியைத் தமக்கு ஒரு ஞான நல் தீபமாய் வணங்கினர் என்பது தான் உண்மையாகும். விஞ்ஞானத்திற்கும் சமயத்திற்கும் உள்ள தன்மையை அயின்ஸ்டின் ஆராய்ந்த விஷயத்தை நாம் அறிவோம். விஞ்ஞானமில்லாத சமயம் குருடாய்த் திகழும்; சமயம் இல்லாத விஞ்ஞானம் முடமாய்ப் போய்விடும் என்னும் உண்மையை நாம் மறக்கக்கூடாது. இறுதியில் பகுத்தறிவுக்கும் தெய்வ நம்பிக்கைக்கும் ஒரு நெருங்கிய தொடர்பைப் பார்ப்போம். கடவுளின் இருக் கையை நம்பினவர்கள் கடவுளின் இயல்பை ஆராய்ந்த பிறகே, அவருடைய படைப்புக்கு வருகின்றோம். படைப்பிலிருந்து அதன் மூலத்தையும் நாம் ஆராய லாம். பகுத்தறிவாம் கருவி மிகுந்த நுட்பமில்லாத கருவியாய் இருந்தபோதிலும்.

ஆண்டவனைத் தேடுவதில் அது பயன்படுமாயின் சாலவும் நன்று. வையகத்தில் அடைகின்ற பேறு யாதெனில், ஓரளவு பகுத்தறிவை வைத்துக்கொண்டு ஆண்டவனை நேருக்கு நேராகக் காண்பதே.

*கடவுளின் இருப்பை மெய்ப்பிக்கச் சான்று வேண்டுமன்றோ?* *முதன்முதலாக* ஆசான் கூறினதை நம்பியாகவேண்டும்; பிறகு அது உண்மைதானா இல்லையா என்பதைத் துருவி நோக்கவேண்டும். இயற்கையாகவே நாம் கடவுளை நாடுகின்ற காரணத்தால் கடவுள் இருக்கிறார் என்பது பெறப்படுகின்றது. இதற்கு வேறு சான்று வேண்டியதில்லை. 'அதற்குச் சான்று அதுவேயாகும்' என்று சில தத்துவ வித்தகர்கள் மொழிகின்றார்கள். 'கடவுள் இருக்கிறார் என்னும் எண்ணம் நம்மிடத்திலேயே வேரூன்றி நிற்கின்றது' என்று ஞானி அகஸ்டைன் சாற்றுகின்றார். அத்தகைய கருத்து நம்மிடத்தில் இல்லை; அத்தகைய ஞான ஒளியுமில்லை. ஆனால், காரியத்திலிருந்து முதற் காரணத்திற்குப் போகின்ற அடிப்படை நியதிகள் அல்லது கொள்கைகள் (principles) உண்டு என்று ஞானி தாமஸ் அக்யுனஸ் உரைக்கின்றார். பெருநலத்தை நாடுகின்ற ஆர்வமிருக்கலாம்; ஆனால், அந்தப் பெருநலம் கடவுள்தான் என்பதை மனிதன் ஆராயவேண்டாவா? மாபெருஞ் செல்வத்தை ஒரு பெருநலம் என்று ஒருவன் கொள்ளுவதற்கு இடமுண்டன்றோ? கடவுளின் இருக்கை நேரில் காணக்கூடிய உண்மையன்று. 'கடவுள் இருக்கிறார், கடவுள் இருக்கிறார்' என்று இடையறாது இயம்பிவருகின்ற பழக்கத்தால் சொல்லுகிறோமே தவிரப் பிறிதில்லை.

*'ஆண்டவனை நண்ணுதற்குரிய பாதை நம் ஐம்பொறிகளே. எல்லாவற்றிற்கும்* மூலகாரணமாய்த் திகழ்கின்ற ஒன்றை நேரிடையாய்க் காணக்கூடிய பலகணி அடைபட்டுப்போன காரணத்தால், காரியத்தின் வாயிலாக அந்தப் பரம்பொருளை நாடமுடியும்' என்று ஞானி தாமஸ் அக்யுனஸ் தம் 'இறையியல் சுருக்கம்' (Summa Theologica—A Summary of Theology) என்னும் நூலில் நன்கு உரைக்கின்றார். 'இறையியல் சுருக்கத்தில்' காணப்படும் சான்றுகள்தாம் 'ஜென்டைல்ஸ்பால் தொடுத்த எதிர்வாதச் சுருக்கத்திலும்' (Summa Contra Gentiles—A Summary Against the *Gentiles) குறிக்கப்படுகின்றன.* ஆனால், இந்த நூலில் எல்லாம் விரிவாய் ஆராயப்பட்டிருக்கின்றன. தானாகவே ஒன்று அசைகிறதில்லை. 'இறையியல் சுருக்கத்தில்' (Summa Theologica) ஆண்டவன் இருக்கிறான் என்பதற்குச் சான்று கூறப்படுகின்றது. உலகத்தில் சலனங்கள் ஏற்படுவதை நம் ஐம்பொறிகள் உணர்கின்றன. ஏதாவது ஒன்று சலித்தால் அதைச் சலிக்கும்படி செய்தற்கு ஒரு மூலகாரணம் இருக்கவேண்டும். அசையும் இயல்பு ஒரு பொருளில் ஒடுங்கியிருக்கின்றது (potential). அது ஒரு காரணத்தால் ஒரு செயலாக விரிகின்றது. *கூம்பினது விரிதல் இயல்பன்றோ? சான்றாக,* கட்டையில் வெப்பம் ஒடுங்கியிருக்கின்றது. அது தீயோடு தொடர்புகொள்ளுகிற பொழுது செயல்முறையில் வெப்பம் உள்ளதாய் மாறிவிடுகின்றது. ஒரு பொருளின் சக்தி ஒரே கணத்தில் ஒடுங்கியும் விரிந்தும் இருக்க முடியாதன்றோ?

செயல்முறையில் வெப்பமாயுள்ளது ஒடுங்கிய நிலையிலும் வெப்பமாய்த்தான் இருக்க முடியும். செயல்முறையில் விரிந்து குளிர்ந்த ஒரு பொருள் குவிந்த நிலையிலும் குளிர்ந்ததாய்த்தான் இருக்கிறது. ஒரு குச்சி சலிக்குமானால், அந்தக் குச்சியைச் சலிக்கும்படி செய்வது கைதான் என்று பார்க்கின்றோம். அந்தக் கையைச் சல்லிக்கும்படி எது செய்தது? இப்படி மேன்மேலும் அடுக்கிக்கொண்டே போனால் ஒரு முடிவில்லாத சர்ச்சையாகப் போய்விடும் (ad infinitum).

எல்லாவற்றையும் ஆட்டிவைத்துக்கொண்டு தான்மட்டும் சலியாத பரம் பொருளைத்தான் நாம் மூலகாரணமாக மொழியவேண்டும். ஒன்று சலிக்கிறதாயிருந்தால் அதைச் சலிக்கும்படி செய்கின்ற ஒரு காரணம் இருந்தே தீரவேண்டும். எல்லாவற்றையும் ஆட்டிவைக்கிற ஒரு பரம்பொருள் இல்லாதுபோகுமானால், உலகத்தில் சலனமே இல்லாதுபோய்விடும். இடையிலே தோன்றுகிற சாதனங்கள் இருக்கலாம்; மூலகாரணம் இல்லாமற்போனால்! ஒன்றுமே இல்லாமற் போய்விடும். மரம் இருக்கிறது; இரம்பம் இருக்கிறது; கோடரி இருக்கிறது; இவற்றையெல்லாம் பிணைத்து உருவாக்குகின்ற தச்சன் இல்லாமற்போனால், அப் பொருள்கள் யாவும் அசைவற்று அப்படியே கிடந்துவிடும். ஒன்றிற்கு மற்றொன்று காரணமாய்த் திகழ்கின்றது; கடவுளாகிற மூலகாரணத்திலிருந்து படிப்படியாய் முறையாய் எல்லாம் கீழே இறங்கிப் பிரபஞ்சத்திற்கு வருகின்றன. இன்னும் நான்கு சான்றுகள்கொண்டு கடவுள் ஒருவர் இருக்கிறார் என்பதை மெய்ப்பித்துவிடமுடியும். அவை நிமித்த காரணம் (efficient), முடிவுக் காரணம் (final), உன்னியல்புக் காரணம் (formal), உபாதான காரணம் (materal). நிமித்த காரணம் என்பது ஒன்றைத் தோற்றுவிக்கிற காரணமே. தகப்பன் மகனைத் தோற்றுவிக்கிறான். இம் மகனுக்குத் தகப்பன் நிமித்த காரணமாய்த் திகழ்கின்றான். நாற்காலியைப் படைக்கின்ற தச்சன் அந்த நாற்காலிக்கு நிமித்த காரணமாகின்றான்.

முடிவுக் காரணமாவது எந்த முடிவுக்காக என்று ஏற்பட்டிருக்கிறதோ அந்த முடிவே. மனிதன் பெருநலத்தைப் (beatitude) பெறுதற பொருட்டே படைக்கப் பட்டிருக்கிறான். அதுதான் அவனுக்கு முடிவுக் காரணமாய் அமைகின்றது. உன்னியல்புக் காரணம் (formal) என்பது எந்தக் காரணத்தைக்கொண்டு ஒன்று தன் இயல்பைப் பெறுகின்றதோ அந்தக் காரணம்தான்.

மனிதனுடைய அகவுயிர் அல்லது ஆன்மாதான் அவனுக்கு உன்னியல்புக் காரணமாக இலங்குகின்றது. உபாதான காரணம் என்பது எதிலிருந்து ஒன்று சமைக்கப்படுகின்றதோ அதுவே. மனிதனுடைய உடல் அவனுக்கு உபாதான காரணமாய் விளங்குகின்றது. எல்லாவற்றிற்கும் நிமித்த காரணமாய் அமைகின்றது கடவுளைத் தவிரப் பிறிதில்லை. ஒன்று மற்றொன்றுக்கு நிமித்த காரணமாய் இருக்கிறது. தான் அசையாமல் எல்லாவற்றையும் இயங்கும்படி செய்வது இறைவனே என்னும் தத்துவம் அரிஸ்டாட்டில் கண்ட காரணகாரியத்தில் அடங்கி யிருக்கின்றது. இந்தத் தத்துவத்தைப் பின்பற்றியே, ஞானி தாமஸ் அக்யுனஸ் இறைவன் இருக்கிறார் என்னும் உண்மையை மெய்ப்பிக்கின்றார்.

கடவுள் எல்லாவற்றிற்கும் ஆதாரமாயிருக்கிறார் என்று தொடங்கிக் கீழே இறங்குவதைக்காட்டிலும், ஐம்புலன்கள் காட்டும் சலனத்திற்கும், படிப்படியாகத் தான் அசையாமல் எல்லாவற்றையும் இயக்குவிக்கும் மூலகாரணமான இறைவனிடம் செல்லுவதுதான் முறையாகும் என்று ஞானி தாமஸ் அக்யுனஸ் இயம்புகின்றார். எத்தகைய சலனத்திற்கும் (movement) ஓர் ஆட்டிவைக்கும் சக்தி (mover) இருக்கவேண்டும்; காரியமிருந்தால் (effect) காரணம் இருக்க வேண்டும். முறைப்படி ஒன்று சென்றுகொண்டிருந்தால் தொடக்கநிலை ஒன்று வேண்டுமன்றோ? சார்ந்திருக்கும் பொருளுக்கும் ஒரு களைகண் வேண்டும்; எல்லாவற்றையும் தாங்குகின்ற ஆதாரமான பொருள் இன்றியமையாதது; ஓர் ஒழுங்கு நிலவுமானால், அந்த ஒழுங்கை அமைக்கின்ற தெய்வத் தச்சன் வேண்டுமென்பது சொல்லாமலேயே விளங்கும். ஐம்புலன்கள் அறிகின்ற இருக்கையைக்கொண்டு ஐம்புலன் காணாத ஒன்றை அனுமானிக்கவேண்டும்.

காரணகாரிய வாயிலாக மெய்ப்பிக்கப்பட்ட இறைவனின் குணங்களை நாம் ஆராய்வோமாக. எல்லாவற்றையும் ஆட்டிவைக்கின்ற பரம்பொருள் இருக்கிறார் என்னும் உண்மையை மெய்ப்பித்தபிறகு அந்தப் பரம்பொருளின் இயல்புகளை எடுத்துக்கூறுவோம். கடவுள் இது அன்று, அது அன்று என்று மொழிந்து கொண்டேபோகலாமே தவிர, இதுதான் அவர் இயல் என்று வரையறுத்துச் சொல்ல இயலாது. வடமொழியில் 'நேதி', 'நேதி' என்று உரைப்பார்கள்.

கடவுளைப் பிரகிருதி (matter) என்று சொல்லுவதற்கில்லை. அவரிடம் புலனாகாத சக்தி (potential) ஒடுங்கிக் கிடக்கின்றது என்று பகர்வதற்கு இடமில்லை. அவரிடம் ஒன்று ஒடுங்கிக் கிடக்கின்றது என்று கூறுவோமானால், அதை மற்றோர் சக்தி அலரும்படி செய்கின்ற நிலை தோன்றிவிடும். ஆனால், ஆண்டவன் எல்லாம் நிறைந்தவர் என்பதை நாம் உணரவேண்டும். கடவுள் என்றும் மாறாதவர். ஆதலால், அவருக்குத் தொடக்கமும் இல்லை; முடிவும் இல்லை. பிரகிருதியில் மாறுதலுக்குரிய இயல்பு இருக்கும்; ஆனால், ஆண்டவனிடத்தில் மாறுதற்குரிய அமிசம் இறையளவும் இல்லை. அக் காரணம்பற்றி அவர் பிரகிருதி இல்லை. கடவுள் இடத்தினாலும் காலத்தினாலும் சிதையாத ஒரு 'சத்து' (Being). அந்தச் சத்தின்மீது சுமத்தக்கூடிய யாதொரு பொருளுமில்லை; அதற்கு அன்னியமான பொருளுமில்லை; அதைக் கடந்த பொருளுமில்லை. அந்தச் சத்து உயர்வற உயர்ந்து நிற்கின்றது. அந்தச் சத்தும் உள்ளியல்பும் (essence) ஒன்றே. நாமும் சத் சித் ஆனந்தத்திற்கு இலக்கணம் வகுக்கின்றோம். சத்துதான் அறிவாய்த் திகழ்கின்றது. அந்த அறிவுதான் ஆனந்தமாய்ப் பொங்குகின்றது. தற்செயல் (accident) என்பது ஆண்டவன் அருளாட்சியில் இல்லை என்பதை நாம் நன்கு உணரவேண்டும். கடவுள் மேல் இனமும் (genus) இல்லை; கீழ் இனமும் (species) இல்லை; வேறுபாட்டுக் கூறும் (difference) இல்லை. கடவுளைச் சித்திரிக்க முடியாதென்பதுதான் இத்தகைய தொடர்களின் உரையாகும். தருக்க அறிவு காணமுடியாத பரம்பொருளாய் அது பொலிந்து நிற்கின்றது. அவரிடத்தில் எண்ணிறந்த கலியாண குணங்கள்—அனந்த கலியாண குணங்கள்—மிளிர்கின்றன. கங்குகரையிலாக் குணக்கடல் என்று மொழிந்தாலும் பொருந்தும்.

இந்தப் பிரபஞ்சம் ஓரளவுக்குச் சொற்பதங் கடந்த ஆண்டவனுடைய உருவைக் காட்டுகின்றது. தவ்நெறிக்கு ஒரு பெருநெறியாய் அவர் திகழ்கின்றார். பெருநலத்தின் வடிவும் அவரே; புண்ணியனும் அவரே; வரம்பற்றவரும் (Infinite) அவரே. அகண்டாகாரமாய் அவர் திகழ்கின்றார். கடவுள் தன்னிடத்தில் தன்னைக் காண்கின்றார்; மற்றைய பொருள்களில் தன்னைக் காணவில்லை. எல்லாவற்றையும் தன்னிடத்திலேயே அவர் பார்க்கின்றார். ஏனெனில், எல்லாம் அவருடைய வடிவமல்லவா?

கடவுள் அனைத்தையும் தனித்தனியாக அறியும் எல்லா ஞானமும் பெற்றவர். கடவுள் படிப்படியாக ஒன்றையும் பார்க்கவில்லை; காலங் கடந்த காரணத்தால் கடந்தது, நிகழ்வது, வருவது எல்லாம் அவர்முன் வந்து நிற்கின்றன. சத் எப்படி சித்தாய் நிற்கின்றதோ, எப்படி சித் ஆனந்தமாய் மிளிர்கின்றதோ, ஞானி தாமஸ் அக்யுனஸ் கண்ட தத்துவத்திலும் அவ்வண்ணமே உணர்கின்றோம். அவருடைய அறிவுதான் அவருடைய சத்து (Being); அவருடைய சங்கற்பம் (Will) அவருடைய சத்து (Being). இவற்றில் யாதொரு முரண்பாடும் இல்லை. மனிதனுடைய இயல்பு மாறிக்கொண்டே யிருக்கும்; முரண்படும். உளம், உரை, செயல் இம் மூன்றிலும் முரண்பாடு நிகழப் பார்க்கின்றோம். இவற்றில் தூய்மை இல்லை. உளம் ஒன்றை நாடும்; உரை இதற்கு மாறாகப் பேசும்; செயல்—உளம், உரை இவ்விரண்டிற்கும் வேறுபட்டு இயங்கத் தொடங்கிவிடும். தெய்வ நிலைக்கும் மனிதனின் இயல்பிற்கும் உள்ள வேறுபாட்டை நாம் காண்கின்றோம். ஆண்டவனுடைய சங்கற்பம் யாவும் தன்னுடைய, பெருநலத்திலிருந்து பெருகியதே. ஆனால், ஆண்டவனுடைய மருமத்தையோ, இரகசியத்தையோ முற்றிலும் ஓரமுடியாது. நமக்கு மிகத் தெளிவாய்த் தெரியக்கூடியது யாதெனில், அவன் உளம், உரை, செயல் கடந்தவன் என்பதே.

இறைவனும் அவன் படைப்பும் என்னும் பொருள் நம் சிந்தையைக் கவராமற் போகாது. ஞானி தாமஸ் அக்யுனஸ் ஓர் அடிப்படைத் தத்துவ வித்தகராகத் (Metaphysician) திகழ்வதற்கு முன்பு அவர் ஒரு கிறித்துவர் என்பதை நாம் மறந்துவிடக்கூடாது. தருக்கமுறையில் ஆராய்ந்த பிறகே அவர் கடவுளின் இருப்பை உணர்ந்தார் என்று இயம்பமுடியாது. அவர் பரம்பொருள் ஒன்று இருக்கிறது என்பதை நம்பியவர். கிறித்துவர்கள் ஆண்டவனுக்கு நல்குகின்ற எல்லாக் குணங்களிலும் வேரூன்றிய நம்பிக்கை உடையவர்கள். இப்படியிருக்கிற நிலையில் தம்முடைய 'இறையியல் சுருக்கத்தில்' (Summa Theologica) கடவுள் இருப்பைப்பற்றிச் சர்ச்சை செய்வானேன் என்று ஒருவர் வினவலாம். அவருடைய வாழ்க்கை வரலாற்றைப் பார்த்தால் எப்படி அவருடைய நம்பிக்கை ஓர் அனுபூதி நெறியாய்க் கனிந்தது என்பது நன்கு புலனாகும். இப்படியிருந்தும் கடவுள் இருக்கிறாரா இல்லையா என்னும் ஐயக்கொள்கையில் (Scepticism) அறியொணாக் கொள்கை வாதமும் (Agnosticism), இறையியல் கொள்கையும் (Atheism) முளைத்துவிடுமல்லவா? நேர்க்காட்சிப் பிரமாணத்திற்கு (self-evident) யாதொரு முரண்பாடும் இருக்க இயலாது. ஆனால், கடவுளை நேர்க்காட்சியால்

அறிய முடியாது. அக் காரணம்பற்றியே ஒருவர் கடவுள் இருக்கிறார் என்று கூறுவா ராயின் கடவுள் இல்லை என்னும் கருத்தை மற்றொருவர் எழுப்பக்கூடும் என்று ஞானி தாமஸ் அக்யுனஸ் மொழிகின்றார். ஞானி போனவென்சுராவுக்கு ஒரு விடையளிப்பதுபோல் இவர் சர்ச்சை செய்கிறார். எல்லோரும் இன்பத்தை விழைகின்றார்கள். குலையாத இன்பம் ஆண்டவனை அடைந்தால்தான் பிறக்கும் என்பது உண்மையே. ஆனால், ஒன்றை அடையவேண்டுமானால் அதைப்பற்றிய உணர்வு நமக்கு வேண்டாமா ? கடவுளைப்பற்றிய ஞானம் இயல்பாய் மனிதனின் மனத்தில் வேரூன்றி இருந்தாலன்றி ஆண்டவனை அடைந்து இன்பம் பெறலாம் என்னும் எண்ணம் தோன்றியே இராது ; அப்படி வேரூன்றியிருப்பதாகத் தெரியவில்லை. ஆதலால், அனுமானங்களைக்கொண்டு கடவுளின் இருப்பை மெய்ப்பிக்கவேண்டியிருக்கின்றது என்று அக்யுனஸ் சாற்றுகின்றார். கடவுளைத் தவிர வேறொன்றும் உயர்ந்த பெருநலம் இல்லாத காரணத்தால் அவர் இருக் கிறார் என்பதை எப்படி மெய்ப்பிக்க முடியும் என்று அக்யுனஸ் உரைக்கின்றார். பண்டைய வாதிகள் சிலர் உலகம்தான் கடவுள் என்று கருதியிருக்கின்றனர். வெறும் கருத்து உலகத்திலிருந்து இருப்புநிலை உலகத்திற்குத் தாவிவிடமுடியாது. சேணில் வருகிறவன் உண்மையிலேயே பீட்டர்தான் ; ஆனால், வருகிற ஒருவன் பீட்டர் என்று திண்மையாகக் கூற இடமுண்டோ ? கடவுள் இருக்கிறார் என்னும் எண்ணம் கடவுள் இருப்புக்கு மாற்றாகத் திகழுமோ, உன்னிப் பாருங்கள். இக் காரணம்பற்றியே அக்யுனஸ் ஒரு புலன்வழிக் கொள்கையர் (Empiricist) என்று கூறுவதற்கு இடமுண்டு. அறிவொணாக் கொள்கையை ஒருவன் சார்ந்திருந்தா லும், தக்க சான்றுகளும் ஆதாரங்களும் நாம் அவனுக்கு எடுத்துக்காட்டினோ மானால் அவன் கடவுள் இருக்கிறார் என்னும் பேருண்மையை ஏற்றுக்கொள்ளு வான் என்பதில் யாதோர் ஐயமுமில்லை. ஐந்து முறைகளிலே இறைவனின் இருப்பை மெய்ப்பிக்கக்கூடும். (1) உலகத்தில் சலனமிருப்பதால் அந்தச் சலனத்திற்கு ஒரு மூல காரணம் இருக்கவேண்டும். (2) பிரகிருதி பொருள் களில் நிமித்த சம்பந்தப்பட்ட (efficient) காரணங்களின் ஒழுங்கைப் பார்க்கின்றோம். (3) சில பொருள்கள் தோன்றி மறைகின்றன; சில மாசு பட்டுப்போகின்றன ; சில அழிந்துவிடுகின்றன. (4) ஓரளவுக்குச் சில நல்லவை களாகவும் உயர்ந்த இயல்புள்ளவைகளாகவும் காட்சி அளிக்கின்றன. (5) அறி வில்லாதவைகள்கூட ஏதோ ஓர் ஒழுங்கை நாடி உயர்ந்த நிலைக்குச் செல்ல முயல்வதைக் காண்கின்றோம்.

(1) சலனமில்லாது எல்லாவற்றையும் ஆட்டிவைக்கிற பரம்பொருள் உண்டு என்று ஏற்பட்டுவிடும்.

(2) ஒன்று மற்றொன்றுக்கு நிமித்த காரணமாய்த் திகழ்வதால், எல்லா வற்றையும் இயங்கும்படி செய்யும் ஓர் அறிவற்ற நிமித்த காரணம் இருத்தல் வேண்டும்.

(3) பொருள் தோன்றி மறைகின்ற காரணத்தால், என்றொன்றும் அழியாத ஒன்று உண்டு என்று அனுமானிக்கலாம்.

(4) ஓரளவிற்குச் சில நல்லவைகள்ளாகவும் உயர்ந்தவைகளாகவும் காணப் படுதலால், எல்லா நலன்களும், எல்லா உயர்வுகளும் பெற்று உயர்வற உயர் நலம் பெற்ற ஒரு பரம்பொருள் இல்லாமலிருக்க முடியுமோ?

(5) அறிவற்றவைகூடத் தமக்கு எது மிக உயர்ந்ததோ அதை விழைந்து செல்லுவதால், எல்லா அகண்ட அறிவையும் பெற்றுத் திகழ்கின்ற ஒரு பரம் பொருளை அவை சுட்டாமற்போகுமோ?

வரம்புள்ள பொருள்கள் (Finite) வரம்பற்ற ஒரு பரம்பொருளைச் (Infinite) சார்ந்து நிற்கின்றன. வரம்பு உள்ள ஒன்றைக்கொண்டே வரம்பு கடந்த பரம் பொருளை ஒருவாறு ஊகிக்க இடமுண்டு.

ஞானி தாமஸ் அக்யுனஸ் தரும் சான்றுகள் வாயிலாக அடிப்படைத் தத்து வத்தையோ (Metaphysis) அல்லது உண்மை இயலையோ (Ontology) அத்தனை எளிதில் மெய்ப்பிக்க முடியாதென்பது திண்ணம். காரணங் கடந்த கடவுளின் இயல்பை நிலைநாட்டுவது எளிதான செயலன்று. எல்லா அறிவும், எல்லாச் சக்திகளும், எல்லா நலன்களும் கடவுளிடத்தில் திகழ்கின்றன என்று சொன்னால்மட்டும் போதுமா? எத்தகைய அறிவு, எத்தகைய சக்தி, எத்தகைய நலம்—இவற்றை வரையறுக்க முடியாது என்று ஞானி தாமஸ் அக்யுனஸ் உரைக்கின்றார். இந்த உலகத்தை வெறும் பாழிலிருந்து கடவுள் படைத்தாரா? அல்லது பிரகிருதி அனாதியாயிருக்கிறதா? இந்தப் பிரகிருதியை வைத்துக் கொண்டு ஓர் ஓவியப் புலவனோ, அல்லது ஒரு சிற்பியோ சமைப்பதுபோலக் கடவுள் எல்லாவற்றையும் அமைக்கின்றார். ஒரு சிற்பிக்குச் செதுக்கப்படாத கல் வேண்டியிருக்கிறது. ஓர் ஓவியப் புலவனுக்கோ வண்ணம், கிழி முதலியன தேவையாயிருக்கின்றன. வைணவர்கள் பிரகிருதி, ஆன்மா, கடவுள் இம் மூன்று தத்துவங்களும் அனாதியாயிருக்கின்றன என்று கருதுகின்றார்கள். சங்கரர் பிர கிருதியை 'மாயை' என்கிறார். இராமானுஜர் பிரகிருதியின் நிலையையும் ஆன்மா வின் நிலையையும் ஒப்புக்கொண்டு, இவ்விரண்டும் கடவுளுக்கு உடலாயிருக் கின்றன; அந்தப் பரம்பொருள்தான் இவ்வுடலுக்கு அகவுயிராய் (soul), ஆன்மா வாய் மிளிர்கின்றது என்கிறார். படைப்பென்பது எல்லாவற்றிற்கும் காரணமான ஒன்றிலிருந்து பிறந்ததே. படைப்புக்குத் தொடக்கம் உண்டா இல்லையா? என்னும் வினாவிற்கு விடை சட்டென நல்கமுடியாது. தொடக்கம் உண்டு என விவிலிய நூல் விரிக்கின்றது. பிரபஞ்சம் அனாதியாயில்லை என்பதை ஆப்த வாக்கியத்தில் நம்பிக்கை வைத்துதான் சொல்லவேண்டியிருக்கிறது என்கிறார் அக்யுனஸ். இப்புளோட்டைனஸ், புதுப் பிளேட்டோ கொள்கையினர்—இவர்கள் ஒன்றாய்த் திகழும் ஆண்டவனின் நலத்திலிருந்து இப் பிரபஞ்சம் வழிந்தது என்று சாற்றுகின்றார்கள். கடவுள் பிரபஞ்சத்தைப் படைப்பதன் நோக்கம் தம்முடைய பூரணத்தை வெளிப்படுத்தவே. அது அவருடைய பெருநலத்தைச் சுட்டுகின்றது என்று அக்யுனஸ் கருதுகிறார். ஒரு தேவையால் இப் பிரபஞ்சம் அவரிடமிருந்து தோன்றிற்று என்று சொல்லுவதற்கில்லை. ஏதோ ஒரு

நோக்கத்தை வைத்தே கடவுள் படைத்திருக்கிறார். இப் பிரபஞ்சம் விரிவதற்குக் காரணம் அவருடைய சங்கற்பமே. என்ஞான்றும் நிலையாய் நிற்கும் (eternity) ஒன்றிலிருந்து இந்தப் பிரபஞ்சம் தோன்றிற்றென்றால், ஒன்றுக்கு ஒன்று முரண்படுகின்றதே. அழிவற்றதிலிருந்து அழிவுறும் இப் பிரபஞ்சம் எப்படிப் பிறக்கும்? ஒரு காலத்தில் இப் பிரபஞ்சம் தொடங்கிற்று என்னும் கருத்தும் வேறல்லவா என்று வினவுகின்றார்.

ஒன்று படைக்கப்பட்டிருக்கிறது என்பதற்கும், இல்லாமல் இல்லை (never non-existent) என்று இயம்புவதற்கும் முரண்பாடில்லை என்கிறார் அக்யுனஸ். கடவுளின் யாதொரு மாறுபாடுமில்லை. அவருடைய படைப்புத் தொழிலும், அவருடைய அழியாத இயல்புக்கு ஒத்ததாய்த்தானே இருக்கும்? ஆனால், ஒரு தேவையை முன்னிட்டு இப் பிரபஞ்சம் தோன்றவில்லை என்றும் மொழிகின்றார். இக் காரணத்தால் பிரபஞ்சம் என்ஞான்றுமே இருந்தே வருகின்றது என்று கூறி விடலாமன்றோ! ஆனால், உண்மையிலேயே அழிவற்றதாய், என்றும் நிலைபேறு உடையதாயுள்ள ஒன்றிலிருந்து இந்தப் பிரபஞ்சம் வரவில்லை என்றும் செப்பு கின்றார். படைப்புத் தொழில் (creative act) என்றும் அழிவற்றதாயிருந்தாலும், அதன் விளைவான இவ்வுலகம் அழிவற்றது அன்று என்றும் உரைக்கின்றார். ஏதோ காலத்தொடக்கத்தின் ஒரு கணத்தில் இப் பிரபஞ்சம் தோன்றியிருக்க வேண்டும் ஆண்டவன் எல்லாம் அறிந்தவராதலின். அவர் இந்த உலகைப் படைக்கச் சங்கற் பித்திருக்கவேண்டும். ஆண்டவனுடைய சங்கற்பமும் (Will) இப் பிரபஞ்சம் பிறப்பதற்குக் காரணம் என்று நவில்கின்றார். இட்படிக் கூறுவதெல்லாம் ஒன்று மற்றொன்றுக்கு முரணன்று. இப்படி சர்ச்சை செய்துகொண்டும், துருவிஆராய்ந்து கொண்டும் போனால் ஒரு முடிவுக்கு வருவோம். கடவுளின் படைப்புத் தொழில் பகுத்தறிவின் எல்லையைத் தாண்டி நிற்கின்றது என்னும் உண்மையைத்தான் கண்டுகொள்ளுவோம். சான்றுகள் தந்தாலும், படைப்பின் தத்துவம் ஒரு மர்ம மாய்த்தான் திகழ்கின்றது. பரம்பரையாய் வந்துள்ள இறையியலில் வைக்கப் படும் நம்பிக்கைக்கும் தத்துவ சாத்திரம் ஆள்கிற பகுத்தறிவுக்கும் உள்ள முரண் பாட்டை அகற்றுவதற்கு முயன்ற ஞானி தாமஸ் அக்யுனஸ் இடர்க்கடலில் ஆழா மல் இருக்கமுடியுமோ! படைக்கப்பட்ட உலகம் கடவுளிலிருந்து பிரிக்கப்படு மாயின் அப்பொழுது முரண்பாடு முளைக்கத்தான் செய்யும். ஆண்டவன் அகண்டா காரமாயிருக்கிறார் என்று ஏற்றால், அவனால் படைக்கப்பட்ட பொருள்களும் அவ னைத் தழுவித்தானே நிற்கும். மேலும், அவனுக்குப் புறம்பாக அவை இருக்க இயலா. படைக்கப்பட்ட பொருள்களும் கடவுளும் தனித்தனியாகக் காட்சி அளிக் கின்றார்கள் என்று இயம்பினால், படைத்தோன், படைக்கப்பட்டவை என்று இரண்டு கூறாகிவிடும். மேலும், இவற்றிற்குள் யாதொரு தொடர்புமில்லாமற் போய்விடும். படைப்புத் தொழில் அழிவற்றது, நிரந்தரமானது என்று கூறினால், உலகம் அழிவற்றதாய்த்தானே போய்விடும்? ஆனால், அப்படி இல்லையே என்று ஞானி தாமஸ் அக்யுனஸ் ஓர் ஐயத்தை எழுப்புகின்றார். அனைத்திறைக் கொள் கையைப்(Pantheism)பின்பற்றினால், படைப்புத் தனியாய் நிகழவில்லை; படைப்பு என்பது ஆண்டவனுடைய விரிவே என்று கூறிவிடலாம். வெறும் பாழிலிருந்து

ஒன்றுந்தோன்றிவிடாது. தோன்றுவதாயிருந்தால் அது ஏற்கெனவே ஒன்றில் கரந்து இருக்கவேண்டும். இரவிலிருந்து வைகறை எழுமானால், இரவின் சூலில் வைகறைக் குழந்தை துயின்றுகொண்டுதானிருந்திருக்க வேண்டும். குப்பை மேட்டில் வனப்புமிக்க மல்லிகை மலர்ந்து மணத்தை இளங்காற்றில் பரப்புமானால், அத்தகைய அழகும் தெய்வ மணமும் அந்த மேட்டில் கரந்துதானே இருந்திருக்க வேண்டும். குவிதலும் (involution), விரிதலும் (evolution)—இவ் விரண்டும் ஒன்றை ஒன்று தழுவித்தானே நிற்கும்? பிரகிருதி என்பது குவிந்துபோன பரமான்மா; பரமான்மா என்பது விரிந்த பிரகிருதி என்று ஸ்ரீ அரவிந்தர் தம் 'தெய்விக வாழ்வு' (The Life Devine) என்னும் வான்சிறப்புவாய்ந்த நூலில் கூறி யிருப்பது இடையறுது சிந்திப்பதற்குரிய மாபெருங் கருத்தாகும். ஸ்ரீ இராம கிருஷ்ண பரமஹம்சர் தரும் எடுத்துக்காட்டும் நம் சிந்தையைக் கவராமற்போகாது. நீரையும் பனிக்கட்டியையும் பிரிக்கமுடியாதன்றோ! பனியாய் உறையும்போது அது பிரபஞ்சமாகிறது; நீராய்த் திகழும்போது அது பரமான்மாவாய்க் காட்சி அளிக் கின்றது. திருமழிசைப்பிரான் அருளிச்செய்த பாடலும் ஈண்டு நோக்கத்தகுந்தது

**தன்னுளே திரைத்தெழும் தரங்கவெண் தடங்கடல்**
**தன்னுளே திரைத்தெழுந் தடங்குகின்ற தன்மைபோல்**
**நின்னுளே பிறந்திறந்து நிற்பவும் திரிபவும்**
**நின்னுளே யடங்குகின்ற நீர்மைநின் கண்ணின்றதே.**

அவரோஸ் (Averroes) கூறுவதை ஞானி தாமஸ் அக்யுனஸ் ஏற்கவில்லை. எல்லா மனிதர்களிலும் ஒரே சைதன்னியந்தான் மிளிர்கின்றது என்று அவர் இயம்புகின்றார். இது உண்மையாயின் பலதரப்பட்ட அறிவின் பண்பாடுகளும் வாழ்க்கைகளும் ஏற்படுவானேன் என்னும் வினாவை எழுப்புகின்றார். எல்லாம் ஆண்டவனுடைய மாறுதல்கள் என்று கூறுவோமானால், பற்பல கருத்துக ளுக்கும் நம்பிக்கைகளுக்கும் இடமில்லாமற்போய்விடும். மாறுதல்கள் யாவும் மாயை (illusion) என்று உரைத்தால். அப்போதும் முரண்பாடு எழத்தானே செய்யும்.

மாயை எப்படிக் கடவுளிடத்தில் நிகழக்கூடும் என்னும் வினாவும் பிறக்கு மன்றோ? அனைத்திறைக் கொள்கையும் (Pantheism) உலகத்தில் தீமை ஏற்படு வானேன் என்னும் வினாவிற்கு விடையளிக்கமுடியாமல் திகைக்கின்றது. ஒன்று பலவாய்க் காட்சி அளிப்பானேன் என்பதற்கு எளிதில் விடை நல்கமுடியாது என்று தோன்றுகின்றது. படைப்புத் தொழிலைப்பற்றி ஞானி தாமஸ் அக்யுனஸ் சிந்திப்பது இங்கு நோக்குதற்குரியது. தெய்வக் கருத்துகள் (divine ideas) அவரிடமிருக்கின்றன. அந்தத் தெய்வக் கருத்துகளுக்கேற்றவாறு படைப்பு களும் அமைகின்றன. மூலக்கருத்துகளைப்பற்றி (archetypes), மாதிரிக் கருத்துகளைப்பற்றிப் பிளேட்டோவும் பகர்கின்றாரன்றோ. இம் மூலக்கருத்து களைத்தான் இவ் வையகத்திலுள்ள அனைத்தும் பிரதிபலிக்கின்றன. ஆண்ட வனுக்குக் கீழாகப் பிளேட்டோவும் அவரைப் பின்பற்றுகின்ற புதிய பிளேட்டோ கொள்கையினரும் அவருடைய தெய்விக மனத்தை வைக்கின்கிறார்கள்;

அப்படி ஞானி அகஸ்டைன் கருதவில்லை. அவருடைய சங்கற்பத்தையும், அவருடைய மனத்தையும், அவருடைய ஆற்றலையும் அவரிடமிருந்து பிரிக்க இயலாது என்பதை உணரவேண்டும். ஞானி அகஸ்டைன் கொண்ட கருத்தின் சுவட்டில்தான் ஞானி தாமஸ் அக்யுனஸும் செல்லுகின்றார். கருத்தென்பது ஆண்டவனுடைய மனத்தின் மாறுதலென்று கருதினார். அத்தகைய நிலை உண்மையாக நிலையானதன்று. ' ஆண்டவன் தன்னுடைய பூரணமான நிலையை உணர்வார். மற்றைய எல்லாவற்றிற்கும் வழிகாட்டுகின்றார். அவருடைய இயல்பைத் தமக்கு ஒரு மாதிரியாக எல்லாரும் அமைத்துக்கொள்ள வேண்டுமென்பது அவருடைய திருவுள்ளமாகும்.

எல்லாம் வல்லவர், எல்லா ஞானமும் படைத்தவர், அருளே வடிவானவர் கடவுள் என்று கழறினால், அவருடைய அருளாட்சியில் தீமை நிகழ்வானேன் என்னும் வினா எழத்தானே செய்யும்? இதற்குச் சமாதானம் கூற ஞானி தாமஸ் அக்யுனஸ் முற்படுகின்றார். தீமை என்றால் என்ன என்னும் வினாவைக் கிளப்பி அதற்கு விடையும் நல்குகின்றார். தீமை என்பது ஒரு குறைநிலையாகும் (privation) என்கிறார். நல்லது இல்லாத ஒரு குறைநிலைதான் தீமையாகும். அக் காரணம்பற்றித் தீமை ஒரு மாயை என்று அவர் சாற்றிவிடவில்லை. குறைநிலை என்று சொன்னமாத்திரத்தில் தீமை இல்லாமற்போய்விடுமோ? இருள் என்பது ஒளியின் குறைநிலை என்று கூறினால், இரவு பகலாய்ப் போய்விடுமா? என்று கோப்லஸ்டன் (Copleston) என்னும் பேராசிரியர் வினவுகின்றார்.

எல்லாவற்றையும் கடவுள் படைத்தார் என்றால் தீமையும் அவர் படைத்ததாகு மன்றோ! இதை இயம்பத் திண்மையற்றவர்கள் தீமை என்பது மானிக்கியன் கொள்கையினர் (Monichaens) மொழிவதுபோல ஒரு தீக்கடவுளின் படைப்பு என்று சொல்ல நேரிடும். அப்பொழுது இரட்டை ஆட்சி இப் பிரபஞ்சத்தில் நிகழ்ந்துவிடும். இறைவனின் இயல்பைச் சித்திரிக்கும்பொழுது யாதோர் அச்சமுமின்றி நம்மாழ்வார்,

> **'நல்குரவும் செல்வும் நரகமும் சுவர்க்கமுமாய்**
> **வெல்பகையும் நட்பும் விடமும் அமுதமுமாய்**
> **பல்வகையும் பரந்த பெருமானென்னை யாள்வானை**
> **செல்வம் மல்குகுடித் திருவிண்ணகர்க் கண்டேனே'**

என்று மொழிகின்றார்.

இம் முழு வையகத்தின் பூரணத்திற்காக இறைவன் சில தீமைகள் நேரிடும்படி சங்கற்பித்துள்ளான் என்று ஞானி தாமஸ் அக்யுனஸ் கூறுவதுபோல் இவருடைய சில வாக்கியங்கள் அமைந்துள்ளன. தன் ஓவியக் கலையில் ஒளியும் நிழலும் ஓர் ஓவியப் புலவனுக்குத் தேவைபோல இப் பிரபஞ்சமாம் மாபெருஞ் சித்திரத்தை வரைந்த கடவுளாம் ஓவியப் புலவனுக்கு நன்மைகளும் தீமைகளும் வேண்டுவனபோலும் என்று இயம்பினாலும், தீமை என்னும் பிரச்சினை என்றும் தீராத பிரச்சினையாகத்தான் இருந்தே தீரும்.

தீமையென்னும் பிரச்சினையை ஞானி தாமஸ் அக்யுனஸ் உணராமல் இல்லை. தீமை வேண்டுமென்று ஆண்டவன் சங்கற்பித்துவிட்டான்; ஆதலால், மக்களுடைய இன்னல்களையும் இடுக்கண்களையும் களையக்கூடாது என்று ஞானி தாமஸ் அக்யுனஸ் உரைக்கவில்லை. தீமைகளும் துயர்களும் அவனுடைய சங்கற்பத்தினால் தோன்றினாலும், மக்கள் அவற்றைத் துடைக்கும் முறையையும் அவன் வகுத்துவிட்டான் என்பதுதான் உண்மை என்று இந்த ஞானி கூறுகின்றார்.

'கடவுளும் பிரபஞ்சமும்' என்னும் பொருளைப்பற்றி ஞானி தாமஸ் அக்யுனஸ் மொழிந்ததைக் கண்ட நாம், உடலையும் ஆன்மாவையும் (Body and Soul) பற்றி அவர்கொண்ட கருத்துகளை ஆராய்வது நம்முடைய கடமையாகும். மனிதனே ஓர் உளவியல் பௌதிகச் சேர்க்கையால் (psychophysical) பிறந்த ஓர் உருவமெனக் கொள்ளலாம். இந்த உருவத்தைப்பற்றி இரண்டு கொள்கைகள்—மலைக்கும் மடுவுக்கும் உள்ள இரண்டு முரண்பாடுடைய கொள்கைகள்—நம்முன் எழலாம். உண்மையான மனிதன் அவனுடைய அகவுயிர்தான்—ஆன்மாதான்; அல்லது அதை அவனுடைய மனம் என்று மொழியுங்கள். அந்த ஆன்மா உடலில் உறைகின்றது; உடலோ ஆன்மாவுக்கு ஒரு கருவியாய்த் திகழ்கின்றது என்று சிலர் செப்புவர்; அல்லது இந்த ஆன்மாவை அடைத்துவைத்திருக்கும் ஒரு சிறை என்று இவ்வுடலைக் கொள்ளலாம் என்று மற்றுஞ் சிலர் மொழிவர். தம் இளம்பிராயத்தில், தம் ஆசிரியரான பிளேட்டோவின் கருத்தாட்சிக்கு அடங்கிய தம் இளம்பிராயத்தில், அரிஸ்டாட்டில் இத்தகைய கொள்கையில் ஊன்றியவர் என்று சிலர் உரைக்கின்றனர். சிலர் அப்படி ஒன்றுமில்லை என்று சாற்றுவர். முற்பிறப்பு, மறுபிறப்பு முதலிய கொள்கைகளை ஆமோதிக்கிற பிளேட்டோவுக்கு, ஆன்மா ஒரு தனிப்பட்ட தத்துவமாய் விளங்குவதில் ஒரு வியப்பில்லை. ஆன்மா பல உடல்களை எடுக்கும்; மாறிமாறி வருகின்ற பல பிறவிகளை ஏற்கும். நாமும் அத்தகைய கொள்கையில் நம்பிக்கை வைக்கிறோம். எப் பிறவி வாய்க்குமோ என்று ஆழ்வார்களும் நாயன்மார்களும் ஏங்கிப் புலம்புகின்றதை நாம் பார்க்கின்றோம். ஆனால், ஸ்ரீ அரவிந்தர் நமக்கு ஓர் ஆறுதலை அளிக்கின்றார். மனித வடிவம் வந்த பிறகு வேறு கீழ்ப்பட்ட இனத்தின் வடிவை ஆன்மா எடுக்காது என்கிறார். மனிதனிடத்தில் தேவனாகும் தன்மை இருக்கின்றது என்று உரைக்கின்றார். கிறித்துவர்கள் ஆன்மாவின் முற்பிறப்பை ஒப்புக்கொள்கிறதில்லை. புதுப்பிளேட்டோ கொள்கையினரின் ஆட்சிக்கீழ் வந்த ஓரிஜின் (Origin) முதலிய கிறித்துவர்கள் ஆன்மாவின் முற்பிறவித் தத்துவத்தைப் பின்பற்றினதாகத் தெரியவருகின்றது. பிளேட்டோவின் தத்துவ நிழல் ஞானி அகஸ்டைன்மீது படரக் காண்கின்றோம். ஆன்மா—அறிவு வடிவமான ஆன்மா—சைதன்னியமான அகவுயிர் உடலை ஒரு கருவியாகப் பயன்படுத்துகிறது என்று ஞானி அகஸ்டைன் மொழிவது சிந்திப்பதற்குரியது. துறவறத்தை வலியுறுத்துகின்ற கிறித்துவ சமய வித்தகர்களின் நூல்களில் இத்தகைய கருத்து மிளிரக் காண்கின்றோம்.

அணுவாதிகள் எல்லாம் அணுக்களின் திருவிளையாடல்களே என்று வாதிக்கின்றார்கள். ஆன்மாகூடப் பற்பல அணுக்களில் அமைக்கப்பட்டிருக்கிறது

என்னும் கருத்தை அவர்கள் நல்குகின்றார்கள். மனத்திற்கும் உடலுக்கும் உள்ள தொடர்பை மறுக்கமுடியாது. உடலில் ஏதாவது நோய் தோன்றுமாயின் அது மனத்தைப் பாதிக்கத்தானே செய்கின்றது. மனத்தில் ஓர் அமைதி இல்லாமற் செய்யுமாயின் அது உடலை நலியச் செய்கின்றது. இவ்விரண்டிற்கும் நடுவே நின்று ஆராயவேண்டும் என்று ஞானி அக்யுனஸ் இயம்புகின்றார்.

ஆன்மா சிறையாக உடலில் உறைகின்ற ஒரு தனித் தத்துவமென்று இவர் கருதவில்லை; ஆன்மாவை அரிஸ்டாட்டில் கருதினதுபோல உடலின் உருவமென்றார் (form). ஆனால், ஆன்மா தன்னுடைய இருக்கைக்கு உடலைச் சார்ந்து இல்லை என்றும் அது சாதிக்கின்றது. உடல் அழிந்தாலும் அந்த ஆன்மா அழியாமல் இருக்கிறது என்று கூறுகின்றார். அரிஸ்டாட்டில் கொண்ட உளவியலுக்கும் (Psychology), கிறித்துவர் பின்பற்றுகிற இறையியல் தத்துவத்திற்கும் (Theology) ஒரு பாலம் அமைக்க அக்யுனஸ் முயல்கின்றார் என்பதுதான் உண்மையாகும்.

அரிஸ்டாட்டிலைப்போல அக்யுனஸ் ஆன்மாவுக்கு ஒரு விரிவான விளக்கம் தருகின்றார். ஆன்மா என்பது எல்லா உயிர்ப்பொருள்களையும் இயக்குவிக்கின்ற முதல் அடிப்படைத் தத்துவமே (principle). நாம் இப்பொழுது அளிக்கின்ற கருத்தை வைத்து அந்த ஆன்ம இயலை நோக்கக்கூடாது. அக்யுனஸ் 'anima' என்னும் சொல்லை வழங்குகின்றார்; 'anima' என்பது ஒன்றை இயக்குவிக்கும் சத்தியென்று இயம்பலாம். அரிஸ்டாட்டில் 'psyche' என்னும் சொல்லைத் தருகின்றார். அதற்குச் சூக்கும ஆன்மா என்னும் பொருளை அளிக்கக்கூடும். புல்பூண்டுகள் வளர்கின்றன. இவை இயங்குவதற்கு ஒரு மூலதத்துவம் வேண்டும். இதனை அன்னமய ஆன்மா (vegetative soul) என்று இயம்பலாம்.

விலங்குகளுக்கு உணர்ச்சிகள் இருக்கின்றன. தங்களைக் காப்பாற்றிக் கொள்ளுகின்றன; தம் இனங்களை ஓரிடத்து வளர்க்கின்றன. இவற்றை உயிருள்ள, உணர்ச்சியுள்ள ஆன்மாக்கள் என்று கூறலாம்; பிராணமயம் என்றும் இந்த நிலையைச் சித்திரிக்கலாம். போஸ் அவர்கள் மரம், செடி, கொடிகளுக்கும் உணர்ச்சிகள் உண்டு என்று விஞ்ஞான முறையில் காட்டிவிட்ட விஷயத்தை நாம் அறிவோம். மனிதனாய்ப் பிறந்தவர்கள் தங்களுடைய அறிவைப் பயன்படுத்திக் கொள்ளுகின்றார்கள்; தங்களுக்குச் சுதந்திரம் இருப்பதையும் உணர்கின்றார்கள். அக் காரணம்பற்றியே அவர்களுக்கு மனோமய ஆன்மா அல்லது விஞ்ஞானமய ஆன்மா (rational soul) இருக்கின்றது. இந்த மனோமய ஆன்மா அல்லது விஞ்ஞானமய ஆன்மா மரஞ்செடிகொடிகள், விலங்கினம் இவற்றைக் காட்டிலும் உயர்ந்த படியில் இருக்கின்றன. படிப்படியாக ஆன்மாக்கள் ஒன்று மற்றொன்றுக்கு மேலாக விளங்கக் காண்கின்றோம்

இக் காரணங்கொண்டு விலங்கினத்தில் இரண்டு ஆன்மாக்கள் திகழ்கின்றன; மனிதவினத்தில் மூன்று ஆன்மாக்கள் மிளிர்கின்றன என்று இயம்பி

விடக்கூடாது. புல்பூண்டிற்குள்ள ஆன்மா அன்னமய ஆன்மாதான்; விலங்கினத்திற்குள்ள ஆன்மா பிராணமய ஆன்மாதான். பிராணமயத்தைப் பெற்றிருந்தாலும் புல்பூண்டின் செயல்களை இவை புரிகின்றன. மனிதனே புல்பூண்டு, விலங்கு இவற்றைக்காட்டிலும் உயர்ந்த படியில் இருக்குந் தன்மையால் புல்பூண்டு, விலங்கு இவற்றின் செயல்களைப் புரிவதோடு நிற்காமல், தன் அறிவுக்கேற்றவாறு மற்றைய துறைகளிலும் அவன் இறங்குகின்றான். எல்லா இனத்திற்கும் ஒவ்வொன்று ஆன்மாவாகத் திகழ்கின்றது. புல்பூண்டிற்கு வடிவம் கொடுத்தது அன்னமய ஆன்மாதான்; விலங்கினை விலங்கினமாய்த் திகழச்செய்தது விலங்கினத்தை இயக்குவிக்கும் பிராணமயந்தான்; மனிதனை மனிதனுய்க் காட்சி அளிக்கும்படி செய்தது அவனுடைய மனோமயம் அல்லது விஞ்ஞானமயந்தான். உடலும் உருவமும் வேறல்ல; இவற்றை ஒன்றுய்த்தான் கருதவேண்டும். ஆன்மாதான் உடலின் உருவம் என்று சொன்னால், உடலிலிருந்து ஆன்மா தோன்றிவிட்டது என்று கருதக்கூடாது. மனித உடலை மனித உடலாக்கினது அந்த மனோமய அல்லது விஞ்ஞானமய ஆன்மாதான். அதனால் ஆன்மாவையும் உடலையும் பிரித்துப் பார்க்காதீர்கள். ஆன்மா இல்லாத உடலை உடல் என்று கூறுவதற்கு இடமுண்டோ! அப்பொழுது அது உடலன்று; அது ஒரு சவமே. உடல் உடலாயிருப்பதற்குக் காரணம் அந்தச் சைதன்னியத்தின் ஒளியால்தான் என்று உணரவேண்டும். இன்னும் ஒருபடி இந்தச் சர்ச்சையின் சங்கிலித் தொடரை நீட்டியிருந்தால், இராமானுஜர் கொண்ட தத்துவத்திற்கு அது நம்மை அழைத்துச் சென்றிருக்கக்கூடும். இந்த அகில பிரபஞ்சமும் பிரபஞ்சமாய்த் திகழும்படி உருக்கொடுத்தது அந்தப் பரமான்மாதான் என்று கூறிவிடலாமன்றோ! ‘உடல்மிசை உயிரெனக் கரந்து எங்கும் பரந்துளன்’ என்னும் நம்மாழ்வாரின் திருவாய்மொழியை நாம் மறக்க இயலுமோ! புவனசுந்தரன் என்று ஆண்டவனுக்கு ஒரு பெயர் உண்டு. புவனம் சுந்தரமாய்த் திகழ்வது அவன் அதில் கரந்து நிற்பதால் என்று உரை கூறுவாரும் உளர். நான் இந்த மைதானங்களையும் இயற்கைக் காட்சிகளையும் நேசிப்பதற்குக் காரணம் இவற்றில் கரந்து நிற்கும் ஆண்டவன் ஒளியாலன்றோ என்று வேட்ஸ்வொர்த் கூறுவதும் இங்குச் சிந்திப்பதற்குரியது.

ஞானி தாமஸ் அக்யுனஸ் பிளேட்டோ கண்ட கருத்தை ஏற்கவில்லை. விஞ்ஞானமய ஆன்மா இவ்வுடலுக்கு உருவம் கொடுத்திருக்கமுடியாது என்று சிலர் செப்புவர். ஆனால், உடலோடு ஒரு சம்பந்தம் இருக்கிறதே என்று கேட்டால், ‘பிரகிருதியும் அதன் வடிவமும் போல நிலைபெறுள்ள சம்பந்தமன்று; கப்பலைச்செலுத்தும் தலைவன்போல இந்த ஆன்மா உடலாம் தோணியைச் செலுத்துகின்றது’ என்று அதற்கு விடை தருவார்கள். மனிதன் என்பவன் ஆன்மாவும் சேர்ந்தவனல்லன். மனிதன் தனிப்பட்ட ஆன்மாதான். இவ்வுடல் அவன் உடுத்துகிற உடைபோலத் திகழ்கின்றது. பழைய உடைகளைக் களைந்து எறிந்து, புதிய உடைகளை—மரணதேவன் தன் காலத்தறியில் புனைந்துதரும் புதுப்புது உடைகளை—ஆன்மா அணிந்துகொள்ளுகின்றது. ஆன்மாவுக்கும் உடலுக்கும்

உள்ள தொடர்பு மனிதனுக்கும் அவன் அணியும் உடைக்கும் போன்றதே என்று பிளேட்டோ கருதுகின்றார். இத்தகைய ஒப்பு முறைகளை (analogies) ஞானி தாமஸ் அக்யுனஸ் ஏற்கவில்லை. பிரகிருதி சம்பந்தத்தால் ஒவ்வொன்றிற்கும் தனிப் பட்ட உருவம் ஏற்பட்டிருக்கிறது. ஆன்மா எங்கேயோ தனித்து இருக்கவில்லை; உடலோடு தொடர்பு ஏற்படுவதற்குமுன் அது இல்லை என்றும் வாதிக்கின்றார். ஆனால், தன்னுடைய இருக்கை உடலைப் பொறுத்தது என்று அவர் கூறிவிட வில்லை. ஒவ்வோர் ஆன்மாவும் கடவுளால் படைக்கப்பட்டது என்று கருது கின்றார். மனித ஆன்மா உடல்மூலந்தான் அறிவைத் திரட்டுகின்றது. ஐம் பொறிகள் வாயிலாகத்தான் இதற்கு ஞானம் பிறக்கின்றது. மனம் ஒரு மெழுகு போல இருக்கிறது. அதன்மீது ஐம்புலப் பலகணிகள் வாயிலாக வரும் பதிவுகள் விழுகின்றன. உணர்ச்சிகளையோ கருத்துகளையோ பெற ஐம்புலன்கள் தேவையா யிருக்கின்றன. தக்க உடலுக்கேற்றவாறு அறிவும் அமையப் பார்க்கின்றோ மன்றோ! உடல்நலத்தைப் பொறுத்தது அறிவும் என்று கிரேக்கர்கள் கருதினார் கள். உள இயல் பௌதிக இயலைப் பொறுத்தது என்று அரிஸ்டாட்டில் மொழிந்ததையே ஞானி தாமஸ் அக்யுனஸ் பின்பற்றுகின்றார். நவீன விஞ்ஞான ஆராய்ச்சியாளர்கள் உடலுக்கும் உளத்திற்கும் உள்ள தொடர்பை வற்புறுத்திப் பேசுவதை நாம் காணவில்லையா?

இப்படி சர்ச்சை செய்கிற ஞானி தாமஸ் அக்யுனஸ் 'பாவத்தால் உடல் ஏற்படவில்லை; நாம் உய்யும்பொருட்டுதான் உடல் நமக்கு அளிக்கப்பட்டிருக் கிறது' என்று இயம்புகின்றார். உடலையும் ஒரு சாதனமாகக் கொள்ளவேண்டும் என்று நம் நூல்களும் நவில்கின்றனவே! மனித ஆன்மா உணரவேண்டியிருக் கிறது; ஐம்பொறிகள் இல்லாமற்போனால் எப்படி உணர்வு ஏற்படும்? எப்படி அறிவு பிறக்கும்? இதற்காகவே அதன்கண் கருத்துகள் இல்லையோ! ஓரிஜின் (Origin) பிளேட்டோ கருதுவதுபோல 'ஆன்மா ஒரு பூரணமான ஞான வடிவுள்ள கலப்பற்ற சைதன்னியம்' என்கிறார்; உடலின் சம்பந்தம் தற்செயலாய் நிகழ்ந்தது என்கிறார். ஆன்மாவை நலிவிக்க வந்தது அன்று உடல்; அதை உயர்த்துவதற்கே அது எழுந்தது என்று ஞானி தாமஸ் அக்யுனஸ் எண்ணு கின்றார்.

இதுகாறும் ஆன்மாவைப்பற்றி ஞானி தாமஸ் அக்யுனஸ் இயம்பியது ஓர் அமிசமாகும். மற்றோர் அமிசமும் இந்த ஆன்மாவுக்கு இருக்கின்றது என்பதை நாம் உணரவேண்டும் என்று அவர் உரைக்கின்றார்.

பிரகிருதியைக் கடந்து நிற்கின்ற செயல்களிலும் ஆன்மா அல்லது அக வுயிர் ஈடுபடுகின்றபடியால் ஆன்மா பிரகிருதி சம்பந்தமற்றது என்கிறார். மரணத்திற்குப் பிறகு இந்த ஆன்மாவை மனிதன் என்று கூறுவதற்கில்லை. மனிதன் என்பதற்கு இவர் இலக்கணம் வகுப்பது ஈண்டுச் சிந்திப்பதற்குரியது. ஆன்மாவும் உடலும் சேர்ந்துதான் மனிதனாகும் என்பதை மறக்கக்கூடாது என்று மொழிகின்றார். ஆன்மா உடலைச் சார்ந்து நிற்கின்றது; சார்ந்து நிற்கவும் இல்லை என்பது முரண்பட்டதாகுமே என்று ஒருவர் வினவலாம். உடல் சம்பந்தப்பட்ட

வரையில் அதற்கு ஒத்தவாறு ஆன்மா நடக்கிறது ; மரணத்திற்குப் பிறகு அதன் நிலை வேறாய்த் திகழ்கின்றது. அரிஸ்டாட்டிலுக்கும் ஞானி தாமஸ் அக்யுனஸுக்கும் கொள்கையில் வேறுபாடு உண்டு. அரிஸ்டாட்டில் சென்ற நெறியில் அப்படியே அக்யுனஸ் செல்லவில்லை; தமக்கென ஒரு புதிய நெறியை வகுத்துக் கொள்ளுகின்றார். அரிஸ்டாட்டில் ஆன்மாவுக்கு இலக்கணம் வகுக்கின்றபொழுது, இந்த ஆன்மா உடலுக்கு உருக்கொடுத்த ஆன்மா என்கிறார். உடல் அழியும் பொழுது இந்த ஆன்மாவும் அழிந்துவிடும். இந்த ஆன்மா அழிந்தாலும் அழியா அறிவுமயமானது என்றும், எஞ்ஞான்றும் இது திகழ்வது என்றும் அரிஸ்டாட்டில் கூறுகின்றார். ஆன்மா வேறு, அழியாச் சைதன்னியம் வேறு என்று வரையறுத்து உரைக்கின்றார் அரிஸ்டாட்டில். ஞானி தாமஸ் அக்யுனஸோ, 'ஆன்மா இறைவனால் படைக்கப்படுகின்றது. இந்த ஆன்மா உடலுக்குக் காரணமாகின்றது. இரண்டும் சேர்ந்து மிளிர்கின்றபோதுதான் மனிதன் என்கிறோம். பிரிவு நிலையில் இந்த ஆன்மாவுக்கு ஓர் உடல் இருக்கக்கூடும். அந்த உடல் தான் உயிர்த் தெழும் தறுவாயில், இந்த உடல்—இந்த அப்பிராகிருத உடல்—ஆன்மாவோடு, பின்னிக்கிடக்கின்ற ஆன்மாவோடு தொடர்ந்து வருகின்றது' என்கின்றார். சைவர்களும், 'ஆன்மாக்களுக்கு உடல்கள் அழிந்து போய்விடவில்லை ; ஆனால், பௌதிகத் தொடர்பற்ற அப்பிராகிருத உடல்களை அவை பெறுகின்றன' என்கின்றனர்.

ஐம்புலன் நல்கும் அனுபவங்களைக்கொண்டு மனிதன் படிப்படியாக இறைவன் திருவடிகளை நண்ணுகின்றான். ஞானம் பெரிதா, அன்பு நெறியைச் சுட்டுகிற பக்தி பெரிதா என்னும் சர்ச்சை இடைக்காலத்தில் புயலடித்ததை நாம் நன்கு உணர்வோம். இந்தக் காலத்திலும் அந்தப் புயல் ஓய்ந்தபாடில்லை. ஞானயோகம், பக்தியோகம், கருமயோகம் இவற்றிற்கு இடையே யாதொரு முரண்பாடுமில்லை என்று ஸ்ரீ அரவிந்தர் அருளியது சிந்திப்பதற்குரியது. உண்மையான ஞானம் அல்லாதபொழுது பக்தி பிறக்காது ; உண்மையான பக்தி இல்லாதவிடத்துக் கருமம் செய்ய இயலாது. உண்மையான ஞானிதான், ஆண்டவனைத் தன் அனுபூதி நெறியால் கண்ட ஞானிதான் அவன்பால் பக்தி செய்யமுடியும். பக்தி என்பது இறுதியில் கைங்கரியத்தில் மலர்ந்துவிடும்; உலகமனைத்தையும் ஆண்டவன் வடிவமென்று கருதி மக்களுக்குச் சேவை புரியும்; உலகத்திற்குப் புரியப்படும் சேவை உத்தமனுக்குச் செய்யப்படும் சேவையாகும். ஞானத்தால்தான் மனிதனுக்கு விடுதலை உண்டு என்று ஞானி தாமஸ் அக்யுனஸ் கருதுகின்றார். ஞானயோகவாதி (Intellectualist) என்று இவரைக் கூறுவார் கள். ஆண்டவனை ஞானத்தால் உள்ளபடி காணவேண்டும் என்று இயம்பு வதால், அன்பையோ பக்தியையோ அவர் புறக்கணித்துவிடவில்லை. முழு அன்பு என்பது ஞானத்தின் வளமே ; ஞானத்தின் குழவியாகும் என்று அவர் எண்ணு கின்றார். எல்லோரும் இன்பத்தை நாடுகின்றார்கள் என்பது உண்மையே. இன்பம் என்று சொல்வதற்கு மாறாகப் 'பெருநலம்' என்று மொழிவது மிகப் பொருந்தும். தற்கொலை செய்கிறவன்கூடத் தன்னலத்தை நாடுகிறான். பெருநல விழைவு மனிதனின் இதயத்தில் ஆழ்ந்து வேருன்றிக் கிடக்கின்றது. மனிதன்

அடையவேண்டிய பெருநலம் கடவுள்தான். ஆனால், எல்லோரும் கடவுளை நாடு கின்றார்கள் என்று சொல்லுவதற்கு இல்லை. ஆனால், கடவுளின் தரிசனம் கிடைக் கப்பெறுமாயின், எல்லாவற்றையும் மறந்து அவரையே நாடுவார்களல்லவா? 'அவனைக் கண்ட கண்கள் மற்றொன்றைக் காணவே' என்று திருப்பாணாழ்வார் திருவாய்மலர்வதை நாம் அறிவோம். அந்தப் பரம்பொருளை—பரத்தை நோக் கினால் எல்லா இன்பநுகர்ச்சிகளும் அற்றுப்போய்விடும் என்று அம் மாயோன் கீதையில் வலியுறுத்துகின்றானல்லவா?

மனிதனுக்கு அறிவு இருக்கிறது; சங்கற்பமும் இருக்கிறது. ஆதலால், அவன் சுதந்திரமுள்ளவன்தான். சங்கற்பங்கூட அவன் அறிவிலிருந்து எழுந் ததே. சங்கற்பம் அறிவைத் தூண்டவில்லை; அறிவுதான் சங்கற்பத்தை எழுப்புகின்றது (Free choice is an act of the will resulting from a judgement of reason). கடவுளின் அகண்டமான அறிவைப்பற்றி இவர் இயம்புவது சிந்திப்பதற்குரியது. கடவுள் படிப்படியாக எதையும் அறி கிறார் என்று உரைப்பது தவறாகும். காலத்தில் நிகழ்கின்ற எல்லாவற்றையும் ஒரே பொழுதில் அறிகின்றார். அவர் காலம் கடந்தவர். கழிந்த காலம், நிகழ் காலம், வருங்காலம் இம் மூன்றும் அவருக்கு ஒரே காலம்தான் என்று ஞானி தாமஸ் அக்யுனஸ் சாற்றுகின்றார்.

கடவுளை அடைவதற்குரிய வழியையும் ஞானி தாமஸ் அக்யுனஸ் வகுக் கின்றார். தன்னுடைய ஆசாபாசங்களுக்கு அடிமையாகாமல், அறிவெனும் அங் குசத்தால் ஐம்பொறிகளாம் களிற்றை அடக்கினால், இறைவனுடைய அறிவொளி கிட்டும். மனிதன் ஒரு விலங்குமல்லன்; ஒரு தேவதூதனோ (Angel) அல்லது நித்திய சூரியோ அல்லன். விலங்கினத்திலிருந்து இவனுடைய அறிவு இவனைப் பிரிக்கின்றது. ஒரு தேவதூதனோ அல்லது நித்திய சூரியோ தன் அறிவுக்காகப் புறத்தை நாடவேண்டிய அவசியமில்லை! அதற்கு இயற்கையான ஞான ஒளி அமைந்திருக்கிறது. மனிதனோ ஒரு வறிஞனாய்த் தொடங்கி ஒரு வேந்தனாக வேண்டியிருக்கிறது என்று எம். சி. டார்ஸி (M. C. Darcy) தம் 'தாமஸ் அக்யுனஸ்' என்னும் நூலில் மிகக் கவின்பெறக் கூறுகின்றார். மாசறு காட்சியோர்களுக்கு முதிர்ந்த இறைவனின் நேர்க்காட்சி கிடைக்கின்றது. மனிதனோ தம் அறிவாம் ஏணியைக்கொண்டு மெல்லமெல்ல அப் பரம்பொருளாம் கோயிலின் சிகரத்தை எட்டிப் பிடிக்கும்படி நேர்கின்றது. பௌதிகப் பொருள் களைப்பற்றி அறியும் துறையிலுங்கூடக் கடவுளின் அகண்ட ஞானத்தைக் காட்டிலும், தேவதூதன் பேரறிவைக் காட்டிலும் மனிதனுடைய மின்மினிப் பூச்சி அறிவு மிகவும் கீழ்ப்பட்டதே என்று இவ்வாசிரியர் உரைக்கின்றார். கடவுள்தான் எல்லாச் செயல்களுக்கும் ஆதாரமாய்த் திகழுகின்றார். இந்தச் செயல்களைப் புரிகின்ற பிராணிகளனைத்தும் அவனுடைய கருவிகளே என்று கில்ஸன் (Gilson) மொழிகின்றார். இத்தகைய கருத்து ஞானி தாமஸ் அக்யுனஸ் கண்ட தத்துவ உலகத்தில் கோயில்கொண்டிருப்பதைப் பார்க்கின்றோம். அவன் ஆட்டிவைக்

கின்ற உலகத்திலுள்ள பிராணிகள் யாவும் அவன் உயிர்த் துடிப்பைப் பெற்று விளங்குகின்றவையே. இது அவனுடைய சக்தியாலன்று; அவனுடைய பெரு நலமும் அன்பும்தாம் எங்கும் வழிந்தோடுகின்றன. இந்தக் காரியமாம் பிரபஞ்சம் அவனுடைய காரணமாம் அன்பின் வடிவேயாகும். தலையூற்று ஆண்டவன் அருளே (Love is the deepest spring of all causality—Gilson). கடவுளின் நிலையை மனிதன் அடைய விரும்பினல், அந்த விருப்பம் அவனிடத்தில் குவிந்திருக்கவேண்டும். வெறும் பாழிலிருந்து ஒன்றும் தோன்றிவிடாதன்றோ? 'குவிந்திருப்பது விரியத்தானே செய்யும்' (Evolution presupposes involution) என்று ஸ்ரீஅரவிந்தர் அருளியது ஆழ்ந்து சிந்திப்பதற்குரியது.

# 20. தேவதூதர்கள்

அரிஸ்டாட்டில் கண்ட வான நூலில் அலர்ந்திருக்கும் உண்மை சிந்திப்பதற் குரியது. இந்தத் துறையில் பிளேட்டோ தேர்ந்த கருத்து அரிஸ்டாட்டிலின்மீது ஆட்சிபுரிவதை உணர்கின்றோம். தான் சலியாது நின்று மற்றதைச் சலிக்கவைக் கும் ஆதிசக்தியை எல்லோரும் விரும்புகின்றார்கள்; அதன்பால் அன்பைச் சொரிகின்றார்கள். அத்தகைய சக்தி அறிவுமயமாய்த்தான் இலங்கவேண்டும் என்றும் கூறுகின்றார்கள். விண்ணிலுள்ள கோளங்களை இயங்கச் செய்யும் சக்தி அறிவே வடிவமாய் மிளிர்கின்றது என்று மொழிந்துவிடலாம். இப் பிரபஞ்சத்தின் ஆன்மா யாதெனின், எல்லாவற்றையும் ஓர் ஒழுங்காக அமைக்கும் சக்தியே என்று பிளேட்டோ பகர்கின்றார். விண்மீன்கள் யாவும் தெய்விக ஆன்மாக்களின் வான் ஆற்றலால் சுழல்கின்றன என்று பிளேட்டோ கருதுகின்றார். பிளேட்டோ வின் அடிச்சுவட்டை அப்படியே முற்றிலும் பின்பற்றுகிறவர்கள் விண்மீன்களுக்கு ஆன்மாக்கள் உண்டு என்று எண்ணுகின்றார்கள். ஆனால். கிறித்துவ சமயக் குர வர்கள் இக் கொள்கையை ஏற்கத் தயங்கினார்கள்; சிலர் மறுத்தார்கள்; வேறு சிலர் இக் கருத்தில் ஓர் உண்மை ஒருகால் இருக்கக்கூடும் என்றும் அயிர்த்தார்கள். கீழைநாட்டு உரையாசிரியர்களான ஆல்ஃபரபி (Alfarabi), அவிசென்னு (Avicenna), அல்கெசல் (Algazel) முதலியோர்கள் விண்மீன்களுக்கு ஆன் மாக்கள் உண்டு என்று வாதாடினார்கள். இக் கருத்தை எதிர்த்துப் போராடினோர் களும் உண்டு. இத்தகைய சலனத்திற்குக் காரணம் புலனற்ற ஆன்மாவின் ஆற்றலாக இருக்கக்கூடும் என்றார்கள்! ஒருகால் அறிவின் இயக்கமாய் இருக்கக் கூடுமோ என்று மெய்மனிடிஸ் (Maimonides) கருதினார். கலப்பற்ற சுத்த சைதன்னியத்தின் செயலாய்த்தான் அது இருக்கக்கூடும் என்று அவரோஸ் (Averroes) சாற்றுகின்றார்.

படிப்படியாயுள்ள தெய்வங்களையும் ஆன்மாக்களையும்பற்றி அடிப்படை யான தத்துவ விசாரங்கள் எழுந்துவிடுவதைப் பார்க்கின்றோம். அந்தப் பரம் பொருளிலிருக்கும் முதல் கீழ்ப்படியாக இருப்பது அறிவேயாகும் (intelligence). பிளேட்டோ கொண்ட 'கருத்துகள்' (Ideas) என்னும் தத்துவமும் ஆராய்தற் குரியது. முழுநிறை அல்லது பொது இனத்திலிருந்து சிறப்பு இனங்கள் தோன்று வதுபோல் இந்தக் கருத்துகள் தம்தம் இடங்களில் அமர்ந்துவிடுகின்றன.

பிளோட்டினஸ் (Plotinus), பார்பைரஸ் (Porphyrus), ஐயாம்ஃபிலிகஸ் (Iamflicas), புரோக்லஸ் (Proclus) இவர்கள் படிநிலை ஒழுங்கில் (Hierarchical order) நம்பிக்கை உள்ளவர்கள். இறுதியாகக் கூறப்பட்ட சான்றோனுக்கு நாம் மிகவும் கடமைப்பட்டிருக்கிறோம். அறிவுச் சக்திகளைச் சின்மய சக்திகளாக்கும் கொள்கைக்கு (the doctrine of intelligence) முழு உருக்கொடுத்தவர் ஸிங்ரோக்லஸ் என்பவரே. புலன் கடந்தவை, கலப்பற்றவை, காலங் கடந்தவைபோன்ற இலக்கணங்களை இச் சின்மய சக்திகளுக்கு இவர் வகுக்கின்றார். இவை பரம்பொருளுக்கும் படைக்கப்பட்ட பிரபஞ்சத்திற்கும் இடையே உள்ள சக்திகளாகும் என்னும் கருத்து பண்டைக் காலத்தில் உலாவிவந்ததை உணர்கின்றோம். பிற்காலத்தில் இத்தகைய சின்மய சக்திகளைத 'தேவதூதர்கள்' என்று அழைத்தார்கள். இந்தத் தேவதூதர்கள் ஆண்டவனால் மக்களிடம் அனுப்பப்படுவார்கள் என்று விவிலிய நூல் கூறுகின்றது. விண்ணை நிரப்புகின்ற 'தூய ஆவிகள்' இவை என்று ஃபைலோ (Philo) எண்ணுகின்றார். கிரேக்க தத்துவ வித்தகர்கள் இவற்றைத் 'தேவதைகள்' (Daemons) என்று உரைக்கின்றார்கள். மோசஸ் இவற்றைத் 'தேவதூதர்கள்' என்று மொழிகின்றார். அறிவற்ற விலங்கினத்தைக் காட்டிலும் அறிவுடைய மக்கள் உயர்ந்தோர்கள் என்பதில் ஐயமில்லை. மக்கள் உடல்களோடு கூடினவர்கள். உடல் அற்ற தேவதூதர்கள் உலகத்தில் உறையும் மக்களைவிடச் சாலச் சிறந்தவர்களல்லவா ?

தெய்வநிலைக்குக்கீழ் தீ திகழ்கின்றது; அதற்குக்கீழ் காற்று உலாவுகின்றது; காற்றின்கீழ் நீர் ஓடுகின்றது; நீருக்குக்கீழ் புவி விரிகின்றது என்று கூறப்பட்டிருக்கிறது. நாம் கருதுவது பின்வருமாறு: விண், கால், எரி, நீர், மண் என்னும் முறையை நாம் வகுத்திருக்கின்றோம். புல்பூண்டிலிருந்து அன்னம் பிறக்கின்றது. அன்னமயம், பிராணமயம், மனோமயம், விஞ்ஞானமயம், ஆனந்தமயம் என்னும் கோசங்களையும் சித்திரிக்கிறோம். தூலத்திலிருந்து சூக்குமத்திற்குச் செல்லலாம் அல்லது சூக்குமத்திலிருந்து தூலத்திற்கு இறங்கலாம். எவ்வளவுக்கு எவ்வளவு மனிதன் தன்னைப் பிரகிருதியிலிருந்து பிரித்துக்கொள்ளுகிறானோ அவ்வளவுக்கு அவ்வளவு படைப்பின் ஏணியில் அவன் முன்னேறியிருக்கிறான்.

ஆண்டவனுக்கு அடுத்த கீழ்ப்படியில் தேவதூதர்கள் இருக்கின்றார்கள். மக்கள் ஐம்புலன்கள் வழியாக அறிவைப் பெறுகின்றார்கள். சில தேவதூதர்கள் நேர்டியாகவே ஞானச்சுடரை அடைகின்றார்கள். சில தேவதூதர்கள் ஆண்டவனோடு தியானத்தில் ஆழ்ந்துவிடுகின்றார்கள். வேறு சில தேவதூதர்கள் அகில பிரபஞ்சத்தின் மூலகாரணங்களில் மூழ்கிவிடுகின்றார்கள். மற்றுஞ் சிலர் ஆண்டவன் படைத்த பிரபஞ்சத்தின் வனப்பைப் பருகுகின்றார்கள்.

எல்லா ஞானச்சுடருக்கும் மூலம் ஆண்டவன்தான். அவனிடமிருந்தே இந்த ஞானச்சுடர் வெள்ளம் கொஞ்சங்கொஞ்சமாகக் கீழே இறங்குகின்றது. இது மனிதனிடம் வருகின்றது; பிறகு இது பிரகிருதியில் சிறைப்பட்டு மறைந்துபோய்

விடுகின்றது. பிரகிருதியிலிருந்து ஒளி எழுமானால் அந்த ஒளி ஏற்கனவே அதில் கரந்துதானே இருக்கவேண்டும் என்று ஸ்ரீ அரவிந்தர் வினவுகின்றார். பிரகிருதியின் தொடர்பு அறஅற ஞானச்சுடர் ஓங்கிக்கொண்டேபோகுமன்றோ? இந்தப் படிநிலை (hierarchy) அமைப்பு ஆழ்ந்து சிந்திப்பதற்குரியது.

## ஆன்மாவும் உடலும்
## (Soul and Body)

உலக வடிவங்களின் உச்சியில் மிளிர்வது கலப்பற்ற சின்மயந்தான்-அறிவுச் சுடர்தான்; கீழ்த்தடத்தில் பிரகிருதியால் சிறைப்பட்ட உருவங்கள் காட்சி அளிக்கின்றன. இவற்றிற்கு இடையே திகழ்வது ஆன்மாவாகும். இவ்வான்மா தூய ஞானமயமும் அன்று; வெறும் பிரகிருதியின் வடிவமும் அன்று. இது உடலோடு தொடர்புற்றதாய்க் காட்சி அளிக்கின்றது. இந்த உடல் தற்செயலாக அதற்கு ஏற்பட்டது அன்று என்னும் உண்மையை உணரவேண்டும். இந்தத் தொடர்பு ஆன்மாவுக்கு இன்றியமையாதது என்று இயம்புவதற்கு இடம்உண்டு. உடல் ஒரு தீமை; கடவுளுக்கு மாறாக ஒரு சக்தி இதைப் படைத்தது என்று மானிக்கியர்கள் (Manicheans) கருதுகின்றார்கள். உடலைத் 'தீமை' என்று உரைப்பது ஒரு தவறான கருத்தாகும். மற்றைய படைப்புப்போல இதுவும் ஒரு படைப்பாகும்; ஆண்டவனால் படைக்கப்பட்ட காரணத்தால் இது ஒரு பெருநலமே. உடலை ஆண்டவன் உறையும் திருக்கோயிலாக நாமும் கருதுகின்றோம். மக்களனைவரும் நடமாடுகின்ற கடவுளர்தாமே என்று எண்ணுகின்றோம். பிறவிக் கடலைக் கடப்பதற்குற்ற புணையென்றும் சான்றோர்கள் சாற்றுகின்றார்கள்.

இந்தப் பிரபஞ்சம் ஒரு மாபெரும் பாவத்தால் விரிந்தது என்றும், ஆன்மாவுக்கு உடலோடு ஏற்பட்ட தொடர்பு பாவத்தின் விளைவு என்றும் கூறுவோர்களுடைய கருத்தை ஞானி தாமஸ் அக்யுனஸ் ஏற்கவில்லை. ஒரு பெருநலத்திலிருந்துதான் இந்தப்பிரபஞ்சமாம் யாழ் பிறந்து ஆண்டவன் இசைபாடுகின்றது என்னும் கருத்தில் வேரூன்றியவர் ஞானி தாமஸ் அக்யுனஸ் என்று இயம்பினால், அது மிகையாகாது. இந்த ஞானத்தின்கண் காட்சி அளிக்கும் ஒவ்வொரு பொருளும் ஆண்டவனின் அருட்சோதியைப் புலப்படுத்துகின்றது என்னும் நன்னம்பிக்கைக் கொள்கை (Optimism) உள்ளவர் அக்யுனஸ் என்பதில் யாதோர் ஐயமுமில்லை.

தீச்செயல்களில் திளைத்த ஆன்மாக்களைச் சிறைசெய்யவே ஆண்டவன் உடல்களைப் படைத்தார் என்று கருதும் ஓரிஜின் (Origin) கொள்கைகள் இந்த ஞானிக்கு மிகுந்த அருவருப்பைத் தருகின்றன. உடல் ஆன்மாவுக்குற்ற சிறைச்சாலை அன்று; ஆனால், ஆண்டவன் அவனுக்கு அளித்த ஒரு கருவியாகும். அதை வைத்துக்கொண்டு பிறவிப் பாலையைக் கடந்து ஆண்டவனுடைய அருட்சோலையை அவன் நண்ணவேண்டும். ஒவ்வோர் ஆன்மாவும் முன்னேறிக்

கொண்டே யிருக்கின்றது. தனிப்பட்ட மனிதர்கள் இப் பிரபஞ்சத்தின் பூரண நிலையை நாட்ட இருக்கின்றார்கள்; ஆனால், இந்தப் பிரபஞ்சமோ கடவுளுக்காகவே அமைந்திருக்கிறது.

ஆன்மா உடலிலிருந்து தனித்தே இயங்குகின்றது என்று பிளேட்டோ கருதுகிறார். உடல் ஒரு கப்பல்; அதைச் செலுத்தும் மாலுமி ஆன்மா என்னும் சித்திரத்தை அவர் நமக்கு நல்குகின்றார். மாபெரு முன்னேற்ற ஏணியாம் படிகளை ஞானி அக்யுனஸ் மிகக் கவின்பெறச் சித்திரித்துள்ளார். உலோகங்களிலிருந்து புல்பூண்டுகளும், புல்பூண்டுகளிலிருந்து விலங்கினங்களும், விலங்கினங்களிலிருந்து அறிவு படைத்த மக்களும், மக்களிலிருந்து தேவதூதர்களும் விரிந்துகொண்டேபோய், எல்லாம் சொற்பதங் கடந்த இறைவனின் அருட் சுடரை நண்ணிவிடுகின்றன. இதே கருத்தைத்தான் ஸ்ரீ அரவிந்தரும் அருளுகின்றார்.

ஆன்மா உடலோடு தொடர்பு கொண்டாலும், தன்னை விடுவித்துக்கொள்ளாத அளவில் அதன் வலையில் சிக்கிவிடுகிறதில்லை. வான் அறிவு வாயிலாக அது தன் துணைகளிலிருந்து விடுபட இயலும். அறிவுக்கு ஞானி தாமஸ் அக்யுனஸ் ஒரு தனிச் சிறப்பைத் தந்தபோதிலும், அன்பின் மாபெருஞ் சக்தியை அவர் மறக்கவில்லை. அன்பென்பது பூரணமான பழுத்த ஞானத்தின் விளைவு என்று அவர் கருதுவது ஈண்டு ஆழ்ந்து சிந்திப்பதற்குரியது. அறிவு (intellect) பெரிதா, சங்கற்பம் (will) பெரிதாஎன்னும் வினா எழாமற்போகாது. ஒன்றை அறிந்தபிறகே தான் அதை அடைய முயலும் சங்கற்பம் செய்கிறோம் என்று கூறுவர் சிலர். ஒன்றை அடைய ஆவல்கொண்டு முயல்பவன் அதன் இயல்பை அறிவதற்குத் தொடங்குவானன்றோ என்று வேறு சிலர் இயம்புவர். அறிவு முந்தியா, சங்கற்பம் முந்தியா என்னும் வினாவுக்குத் தக்க விடை நல்கமுடியாது. அறிவையும் சங்கற்பத்தையும் தூண்டி நின்ற கடவுள்தான் எல்லாவற்றையும் இயங்கும்படி செய்கின்றார் என்பதுதான் உண்மையான தத்துவமாகும். ஆண்டவனை அடைவதுதான் மக்களின் பெருநலமாகும். அந்தத் திடமான சங்கற்பத்தை நிறைவேற்றுவதற்குப் பழுத்த அறிவுதான் துணைபுரியவேண்டும்.

ஆசையுள்ள மக்களனைவரும் வறுமைச் சேற்றில் உழலவேண்டும். இப்படி உழல்கின்ற மாந்தர்கள் ஏழை மக்களே. மனத்தில் ஏதாவது ஓர் ஆசை கரந்து நிற்குமாயின், அவன் மன அமைதி அடையமுடியாது என்பது திண்ணம். எந்தப் பெருநலத்தை அடைந்தால் எல்லாத் துணைகளும் அறுந்துபோகுமோ, எல்லா இன்பங்களையும் பெறமுடியுமோ, அந்த உயர்வற உயர்நலமாயுள்ளது ஆண்டவன் திருவடி நிழல்தான் என்பதை நன்குணரவேண்டும். ஆன்மாவின் பூரணமான ஆற்றலின் இயல்பு அது அடைகின்ற மாபெரு நலத்தைப் பொறுத்தது என்று கொள்ளவேண்டும். அந்தப் பெருநலம் எல்லாம் வல்ல இறைவனேயாகும். அவனுடைய இயல்பைத் தூய அறிவுகொண்டு நாம் துருவி ஆராயவேண்டும். இதுதான் மனிதன் புரியும் சிறந்த கடமையாகும்.

## ஒழுக்க இயலும் சமுதாயமும்

ஞானி தாமஸ் அக்யுனஸ் கி.பி. பதின்மூன்றும் நூற்றுண்டு தத்துவ அறிஞர்; இறையியல் வல்லுநர். ஒழுக்கத்தைப்பற்றி இவர் ஆராய்ந்த கருத்துகள் நம் சிந்தையைக் கவராமற்போகா. ஒவ்வொரு மனிதனும் தன் நலத்தை நாடுகின்ருன் என்பது உண்மையே. ஆனுல், அந்தப் பெருநலம் எங்கே உறைந்து நிற்கின்றது என்பதை அவன் ஆராய்ந்துகொள்ளவேண்டும்.

ஐம்புல இன்பம் அவனுடைய பெருநலமாக இருக்கமுடியாது. அத்தகைய இன்பத்தை விலங்கினத்தினிடமே நாம் பார்க்கின்ருேம். வெறும் அதிகார வேட்கையும் ஆற்றலும் அவனுடைய குறிக்கோளாக இருக்க இயலாது; ஏனெனில், தன் ஆற்றலே அவன் தீய நெறியில் செலுத்திவிட இடமுண்டு. விஞ்ஞான அறிவையோ தத்துவ ஞானத்தையோ வளர்த்துக்கொண்டுபோவது பயன் நல்காது. தத்துவஞானத்தால் எது கடவுள் இல்லை என்று அறிந்துகொள்ளு கிருேமே தவிர, அவன் எப்படி இருக்கிருன் என்பதை நம்மால் உணர்ந்து கொள்ள இயலவில்லை. பெருநலம் என்பது ஆண்டவனைக் காண்பதே என்ற முடிவுக்கு ஞானி அக்யுனஸ் வந்த நிலையை நாம் அறிகின்ருேம்.

பழுத்த அறிவின் வாயிலாக பண்பட்ட உள்ளம் ஆண்டவனை நேரில் காணக் கூடும். கலை, கல்வி இவைகூட நுண்ணிய ஐம்புலன் நுகர்ச்சியே ஆகும். வெறும் புத்தக உலகில் திரிந்தால்மட்டும் ஆண்டவனைத் தரிசித்துவிடமுடியுமா? மாணிக்கவாசகர் இசைத்த ஒரு பாடல், உள்ளத்தைக் கனிவிக்கும் ஒரு பாடல் இங்கு ஆழ்ந்து சிந்திப்பதற்குரியது :

**உற்ருரை யான்வேண்டேன் ஊர்வேண்டேன் பேர்வேண்டேன்**
**கற்ருரை யான்வேண்டேன் கற்பனவும் இனியமையும்**
**குற்ருலத்து அமர்ந்துறையும் கூத்தாஉன் குரைகழற்கே**
**கற்ருவின் மனம்போலக் கசிந்துருக வேண்டுவனே.**

ஆண்டவனை அடையும் நெறியிலும் ஒருவன் கற்ற கல்விகூட இடறுகட்டையாக நின்றுவிடக்கூடும். பணிவைத் தரக்கூடிய கல்வி செருக்கையும் நல்கி விடலாமன்ருே ! ஆண்டவனுடைய புகழ் பாடுதல்தான் மனிதனுடைய குறிக்கோள் என்பது உண்மையே. ஆயினும், உலகத்தில் நடக்கவேண்டிய நற்செயல்களுக்கும் அதற்கும் யாதொரு தொடர்பும் இல்லை என்று சொல்லிவிடமுடியாது. உலகத்தில் புரியப்படும் நற்செயல்கள் அனைத்தும் அவனுக்குச் சூட்டிய வாடா அலங்கல்களாகும் என்பதை நாம் மறந்துவிடக்கூடாது. நமக்கு உணர்ச்சிகள் வேண்டும். அவற்றை அழித்துவிடக்கூடாது ; அழிக்கவும் இயலாது. அவை நல்ல முறையில் ஓடத்தக்க வாய்க்கால்கள் அமைத்துத்தரவேண்டும். எல்லா விதமான உணர்ச்சிகளும் தீயவை என்று கூறும் ஸ்டாயிக் கொள்கையினரின் குறிக்கோளை ஞானி அக்யுனஸ் ஏற்கவில்லை. ஆசை வேண்டும் ஆண்டவனை

அடைய; சீற்றம் வேண்டும் நம்முடைய சிறுமையைத் துடைக்க; அன்பு வேண்டும் ஆண்டவன்பால் அதைச் சொரிய. விஞ்ஞான அறிவால் விளைந்த கருவிகள் என் செயும்? எல்லாம் அவற்றைப் பயன்படுத்திக்கொள்ளும் மக்களைப் பொறுத்தவை என்பதை உணரவேண்டும்.

அஞ்சாமை என்னும் உயர்குணம் போற்றுவதற்குரியதுதான்; ஆனால், அஞ்சுவதற்கு அஞ்சித்தானே ஆகவேண்டும்.

ஆண்டவன் ஒரு மாபெருங் கலைஞன்; ஓர் ஓவியப் புலவன். அவன் தீட்டிய பிரபஞ்சமாம் ஓவியத்தை நம் அறிவுகொண்டு நோக்கினல் உண்மை புலனுகும். அதன் மருமங்கள், இரகசியங்கள் எல்லாம் நம் கண்முன் மிதந்துவரும் என்பதில் யாதோர் ஐயமுமில்லை.

தீதை விலக்கி நல்லதை எஞ்ஞான்றும் மேற்கொள்வதே கற்றறிந்த மாந்தர் கடனுகும். மனிதன் தனித்து வாழ விரும்புகிறதில்லை; ஒரு சமூகத்தில் வாழ்வதுதான் அவனுடைய இயல்பாகும். ஒரு சமூகத்தில்தான் மனிதனிடத்தில் சிறந்துள்ள ஆற்றல்கள் யாவும் மலரத் தொடங்கும் என்பதை மறந்துவிடக் கூடாது. விலங்கின வையகத்தில் மொழி தோன்றவில்லை; மொழி மனிதனிடத்தில்தான் தோன்றியது. அவன் சேர்ந்து வாழும் இயல்பை இது நன்கு புலப்படுத்துகின்றதன்றே! ஞானி அகஸ்டைன் கொண்ட கருத்திற்கும் ஞானி அக்யுனஸ் போற்றும் கருத்திற்கும் சற்று வேறுபாடு உண்டு. மனிதன் இழிவான நிலைக்கு இறங்கி விட்டான்; ஆதலால், அரசாங்கம் தோன்றிற்று என்கிறுர் ஞானி அகஸ்டைன். மனிதன் இயற்கையாகவே சேர்ந்து வாழும் இயல்புள்ளவன். அக் காரணம் பற்றியே சமூகமோ. சமுதாயமோ, குழுக்களோ, அரசாங்கங்களோ தோன்றின என்று ஞானி அக்யுனஸ் கருதுகின்றுர். தீங்கிழைக்காதவர்கள் உள்ள இடத்திலுங்கூடச் சமுதாயம் தோன்றத்தான் செய்யும். ஏனெனில், மனிதன் சேர்ந்து வாழும் நிலையில் திளைக்கின்றுன். மகாபாரதத்தில் சாந்தி பர்வத்தில் இத்தகைய சர்ச்சைகள் எழப் பார்க்கின்றேம். எல்லோரும் சான்றேர்களாய் இருந்த காரணத்தால் அரசாங்கம் இல்லாமலிருந்தது; தீமை முளைத்தெழுந்தவுடனே தான் அரசாங்கம் நிறுவப்பட்டது என்று சாந்தி பர்வம் கூறுகின்றது. ஒரு சிறைச்சாலையை இரண்டு கோணங்களிலிருந்து நாம் நோக்கலாம். குற்றங்கள் உலகில் தலைவிரித்தாடுகின்றன என்னும் நிலையை அது முரசடித்துவிடும். ஆனுல், அதையே ஒழுங்கிற்காகப் பாடுபடுகின்ற ஒரு தாபனம் என்றும் கருதலாமன்றே!

ஒழுங்கை நாடுவதுதான் மனிதனுடைய இயற்கை. அந்த இயல்பை எல்லாம் வல்ல இறைவன் படைத்த பிரபஞ்சத்தின் நெறியினின்று மனிதன் உய்த்துணர்கின்றுன். சமயம் வளர்க்கும் மடத்திற்கும் அரசாங்கத்திற்கும் நடந்த இடையருத போராட்டங்கள் ஞானி அக்யுனஸ் அறிந்தனவே. ஆனுல், எல்லாம் சேர்ந்து இசையைக் கொட்டும் ஒரு தேன்பிழி மகரயாழ்போல் வாழ்வதுதான் மனிதனுடைய குறிக்கோளாகும் என்று அவர் வலியுறுத்துகின்றுர். மனித

னுடைய நல்லொழுக்கம் ஆண்டவனுடைய அருளாட்சியின் எதிரொலியே யாகும் என்பதும் உண்மையன்றோ! ஞானி தாமஸ் அக்யுனஸ் கி.பி. பதின் மூன்றாம் நூற்றாண்டில் சிறந்துவிளங்கிய தத்துவ அறிஞர்தாம்; இறையியல் வல்லு நர்தாம். ஆனால், அவருக்கு எதிர்ப்பு இல்லாமல் இல்லை. அவரோஸ் குழுவினர் (Averroistic party) எய்த வாதவாளிகளினின்று அக்யுனஸ் தம்மைக் காப் பாற்றிக்கொள்ளும்படியான நிலை ஏற்பட்டுவிட்டது. ஞானி அகஸ்டைன் அடிச் சுவட்டைப் பின்பற்றுகிற அடியார்களும் இவருக்குப் பகையாக வாதப்புயல்களை எழுப்பினார்கள். தம்முடைய குழுவிலேயே திகழும் பழமைப் பற்றாளர்களும் இவருக்கு மாறாக வாதத்தைத் தூண்டினார்கள். ஜான் பெக்காம் (John Peckham) இவரை வெளிப்படையாகவே எதிர்த்தார். *கான்டர்பரி* ஆர்ச் பிஷப்பான கில்வார்ட்பை (Kilwardby) இவருடைய கொள்கைகள் இங்கிலாந் தில் பரவாவண்ணம் தடுக்க முயன்ற செய்தியை நாம் அறிவோம். ஆனால், ஆக்ஸ்போர்டு பல்கலைக்கழகம் இவருடைய பெருமையை ஓங்கச் செய்தது. இடைக்காலத்தில் இவருடைய தத்துவந்தான் ஆட்சி புரிந்தது என்று சொல்லு வதற்கில்லை. ஃபிரான்சிஸ் கொள்கையினர்கள் தங்கள் நெறியிலே சென்றார்கள். அவரோஸ் கொள்கையினர் எழுப்பிய வாதப்புயலும் அவிந்தபாடில்லை. டன்ஸ் ஸ்கோட்டஸ் (Duns Scotus) என்பவரும் இவருடைய கருத்துகளை முற்றிலும் ஏற்கவில்லை. ஆனால், அனுபூதிச் செல்வர்களான ருயிஸ்புருக் (Ruysbroock), மாஸ்டர் எக்கர்ட் (Master Eckhart), டாலர் (Tauler), சூஸோ (Suso) முதலி யோர்கள் ஞானி தாமஸ் அக்யுனஸ் கண்ட நெறியைப் போற்றினார்கள்.

லூதர் இவர்மீது வசைமாரியைப் பொழிந்தார். அரிஸ்டாட்டிலைக் கொஞ்சங் கூட அறியாதவர் அக்யுனஸ் என்று கூறினாராம். இதைக் கேட்டுக்கொண் டிருந்த டாமினிக் குழுவைச் சார்ந்தவருக்கு லூதர்மீது காறி உமிழும் சீற்றம் ஏற்பட்டதாம். அதை மிகவும் சிரமப்பட்டு அடக்கிக்கொண்டதாகத் தெரி கின்றது. இப்பொழுது கத்தோலிக்கர் குழுவில் இவருக்கு ஓர் உயர்ந்த இடம் ஏற்பட்டுவிட்டது. ஆனால், எதையும் அச்சமின்றித் துருவி ஆராயும் ரஸ்ஸல், ஞானி தாமஸ் அக்யுனஸைப் போற்றவில்லை. 'தத்துவ ஆராய்ச்சிக்குரிய ஆர்வம் *இவரிடத்தில் இல்லை. சாக்ரடீஸ், பிளேட்டோ* முதலிய பண்டைய தத்துவ வித்தகர்கள் பகுத்தறிவு போன நெறியிலே அச்சமின்றிச் சென்றார்கள். இவரோ முன்னரே கண்ட உண்மையை நிலைநாட்ட பகுத்தறிவைப் பயன்படுத்திக்கொள் கிறார். அக் காரணம்பற்றியே பண்டைய தத்துவ வித்தகர்களுக்கோ, தற்கால வித்தகர்களுக்கோ நல்கக்கூடிய சிறப்பை இவருக்கு அளிக்கமுடியாது என்று நான் கருதுகின்றேன்' என்று தம் 'மேனாட்டுத் தத்துவ வரலாற்று' நூலில் குறிக் கின்றார். ஆனால், தற்காலத்து விஞ்ஞானப் பண்பாடு இவரிடத்தில் திகழ்கின்றது என்று பல ஆசிரியர்கள் கருதுகின்றார்கள்.

உடலுக்கும் மனத்துக்கும் உள்ள தொடர்பை அக்யுனஸ் வற்புறுத்திய செய்தியை நாம் அறிவோம். இவ்விரண்டின் சேர்க்கையால்தான் அறிவே பிறக் கின்றது என்று கூறுவதில் தற்காலத் தத்துவப் பண்பாட்டிற்குரிய அமிசம் அப்

பொழுதே மிளிர்கின்றதன்றே! தற்காலத்தில் தோன்றியிருக்கிற விஞ்ஞானத் துறையிலோ, முருகுக் கலையிலோ, வரலாற்று வையகத்திலோ விளைந்திருக்கிற ஆராய்ச்சிகளுக்கேற்ப ஞானி தாமஸ் அக்யுனஸ் கொண்ட கொள்கையை ஆராய்ச்சி செய்யமுடியும்.

ஞானி தாமஸ் அக்யுனஸ் பிரகிருதியை வெறுக்கவில்லை. ஐம்புலன்கள் வாயிலாக வரும் அறிவை வைத்துக்கொண்டுதான் அறிவாம் ஏணியின்மீது நாம் உயரப் போய்க்கொண்டே யிருக்கவேண்டும் என்று அவர் சாற்றுவது தற்காலத் தத்துவ ஆராய்ச்சியின் இயல்புக்கு முரண்பாடில்லை. பகுத்தறிவுக்குச் சிறந்த மதிப்பை அவர் அளித்திருக்கிற காரணத்தால், அக்யுனஸ் கண்ட தத்துவத்தைத் தமக்குக் குறிக்கோளாகக் கொண்டவர்கள் எந்த ஆராய்ச்சித் துறையிலும் இறங்கலாமன்றே!

மாரிடேன் (Maritain) என்பவரும் கில்ஸன் (Gilson) என்பவரும் ஞானி தாமஸ் அக்யுனஸ் கண்ட தத்துவத்திற்கு மிகக் கவின்பெற விளக்கங்கள் தந்துள்ளார்கள்.

ரூசுலோ (Rousselot) என்பவர், 'அன்பும் அறிவும் ஒன்றுக்கொன்று துணை புரிகின்றன. பக்தியோகமும் ஞானயோகமும் முடிவில் ஒன்றே என்று இயம்ப முடியும்' என்கிறார். ஏனெனில், இவையிரண்டும் ஆண்டவனிடத்தில் வேரூன்றி நிற்கின்றன. மாரிகல் (Marechal) என்பவர் உண்மையும் (Truth) பெரு நலமும் (Goodness) ஒன்றே. கடவுளாம் உண்மை பெருநலமாகத்தான் திகழ வேண்டும். பேருண்மையையும் பெரு நலத்தையும் பிரிக்க இயலாதல்லவா? வாலறிவும், பேரன்பும், ஞானயோகமும், பக்தியோகமும் அதை அடையத் துணைபுரிகின்றன. அன்பு (love), ஆர்வம் (desire), தனியான மெய்ம்மை நிலை (personality) இவற்றை ஞானி தாமஸ் அக்யுனஸ் நல்கிய தத்துவக் கண்ணேடு தற்கால முறைக்கேற்பத் துருவி ஆராயலாமன்றே! சட அமைப்பில் எல்லாம் இயங்குகின்றது என்று இயம்பும் விஞ்ஞான அறிஞரின் கொள்கையை பெர்க்சன் (Bergson) எதிர்த்து நின்றதை நாம் அறிவோம். ஞானி தாமஸ் அக்யுனஸும், 'எல்லாம் வெறும் சடமன்று; அந்தச் சடப்பொருளிலும் சைதன்னியம் சுரந்து நிற்கின்றது' என்று கூறினரன்றே!

ஞானி தாமஸ் அக்யுனஸ் எல்லாம் பிரகிருதிமயம் என்று கூறவில்லை. வெறும் சடக்கொள்கையில் (Materealism) அவருக்கு நம்பிக்கையில்லை; வெறும் இருமைக் கொள்கையிலும் (Dualism) அவர் கருத்து ஊன்றி நிற்க வில்லை. 'ஆன்மாவும் உடலும் ஒன்றுக்கொன்று துணைபுரிகின்றன. உடல் வெறுக்கத்தக்கதன்று; அது ஆன்மா முன்னேறுவதற்குற்ற கருவியாய் அமைந் திருக்கிறது. சமயத்தின் பேரால் கலை, விஞ்ஞானம் முதலியவை புறக்கணிக்கத் தக்கவை அல்ல. இவை யாவும் ஆண்டவன் அருட்கோயிலுக்கு அழைத்துச்

செல்லும் நெறிகளாக அமையக்கூடும் என்று இவர் அச்சமின்றிச் சாற்றுகின்றார். அரசியல் துறையிலும் இவர் நல்கிய கருத்துகள் சிந்திப்பதற்குரியவை. அரசியலுக்காக மனிதனா மனிதனுக்காக அரசியலா என்னும் வினா எழாமலிருக்க முடியாது. தனித்து மனிதன் வாழமுடியாது என்பது உண்மையே. தனித்த மனிதனின் இலட்சியங்கள் உருவாவதற்குத்தான் சமுதாயம் இருக்கிறது என்னும் உண்மையை நாம் மறந்துவிடக்கூடாது. சர்வாதிகாரத்துவம் (Totalitarianism) என்னும் சுழலில் மனிதன் அகப்பட்டுக்கொள்ளக்கூடாது. தனியாள் உரிமைக் கொள்கை (Individualism) எனும் பாறைமீது மோதக் கூடாது. இவ்விரண்டிற்கும் இடையே மிகுந்த விழிப்புடன் சமூகமாம் கலம் அமைதியாய்ச் செல்லவேண்டும் என்பதுதான் ஞானி தாமஸ் அக்யுனஸின் திருவுள்ளமாகும்.

தத்துவஞான சிந்தனை ஐம்புல அறிவிலே வேரூன்றி நிற்கின்றது. இந்தப் பொதுவான புலனறிவுக்கும் (Common experience) அடிப்படைத் தத்துவத் திற்கும் (Metaphysics) நெருங்கிய தொடர்பு இருக்கின்றது என்பதை அக்யுனஸ் வற்புறுத்துகின்றார். இத்தகைய கருத்து பல துறைகளில் செல்லக்கூடிய மனத் திற்கு இடையறாத ஓர் ஆர்வமாகவும் தெய்விக அகத்தூண்டுதலாகவும் (inspira-tion) அமையும். 'இவரை எதிர்த்து அருஞ் சுழிகளும் மாபெரு வெள்ளங்களும் மிகுதியாகப் பாய்ந்துவரலாம். ஆனால், இவருக்கு உற்ற துணையாய் நிற்பது உண்மையாம் 'ரட்சைதான்' என்று டி. ஆர்ஸி (D. Arcy) கூறுகின்றார் (His one sure talisman is truth).

மேலும், பிலிப்ஸ் (Phillips) என்பவர் தம் 'தற்காலத் தாமஸ் கொள்கைத் தத்துவம்' என்றநூலின் (Modern Thomistic Philosophy)இறுதியில் குறிப்பிட் டிருப்பது ஆழ்ந்து சிந்திப்பதற்குரியது: 'படிப்படியாகச் சடத்திலிருந்து கடவுள் வரையில் போகும் ஏணிமீது ஏறிப் போவோம். மேல்படி கீழ்படிக்கு விளக்கம் தருகின்றது. இறுதிநிலையான கடவுள்தான் எல்லாவற்றிற்கும் விளக்கம் தருகின்றார்'. [1]

இத்தகைய பரிணாமக் கொள்கையைத்தான் ஸ்ரீ அரவிந்தர் மிகக் கவின் பெறச் சித்திரிக்கின்றார். நம்முடைய ஆன்மா நீள்யாத்திரை இருளிலிருந்து ஒளிக்கும், பொய்யிலிருந்து உண்மைக்கும், மரணத்திலிருந்து இறப்பற்ற நிலைக் கும் விரிந்துகொண்டே போகின்றது. இடைக்காலத்தில் தோன்றிய மாபெருங் கவிஞர் தாந்தே தம் 'தெய்வ மங்கல கீதம்' (The Devine Comedy) என்னும் அழியாக் காப்பியத்தில் ஞானி தாமஸ் அக்யுனஸ் பெருமானுக்கு என்றும் வாடாத புகழ்மாலை சூட்டியிருப்பதை நாம் அறிவோம். அத்தகைய கவிஞர் கொண்ட கருத்து நம் உள்ளத்தைக் கவராமற்போகுமோ ?

[1] Step by step we have climbed the ladder which leads matter to God; and now looking back, we can see that each stage of this ascent receives new meaning from, and is to be interpreted in terms of this last stage.

## தாந்தே (1265—1321)

மேலைநாட்டு இலக்கிய உலகத்தை நோக்குங்கால், ஒரு மாபெரு வரையின் சிகரங்கள்போல மூன்று கவிஞர்கள்—இவ் வையகம் உளம், உரை, செயலால் வணங்கிப் போற்றும் கவிஞர்கள் நம் அகக்கண்முன் மிதந்துவருகிறார்கள். பண்டைக் காலத்து நாகரிகத்தைத் தம் அழியாச் செஞ்சொற்கள் கொண்டு தம் பெருங் காப்பியங்களான இலியத், ஒடிஸி இவற்றில் சிறைசெய்த பேறு ஹோமரைச் சார்ந்ததாகும்.

அவர் படைத்த பாத்திரமான யுலீஸஸ், திராய் நகரம் தீய்க்கு இரையாகி அழிந்தபிறகு தன் தாய்நாடான இத்தாலியாவுக்குத் திரும்புகின்றான். அவனுடைய நீண்ட பிரயாணத்தையும், அதன்கண் அவனுக்கு நிகழ்ந்த எண்ணிறந்த இடுக்கண்களையும் இன்னல்களையும் ஹோமர் சித்திரிக்கிறார். தன் ஊரை நண்ணியதும் தன் மனைவியோடு மைந்தனோடு வாழ்க்கை நடத்தாது, மீண்டும் உளம் தளராது, ஆர்வம் குன்றாது இலட்சியச் சுடர் மழுங்காத உண்மை ஒளியை நாடி மற்றொரு பயணத்தில் இறங்குகின்றான். இத்தகைய வீரவாழ்வு நடத்திய இச் சான்றோன் டெனிஸன் கவிதைக்கு ஒரு பொருளாகிவிட்டான். கிரேக்க நாட்டைச் சார்ந்த நிக்காஸ் காஸன்ட் சாக்கிஸ் (Nikos Kazant Zakis) என்னும் பெருங் கவிஞர் 'நவீன ஒடிஸியின் தொடர்பு' (The Odyssey : A Modern Sequel) என்னும் வான்வனப்பு வாய்ந்த நூலில் உண்மைக் குரலை நாடுகின்ற துறையில் தமக்கு நிகழ்ந்த ஆழ்ந்த அனுபவங்களை மிகக் கவின்பெறச் சித்திரிக்கிறார்.

ஜேம்ஸ் ஜாய்ஸ் (James Joyce) என்பவர் தம்முடைய 'யுலீஸஸ்' (Ulysses) என்னும் விரிந்த நாவலில், ஒருநாளில் மனத்தின்கண் இடையறாது அடிக்கின்ற சிந்தனைஅலைகளாம் பற்பல ஓவியங்களைத் தீட்டியிருக்கிறார். இத்தனை நூல்களுக்கும் மூலம் ஹோமர் என்றால், அவருடைய பெருமையை என்னென்று இயம்புவது !

தாந்தே தம் 'தெய்வ மங்கல கீதத்தில்' இடைக்காலத்து வரலாறு, இறையியல், அரசியல் நிலை, அடிப்படைத் தத்துவம், உள்நாட்டு வெங்கலகங்கள், தீமைகள், ஊழல்கள், சழக்குகள் முதலியவற்றைத் தம் சிறந்த சொல்லாட்சிகொண்டு மிகத் திறம்பட நம்முன் நிறுவியுள்ளார்.

பண்டைக் காலத்திற்கு எப்படி ஹோமரோ, இடைக்காலத்திற்கு எப்படி தாந்தேயோ, அப்படியே நவீன காலத்திற்கு மில்டன் திகழ்கின்றார். ஷேக்ஸ்பியரோ ஒளியும் இருளும்போல், மழையும் காற்றும்போல், வரைகளும் ஆறுகளும்போல், மண்ணும் விண்ணும்போல் எக் காலத்திற்கும் பொதுவாய்ப் பொலிந்து காட்சி அளிக்கின்றார் என்று கூறினால் மிகையாகாது.

நவீன காலத்தில் இடையறாது நிகழ்ந்துவருகின்ற போராட்டத்திற்கு ஒரு விடிவெள்ளியாய் மில்டன் மிளிர்கின்றார். ஆண்டவன் கட்டளையைப் புறக்

கணித்ததால் கணக்கில் துயர்வெள்ளம் உலகத்தில் பொங்கிப் பாயத்தொடங்கி விட்டது என்று மில்டன் கூறுகின்றார். பரமபதம் என்பது ஆண்டவன் கட்டளையை நிறைவேற்றுவது ; நிரயம் என்பது அதைப் புறக்கணிப்பதே. சாத்தான் தன்னுடைய எல்லைகடந்த செருக்காலும், ஆணவத்தாலும், வரம்புகடந்த பேராசையாலும் ஆண்டவன் அருள்நெறியை எதிர்த்துப் போராடினன். அதன் விளைவாக, அவன் ஒளி மிக்க விண்ணிலிருந்து இருள் மண்டிக் கிடக்கும் நிரயத்தில் விழும்படி நேர்ந்தது.

ஈடன் என்னும் கற்பகச் சோலையில் இன்பமாய்க் காலங் கழித்த ஈவ் சாத்தானின் வஞ்சகக் குரலுக்குச் செவிசாய்த்த காரணத்தால், ஆண்டவனுடைய ஆணையை மீறினள். தான் அழிந்ததுமன்றித் தன் கணவனை ஆதாமையும் பெரும் பாவத்திற்கு உள்ளாக்கிவிட்டாள். இந்தப் பண்டைய பாவம் ஒரு பெண்ணால் விளைந்தது; இதை நீக்கவே ஏசுநாதரின் அன்னையான மேரி தோன்றினர். பெண்ணால் விளைந்த ஒரு பாவம் ஒரு பெண்ணாலேயே துடைக்கப்பட்டது என்னும் உண்மையை உன்னிப்பார்க்க வேண்டும். உலகத்தின் பாவச் சுமைகளை அகற்றுதற்பொருட்டே ஆண்டவன் மனித வடிவை எடுத்தார். உலகம் உய்யும்பொருட்டு இயேசுநாதர் சிலுவைமீது தம் உயிரை நீத்தார். சுவர்க்க நீக்கம் ஆண்டவனைப் புறக்கணித்ததால் நிகழ்ந்தது ; சுவர்க்கமீட்சி ஆண்டவன் அருளால் ஏற்பட்டுவிட்டது. ஆண்டவனின் அவதார மருமத்தை நம்மாழ்வார் தம் திருவிருத்தத்தில் இசைக்கின்றார் :

**பொய்ந்நின்ற ஞானமும் பொல்லா வொழுக்கும் அழுக்குடம்பும்**<br>**இந்நின்ற நீர்மை யினியா முறாமை உயிரளிப்பான்**<br>**எந்நின்ற யோனியுமாய்ப் பிறந்தாய் இமையோர் தலைவா**<br>**மெய்ந்நின்று கேட்டருளாய் அடியேன் செய்யும் விண்ணப்பமே.**

உள்ளம் உருகிப் புரிந்த தீவினைகளுக்காக ஒருவன் கண்ணீர் வடித்தால், அத் தீவினைகளும் அகன்றுவிடும்; மாசு நீங்கி அவன் உய்வான் என்பதில் யாதோர் ஐயமுமில்லை. 'அவனுடைய சங்கற்பத்தில்தான் என்னுடைய அமைதி நிற்கிறது' என்று தாந்தே மொழிந்தது குலசேகர ஆழ்வார் கையில் ஓர் அழியாச் சித்திரமாக அலர்ந்துவிட்டது. கப்பலின் கூம்பில் தங்கியிருக்கும் ஒரு மரப் பறவை, அதைவிட்டு வெளியேற முயல்கின்றது. அப்படி முயன்றபோது அதன் முன் விரிந்து கிடந்தது கடல், கடல், கடல்தான். மீண்டும் அந்தக் கூம்பிற்கே வந்து அமைதி பெறுகின்றது. ஆண்டவன் அருட்பாதங்களைச் சற்று விலகினலும் கங்கு கரையிலா இடர்க்கடல்தான் விரியும் என்று ஆழ்வார் இசைக்கின்றார் :

**வெங்கண்திண் களிறடர்த்தாய் வித்துவக்கோட் டம்மானே**<br>**எங்குப்போ யுய்கேன் உன்னிணையடியே அடையலல்லால்**<br>**எங்கும்போய்க் கரைகாணாது எறிகடல்வாய் மீண்டேயும்**<br>**வங்கத்தின் கூம்பேறும் மாப்பறவை போன்றேனே.**

வேதங்கள், உபநிடதங்கள், இவற்றின் உண்மைகளைச் சாதாரண மக்களுக்குப் புலப்படுத்துகின்ற இதிகாச புராணங்கள்—இவை யாவுமே ஆன்மாவின் நீண்ட யாத்திரையை—ஆண்டவன் அருட்சோதியை நோக்கிச் செய்யும் யாத்திரையைச் சித்திரிக்கின்றன. மயக்கத்தை விளைவிக்கும் பொய்யிலிருந்து அதை அறுக்கும் உண்மைக்கும், புதை இருளிலிருந்து ஒளிப்பிழம்பிற்கும், மரணத்திலிருந்து அமரநிலைக்கும் அவன் பிரயாணம் செய்துகொண்டேயிருக்கின்றான். இத்தகைய யாத்திரையைத்தான் தாந்தே தம் 'தெய்வ மங்கல கீதத்தில்' (The Divine Comedy) நமக்கு நல்குகின்றார். ஜான் புனியன் தந்த 'கிறித்துவனின் யாத்திரையும்' இத்தகையதே. காஃப்கா என்னும் ஜெர்மன் நாட்டுப் பேரறிஞர் தம்முடைய 'கோட்டை' (Castle) என்னும் நாவலில் உண்மை ஒளியை நாடுகின்ற நவீன மனிதனின் பயணத்தை நயம்பட அளிக்கின்றார்.

ஸ்ரீ அரவிந்தர் தம் இமயம்போல் ஓங்கி நிற்கின்ற 'சாவித்திரி' என்னும் மாபெருங் காப்பியத்தில் காண்கின்ற பெரிய இலட்சியத்தை இன்னும் வையகத்தார் உணரவில்லை. நாள் தேயத்தேய அதன் வனப்பும், அதன் தெய்வக் காட்சியும், அதன் உயர் இலட்சியமும் மாந்தர்களின் உள்ளங்களைக் கொள்ளாமற்போகா.

தாந்தே படைத்த 'தெய்வ மங்கல கீதத்தின்' சிறப்பை உள்ளவாறு அறிய வேண்டுமானால், அக் காலத்து வரலாற்றுக் கண்ணோடு அதை நோக்கவேண்டும். அக் காலத்து நிகழ்ச்சிகளாம் தறியில் அந்த மாபெரு நூல் நெய்யப்பட்டிருக்கிறது என்னும் உண்மையை நாம் மறக்கக்கூடாது. அவருடைய சரிதத்தை அறியாதவருக்கு அவர் படைப்பு ஒரு புதிராய்ப் போய்விடும்; அது அவருடைய அனுபவமாம் உலையிலிருந்து உருப்பெற்று எழுந்த மாசற்ற தங்கப் படைப்புதான் என்பதில் நிழலாடும் ஐயமுமில்லை. இந்தக் கீதத்தைத் இசைக்கிறவர் தாந்தே. இதற்குப் பின்னணியாய் — நிலைக்களனாய் நிற்பது ஃபிளாரன்ஸ் (Florance) நகரமே. உருவான காலம் கி.பி. பதினான்காம் நூற்றாண்டாகும். இந்தக் குறுகிய வட்டத்தில் நீள்விசும்பும், பரந்த பாரும், ஆழமிக்க நிரயமும் அடங்கியிருக்கின்றன. ஆனால், இந் நூல் பிரபஞ்சம்போலப் பொதுமையாய் விரிந்திருக்கிறது.

1256ஆம் ஆண்டு மே மாதம் 30ஆம் நாளில் தாந்தே ஃபிளாரன்ஸ் நகரத்தில் தோன்றினார். கியுல்ஃப் (Guilfs) மரபைச் சார்ந்தவர்; இவருடைய தந்தையான அலிகியரோ (Alghiero) ஒரு வழக்கறிஞராய்த் திகழ்ந்ததாகத் தெரிகின்றது. பிரபு வமிசத்தில் பிறக்காதுபோயினும் நடுத்தரமான குடும்பத்தில், தூய்மை மிக்க குடும்பத்தில் பிறந்த இவருடைய அன்னை, தம்முடைய ஐந்து அல்லது ஆறும் ஆண்டிலே இறந்துவிட்டார். தந்தையோ இவருடைய பன்னிரண்டாமாண்டில் காலமானதாக அறிகின்றோம். இவரும் இவருடைய உடன் பிறந்தோர்களும் இவருடைய மாற்றாந்தாய்வசம் ஒப்படைக்கப்பட்டார்கள்

என்று வரலாறு கூறுகின்றது. இவருடைய இளம்பிராயத்தில் இவருக்கு நிகழ்ந்த ஓர் அபூர்வமான சம்பவந்தான் 'தெய்வ மங்கல கீதத்திற்கு' ஒரு வித்தாகிவிட்டது.

இவருக்கு வயது ஒன்பது இருக்கும். இவரை இவருடைய தந்தை இளவேனிலில் நடக்கும் திருவிழாவுக்கு அழைத்துச் சென்றார். ஃபோல்கோ போர்ட்டினெரி (Folco Portinari) என்னும் செல்வமிக்க நகர மாந்தரின் வீட்டில் இந்தத் திருவிழா மிகச் சிறப்புடன் நடந்துகொண்டிருக்கும் சமயம், அவருடைய சிறிய மகள் — தாந்தேயிக்குச் சற்று ஒரு வயது சிறியவளான மகளைக் கண்டவுடன் தாந்தேயின் இதயம் நடுக்கலுற்றது. 'என்னைக் காட்டிலும் வலிவு மிக்க ஓர் அணங்கு என்முன் நிற்கின்றாள்; அவள் என்மீது ஆட்சி புரியப் போகின்றாள்' என்று அவர் கூறினாராம். அவருடைய ஆன்மாவும் அறிவும் 'உன்னுடைய பேரின்பம் வெளியாகிவிட்டது' என்று தம் கண்களுக்கு மொழிந்தன போல அவருக்கு எல்லாம் காட்சி அளித்தனவாம். எவ்வளவு அல்லற்படப் போகின்றாமோ என்று அவருடைய ஐம்புலன்களும் மறுமாற்றம் இயம்பினவாம். இத்தகைய அனுபவம் தமக்கும் நேர்ந்ததாக ஸர் ஆஸ்பெர்ட் ஸிட்வெல் (Sir Osbert Sitwell) தம்முடைய சுயசரிதத்தில் கூறுகின்றார்.

தாந்தே இந்தச் சிறுமியின் பெயரை மறக்கவில்லை. பியாட்டிரிஸ் (Beatrice) என்னும் பெயர் அவர் மனச்சுவரில் நன்கு ஆழ்ந்து வரையப்பட்டுள்ளது. இந்த நிகழ்ச்சியை இருபதாண்டிற்குப் பிறகு குறிக்கின்றார். எல்லாவற்றையும் மழுங்கச் செய்யும் காலம் இந்த உருவத்தை மாய்த்து விடவில்லை. அதற்கு மாறாக அந்த உருவம் நாள்தோறும் இவருடைய இதயமாம் அரியாசனத்து அமர்ந்து இவரைப் புனிதமாக்கிக்கொண்டே வந்தது.

1287ஆம் ஆண்டு ஸைமன் டீ பார்டி என்னும் பொருளக முதல்வருக்கும் (Banker) பியாட்டிரிஸுக்கும் திருமணம் நடந்தது. இதைத் தாந்தே குறிக்கவே இல்லை.

அவளைக் காணவேண்டும் என்னும் ஆவல் இவரைத் தூண்டிக்கொண்டேயிருந்தது. அவளுடைய வனப்பு ஆண்டவனுடைய அருள்வடிவமாகத் தாந்தேயிக்குக் காட்சி அளித்தது. தம்முடைய பதினெட்டாம் பிராயத்தில் தெருவில் போய்க்கொண்டிருந்தபொழுது அவள் இவரை வணங்கினாள். அவள் வணங்கினபொழுது 'நான் இன்பத்தின் எல்லையை எய்தினவன்போல உணர்ந்தேன்' என்கிறார். பிறகு தாந்தேயைப்பற்றி அவதூறுகள் பிறந்தபடியால், பியாட்டிரிஸ் தாந்தேயைக் கண்டபொழுது வணக்கம் செய்யவில்லை. காதல் என்பது பெருந்துயருக்கும் பேரின்பத்திற்கும் மூலமாய் அமையக்கூடும் என்று ஓர்ந்தார். ஏதோ ஒரு கூட்டத்தில் அவளைப் பார்த்தபொழுது, உடல் நடுங்கி நோய்வாய்ப்பட்டவர்போல மாறிவிட்டார். ஒரு சமயம் தம்மை அவள்

எள்ளி நகையாடினதுபோலப் பட்டதால், மிகவும் மனம் நொந்துபோனர். 1289ஆம் ஆண்டு பியாட்டிரிஸின் கணவன் மாண்டுபோனான். இதைச் செவி யுற்ற தாந்தே வெந்துயரில் ஆழ்ந்தார். 1290ஆம் ஆண்டு பியாட்டிரிஸும் திருநாட்டை அலங்கரித்துவிட்டாள். தம்முடைய வாழ்வின் ஒளியே அவிந்து போய்விட்டதுபோல உணர்ந்தார். தாம் வாழ்ந்த நகரான ஃபிளாரன்ஸ் பொலிவிழந்து மாபெரும் இருளில் ஆழ்ந்துவிட்டதுபோல அவருக்குக் காட்சி அளித்தது.

பிறகு ஒரு நங்கை ஒரு பலகணியில் நின்றுகொண்டு இவர்பால் இரக்கம் காட்டினளாம். அவள் ஒரு பெண் அல்லள்; தத்துவ ஆராய்ச்சிபால் தம் மனம் சென்றதை உருவகப்படுத்தி தாந்தே உரைத்திருக்கிருர் போலும்!

தம்முடைய காதற் காட்சிகள் அனைத்தையும் தம்முடைய 'வைட்டா நுவா' (Vite Nuova) அல்லது 'புத்துயிர்' என்னும் நூலில் குறித்திருக்கிருர். அரசியல் துறையில் தாந்தே போப்பாண்டவருக்குப் பகையாய் அமைந்துள்ள பிலான்சி (Bilanchi) குழுவினரைச் சேர்ந்த காரணத்தால், தம் நகரத்தைவிட்டுப் போக நேரிட்டது. எட்டாம் பானிஃபேஸ் (Baniface VIII) போப்பாண்டவர்தாம் அவருக்குற்ற நாடுகடத்தும் தண்டனைக்குக் காரணம். இந்தப் போப்பு தாந்தே சித்திரித்த நிரயத்தில் இடம்பெறுகின்ருர். பல ஆண்டுகளாக இவர் தங்க இடமில்லாமல் திரிந்ததாகத் தெரிகின்றது. இதைக் கார்லைல் நன்கு சித்திரித் திருக்கிருர். தாம் நுகர்ந்த சுடுசோகந்தான் இந்தத் 'தெய்வ மங்கல கீதமாய்ச்' சுரந்தது என்று சாற்றுகின்ருர். ஸ்ரீ அரவிந்தர் அரசியல் துறையைவிட்டு ஆன்மிக உலகத்தில் இறங்கினது இந்த ஞாலம் புரிந்த பேறு என்றுதான் சொல்லவேண்டும். உலகத்தில் அறம் தேய்ந்துவிட்டது ; மறந்தான் தலை விரித்தாடத் தொடங்கிவிட்டது. மனிதனின் உள்ளத்தில் மாசு படிந்துவிட்டது. அதை மாசறக் கழுவவேண்டும். கழுவாய் வாயிலாகத்தான் மனிதன் முன்னேற வேண்டும். அதற்கு அன்புநெறி வேண்டும். அன்புதான் சுவர்க்கத்தின் நீள் வாசலைத் திறந்துவைக்கும் ஆற்றல் படைத்ததாயிருக்கிறது. நரகத்திலிருந்து (Inferno) கழுவாய் மண்டலத்திற்கு (Purgatory) ஒருவன் பிரயாணம் செய்ய வேண்டும். மாசு நீங்கிய அவன் பரமபதத்தில், சுவர்க்கத்தில் இடம் பெறு கின்ருன்.

## வைட்டா நுவா
## (Vita Nuova)

'புத்துயிர்' (Vita Nuova), 'விருந்து' (Convivio or Convito) — இவ்விரண்டு நூல்களும் 'தெய்வ மங்கல கீதமாம்' திருக்கோயிலுக்கு வாயில் களாக அமைகின்றன. 'De Vulgari Eloquentia' என்னும் நூல் மொழிப் பிரச்சினையை வாதிக்கின்ற நூலாகும். 'வேந்தரியல்' (De Monarchia) என்னும்

நூலில் தாந்தேயின் அரசியல் தத்துவம் கோயில்கொண்டுள்ளது. 'விருந்து' (Convivio) என்னும் நூலில் சாதாரண மக்களுக்கு விளங்கும்வண்ணம் தத்துவ ஆராய்ச்சி செய்யப்பட்டிருக்கிறது.

லத்தீன் மொழியில் எழுதினுல் மன்பதைக்கு விளங்காது. அக் காரணம் பற்றி இத்தாலிய மொழியில் இவர் தம் 'தெய்வ மங்கல கீதத்தை' எழுதினுர். இந்த மொழியை இவர்தான் நிறுவினுர் என்று கூறினுல் மிகையாகாது.

'தெய்வ மங்கல கீதத்தின்' சிறப்பை ஆராய்வோம். முதன்முதலாக இந் நூல் இருளடைந்த காட்டைச் சித்திரிக்கிறது. அங்கே காணப்படும் வரை, ஆண்டவனின் திருநகருக்கு ஏறிச் செல்லும் செங்குத்தான பாதையாகும். அக் காட்டில் திரிகின்ற விலங்குகள் கழிகாமம் (lust), செருக்கு (pride), பேராசை (avarice) இவற்றைச் சுட்டும். சிறுத்தைப் புலி (leopard) அளவு கடந்த சிற்றின்பத்திற்கு ஓர் உருவகமாய் இருக்கிறது. சிங்கம் (lion) கொடுமை யான பாவங்களைக் காட்டும் முறையில் இங்கே இடம்பெறுகின்றது. பெண் ஓநாய் (she-wolf) ஏமாற்றும் இயல்பை விளக்குகின்றது. இவற்றுல் எழு கின்ற தீச்செயல்களுக்காக நரகத்தில் பாவிகள் வருந்துகின்றுர்கள். தமக்கு வேண்டாதவர்களையெல்லாம் தாந்தே நிரயத்தில் தள்ளிவிட்டார் என்று இயம் புவது ஒரு தவறுன கருத்தாகும். அங்கே வருந்துகிறவர்களைக் காணுந்தோறும் தாந்தே கண்ணீர் வடிக்கின்றுரன்றே! விரைவோட்டமுடைய நாய் (greyhound) பழுத்த ஞானம், அன்பு, ஆற்றல் இவற்றைப் புலப்படுத்துகின்றது ; பரிசுத்த ஆவியின் ஆட்சியை உலகிற்குக் கொணரும் சக்தி வாய்ந்தது.

தாந்தேயிக்கு வழிகாட்டுகிறவர் வர்ஜில் (Virgil) ஆவர். தாந்தேயின் யாத் திரையை மனிதனுய்ப் பிறந்த ஒவ்வொருவனும் செய்யத்தான் வேண்டும். தீச் செயல்கள் மண்டிக் கிடக்கும், பிழைகள் மலிந்து காணும் காட்டிலிருந்து கழுவாய் மூலமாக ஆண்டவன் திருக்கோயிலை நண்ணவேண்டும். ஞானி தாமஸ் அக்யு னஸின் அடிச்சுவட்டைத்தான் தாந்தேயும் பின்பற்றுகின்றுர். எப்படி அக்யுனஸ் அரிஸ்டாட்டிலின் கொள்கைகளை ஏற்றுக் கிறித்துவ சமயத்திற்கு விளக்கம் தருகின்றுரோ அப்படியே தாந்தேயும் அளிக்கின்றுர். முருகுக் கலை, பண்டைய இலக்கியங்கள் முதலியவற்றைப் பயன்படுத்திக்கொண்டால் அவை யாவும் ஆன்மீகப் பாதையில் முன்னேறுகிறவனுக்கு மிகவும் பயன்படும் என்று அக்யுனஸ் உரைத்ததுபோல தாந்தேயும்மொழிகின்றுர். பண்டைய கிரேக்க,லத்தீன் மொழிகளிலுள்ள இலக்கிய நயங்களை நன்கு மாந்தியவர் என்பது 'தெய்வ மங்கல கீதத்தைப்' பருகுவோர்க்குப் புலனுகாமற்போகாது. தம்மை நீண்ட பாதையில்— சுவர்க்கத்துக்குப் போகும் நீண்ட பாதையில் பின்தொடர்ந்து வழிகாட்டிய வர்ஜிலுக்குப் பரமபதத்தில் இடமில்லாமற்போய்விட்டது. கிறித்துவராயிருந்தால் தான் உய்விடம் உண்டு என்று இடைக்காலத்துக் கிறித்துவ சமய வல்லுநர் கருதி யிருக்கவேண்டும். ஆனுல், மாபெருங் கிரேக்க அறிஞர்களான சாக்ரடீஸ், பிளேட்டோ, அரிஸ்டாட்டில் முதலியோர்களுக்குச் சுவர்க்கத்தின் நீள்வாசல்

திறந்திருக்குமா திறந்திராதா என்னும் வினவையும் மக்கள் எழுப்பாமலில்லை. ஆனல், வர்ஜிலில் நாம் ஓர் உருவகத்தைக் காணலாம். முதிர்ந்த அறிவு, உயர்ந்த நாகரிகம், வான்கவிதைப் பண்பு முதலியன நிறைந்த வர்ஜில் பேரின்ப வீட்டை அடையமுடியாததற்குக் காரணம் நாம் கூறலாம். இவை யாவும் ஆண்டவன் அருட்கோயிலுக்குப் போகும் வழியைக் காட்டுமே தவிர ஆண்டவன் அருட்சோலை என்பது இவற்றையும் கடந்தது என்பதை நாம் மறக்கக்கூடாது. எத்தகைய வான்கவிதையும், எத்தகைய அறிவின் சிறப்பும், எத்தகைய நுண்ணறிவும் நுட்ப மான ஐம்புலச் சிற்றின்பமே தவிரப் பிறிதில்லை. கலைக்கும் கவிதைக்கும் நாம் முற்றுப்புள்ளி போடவேண்டும். இத்தனை மண்டலங்களையும் கடந்தால்தான் ஆண்டவனுடைய அருட்கோயிலின் கபாடம் திறக்கும். இதுதான் தாந்தே கொண்ட கருத்தென நான் எண்ணுகின்றேன்.

பியாட்டிரிஸ், கன்னி மேரி அம்மை, இயேசுநாதர் இவர்கள் யாவருமே ஆண்ட வனுடைய அருளைச் சுட்டுகின்றார்கள். அக்யுனஸ் அறிவுக்கும் ஞானத்திற்கும் மிகுதியான சிறப்பை அளிக்கின்றார். ஞானத்தால்தான் ஆண்டவனைப்பற்றிய தெளிவான உண்மை ஏற்படும். அந்த உண்மையில்தான் அன்பு பிறக்கும். ஞானம் கலந்த அன்பேதான் அகில புவனங்களையும் ஆட்டிவைக்கின்றது. 'பியாட்டிரிஸ்' நன்னெறி காட்டும் திருக்கோயிலையும் சுட்டக்கூடும். எனவே, ஆண்டவனுடைய அருள் தாந்தேயிக்கு அறியாக் காலத்தேயே கிடைத்திருக்கிறது என்று இயம்பலாம். ' அறியாக் காலத்துள்ளே அடிமைக்கண் அன்பு செய்வித்து' என்று நம்மாழ்வார் பாடுகின்றாரன்றோ!

நிரயத்தில் காணப்படுகிறவர்கள் பாவச்செயல்களில் வேண்டுமென்றே திளைத்த வர்களாக இருத்தல்வேண்டும். சான்றாக, கழிகாமத்தால் நெறிபிறழ்ந்த ஃபிரான் ஸிஸ்காவும் (Francisca) அவளுடைய காதலனும் நிரயத்திலும் கட்டித் தழுவி நிற்கின்றார்கள். இதைச் சித்திரிக்கிற கார்லைல் கூறும் சொற்கள் சிந்திப்பதற் குரியவை. 'இந்தக் காதலின் இயல்புகளை என்னென்று இயம்புகேன்! வான வில்லால் நெய்யப்பட்ட ஒன்று, செறிந்த இரவின் நிலைக்களத்தில் சுடர்விட்டு ஒளிர்வதை ஒக்கும்' என்று உரைக்கின்றார்.

இத்தகைய காட்சியைக் கண்ட தாந்தேயின் உள்ளம் அநேகமாய் உடைந்துவிட்டதென்றே மொழியலாம். இவள் ஒரு சின்னஞ் சிறுமியாயிருந்த பொழுது தம் முழங்காலில் வைத்துத் தாலாட்டியிருக்கக்கூடும்.

இயேசுநாதரைக் காட்டிக்கொடுத்த ஜூடஸ், ஸீஸருக்குப் பகையாய்த் தோன்றி அவர் உயிர்குடித்த புருட்டஸ், காஷியஸ்—இம் மூவரும் நிரயத்தில் துன் புறுவதை நாம் பார்க்கின்றோம். கழிகாமத்தால் தமக்குத் தீங்கு வருமோ என்று அஞ்சித் திருமங்கையாழ்வார் இசைத்த பாடலும் நாம் நோக்குதற்குரியது;

'வம்புலாங் கூந்தல் மனைவியைத் துறந்து
பிறர்பொருள் தாரமென் றிவற்றை

நம்பினா ரிறந்தால் நமன்றமர் பற்றி
யெற்றிவைத்(து) எரியெழு கின்ற

செம்பினா லியன்ற பாவையைப் பாவீ
தழுவென மொழிவதற் கஞ்சி

நம்பனே! வந்துன் திருவடி யடைந்தேன்
நைமிசா ரணியத் துளெந்தாய்

கருடபுராணத்தில் நிரயத்தின் அச்சுறுத்தும் காட்சிகளை நாம் கண்ணுறு கின்றோம். கழுவாய் மண்டலத்தில் (Purgatory) விரிகின்ற சித்திரங்களும் நாம் நோக்குதற்குரியவை. (1) செருக்குற்றவர்கள், (2) அழுக்காறு உற்றவர்கள், (3) சீற்றமிக்கோர்கள், (4) மடி நிறைந்தவர்கள்—சோம்பேறிகள், (5) பேராசை பிடித்தவர்கள், (6) மீதூண் விரும்புவோர்கள், (7) சிற்றின்பத்தில் திளைப் போர்கள்—இவர்கள் யாவரும் தம்தம் பாவங்களுக்கேற்ற கழுவாய்களைப் பெறு கின்றார்கள். மாசுகள் அகன்று மனம் தூய்மை அடையுமாயின் வைகுந்த நீள் வாசல் திறக்கும். சுவர்க்கத்தில் (Paradiso) ஞானி அகஸ்டைன், ஞானி தாமஸ் அக்யுனஸ் முதலியோர்களைப் பார்க்கின்றோம். ஞானி பெர்னார்ட் (Bernard) தான் சுவர்க்கத்தில் தாந்தேயை அழைத்துச் செல்லுகின்றார். இறைவனின் அருளுக்குப் பாத்திரமாகிச் சுவர்க்கத்தின் பேரின்பத்தில் திளைத்து அவன் புகழ் பாடித் திரிகின்றார். அச்சமெலாந் தீர்ந்து அருளமுதம் உண்கின்றார்கள்.

சார்லஸ் வில்லியம்ஸ் (Charles Williams) என்னும் திறனாய்வுப் புலவர், 'பியாட்டிரிஸின் உருவம்' (The Figure of Beatrice) என்னும் சிறப்புமிக்க நூலில், வேட்ஸ்வொர்த்துக்கும் தாந்தேயிக்கும் உள்ள தொடர்பை நன்கு விளக்கிக் காட்டியுள்ளார். இயற்கை அன்னையின் அருள், அறியாக் காலத்தேயே வேட்ஸ்வொர்த்திற்கு ஏற்பட்டுவிட்டது. அந்த அன்னைதான் அவருக்குக் காணுதனவெல்லாம் காட்டிக் கேளாதனவெல்லாம் கேட்கும்படி செய்து, உளத்தில் உறையும் ஆன்ம ஒளியைப் புலப்படுத்திவிட்டாள். சமாதி நிலையும் அவர் எய்தியதாய்த் தெரிகின்றது. 'இயற்கை அன்னை வேட்ஸ்வொர்த்திற்கு எப்படியோ அப்படியே பியாட்டிரிஸ் தாந்தேயிக்கு' என்னும் பொருளைப் பற்பல சான்றுகள் கொண்டு மெய்ப்பித்துக்கொண்டே போகின்றார். 'வையகம் புகுவது மண்ணவர் விதியே, என்று நம்மாழ்வார் கூறியிருப்பது இங்கு நீண்டு சிந்திப் பதற்குரியது. நாமனைவரும் அவன் கோயிலை நாடிச் செல்லும் யாத்திரிகர்கள் தாம். போய்ச் சேரவேண்டிய இலட்சியம் ஒன்றே. பாதைகள் பல இருக்கலாம். ஆண்டவன் அருட்சோதியில் தளராத நம்பிக்கை வைத்து அறப்பாதையில் நடந்தால், ஆழ்வார்களுக்கும் நாயன்மார்களுக்குக் கிடைத்த பெருநலம் நம்மை நண்ணாமற்போகாது. தாந்தேயின் நரகம் நம் உளந்தான்; கழுவாய் மண்டல மும் நம் உளந்தான்; சுவர்க்கமும் நம் உளந்தான். அறிவாம் ஒளி கொண்டு

அஞ்ஞான இருளை ஓட்டி அன்பு நீரால் இதயத்தைக் கழுவினால், நம் உளம் அவன் வீற்றிருக்கும் அரியாசனமாய்த் திகழுமென்பதில் யாதோர் ஐயமுமில்லை.

தாந்தே ஓர் அனுபூதிச் செல்வர் என்பது உண்மையே. அவர் கண்ட அரசியல் தத்துவமும் நம் சிந்தையைக் கவராமற்போகாது. தம் நகரத்தில் எழுந்த பெருங் குழப்பத்தின் விளைவாக தாந்தேயின் உளம் அமைதியை நாடிற்று. அரசியலில் தம் குருவான ஞானி தாமஸ் அக்யுனஸின் அடிச் சுவட்டைத் தாந்தே பின்பற்றுகின்றார்; தம்முடைய நகரமான ஃபிளாரன்ஸ் (Florence), சாம்ராச்சியம் (Empire), கிறித்துவத் திருச்சபை (Church)—இவற்றைச் சுற்றியே தம்முடைய அரசியல் கட்டடத்தை இவர் எழுப்பினார். அரிஸ்டாட்டிலைப்போலவே தனியுரிமை உடைய நகர-அரசுதான் (City-state) இவருடைய உள்ளத்தைக் கவர்ந்தது. இவர் உண்ணும் சோறும் பருகு நீரும் தம்மைத் தாலாட்டி வளர்த்த ஃபிளாரன்ஸ் நகரமே ஆகும். ஒரு நகர மாந்தனாயிருப்பது பெருநலம் மட்டுமன்று; அது மனிதனுக்கு இன்றியமையாதது. ஓர் அரசில்தான் மனிதனுடைய நலம் உருவாகும். அத்தகைய அரசுதான் அவன் முடிவாகும். அதுதான் மனித இயல்பின் மெளலியாகும். அதிகார வேட்கையாலோ அல்லது ஒரு நெருக்கடியாலோ இறையாட்சி தோன்றவில்லை; சேர்ந்து வாழவேண்டும் என்னும் இயற்கையாய் அமைந்த தூண்டுதலால் அது ஏற்பட்டதே தவிரப் பிறிதில்லை.

இந்த நகர ஆட்சியோடு தாந்தே நின்றுவிடவில்லை. இத்தாலிய நாடு முழுதும் சுற்றித் திரிந்த காரணத்தால், இத்தாலியா முழுவதும் ஓர் ஆட்சிச் சிறகின்கீழ் அமர்ந்தால் நலமாயிருக்கும் என்று கருதினார். இடைக்காலத்துச் சாம்ராச்சியத்திற்குக் கல்லறை உரையன்று; எல்லாவற்றையும் கடந்து நிற்கவேண்டும் என்று கூறும் புலமைக் கொள்கையினரின் இயல்பை எதிர்த்துப் போராடும் தத்துவமுமன்று. அந்தக் காலத்து நிகழ்ச்சிகளைப்பற்றிய விமரிசனந்தான் தாந்தேயின் கொள்கை என்று கருதலாம். மாபெருங் குழப்பத்திலிருந்து இவ்வையகம் நீங்கி இன்புறவேண்டுமென்பதே தாந்தேயின் குறிக்கோளாகும். ரோம ராச்சியத்தில் அமைதி நிலவினதுபோல நிலவவேண்டும், இடைக்காலத்து சாம்ராச்சியத்திலும் என்னும் கனவுகாண்கின்றார் தாந்தே. ஒரே சட்டம், ஒரே மொழி, ஒரே நெறி அன்று ஆட்சி புரிந்ததல்லவா? அந்த அமிசத்தில் தாந்தே இடைக்காலத்து அறிஞர் என்பதில் ஐயமில்லை. தேசிய உணர்ச்சியும் நாட்டுப் பற்றும் தலையெடுக்காத காலம் அது. ஆனால், இடைக்காலத்து ஞானி ஜானிடத்தில் (St. John) இந்த அமிசத்தை நாம் பார்க்கின்றோம்.

பண்டைய அகில அரசியலை நம் உள்ளம் நாடத்தானே செய்கிறது. தேசியப் பற்றுமட்டும் போதாது; அகில அரசியல் உணர்ச்சியும் வேண்டுமென்று நாமும் போராடுகின்றோமல்லவா?

எல்லா ஆற்றலும் அதிகாரமும் இறைவனிடமிருந்தேதான் அருவிபாய் கின்றன. சக்கரவர்த்தியும் சரி, திருச்சபையாரும் சரி, ஆண்டவனிடமிருந்தே அதிகாரத்தைப் பெறுகின்றார்கள்.

ஞாயிறும் திங்களும்போலத்தான் அவர்கள் திகழ்கின்றார்கள். ஞாயிற்றின் ஒளியால்தான் மதியும் மிளிர்கின்றது. இறுதியில் சமயமாம் அத்திவாரத்தின் மீதுதான் உலக உயர்நாகரிகமாம் மாபெருங் கோயில் எழுப்பப்படவேண்டு மென்று டாயின்பியும் சாற்றுகின்றாரன்றோ! ஒரு சாம்ராச்சியந்தான் மனித இனத்தின் தேவை யாவற்றையும் நிறைவேற்றுதற்குரிய கருவியாய் அமைய வேண்டுமென்று தம் 'வேந்தரியலில்' (De Monarchia) மொழிகின்றார். இம்மைக்கு ஒரு சாம்ராச்சியமும் மறுமைக்கு ஒரு திருச்சபையும் திகழவேண்டும் என்னும் கருத்து இவர் கண்ட உண்மையாகும்.

தாந்தேயின் 'தெய்வ மங்கல கீதம்' வெறும் ஓர் ஆன்ம யாத்திரையைச் சித்திரிப்பதுமட்டுமன்று; வாழ்க்கைக் கசப்பிலிருந்து விடுவித்துக்கொள்ளு வதற்குரிய நிலையம்மட்டுமன்று; இந்த உலகத்தையே அமர நாடாக ஆக்க வேண்டும் என்னும் வான்லட்சியமும் அதில் கோயில்கொண்டிருக்கிறது என்று ஒரு புலவன் கூறுவது ஈண்டு சிந்திப்பதற்குரியது. எந்தத் துறையிலும் அமைதி அரசு செலுத்தவேண்டுமென்பதே தாந்தேயின் இலட்சியமாகும். அந்த அமைதி யில்தான் ஆண்டவனின் அருட்சோலை எஞ்ஞான்றும் தெய்வ மணங் கமழ்ந்து நிற்கின்றது.

## 21. ரோஜர் பேக்கன் (Roger Bacon)

## (கி.பி. 1214—1294)

எல்லாத் துறைகளிலும் புகுந்து துருவி ஆராயும் திறமை வாய்ந்த ரோஜர் பேக்கனின் சிறப்பைச் சித்திரிப்பதற்கு முன்பு, ஹேல்ஸைச் சார்ந்த அலெக் ஸாண்டரைப்பற்றிச் சற்று அறிந்துகொள்வது பொருத்தமே. இவரைப் பாரிஸ் மாநகரத்தில் பேக்கன் சந்தித்த விஷயத்தை நாம் அறிவோம்.

இவர் பிறந்த ஆண்டு தெரியவில்லை. 1170 அல்லது 1180 இவ்வாண்டு களின் இடையே இவர் கிளௌசஸ்டர்ஷயரில் (Gloucestershire) தோன் றினுர் என்று அறிகின்ருேம். பாரிஸ் மாநகரில் கல்வி பயின்ருர். கலைக்கழகத் திலும், பின் இறையியல் கழகத்திலும் இவருடைய படிப்பு தொடர்ந்து ஓங்கிற்று. இவர் எம்.ஏ. பட்டம் பெற்றபொழுது பௌதிக இயலும் (Physics) அடிப்படைத் தத்துவ இயலும் (Metaphysics) மொழிபெயர்க்கப் படவில்லை என்று பேக்கன் மொழிகின்ருர்.

அரிஸ்டாட்டில் தந்த எல்லாத் தத்துவ இயலையும் பெரும்பாலும் இவர் பயன்படுத்திக்கொண்டார் என்பதில் யாதோர் ஐயமுமில்லை. அரேபிய நாட்டு அறிஞர்கள் அரிஸ்டாட்டிலுடைய நூல்களுக்கு வழங்கிய விரிவுரைகளையும் ஆழ்ந்து படித்தார். சிற்சில விஷயங்களில் இவர் அவர்களைப் போற்றுகின்ருர்; வேறு பொருள்களில் மாறுபடுகின்ருர். இவருடைய ஆர்வம் பிளேட்டோ கண்ட தத்துவத்திலும் ஞானி அகஸ்டைன் கண்ட தத்துவத்திலும் திளைக்கின்றது. தத்துவம், மெய்யியல், இறையியல் இவற்றின் வேறு பாட்டுப் பண்பை நன்கு உணர்ந்தவர். கடவுள், கலப்பற்ற செயலே (pure act) ஆவர்; அகண்டமான சத்து (infinite reality). அறிவென் பது சத்தைத் தவிரப் பிறிதன்று. சத், சித், ஆனந்தம் என்று நாமும் நவில் கின்ருேமன்ருே! படைப்புக்கு முன்பே அவருடைய பூரணமான அறிவு அதன் திட்டத்தை நன்கு அறியும். அவனுடைய படைப்புகளைக் கொண்டு கடவுளின் இருப்பை மனித அறிவு புலப்படுத்தக்கூடும். வரம்புள்ள உய ருருக்கள் (வியக்திகள் - Beings) ஆண்டவனிடமிருந்து வேறுபட்டவைகள்.

கடவுளுடைய அகண்டமான அறிவாலும் அன்பாலும் இவை விரிந்தன; காலத்தில் இவை தோன்றின. உலகம் எப்பொழுதுமே உள்ளது என்னும் கொள்கையை அலெக்ஸாண்டர் மறுக்கின்றார். ஆண்டவனுடைய அருட்சுடர் ஆன்மாக்களின் இதயத்துள் பாய்கின்றது. மனித இதயம் வெறும் சூன்னியமன்று. அவனைப்பற்றிய கருத்துகள் மனித இதயத்தில் கரந்து நிற்கின்றன. இவற்றை ஆய்வதால் ஆண்டவனைப்பற்றிய அறிவு மனிதனுக்கு விளங்காமற்போகாது. கடவுள் எல்லாவற்றையும் படைக்கின்றார். மனித ஆன்மாக்களைப் படைப்பவரும் அவரே. பார்க்கப்போனால் இவர் பிளேட்டோ, அகஸ்டைன், ஆன்ஸெல்ம் (Anselm) —இவர்களுடைய அடிச்சுவடுகளைப் பின்பற்றுகின்றார் என்பது உண்மையன்றோ ! பிரகிருதிகூட கடவுளால் படைக்கப்பட்டது என்னும் கொள்கை அரிஸ்டாட்டிலில் இல்லை. அனாதியான பிரகிருதியைப் பற்றித்தான் அவர் குறிக்கின்றார். பிரகிருதிக்கு ஒரு தொடக்கம் உண்டு என்று அலெக்ஸாண்டர் சாற்றுகின்றார். வைணவர்களோ முக்கொள்கையினர். பிரகிருதி, ஆன்மா, பரமான்மா—இவை மூன்றும் அழிவற்ற பொருள்கள்; காலத்தில் தோன்றிக் காலத்திலேயே மறைகின்றவைகள் அல்ல. பிரகிருதியும் ஆன்மாவும் பரமான்மாவுக்கு உடலாய்த் திகழ்கின்றன.

பிளேட்டோவின் கருத்துண்மை வாதத்தை அலெக்ஸாண்டர் ஏற்கின்றார். ஆன்மாவின் இயல்பை ஒருவன் ஓரவேண்டுமாயின், அதன் முடிவான காரணங்களை நாம் நாடவேண்டும். அதற்கு நிமித்த காரணம் (efficient) கடவுள் தான். அதன் குறிக்கோள் பேரின்பமே. ஆன்மா என்பது பிரகிருதியும் அதை உந்துவிக்கும் வடிவும்தாம்.

சங்கற்பத்தைப்பற்றி (will) உளவியல் கோணத்திலிருந்து முதன் முதலாக ஆராய்பவர்களுள் இவர் ஒருவர் என்று இயம்பலாம். சங்கற்பந்தானா (will) அல்லது அறிவுதானா (reason) இறுதியாக மனிதனை உந்துகின்றது என்னும் கொள்கையின் வித்து இங்கே கரந்து நிற்பதை நாம் காண்கின்றோம். அலெக்ஸாண்டரின் கருத்தை ரோஜர் பேக்கன் முற்றிலும் ஆமோதிக்காதுபோனாலும், ரோஜர் பேக்கன்மீது அது ஆட்சி புரியாமலில்லை. அறிவின் ஆற்றலையும் கிறித்துவ இறையியலையும் இயையும்படி செய்த பேறு ஞானி தாமஸ் அக்யுனஸைச் சார்ந்ததாகும். இடைக்காலத்துப் புலமைக் கொள்கையாம் திருக்கோயிலை அழகுற எழுப்பிய அக்யுனஸின் சிறப்பு போற்றுதற்குரியது. இதற்கு அரண்செய்யும் சுவர்கள்மீது தாக்கல்கள் கிளம்பிவிட்டன. ரோஜர் பேக்கன், டன்ஸ் ஸ்கோடஸ், ஒக்ஹம் (Ockham) இவர்களுடைய சொற்போர்களாம் அலைகள் இவற்றின்மீது மோதின.

ரோஜர் பேக்கனுடைய இயல்பையும் மனப்பாட்டையும் இன்னவையென்று இயம்புவதற்கு இயலாது பெரும்பாலும் இடைக்காலத்துத் தத்துவ அறிஞர்களுடைய அறிவுரைகளை ஏதாவது ஒரு கோணத்திலிருந்து நாம் ஆராயமுடியும்;

ஆனால், பேக்கனிடத்தில் அமைந்துள்ள முரணான கருத்துகள் நம்மைப் பெருந் திகைப்பில் ஆழ்த்திவிடுகின்றன.

தம்முடைய அறிவு வளர்ச்சிக்கு ஏற்றவாறு இடைக்காலத்துச் சூழ்நிலை பேக்கனுக்கு அமையவில்லை என்பது உண்மையே. அக் காலத்துத் தளைகள் இவருடைய அறிவின் ஓட்டத்திற்குக் குறுக்கே நின்றன. பௌதிகப் பண்பாடு இவர்மீது மிகுதியான ஆட்சி புரிந்தாலும், விவிலிய நூலில் கோயில்கொண்டுள்ள கருத்திற்கு இவர் தலைவணங்கினார் என்பதை இவருடைய நூல்களின் வாயிலாக நாம் நன்கு உணர்கின்றோம். மொழியியல் (Linguistics), கணக்கியல் (Mathematics), வானநூல் (Astronomy), ஒளியியல் (Optics), இரசாயனம் (Chemistry) இவற்றில் ரோஜர் பேக்கன் மிகவும் திளைத்தார். சோதனைக்கூடத்தில் எதையும் ஆய்ந்து காணும் நேர்முறையைப் பின்பற்ற வேண்டும் என்பதை வலியுறுத்துகின்றார். தத்துவமோ அல்லது எல்லா அறிவுத் துறைகளுமோ இறையியலுக்குத் துணைபுரியவேண்டுமென்று தம் ஆழ்ந்த கருத்தைப் புலப்படுத்துகின்றார். இரசாயனத்திற்கும் இறையியலுக்கும் என்ன தொடர்பு இருக்கக்கூடும் ? கணக்கியலுக்கும் இறையியலுக்கும் என்ன சம்பந்தத்தை ஒருவன் காணமுடியும் ? தம்முடைய மேதகவு அல்லது மாண்புலத் திற்கேற்றவாறு (genius) இவர் தம் அறிவுக்குத் தட்டுத்தடையில்லாத ஓட்டத்தை நல்கியிருப்பாராகில், அக் காலத்து அறிஞர்கள் இவர்மீது வெகுண்டு எழுந்து இவரை வெந்தீக்கு இரையாக்கியிருப்பார்கள் என்பது திண்ணம்.

அறிவுத்துறையில் பேக்கனுடைய வாழ்க்கை ஓர் அவல நாடக இயல்பை ஒக்கும் என்று டேலர் (Taylor) மொழிகின்றார். இக் கருத்திற்கு நம் இதயம் எதிரொலி கொடுக்காமற்போகாது.

இங்கிலாந்துதான் பேக்கனுக்குத் தாயகம். இல்செஸ்டர் (Ilchester) தான் இவர் பிறந்த இடமாகும். இவர் பிறந்த நாளைப்பற்றிச் சர்ச்சைகள் நிகழ்வதைப் பார்க்கின்றோம் ; இவர் செல்வம் படைத்த குடும்பத்தில் தோன்றியவர். ஆக்ஸ்ஃபோர்டு கழகத்தில் கல்வி பயின்றார். ராபர்ட் கிராஸ்ஸிடெஸ்டி (Robert Grosseteste) என்பவரிடமும் ஆடம் மார்ஷ் (Adam Marsh) என்பவரிடமும் கல்விச் சுடரை ஏற்றார். இவ்விரு ஆசான்களை மிகப் பணிவுடன் போற்றிப் புகழ்கின்றார். ஆக்ஸ்ஃபோர்டிலிருந்து இவர் பாரிஸ் நகரத்திற்குச் சென்று, அங்கே பல ஆண்டுகள் கழித்தார்; அங்கே டாக்டர் பட்டம் பெற்றார்; ஃபிரான்ஸிஸ் மடத்தில்சேர்ந்தார். வறுமையையே தமக்கு அணிகலமாய்ப் பூணும் மடத்தினர் கையில் செல்வம் இறையளவேனும் இருப்பதற்கு நியாயமில்லை. விஞ்ஞான ஆராய்ச்சித்துறையில் இவர் மிகுதியான செல்வத்தைப் பயன்படுத்தினதாகத் தெரிகின்றது. ஆகையால், நீண்ட காலத்திற்குப் பிறகே இந்தத் துறவறத்தை அவர் பூண்டார் என்பது ஊகிக்கப்படுகின்றது.

‘மொழியியலிலும் விஞ்ஞானத் துறைகளிலும் நான் நீண்ட காலம் உழைத்துவந்தேன். எந்தெந்தத் துறை எனக்குப் பயன்படுமோ அந்தந்தத்

துறையை நண்ணி மிகுதியான விளைவைப் பெற்றேன். ஒன்றை எப்படி நண்ணமுடியும் என்பதையும், எந்த உபாயங்களைப் பின்பற்ற வேண்டும் என்பதையும், எந்தக் கருவிகளை வழங்கவேண்டும் என்பதையும் நான் அறிவேன். போதுமான பணம் இல்லாத காரணத்தால், அறிவுத் துறையில் மேன்மேலும் என்னால் முன்னேறிச் செல்ல இயலவில்லை. அறிவிலாப் பொதுமக்களின் கருத்திற்குச் செவிசாய்க்காமல் ஞானத்துறையில் என் தனி வழி நடந்தேன். இரண்டாயிரம் பவுன்களுக்குமேல் நான் செலவு செய்தேன். அறிவு திரட்டுவதில் இருபது ஆண்டுகள் தேய்ந்துவிட்டன' என்று தம்மைப்பற்றி உரைக்கின்றார்.

தம்முடைய கருத்துகளை வெளியிடக்கூடாது என்ற கட்டளை திருச்சபையில் எழவே, இவர் உளம் சற்றுச் சோர்வுற்றது. ஆனால், பிறகு போப்பாண்டவர் எழுதிய கடிதம் சற்று ஊக்கமளித்தது. இவர் இரகசியமாய்த் தம்முடைய ஆய்வுகளை நடத்தலாம் என்றுதான் அக் கடிதத்தில் கண்டிருந்தது.

ஞான ஒளி மனிதனுடைய இதயத்தில் ஆண்டவன் அருளால் அருவி பாய்கின்றது என்னும் கொள்கையை இவர் உடையவர் என்பது உண்மையே. பண்டைக் காலத்துத் தத்துவ அறிஞர்கள் தீர்க்கதரிசிகளின் நூல்களைப் படித்திருக்கவேண்டும். இந்தத் தரிசிகளின் நூல்களில் ஆண்டவனுடைய அருள் மொழிகள் கோயில்கொண்டிருக்கின்றன. அரிஸ்டாட்டில் கண்ட அறிவுரைகள் கிறித்துவ சமயநெறிக்கு ஒத்தனவாய் இருக்கின்றன. அவற்றிலுள்ள நலங்களை நாமும் ஏற்கலாமல்லவா என்று பேக்கன் இயம்புகின்றார். 'நான் அழிக்க வரவில்லை; நிறைவேற்றவே வந்தேன்' என்று இயேசுநாதர் கூறவில்லையா? எங்கெங்கே சான்றோர்களின் நன்முத்தாம் அறிவுரைகள் திகழ்கின்றனவோ, அவற்றையெல்லாம் திரட்டுவது நம் கடமையாகுமன்றோ!

உண்மைப் பாதையில் நான்குவிதமான இடறுகட்டைகள் இருக்கின்றன. உண்மை ஒளியை நண்ணுவண்ணம் அவை நம்முன் பெருஞ் சுவர்களை எழுப்புகின்றன. (1) சான்று வலிமை (authority) தக்கதாய்த் திகழாமலிருக்கலாம். மேற்கோள் காட்டக்கூடிய ஒன்றில், பொய் புதைந்த மேற்கோளாயிருந்தால் அது உண்மையை நிலைநாட்டாதன்றோ? (2) நீண்ட காலமாக நிறுவப்பட்ட வழக்கம் நமக்குத் தடையாக நிற்கத்தான் செய்யும். ஒரு பொய்யான வழக்கு நீண்ட காலமாயிருந்தால், அதை உண்மையென்று மக்கள் கருதத்தானே செய்வார்கள்? அத்தகைய வழக்கத்தை அகற்றினாலன்றி உண்மை ஒளி புலனாகதன்றோ! (3) அறிவற்ற பாமர மக்களின் கருத்தும் ஓர் அஞ்ஞான முகிலைப் பரப்பிவிடும். (4) தன்னுடைய அஞ்ஞானத்தைப் போலி ஞானத்தால் மறைத்தல் இதைப்போல இடர் விளைவிக்கும். பாவியை உலகத்தில் பார்க்கமுடியாது. முதலில் குறிப்பிடப்பட்ட மூன்று பகைவர்களை ஒழிக்க மாமருந்துகள் உண்டு. இருள் மண்டிய ஆசிரியர்களை விலக்கி, நல்ல ஆசிரியர்களின் நூல்களுக்கு வணக்கம் செய்தல் வேண்டும். வழக்கத்தை

ஒழித்துவிடல் வேண்டும். பகுத்தறிவின் செங்கோல் ஆட்சிக்கீழ்த் தஞ்சம் புகுதலே அதை மாய்க்கும் வழியாகும். கீழ்மக்களின் கருத்துகளை, எப் பொழுதுமே மாறிமாறி வரும் கருத்துகளைப் போற்ருது, அறிவு மிக்க சான்றோர்களின் தூய கருத்துகளுக்குச் செவி சாய்த்தல்தான் சாலவும் நன்ருகும். இறுதியாகக் குறிப்பிடப்பட்ட பாவத்தைப்போன்ற பெரும் பாவத்தை நாம் இவ் வையகத்தில் பார்க்க முடியாது. படித்ததாக வெறும் ஆரவாரம் செய்கின்றவர்கள் உண்மை ஒளிக்குப் பகைவர்கள் என்பதில் யாதோர் ஐயமுமில்லை. அதிர்குரல், பயனில் சொல் வழங்கும் அரட்டர்களை நாம் நம்பக்கூடாது. மனிதன் தன்னுடைய அற்ப ஞானத்தில் திளைக்கின்ருன். கடல் கண்டேம் என்பார் யாவரே முடிவுறக் கண்டார்! மின்மினி ஒளியைப் பார்த்துவிட்டு வெய்யோன் விரிகதிரைக் கண்டுவிட்டோம் என்று மார்பு தட்டும் அறிவிலிகளின் பாதையை நாம் நண்ணுது, ஆண்டவனிடத்தில் ஓர் அசையாத நம்பிக்கை வைத்து அவனுடைய அருளை நாடுவதே தவத்தின் பெருநெறியாகும். இறையியலில் ஈடுபடுகின்றவர்கள் பல மொழிகளிலுள்ள இலக்கியங்களைப் பயின்று உண்மையை நாடவேண்டும். விஞ்ஞானம், கணக் கியல், ஒளியியல் முதலியவற்றையும் கற்று இறையியலை ஆராயவேண்டும் என்று இவர் மொழிகின்ருர். சோதனைக்கூடத்தில் எல்லாவற்றையும் வைத்து ஆராய்ந்து கூர்ந்து நோக்கி முடிவுக்கு வரவேண்டுமென்று இவர் கூறுவது விஞ்ஞான முறைக்கு மிகவும் பொருத்தமே.

மனிதனை மயக்கக்கூடிய குறைபாடுகளை ஃபிரான்ஸிஸ் பேக்கனும் பகர் கின்ருர். (1) மனிதனுக்கு இயற்கையாய் அமைந்த குறைபாடுகள் (Idols of the tribe); (2) மனிதனுக்குள்ள விருப்பு வெறுப்பு, காய்தல் உவத்தல் (Idols of the cave); (3) வழக்கிலுள்ள சொற்களின் கொடுங்கோல் ஆட்சி (Idols of the market place); (4) பண்டைய ஆசிரியர்கள் அமைத்த கழகக் கருத்துகள் (Idols of the theatre); (5) தீக்குழுவினர் கொண்ட ஏதோ ஒரு சட்டத்தைக் கண்மூடித்தனமாகப் பின்பற்றல் (Idols of the schools) —இவை யாவும் அறிவுப் பாதையில் மயங்கச் செய்யக்கூடிய அஞ்ஞான முகிலை எழுப்பிவிடும். ரோஜர் பேக்கன் குறிப்பிட்டதுபோலவே இவரும் கூறுவது ஆழ்ந்து சிந்திப்பதற்குரியது. அறிவுதான் ஆற்றல் என்று ஃபிரான்ஸிஸ் பேக்கன் கூறினது உண்மையே. அறிவின் விளைவுகளை—அச்சுறுத்தும் விளைவுகளை நாம் நாள்தோறும் கண்ணுறுகின்ருேம். இவற்றின் சக்திகளாய்ப் பரந்த இவ் வையகம் குறுகிவிட்டது. காலம், இடம் இவை எழுப்பும் தடைகள் யாவும் பறந்துவிட்டன. மதிமண்டலத்திற்கும் இவர் ஒரு பாலம் அமைக்கக்கூடும். ஆனுல், காட்டில் உறைந்து வாழும் விலங்கின் உணர்ச்சி மாறினபாடில்லை. அறிவு வளர்ந்தது; அதற்கு ஏற்றவாறு அன்பு வளரவில்லை. ரோஜர் பேக்கன் விஞ்ஞான விளைவுகளைச் சித்திரிக்கிருர். கப்பல்களை மனிதன் துடுப்புகள் கொண்டு செலுத்தவேண்டியதில்லை; அவற்றை உந்தும் கருவியைக் காண லாம். விலங்குகள் வண்டிகளை இழுக்கவேண்டிய நிலை மாறிவிடக்கூடும்; அவை விண்ணில் பறக்கக்கூடிய வாய்ப்புகளும் ஏற்படலாம். இவர் கண்ட கனவுகள்

யாவும் உருவாகிவிட்டன; ஆனால், குணத்தில், இயல்பில் மனிதன் காட்டில் வாழும் விலங்கின் நிலையிலிருந்து இன்னும் முன்னேறியதாகத் தெரியவில்லை.

விஞ்ஞானம் என் செய்யும்? அது படைத்த கருவிகளைத் தக்க முறையில் பயன்படுத்திக்கொள்ளும் அன்பின் ஆக்கம் இவனிடத்தில் இல்லையே—என் செய்வது! விஞ்ஞானப் பண்பாட்டை ரோஜர் பேக்கன் படைத்திருந்த போதிலும், புலமைக் கொள்கையினர் கொண்ட கருத்துகளாம் தளைகளிலிருந்து இவர் தம்மை விடுவித்துக்கொள்ள இயலவில்லை. 'விஞ்ஞானத் துறையில் எத்தனையோ ஆராய்ச்சிகள் செய்தாலும், இந்தப் பிரகிருதியின் இயலை நாம் அறிய முடியவில்லை. ஆன்மிகத்துறையிலோ கேட்கவே வேண்டாம். மனிதனுடைய அறிவு மற்றைய அறிவை நாடவேண்டியிருக்கிறது. புலன்கள் வழியாகப் பெறாது ஆண்டவன் அருளொளியை அகக்கண்ணால் நேரில் கண்டவர்கள், அவனுடைய உண்மைக் குரலை அகச்செவியால் கேட்டவர்கள்—இவர்களுடைய ஆப்த வாக்கியங்கள்தாம் நாம் செல்லும் பாதையில் உற்ற துணைகளாய் அமைகின்றன. ஆன்மிகத் துறையிலுஞ் சரி, பிரகிருதி மண்டலத்திலும் சரி, நம்மை உய்விப்பது ஆண்டவனின் அருட்சோதியே தவிரப் பிறிதில்லை.

ஆன்மிக ஞானத்துறையின் படிகளை பேக்கன் சித்திரித்துக் காட்டுகின்றார். (1) 'முதன் முதலாக அவனுடைய அருளால் நம்முடைய இதயத்தில் உள்ளொளி மின்னலடிக்கின்றது. (2) நாம் நற்குணங்கள் பெற்றவர்களாகத் திகழ வேண்டும். தீச்செயல் புரிபவன் அஞ்ஞான இருட்டில் உழல்பவனாவான். (3) பரிசுத்த ஆவி அளித்த நலன்களைப்பற்றி இஷையா இயம்புகின்றார். அவை நம்மைப் புனிதமாக்கும். (4) திருவருள் வெளிப்பாட்டில் (Gospel) அலர்ந்துள்ள பேரின்பத்தையே நாம் நாடவேண்டும். (5) ஆன்மிக இயல்பை உணர்தல் நலமாம். (6) சிந்தையையும் சொற்பதத்தையும் கடந்த ஆண்டவனுடைய அருளையே தஞ்சமாகக் கொள்ளவேண்டும். (7) ஆடி ஆடி அகங் கரைந்து தெய்வக் களிப்பில் திளைத்தல் சிறந்ததாகும்' என்று பேக்கன் மொழிகின்றார்.

இம் மொழிகளைப் பருகுகின்ற நாம், பேக்கன் ஓர் உண்மையான கிறித்துவர் என்பதை ஓராமற்போகமாட்டோம். ஆனால், விஞ்ஞானப் பண்பாடும் நாம் தெய்வத்தின்மீது வைத்த நம்பிக்கையும் ஆர்வமும் போராடுகின்ற நிலை நம்மை வெந்துயரில் ஆழ்த்துகின்றது. ஒரு வழியிலும் செல்லவிடாது இவருடைய மனத்தில் பாய்கின்ற ஓட்டங்கள் குறுக்கோட்டங்கள், அலைகள் எதிர் அலைகள்—இவை அவர்பால் நம் பரிவுப் பார்வையைச் செலுத்தும்படி செய்கின்றன. முரண்பட்ட இலட்சியங்களாம் மாபெரும் புயலில் சிக்கிய ஓர் ஆன்மாவின் இன்னல்களும் இடுக்கண்களும் சொல்லில் சிறைப்படுமோ? உன்னிப்பாருங்கள். இவர் அறிந்த தத்துவத்தை நாம் சற்று ஆராய்வோம். இவர் பன்மைக் கொள்கையாளர் (Pluralistic philosopher). பொதுமையில் (Uuniversals)

இவருக்கு நம்பிக்கை இல்லை. 'தானே ஆன்மா' என்ற வாதத்தை மத்துவரும் வைணவர்களும் பின்பற்றுகின்றனர்கள். மத்துவர் ஆன்மாவுக்கு ஆன்மா, பிர கிருதிக்குப் பிரகிருதி பேதமிருக்கிறது என்று இயம்புகின்றார். ஆன்மாவிடையே பேதம் இல்லை என்பது வைணவர்களுடைய துணிபு. ஒருமைக் கொள்கையின் எல்லா வடிவத்தையும் இவர் எதிர்த்துப் போராடுகின்றார். எல்லாப் பிரகிருதியும் ஒன்றுதான் என்பதையும் இவர் ஏற்கவில்லை. பிரகிருதிக்குப் பிரகிருதி மாறு பாடு உண்டு என்று இவர் உரைக்கின்றார். ஆன்மாவிற்குள்ளும் பேதம் உண்டு என்று இவர் கூறுவது சிந்திப்பதற்குரியது.

மத்துவர் கொண்ட கொள்கையின் சாயலை இங்கு நாம் நன்கு உணர் கின்றோம். ஒவ்வோர் உயருருவுக்கும் (Being) பிரகிருதியும் உருவமும் உண்டு. பிரகிருதிக்குப் பிரகிருதி பேதங்கள் இருப்பதால், உருவங்களிடையே பேதங்கள் இருப்பதில் யாதொரு வியப்புமில்லை.

அறிவோனுக்கு நேரிடையாகவே அறியப்படும் பொருள் தோன்றிவிடு கின்றது. தனிப்பட்ட ஆன்மாவின் இயல்பிற்கேற்றவாறு பொருளின் காட்சி புலனுகின்றது. கடவுள்தாம் நம்முடைய அறிவுக்கு ஒளியை நல்குபவர். ஆண்டவனுடைய ஒளி நம்மிடையே கரந்து நிற்கின்றது; அகனமர்ந்ததாயிருக் கின்றது (immanent). இத்தகைய கருத்தைப் புலப்படுத்திய ஞானி அகஸ் டைனின் நூல்களை பேக்கன் மிகவும் பயன்படுத்திக்கொள்ளுகின்றார். ஆன்மா வுக்கு ஆன்மா மாறுபாடு இருக்கும் காரணத்தால், ஆண்டவன் அருளொளி ஒன்றேயாயினும் அதைப் புலப்படுத்துகிற உயருருவுக்குத் தக்கவாறு அதன் காட்சி புலனுகின்றது.

மூன்று முறைகள்மூலமாக நாம் உண்மை ஒளியைப் பெறலாம். (1) சான்றுண்மை (authority); (2) பகுத்தறிவு (reason); (3) அனுபவம் (experience) —இம் மூன்றும் ஆண்டவன் அருட்கோயிலை நண்ணுவதற்குற்ற பாதைகளாம். சான்றுண்மை மட்டும் போதாது; அதைப் பகுத்தறிவாம் சல்லடையில் சல்லித்துப் பார்க்கவேண்டும். வெறும் அறிவுமட்டும் போதாது; அறிவு தரும் உண்மை உண்மைதானு என்று நாம் அதை அனுபவமாம் உலையில் வைத்துப் பார்க்கவேண்டும்.

தத்துவத்தைமட்டும் பயின்றல் போதாது. எல்லாக் கலைகளுக்கும் அறிவு மண்டலங்களுக்கும் பெண்ணரசியாய் விளங்குபவள் இறையியலாம் நங்கை தான். அந் நங்கைக்குதான் எல்லாக் கடவுளும் அலங்கல் புனையவேண்டும் என்று பேக்கன் சாற்றுகின்றார். இறையியலின் கையில் தத்துவம் ஒரு கருவியே தவிரப் பிறிதில்லை என்று ஒரு விஞ்ஞானி உரைப்பது நம்மை ஒரு பெரு வியப்பில் ஆழ்த்தாதுபோகுமோ! தத்துவமும் இறையியலும் சான்றோர்கள் கேட்ட தெய்விக மொழிகளில் கோயில்கொண்டிருக்கின்றன. நாமும் வேதங் களையும் உபநிடதங்களையும் சான்றுகளாகக் கொள்ளவில்லையா? வேதங்களும்

உபநிடதங்களும் ஆண்டவனுடைய திருவாயிலிருந்து பெருகியவைதாமே! நம்முடைய முதல் தாய்தந்தையர்களுக்கு ஆண்டவன் அறிவுரை வழங்கினுர். அது பரம்பரையாக முறைப்படி வந்துகொண்டே யிருக்கின்றது. கடவுள்தான் தத்துவ அறிவை மாந்தர்களுக்கு அளித்திருக்கிருர். விஞ்ஞானத் துறையில் இவர் தம் காலத்தைக் கடந்து நிற்கின்ருர். தற்கால விஞ்ஞானத்திற்கு ஒரு விடிவெள்ளியாய்த் திகழ்கின்ருர் என்று இயம்பினுல், அது மிகையாகாது, ஆனுல், தத்துவம் இறையியலுக்கு வணக்கம் செய்யவேண்டும் என்று கூறும் முகத்தால் இவர் ஒரு பழமை பேணும் கட்சியினராய்க் (conservative) காட்சி அளிக்கின்ருர்.

## 22. கென்டைச் சார்ந்த ஹென்றி

### (Henry of Ghent)

டன்ஸ் ஸ்கோடஸ் (Duns Scotus) என்னும் தத்துவ வித்தகரை அறிவதற்கு முன்பு ஹென்றியைப்பற்றி நாம் சற்று ஆராய்வது சாலப் பொருத்த மாகும். அரிஸ்டாட்டிலும் அரேபிய நாட்டுத் தத்துவ வல்லுநர்களும், ஆல்பெர்ட் அவருடைய சீடரான ஞானி தாமஸ் அக்யுனஸ் இவ்விருவர்களுடைய தத்துவத் துறையில் மிகவும் துணைபுரிந்திருக்கிறார்கள் என்பது உண்மையே. இவர்க ளுடைய கொள்கைகளுக்கு எதிர்ப்பு இல்லாமலில்லை. இப்பொழுது தத்துவத் துறையில் கத்தோலிக்கர்களுக்கு ஞானி அக்யுனஸ் ஒரு தக்க சான்றாகத் திகழ் கின்றார். இவர்களுக்குப் பிறகு தோன்றிய தத்துவ வல்லுநர்களுள் நம்மால் சிறப் பித்துக் கூறப்படுபவர் ஹென்றியும் டன்ஸ் ஸ்கோடஸும் ஆவர். ஞானி தாமஸ், ஹென்றி, டன்ஸ் ஸ்கோடஸ் இம் மூன்று சான்றோர்களுக்குள் கருத்தொற்று மையும் உண்டு; கருத்து வேற்றுமையும் உண்டு.

இவருடைய அடிப்படைத் தத்துவத்தைப் பார்ப்போம். படைப்பு அனாதியா யிருக்க இயலும் என்று தாமஸ் கூறினதை இவர் ஏற்கவில்லை. தெய்வ மூலக் கருத்துகள், கடவுளைப்போலப் பாவிக்கும் கருத்துகளின் தொகை (imitations of God) எல்லையற்றதாய்க் கடவுளிடத்தில் இருக்கிறது என்று சொல்லமுடியாது. கடவுளுக்குப் பொருளின் தொகையைப்பற்றிய அறிவு இல்லை. மனித இனத்தைப்பற்றிதான் அவருக்குத் தெரியும். மனிதனுக்குத் தனிப்பட்ட சிறப்பில்லை; அவனுடைய இனத்திற்குள்ள இயல்புகள்தாம் உண்டு. புலமைக் கொள்கையினர் கண்ட பன்மைக் கொள்கையைப் போற்றுகிற இவர் இப்படிச் சாற்றலாமா என்னும் வினா எழத்தானே செய்யும். மனிதனுக்குத் தனிச் சிறப்பு இல்லை என்று இயம்பிவிட்டால், இவர் பேணும் நன்மைக் கொள்கை வாதம் வலிவற்றதாய்ப்போய்விடுமன்றோ! தனித்தோற்றம் பிரகிருதியா லன்று; மனிதனுடைய இயல்புதான் அதற்குத் தனித்தோற்றத்தை அளிக் கிறது என்கிறார். இருப்பென்பது ஆண்டவனுடைய தொடர்பேயாகும். இருப்பும் (existence) அதன் உள்ளியல்பைப்பற்றிய கருத்தும் ஆண்டவனுடைய அகண்டமான அறிவில் ஏற்கெனவே இருந்திருக்கின்றன. அதை அவர் தோற்று விக்கின்றார் என்று ஹென்றி மொழிகின்றார்.

மனிதனுக்கு இரண்டு வடிவங்களுண்டு. ஒன்று அவன் ஆன்மாவாகும்; மற்றொன்று பிரகிருதி சம்பந்தமான வடிவமாகும். பிறப்பிற்குப் பிரகிருதி சம்பந்தமான உடல் வேண்டியிருக்கிறது. அழிவில்லாத ஓர் உடல் தேவை தான். இயேசுநாதர் இறந்து புத்துயிர் பெற்று எழுந்தபொழுது, அவர் உடலை நாம் அடையாளம் கண்டுகொள்ளவில்லையா? நம்முடைய இதயம் ஒரு சூனியமன்று; அதில் ஆண்டவனைப்பற்றிய நினைவுகள் தங்கியிருக்கின்றன. இந்த விஷயத்தில் இவர் ஞானி அகஸ்டைன் அடிச்சுவட்டைப் பின்பற்றுகின்றார். இயற்கையாய் அமைந்துள்ள அறிவை வளமுறச் செய்ய தெய்வ ஒளியும் பாய்கின்றது. சில சான்றோர்களைத் தன் சங்கற்பத்தில் எண்ணி இத்தகைய அருளொளியை அவர்களுக்கு ஆண்டவன் நல்குகின்றான்.

ஹென்றி ஓர் இயற்றிநிலைக் கொள்கையினர் (Voluntarist). இயற்றிநிலை (சங்கற்பம்—will) வலிதா, அறிவு (reason) வலிதா என்னும் வினாவை எழுப்புகின்றார். இயற்றிநிலைதான் ஆள்கின்றது; அதற்கு அடிமையாய் நிற்பது அறிவு என்கின்றார். இயற்றிநிலைக்கு முன்பு ஓர் அடிமைபோல் அறிவு தீப்பந்தம் பிடித்துச் செல்லுகின்றது. அறிவு, ஞானத்தின் வலிமை சாக்ரடீஸ் வற்புறுத்துகின்றார். ஞானந்தான் எல்லா உணர்ச்சிகளின்மீதும் ஆட்சி புரிகின்றது என்பது அந்தச் சான்றோனின் கருத்தாகும். ஞானத்தின் ஆற்றலை சங்கரர் போற்றுகின்றார். இந்த ஞானம் புத்தக வாயிலாகத் தரப்பட்ட ஞானமன்று; நூல் அறிவு அன்று. ஆண்டவனை நேரில் கண்ட ஞானமாகும். ஞானி தாமஸ் அக்யுனஸ் அறிவுக்குத்தான் தனிச் சிறப்பைத் தருகின்றார்; ஞானம் கலந்த அன்புதான் ஆண்டவன் கோயிலுக்குத் தகுந்த பாதை அமைக்கும் என்றும் கருதுகின்றார். ஞானவொளி எழாவிட்டால் வெறும் இயற்றிநிலை என் செயும்? ஞானமும் வேண்டும், இயற்றிநிலையும் தேவை என்பதை நாம் மறக்கக்கூடாது. ஆனால், இயற்றிநிலையைத்தான் ஹென்றி அழுத்திப் பேசுகின்றார். இப் பொருளில் டன்ஸ் ஸ்கோடஸ் ஹென்றியின் அடிச்சுவட்டைப் பின்பற்றுகின்றார். ஹென்றி, ஞானி தாமஸ் கொள்கையை முற்றிலும் சார்ந்தவரல்லர்; ஞானி அகஸ்டைனையும் முற்றிலும் ஏற்றுக்கொள்ளவில்லை. இயற்றி நிலை (will) கொண்டுதான் கடவுள் எல்லாவற்றையும் படைக்கின்றார்; அவருடைய அகண்ட அறிவினாலன்று என்று இவர் சாற்றுகின்றது சிந்திப்பதற்குரியது.

இவர் ஒரு பன்னலத் திரட்டாளர் (Eclectic) என்று கூறினால், மிகையாகாது. இருப்பிற்கும் (existence) உள்ளியலுக்கும் (essence) இவர் தரும் கருத்து, இறந்தாலும் மாயாமலிருக்கிற உடல் தத்துவம், இனவகையில் இருதிருப்படிவங்களுடைமை (Dimorphism) என்னும் கொள்கை, தனிப்பட்ட ஆண்டவன் அருளொளி, உளவாழ்வில் இயற்றிநிலையின் ஆட்சி—இவை போன்ற தத்துவங்கள் இடைக்காலத்து வித்தகர்களின் சிந்தையைக் கவர்ந்தன.

# 23. டன்ஸ் ஸ்கோடஸ்

## (Duns Scotus)

ஒரு தத்துவ வித்தகரின் வாழ்க்கை வரலாறு நமக்கு அவருடைய குணச் சித்திரத்தையும், அவருடைய கருத்தின் அமைப்பையும் நன்கு புலப்படுத்தாமற் போகாது. அவருடைய விருப்பு வெறுப்பு, காய்தல் உவத்தல், அவர் கொண்ட இலட்சியங்கள், அவருடைய பெருமுயற்சிகள் இவையே அவருடைய பண்புருவைச் (character) சமைக்கத் துணைபுரிகின்றன.

இவருடைய வாழ்க்கை வரலாறு காலப் பனிமூட்டத்தில் மறைந்து கிடப்பது நம்மைத் துயரில் ஆழ்த்துகின்றது. பெரும்பாலும் சான்றோர்களின் வரலாறுகள் கிடைப்பதில்லை; ஆனால், அவர்களைச் சுற்றிக் கற்பனைக் கதைகள் எழுந்துவிடுகின்றன.

டன்ஸ் ஸ்கோடஸ் பிறந்த இடமும் பிறந்த நாளும் குறித்து நமக்குக் கிடைத்த பட்டியல், 1265, 1274, 1245—இத்தகைய ஆண்டுகளை அவர் தோன்றிய ஆண்டுகளாகக் குறிப்பிடுகின்றது.

உல்ஃப் (Wulf) என்னும் தத்துவ ஆசிரியர் தம்முடைய இடைக்காலத்துத் தத்துவ வரலாற்று நூலில் ஸ்காட்லாந்தில் இவர் பிறந்ததாகக் குறிக்கின்றார்; பிறந்த ஆண்டைப்பற்றி இவரும் வரையறுத்துக் கூறவில்லை. 1266ஆம் ஆண்டிலேயே, தம் இளம்பிராயத்தே, ஃபிரான்ஸிஸ் மடத்தை இவர் சேர்ந்துவிட்டதாகத் தெரியவருகின்றது. கேம்பிரிட்ஜ் பல்கலைக்கழகத்திலும் ஆக்ஸ்ஃபோர்டு பல்கலைக்கழகத்திலும் இவர் கல்வி பயின்றார். பல தடவை பாரிஸ் மாநகரத்திற்குச் சென்றதாக நாம் அறிகின்றோம். ஸ்பெயின் நாட்டைச் சார்ந்த 'Ganselvus' என்னும் பேராசிரியரிடம் பாரிஸில் இவர் பாடங் கேட்டார்; 1308ஆம் ஆண்டு இவர் உயிர்நீத்தார் என்று இயம்புகின்றார்கள். எந்தெந்த ஆண்டுகளில் இவரால் நூல்கள் எழுதப்பட்டுவந்தன என்பதற்குத் தகுந்த காலக்கணிப்பு முறை நூல்—காலப்பட்டியல் வரிசை (chronology) கிடைக்கவில்லை. இவர் இயற்றிய நூல்களும் உண்டு; இவர்மீது ஏற்றிய நூல்

களும் உண்டு; எங்கே இவருடைய உண்மையான கருத்துகள் ஒளிவிட்டுத் திகழ்கின்றன என்று திண்ணமாய் இயம்புவதற்கு இடமில்லாமலும் போகக் கூடும்.

இவர் எதையும் நுணுக்கமாய் ஆராயும் அறிவாற்றல் படைத்தவர், தம் சமகாலத்தவர்களான ஞானி தாமஸ் அக்யுனஸ், ரோஜர் பேக்கன் முதலியோர்களைத் தாக்கிப் பேசியிருக்கிறார். ஆனால், பெயர்களைக் குறிக்கவில்லை. எனினும், இவர் இறங்கிய வாதங்கள் வாயிலாக யார்யாரை இவர் மனத்தில் வைத்துப் பேசியிருக்கிறார் என்பது நன்கு விளங்குகின்றது; பிறர் நூல்களில் குற்றங் கண்டாலும், இணக்கநயப் பண்போடு அதை எடுத்தோதுகின்றார். தம் காலத்துத் தத்துவத்தை விளக்கக்கூடிய மாபெருஞ் சுரங்கம்போல் இவருடைய நூல்கள் திகழ்கின்றன. இவர் புலமைக் கொள்கை மரபின் இயல்பை அறிந்தவர் என்பது திண்ணம். பல புலமைக் கொள்கையினரை இவர் தாக்கினாலும், ஞானி போனவென்சுராவிடம் இவருக்கு ஒரு தனிப்பட்ட ஈடுபாடுண்டு. குற்றங் காண்பதன்பொருட்டே இவர் சொற்போர்களில் திளைப்பதில்லை. திறனாய்வுமூலமாக ஒரு புதிய அமைப்பைக கருத்துலகத்தில் நிறுவக்கூடுமா என்னும் ஆர்வந்தான் இவரை இடையறாது தூண்டிற்று. முரண்பட்ட தத்துவப் போர்களில் ஓர் ஒருமையை—ஒரு தொகுப்பு முறையைத்(synthesis) தாம் காணக்கூடுமா என்னும் முயற்சி போற்றுதற்குரியது. இவர் ஓர் இறையியல் வல்லுநர், ஒரு தத்துவ வித்தகர் என்பது யாவரும் அறிந்ததே. ஆயினும், இவருடைய நூல்களில் வடிவியல்நிலைக் கணக்கியல் (Geometry), இயக்கவியல் (Mechanics), ஒளியியல் (Optics), வான நூல் (Astronomy)—இவற்றைப்பற்றிய கருத்துகள் கோயில்கொண்டிருப்பதை நாம் உணர்கின்றோம். உரிமை வழக்குச் சட்டத்தைப் பற்றி (Civil Law) இவர் பேசுவதில்லை; திருச்சபைச் சட்டத்தைப் பற்றியே (Canon Law) அடுத்தடுத்துக் கூறுவார். இதனின்று இவருடைய சமயப் பற்று நன்கு விளங்குகின்றது. இந்தப் பொருளில் இவர் ரோஜர் பேக்கனை ஒக்கின்றார் என்று ஓர் ஆசிரியர் உரைக்கின்றார்.

இடைக்காலத்தில் அறிஞர்கள் பெரும்பாலும் சமயச் சழக்குகள், வாதங்கள் இவற்றில்தாம் திளைத்தார்கள். தத்துவத்திற்கும் இறையியலுக்கும் பிளவு ஏற்படவில்லை. ஒன்று மற்றொன்றிற்குத் துணைபுரிகின்றது. திடநம்பிக்கைக்கும் (faith) பகுத்தறிவுக்கும் (reason) போராட்டம் இருந்துவந்தது. காண்டர்பெரி ஆர்ச்பிஷப்பான ஆன்ஸெல்ம் (Anselm) திடநம்பிக்கையின் ஆட்சியை வற்புறுத்துகிறார். நம்பிக்கைமூலந்தான் நமக்கு அறிவே ஏற்படும் என்கிறார். பகுத்தறிவுக்கும் நம்பிக்கைக்கும் முரண்பாடு ஏற்படுமாயின், நம்பிக்கை நவில்வதையே நாம் உண்மையெனத் தேர்தல் வேண்டும். இந்த அளவில் புலமைக் கொள்கைக்குத் தந்தையாய் ஆன்ஸெல்ம் திகழ்கின்றார். நம்பிக்கைக்குப் பகுத்தறிவு ஓர் ஏவற்பெண்ணாய்த்தான் இருக்கிறது.

ஞானி போனவென்சுரா ஓர் அனுபூதிச் செல்வர்; எல்லா அறிவுச் செல்வங்களும் ஆண்டவன் அருளொளியைப் பொறுத்திருக்கின்றன என்று இயம்பி விட்டார். தத்துவத்தை இறையியலின் தளைகளிலிருந்து விடுவிக்க வேண்டுமென்னும் முயற்சி ஒரு வெற்றிச் சின்னமெனச் சொல்லவேண்டும். இத்தகைய வெற்றி ஞானி தாமஸ் அக்யுனஸைச் சார்ந்ததாகும்.

தத்துவ இயலுக்கும் இறையியலுக்கும் உள்ள தொடர்பை டன்ஸ் ஸ்கோடஸ் ஆராய்கின்றார். சில அமிசங்களில் ஞானி தாமஸ் அக்யுனஸிடமிருந்து டன்ஸ் ஸ்கோடஸ் மாறுபட்டாலும், பெரும்பாலான பொருள்களில் அக்யுனஸை ஒத்துச் செல்கின்றார்.

மண்ணகத்திலுள்ள மனிதன் இயற்கையாய் அமைந்துள்ள தன்னுடைய அறிவைக்கொண்டு இறைவனின் இயலை அறியமுடியுமா? அவனுக்கு இந்தப் புலன் அறிவைக் கடந்த ஒன்று தேவையா என்னும் வினாவை எழுப்புகின்றார். இயற்கை அறிவைக்கொண்டு அறியமுடியாத ஒன்றைப் புலன் கடந்த நெறி ஒன்றால்தான் ஓரமுடியும் என்னும் முடிவுக்கு இச் சான்றோன் வந்துவிட்டார். ஒரு குறிக்கோளை நிறைவேற்றுவதற்கே மனிதன் ஒரு கருவியாயிருக்கிறான். மூவிதமான அறிவு இவனுக்குத் தேவையாயிருக்கவேண்டும். தன்னுடைய குறிக்கோளை எப்படி அடையக்கூடும் என்னும் துறையில் இவன் முதன் முதலாக இறங்கவேண்டும். அதைத் தொடர்ந்து நிறைவேற்றக்கூடிய துணைப் பொருளைத் தேடவேண்டும். அந்தக் குறிக்கோளை நிறைவேற்றும் முறையில் துணைப்பொருள் போதுமா என்பதற்கு உத்தரவாதம் அல்லது பொறுப்புறுதி வேண்டுமன்றோ? பேரின்பம்தான் மனிதனுடைய இறுதியான குறிக்கோளாகும். இந்தப் பேரின்பம் மனிதனுடைய தகுதியைக் கருதி ஆண்டவனுடைய அருளால் கிடைக்கக்கூடிய பேறேயாகும். இக் காரணம் பற்றியே தன்னுடைய அமைவு நோக்கத்தை நிறைவேற்றவேண்டுமாயின், ஏதோ ஓர் அளவுக்கு இவனுக்குப் புலன் கடந்த அறிவு வேண்டுமென்பது திண்ணம்.

கடவுளின் இயல்பை உள்ளபடி அறிதல் இயலாத செயலாம். அது சிந்தையையும் சொல்லையும் கடந்ததன்றோ? அவரை அறியவேண்டுமாயின், அவருடைய அருள் வெளிப்பாட்டால்தான் (Revelation) நாம் ஓரமுடியும்.

இறையியல் அதன் மூலத்திலும் சரி, அதன் உட்பொருளிலும் சரி புலன் கடந்தது. இறையியல் அடிப்படைக் கொள்கையிலிருந்து முறையினாலும் பொருளினாலும் வேறுபட்டு நிற்கின்றது என்பதை மறக்கக்கூடாது என்று ஸ்கோடஸ் இயம்புகின்றார். இறையியலைச் செயல்முறை இயல் (Practical science) என்று டன்ஸ் ஸ்கோடஸ் உரைக்கின்றார். இத்தகைய சொற்றொடரை ரோஜர் பேக்கனிடமும் காண்கின்றோம். செயலியல் என்று இறையியலுக்கு நாமம் சூட்டினதன் காரணம் இதுவே. மனிதனுடைய குறிக்கோள் கடவுளைக் காண்பதுமட்டுமன்று; அவன்பால் பக்தி வைப்பதுமாகும். கடவுளைப் புறச்சான்றுகொண்டு மெய்ப்பிக்கமுடியாது. ஓர் அனுபவம்மூலந்தான் அவருடைய

அருளை நாம் உணரமுடியும். இறையியல் இயற்றிநிலையை—சங்கற்பத்தை—மனத்திண்மையை (will) வலியுறுத்துகின்றது; வெறும் அறிவையன்று. ஆண்டவனைக் காணவேண்டும் என்னும் ஆர்வம் உண்ணுஞ் சோறும் பருகு நீருமாய்விட வேண்டும். ரோஜர் பேக்கனைப்போலவே இவரும் இயற்றிநிலைக் கொள்கையர் (Voluntarist) என்பதில் எள்ளளவும் ஐயமில்லை. இறையியலில் விவாதத்திற்கு இடமில்லாமலில்லை. ஆனால், அந்த விவாதம் அனுபூதிச் செல்வர்களின் திருமொழிகளை ஒட்டியதாயிருக்கும். கடந்தநிலைத் தத்துவ உலகை, அறிவாய்வு (criticism of pure reason) படையெடுக்கக்கூடாது என்று டன்ஸ் ஸ்கோடஸ் கூறுமுகத்தால் இவர் கான்டிற்கு ஒரு விடிவெள்ளியாய்த் திகழ்கின்றார் என்று இயம்புவாருமுண்டு. இது அத்தனை பொருத்தமன்று. படைப்பிலிருந்து, உயிருருவிலிருந்து படைப்புப் பொருளை நாம் ஊகிக்க முடிகிறதன்றோ! எந்த அடிப்படைத் தத்துவத்தை வைத்துக்கொண்டும் கடவுளின் இருப்பை மெய்ப்பிக்க முடியாது என்று கான்ட் மொழிகின்றார். அந்த அளவுக்கு டன்ஸ் ஸ்கோடஸ் செல்லவில்லை; ஞானி தாமஸ் அக்யுனஸைப்போலவே அறிவுக்கு ஓர் இடத்தை அளிக்கின்றார். பொதுவான மூலவுருக் கருத்துகள் ஆண்டவனிடம் இருப்பது போல ஆன்மாவிலும் இருக்கின்றன என்பதைப் புலமைக் கொள்கையினர் மறுக்கிறதில்லை.

பிரகிருதியைப்பற்றி ஞானி தாமஸ் அக்யுனஸ் தருகிற கருத்துகளைப்பற்றிச் சிந்தித்துப் பார்ப்போம். பிரகிருதி இன்னதென்று இயம்புவதற்கு முடியாத நிலையில் காட்சி அளிக்கின்றது. உருவம் கரந்து நில்லாததாக அதைக் கருத முடியாது. எல்லாம் வல்ல இறைவனாலேயும் வெறும் உருவமற்ற பிரகிருதியைப் (formless matter) படைத்துவிடமுடியாது என்று அக்யுனஸ் மொழிகின்றார்; மேலும், இந்தப் பிரகிருதிதான் ஆன்மாவுக்குத் தனிப்பட்ட வடிவத்தைத் தருகின்றது என்று கூறுகின்றார். ஞானி தாமஸ் அக்யுனஸ் மொழிந்ததை ஏற்றுக்கொண்டாலும், உருவத்தைத் தன்னிடத்தே கரந்தில்லாத பிரகிருதியும் உண்டென்று டன்ஸ் ஸ்கோடஸ் கருதுகின்றார். எல்லா உயிருருக்களிலும் பிரகிருதி ஒன்றே என்று கூறும் அவிஸ்பிரான் (Avicebron) அடிச்சுவட்டைப் பின்பற்றுகின்றார். அலக்ஸாண்டரும் ரோஜர் பேக்கனும் ஒரே பிரகிருதிவாதத்தை ஏற்கவில்லை; மூன்று விதமான பிரகிருதிகளைக் குறிக்கின்றார்கள்: (1) சலனத்திற்கும் மாறுதலுக்கும் உடன்படுவது; (2) பிரகிருதி சலனத்திற்குமட்டும் உட்படுவது; (3) மாறுதலுக்கு உட்படாதது; சான்றாக விண்ணிலுள்ள கோளங்கள்.

ஞானி தாமஸ் அக்யுனஸ் கொண்ட கருத்தை டன்ஸ் ஸ்கோடஸ் முற்றிலும் ஏற்கவில்லை என்று முன்னமேயே மொழிந்துள்ளோம். ஆன்மாவுக்கும் உடலுக்கும் உள்ள சம்பந்தம், பிரகிருதிக்கும் அதற்கு உருக்கொடுக்கும் தத்துவத்திற்கும் (matter and form) உள்ளது போல என்று சொல்லுகிறார். கல்லும் சிலையும் என்ற முறையில் இதைக் கருதக்கூடாது. ஆன்மாவையும் உடலையும் ஒன்றாகக் கொள்ளவேண்டுமென்று கருதினால், உடல் அழிந்துபோனால் ஆன்மாவின் கதி என்ன என்னும் ஒரு வினா எழத்தானே செய்யும். இது ஆன்மாவின் தனித்த

அமரநிலையை வாதிக்கும் இடைக்காலத்துத் தத்துவ வித்தகர்களுக்கு என்ன சமாதானம் அளிக்கும்? அரிஸ்டாட்டில் கொண்ட 'பிரகிருதி உருவம்' என்னும் கொள்கையைப் பின்பற்றுகிற ஞானி தாமஸ் அக்யுனஸைத் தாக்கிப் பேசுகின்றார் டன்ஸ் ஸ்கோடஸ். உடல் அழிந்தவுடன் எல்லாம் பிரகிருதியில் ஒன்றாய்ப் போய்விடும் என்ற அளவிற்குப் போய்விடும் என்று கருத இடமுண்டு என்று இவர் அஞ்சுகின்றார். இடைக்காலத்துச் சமயிகள், பிளேட்டோ கருதுவதுபோல, ஆன்மா உடலிலிருந்து பிரிந்து நிற்கும் தனிப்பட்ட ஒரு தத்துவம் என்று கருது கின்றார்கள். 'பிரகிருதி வடிவம்' என்னும் கொள்கை, அரிஸ்டாட்டில் கொண்ட கொள்கை இவர்களுக்கு ஏற்றதன்று. அரிஸ்டாட்டில் புலப்படுத்திய தத்துவமாம் அத்திவாரத்தின்மீது ஞானி தாமஸ் அக்யுனஸ் தம் கிறித்துவக் கொள்கையாம் கோயிலை நிறுவினால், அது பொருத்தமாயிருக்குமோ என்று டன்ஸ் ஸ்கோடஸ் வினவுகின்றார். ஞானி தாமஸ் அக்யுனஸ், உலகம் நித்தியமானது என்பதை வலியுறுத்திப் பேசவில்லை; ஆனால், அதை மறுக்கமுடியாதென்றும் கூறுகிறார்.

டன்ஸ் ஸ்கோடஸ் அடிப்படைத் தத்துவம் இதுதான். இவர், பன்மைக் கொள்கையை (Pluralism) வற்புறுத்துகிறார். தனிநிலையான ஒன்றுதான் (individual) இருக்கின்றது. இந்தத் தனித்தன்மை வாய்ந்த ஒன்றைத்தான் அடிப்படைத் தத்துவம் ஆராய்ச்சி செய்கின்றது. ஆண்டவன்தான் சிகரம்; தனித் தன்மைவாய்ந்த உயிருருக்கள் அவற்றின் இயல்புக்கு ஏற்றவாறு படிநிலையாக அமைந்த ஓர் அமைப்பில் இடம்பெறுகின்றன. தகுந்த உயிருருவின் ஒருமையை ஏற்றுக்கொண்டாலும், பொதுமையையும் இவர் சுட்டித்தான் இயம்புகின்றார். ஒவ்வொரு மனிதனிடமும் தனித்தன்மை இருந்தபோதிலும், பொதுமையும் ஒன்று இருக்கின்றதன்றோ! அது யாதெனின், மனித இயல்பே (humanity). இந்த நிலையில் டன்ஸ் ஸ்கோடஸ், பொதுமைக்கு அல்லது கருத்துகளுக்குத் தனி இருப்பு (realism) உண்டென்று கூறும் கொள்கைக்கு ஆதரவு அளிக்கின்றார் என்பது நன்கு புலனாகின்றது. கருத்துண்மைத் தத்துவத்தை இவர் பேணு கின்றார் என்பதும் உண்மையே.

ஆன்மாவைப்பற்றிய சர்ச்சை இங்கு நோக்குதற்குரியது. பல்கூறுகளடங்கிய திரள் என்று அதை ரிச்சர்ட் என்னும் தத்துவ வித்தகர் குறிப்பிடுகின்றார். அதில் அன்னமயம், பிராணமயம், மனோமயம் அல்லது விஞ்ஞானமயம்—இம் மூன்றும் அடங்கியிருக்கின்றன.

ஸ்கோடஸ் இக் கருத்தை ஏற்கவில்லை. அறிவுமயும் என்று சொல்லி விட்டால், அதில் இவ்விரண்டும் உறைகின்றனவே. சிக்கனம் வேண்டாமா? மிகுதியாயுள்ளதைக் கழித்துவிடுதல்தானே நலம்? 'ஒக்ஹம் மயிர்வினைஞரின் ரேஸர்' என்று இக் கத்திக்குப் பெயர் சூட்டிவிட்டார்கள்.

மனித உள்ளம் ஒரு சூனியமன்று. அதில் பண்டைய நினைவுகள், கருத்துகள் துயின்றுகொண்டிருக்கின்றன என்று டன்ஸ் ஸ்கோடஸ் கூறுகின்றார். ஞானி, தாமஸ் அக்யுனஸோ, லாக்கைப்போலவே மனம் ஒரு சூனியம்; ஐம்புலன்கள்

வாயிலாகத்தான் கருத்துகளும் அனுபவங்களும் நிகழ்கின்றன என்று உரைக்கின்றார். 'பிரகிருதி உருவம்' என்னும் தத்துவத்தை டன்ஸ் ஸ்கோடஸ் ஆமோதித்தாலும், உருவந்தான் பிரகிருதி, பிரகிருதிதான் உருவம்; அதாவது, உருவம் கரந்துள்ள பிரகிருதி ஒன்றுதான் என்பதை ஒப்புக்கொள்ளவில்லை.

ஸ்கோடஸ் தேர்ந்த உண்மையியலைக் (Ontology) காண்போம். மாறுந்தன்மை (contingency) இருக்குமானால், மாறாத ஒரு பரம்பொருள் இருக்கத்தானே செய்யும். பூரணமில்லாத ஒன்றைக் காணுங்கால், பூரணத்தை—முழு நிறைவைத்தான் நம் சிந்தை நாடும். எல்லாம் ஆண்டவனிடத்தில் அடங்கியிருக்கின்றன என்பதை விளக்க ஓர் ஒப்புமை சார்ந்த உவமையைத் தருகின்றார்கள். பேரினத்தில் சிற்றினம் அடங்குவதுபோல என்று இயம்பினால், அதை அப்படியே எடுத்துக்கொள்ளக்கூடாது.

ஆண்டவனுடைய அகண்டாகார இயல்பும், எல்லாம் வல்ல சக்தியும், எல்லா அறிவும் சொற்பதங் கடந்தன. கடந்த நிலையை வற்புறுத்தினால், அறியொணாக் கொள்கையைச் (Agnosticism) சுட்டுவதாகும். கடவுளுக்கு இது அல்ல, அது அல்ல என்னும் இலக்கணத்தை வகுக்காமலேயே, மனித அறிவுக்கு ஓரளவு ஆண்டவனுடைய இயல்பு விளங்குமென்கிறார்.

எல்லாம் ஆண்டவனிடத்தில் அடங்கியிருக்கின்றன என்று அவர் கூறுகின்றதை வைத்துக்கொண்டு, ஸ்பினோஸாவைப் (Spinoza) போல் இவரும் அனைத்திறைக் கொள்கையர் என்று சாற்றுவாரும் உண்டு. ஆனால், டன்ஸ் ஸ்கோடஸ் தம்முடைய தத்துவத்தை மிகத் தெளிவாகக் கூறிவிட்டார். வரம்புள்ள மனிதனும் எல்லை கடந்த கடவுளும் ஒன்று என்று கூறவே முடியாதென்று உரைத்திருக்கிறார்.

நான்கு காரணங்களை இவர் சுட்டுகின்றார். அறுதி செய்யும் காரணம் (final cause), நிமித்த காரணம், அல்லது பயன் விளைவிக்கும்காரணம் (efficient cause), வினைமுறைக் காரணம் (formal cause), உபாதான காரணம் அல்லது ஆக்கப் பொருட் காரணம் (material cause)—இவை யாவுந்தாம் ஒரு படைப்புக்குக் காரணமாய்த் திகழ்கின்றன. இவற்றைப்பற்றி அரிஸ்டாட்டிலும் கூறியுள்ளதை நாம் அறிவோம்.

சலனத்தைக்கொண்டு இந்தச் சலனத்தை உந்துகின்ற சலிக்காத ஒன்று இருக்கவேண்டும் என்று அரிஸ்டாட்டில் கூறினதைத்தான் ஞானி தாமஸ் அக்யுனஸ் மொழிகின்றார். இக் கூற்றை டன்ஸ் ஸ்கோடஸ் ஏற்கவில்லை. தாமே சலித்துக்கொள்ளும் கோள்களும் உண்டு என்று இவர் இயம்புகின்றார். காரண காரிய தத்துவத்தைக்கொண்டுதான் விளக்கம் தரவேண்டும் என்று இவர் பகர்கின்றார். காரணம் கடந்த பொருள்தான் ஆண்டவனாகும். எல்லாவற்றிற்கும் காரணமாய்த் தனக்கொரு காரணமில்லாது உயர்வற உயர்ந்த பொருள்தான்

கடவுளாகும். ஞானந்தான் — அறிவுதான் ஆட்சிபுரிகின்றது என்று ஞானி தாமஸ் கூறினதை நாம் நன்கு உணர்வோம். இயற்றிநிலை — மனத்திண்மை — சங்கற்பம் பெரிதா, ஞானம் பெரிதா என்னும் வினவை இடைக்காலத்துத் தத்துவ வித்தகர்களிடம் பார்க்கின்றோம். தன் சங்கற்பத்தால்தான்—இயற்றிநிலையால்தான் ஆண்டவன் படைக்கின்றான் என்று டன்ஸ் ஸ்கோடஸ் சாற்றுகின்றார். அறிவு கலந்த அன்புதான் எல்லாவற்றையும் இயங்கும்படி செய்கின்றது என்று கூறின் ஞானி தாமஸ் அக்யுனஸ் அடிச்சுவட்டைத்தான் தாந்தே தம் 'தெய்வ மங்கல கீதத்தில்' பின்பற்றுகின்றார்; ஆண்டவனின் திடசங்கற்பத்தைத்தான் வலியுறுத்திப் பேசுகின்றார். டன்ஸ் ஸ்கோடஸ்பால் அறிவைக் காட்டிலும் சிறந்ததாய்த் திகழ்வது அவருடைய சங்கற்பந்தான் என்று இவர் கூறுவது ஆழ்ந்து சிந்திப்பதற்குரியது.

விலங்கு ஆன்மாவுக்கும் மனித ஆன்மாவுக்கும் உள்ள மாறுபாட்டை இவர் எடுத்தோதுகின்றார். விலங்கு ஆன்மா, இயற்கைக் கருவிகளால் சமைக்கப்படுகின்றது; ஆனால், மனித ஆன்மாவோ ஆண்டவனால் படைக்கப்படுகிறது. பிரகிருதியிலிருந்து எவவளவுக்கெவ்வளவு ஒன்று விலகியிருக்கின்றதோ, அவ்வளவுக்கவ்வளவு அது பூரணநிலையை அடைகின்றது. நீர் நனைக்கின்றது; தீ எரிக்கின்றது. இவைபோன்ற ஐந்து பூதங்கள் சேர்ந்து விளங்குகின்ற வெறும் பிரகிருதி, முன்னேற்ற ஏணியின் அடிப்படையில் இருக்கிறது. இதற்கு அடுத்த நிலையில் உள்ளது புல்பூண்டாகும். வெறும் சடப்பொருளாயுள்ள பிரகிருதியை விட இது சற்று உயர்ந்துள்ளது என்று கூறலாம். மரஞ்செடிகள் தம் இடங்களை விட்டு அகலாமற்போனாலும், தாமே வளரும் ஒரு சுதந்திரத்தை அவற்றில் நாம் பார்க்கின்றோம். புல்பூண்டுகளைக் காட்டிலும் விலங்கினம் சற்று உயர்ந்ததாய் இருக்கின்றது. விலங்குகள் தம் விருப்பப்படி திரிகின்றன. தமக்குத் தேவையான உணவுப் பொருள்களைத் திரட்டுகின்றன. இறுதியாய்க் காட்சி அளிக்கும் மனிதன் படைப்பின் சிகரமாய்ச் சுடர்விடுகின்றான். இவனிடத்தில் அன்னமயம், பிராணமயம் முதலியன மிளிர்கின்றன. மனிதனோ, ஆண்டவனை அடையவேண்டுமென்று விழைகின்றான். நாம் முன்பு மொழிந்தவாறு ஆண்டவன் எல்லாவற்றிற்கும் மாபெரும் உச்சியாய் — உளம், உரை, செயல் கடந்ததாய்—உயர்வற உயர்நலம் உடையதாய் என்ஞான்றும் சுடர்விட்டுக்கொண்டேயிருக்கின்றது. ஸ்ரீ அரவிந்தர் போற்றும் பரிணாமவாதத்தை இவர் சித்திரிக்கிறார் போலும்!

டன்ஸ் ஸ்கோடஸ் பன்னலத் திரட்டினராய்க் (Ecelectic) காட்சி அளிக்கின்றார். பிளேட்டோ கொண்ட கருத்துகள், அரிஸ்டாட்டில் வகுத்த முறைகள், ஞானி அகஸ்டைன் அருளிய மொழிகள், ஞானி தாமஸ் அக்யுனஸ் தேர்ந்த உண்மைகள்—இவை யாவும் டன்ஸ் ஸ்கோடஸ் நூல்களில் கோயில் கொண்டுள்ளன.

டன்ஸ் ஸ்கோடஸ் ஒரு தத்துவ வித்தகராயும் இறையியல் வல்லுநராயும் திகழ்ந்தாலும், விஞ்ஞானத்துறையில் அவருக்கு ஓர் ஆர்வம் இருந்தது என்பதை

அவருடைய நூல்கள் புலப்படுத்துகின்றன. இடம், காலம் (Space and time) இவற்றைப்பற்றிய ஆராய்ச்சிகளில் டன்ஸ் ஸ்கோடஸ் இறங்குகின்றார். விஞ்ஞானத் துறையில் இவருக்கு வழிகாட்டியவர் ரோஜர் பேக்கன் என்று இயம்பலாம்.

இடமும் காலமும் தற்காலத்து விஞ்ஞானிகளின் உளங்களை ஈர்க்கின்றன ஐன்ஸ்டின் (Einstein) இவற்றைத் துருவி ஆராய்ந்துள்ளார். காண்டும் இடம், காலம்—இவற்றின் இயல்பைச் சித்திரிக்கிறார்.

இடமும் காலமும் அகநிலையைப் (subjective) பொறுத்ததா, அல்லது புற நிலையைப் பொறுத்ததா என்னும் சொற்போர் முடிந்தபாடில்லை. இடம் என்பதை ஒரு பொருளின் சலனத்தைக்கொண்டு ஊகிக்கவேண்டியிருக்கிறது. அதன் இயல்பு அசைவற்றிருக்கும் நிலைதான். ஆண்டவன் படைப்புக்கு முன்பு வான வெளியே இல்லை என்று கருதுகின்றார். இத்தகைய கருத்து தற்கால விஞ்ஞானி களின் திறனாய்வு அம்புகளுக்கு இலக்காய்விடும்.

இடத்தை எண்ணிறந்த கூறுகளாய்ப் பிரிக்க இயலும் என்று டன்ஸ் ஸ்கோடஸ் உரைக்கின்றார்; ஆனால், கூறிடப்பட்ட இடம் ஒவ்வொன்றிலும் ஏதோ ஒரு பொருள் திகழத்தான் செய்யும். வெறும் பாழ் (void) என்பது ஒன்றில்லை. அணுக்கள், பாழ் என்று இவற்றின் இடையே கூறும் கொள்கையை இவர் ஆமோதிக்கவில்லை. இந்தத் துறையில் அரிஸ்டாட்டிலின் அடிச்சுவட்டைத்தான் இவர் பின்பற்றுகின்றார்.

சலனத்தை அளக்கின்ற நிறைகோலாகக் காலம் காட்சி அளிக்கின்றது என்று இவர் நவில்கின்றார். ஞானி அகஸ்டைன் காலத்தைப்பற்றிக் கொண்ட கருத்து அகநிலையாகும் என்றும், இது தாம் கொண்ட கருத்திற்கு முரணானது என்றும் மொழிகின்றார். நம்மிடையே உள்ள தருக்கவாதிகள், காலத்தை ஒரு பொருளெனக் கொள்வர்.

காலமும், இடத்தைப்போலவே புறநிலையாகும் (objective and independent of mind). டன்ஸ் ஸ்கோடஸ், ஒழுக்க இயலைப்பற்றியும் அரசியல் தத்துவத்தைப் பற்றியும் தம்முடைய அறிவுக்கேற்றவாறு விளக்கம் தந்துள்ளார். ஞானி தாமஸ் அக்யுனஸ் ஆராய்ந்ததுபோல இவர் நோக்கவில்லை என்பதை மறுக்கமுடியாது; அதற்குக் காரணம், ஒழுக்க இயலைப்பற்றி அத்துணை ஆர்வம் காட்டாததே. இவர் ஒரு தத்துவ வித்தகர்; இறையியல் வல்லுநர்.

திருச்சபையார் (Church) வகுத்த நெறியிலேதான் இடைக்காலத்து மக்கள் சென்றார்கள். அதை எதிர்த்துப் போராடவில்லை. இயற்றிநிலைதான்—சங்கற் பந்தான் ஒழுக்க இயலுக்கு மூலம் என்று இவர் மொழிவது, வில்லியம் ஜேம்ஸ் (William James) என்னும் உளவியல் ஆசிரியரை நினைவூட்டுகின்றது. இயற்றி நிலையும் (சங்கற்பமும்) சுதந்திரமும் கைகோத்து நிற்கின்றன. மனத்தின்

நோக்கந்தான் ஒரு செயலை அளக்கக்கூடிய கருவியாய்த் திகழ்கின்றது. புறச் செயலை வைத்து ஒழுக்கத்தை அளவிடமுடியாது என்பது திண்ணம். ஆண்டவன் அருளைப் பெறுதற்பொருட்டுக் காலத்தால் செய்யும் உதவிதான் சிறந்த ஒழுக்கச் செயலாகும். அறிவு கட்டளையிட்டாலும், அதை நிறைவேற்றுவது இயற்றி நிலையைப் பொறுத்ததாய் இருக்கிறது. அகச்சான்று பகர்கின்றது அறிவு ; அந்த அகச்சான்றின் ஒளியை அவிந்துபோகும்படி இயற்றிநிலை (will) செய்துவிடு மன்றோ ?

மிதம் (temperance), மனவுரம்—இடுக்கண் அழியாமை (fortitude), நீதி நேர்மை (justice)—இவைதாம் நாம் போற்றுதற்குரிய சீரிய குணங்க ளாகும். மிதம் என்பது எல்லாவற்றிலும் இருக்கவேண்டும். ஊண் விஷயத்தில் மிதம் இருக்கவேண்டும். ஊண் விஷயத்தில் மிதம் இருக்கும் ; ஆனால், செல்வம் திரட்டுவதிலும், புகழை விரும்புவதிலும், இடையறாது நூல்களைப் பயிலுவதிலும் மிதம் இருக்கிறதில்லை.

ஆண்டவனோடு சேர்ந்துறைந்து அவன் நல்கும் பேரின்பத்தைப் பருகுவதற்குப் பேரறிவும், மனத்திண்மையும், இயற்றிநிலையும் சேர்ந்து துணைபுரியவேண்டும். ஆனால், இறுதி வெற்றி இயற்றிநிலைக்குத்தான் என்று டன்ஸ் ஸ்கோடஸ் உரைக் கின்றார். கடவுளின் சங்கற்பச் சக்தியைத்தான் டன்ஸ் ஸ்கோடஸ் வியந்து மொழிகின்றார். ஆனால், அவனுடைய சங்கற்பம் தீதான ஒன்றை வகுக்காது. ஏனெனில், அவன் அருளே வடிவமானவன் ; பெருநலமே அவன் குறிக்கோள். ஆண்டவன் அருளாட்சியில் தீமை இருக்கிறதே, அதற்கு என்ன காரணம் கூற முடியும் ? தீமை இல்லை ; குறைநிலைதான் (privation) என்று அதற்குச் சமா தானம் நல்குவார்கள்.

சட்டம் வகுப்போன் தன்னுடைய அறிவுக்கேற்றவாறு நடந்துகொள்ள வேண்டும். அவன் தகுதியான ஓர் அதிகாரத்தைப் பெற்றிருக்கவேண்டும். இயற்கையாய்ச் சமைந்த அதிகாரம் ஒன்றிருக்கிறது. அது யாதெனில், பெற்றோர்கள் தங்கள் சேய்பால் செலுத்தும் அதிகாரமே. அரசியல் சம்பந்தமான அதிகாரமும் உண்டு. ஒரு வேந்தனிடம் அத்தகைய அதிகாரம் திகழலாம் ; அல்லது சமூகத்திற்கே அது உரியதாயிருக்கவுங்கூடும். எந்த முறையானாலுஞ் சரி, அதிகாரம் என்பது மக்களிடமிருந்தே—ஆளப்படுபவர்களிடமிருந்தே எழுகின்றது. இதை நோக்குமிடத்து, சமூக ஒப்புநெறிக்கு (Social Contract)—ரூஸோ கண்ட சமூக ஒப்புநெறிக்கு—இங்கேயே வித்து இருக்கிறது என்று கூறலாம். ஏதோ ஒரு நெருக்கடியில் சமூக நெறி தோன்றவில்லை. மனிதர்கள் சேர்ந்து வாழும் இயல்பினர்கள் என்று ஞானி தாமஸ் அக்யுனஸ் மொழிந்தது போலவே இவரும் இயம்புகின்றார்.

சொத்துரிமை பகுத்தறிவால் விளைந்தது என்கிறார். இதன் மூலத்தை இவர் சுட்டவில்லை. அடிமைத் தத்துவத்தை இவர் ஏற்கின்றார். இது நேர்மைதான்

என்று செப்புகின்றார். வேந்தன், தான் கைப்பற்றியவர்களை அடிமைகளாய் நடத்துகின்றான். அவர்களை மாய்க்காது இரக்கம் காட்டுகின்றான். அக் காரணம் பற்றியே அவனுக்கு அவர்கள் செய்ந்நன்றி உள்ளவர்களாய் இருக்கவேண்டும். டன்ஸ் ஸ்கோடஸ் கொண்ட கொள்கை சற்று விரிவான பண்பாடுடையதாயிருக்கிறது. ஞானி தாமஸ் அக்யுனஸூம் ஞானி அகஸ்டைனும் அடிமைத்தனம் பாவத்தால் விளைந்தது என்று கூறுகின்றார்கள். ஆனால், டன்ஸ் ஸ்கோடஸ், ஞானி அகஸ்டைன் மொழிந்ததுபோலவே சமூகத்தையும் (society) அரசியலையும் (politics) பிரிக்கின்றார். சேர்ந்து வாழும் இயல்புடையவன் மனிதன். ஆண்டவன் கட்டளைப்படி அவன் வாழ்ந்துவந்தான். ஒருவரும் அவன்மீது ஆட்சிபுரியவில்லை. ஆண்டவனிடமிருந்து வேந்தர்கள் அதிகாரம் பெறவில்லை என்று கூறுமுகத்தால், ஞானி அகஸ்டைனின் கொள்கையை இவர் ஏற்கவில்லை என்று தெரிகின்றது. கடவுளிலிருந்து வேந்தர்கள் அதிகாரத்தைப் பெறவில்லை; சமூக ஒப்புநெறி மூலந்தான் இவர்கள் பெறுகின்றார்கள் என்று உரைக்கின்றார். ஆனால், தெய்வ நெறிக்கு எல்லாம் கீழ்ப்பட்டு நடக்கவேண்டும் என்பதே ஸ்கோடஸின் கருத்தாகும்.

பிளேட்டோ கொண்ட சமுதாயப் பொதுவுடைமையை இவர் ஏற்கவில்லை. சொத்துரிமை உண்டு என்று உரைக்கும் அரிஸ்டாட்டிலை இவர் பின்பற்றுகின்றார்.

பொருளாதார இயலில் இவர் கண்ட தத்துவம் போற்றுதற்குரியது. மிகுந்த விலைக்கு, அளவு கடந்த விலைக்கு விற்கும் வியாபாரிகளை இவர் குறை கூறுகின்றார். தாம் பாடுபடுகிறதற்குற்ற பணத்தைமட்டும் பெறலாம்; ஏனெனில், அவர்கள் சமூக நலத்திற்காகப் பாடுபடுகின்றார்களல்லவா ? நேர்மையான விலை என்று இப்பொழுது பேசுகிறோமே, அது செயல்முறையில் அக் காலத்தில் இருந்தது.

எல்லாத் துறைகளிலும் புகுந்து, தாம் கண்ட உண்மைகளை உரைத்த சான்றோனுக்கு, உலகம் கடமைப்பட்டுத்தான் நிற்கின்றது.

# 24. ஒக்ஹம் (Ockham)

டன்ஸ் ஸ்கோடஸின் சீடரான ஒக்ஹம் கண்ட தத்துவத்தை நாம் ஆராயக் கடமைப்பட்டுள்ளோம். இங்கிலாந்திலுள்ள ஸர்ரே (Surrey) வட்டத்தி லுள்ள ஒக்ஹம் என்னும் ஊரில் இவர் பிறந்த காரணத்தால், இவருக்கு ஒக்ஹம் என்னும் பெயர் சூட்டப்பட்டது. ஒக்ஹமைச் சார்ந்த வில்லியம் (William of Ockham) என்று கூறுவார்கள். இந்த இடத்திற்கும் இவருக்கும் யாதொரு தொடர்பும் இல்லை; இவரை வில்லியம் ஒக்ஹம் என்றே அழைக்கவேண்டும் என்று உரைப்பர் வேறு சிலர். இவர் பிறந்த ஆண்டு திண்ணமாகத் தெரியவில்லை. 1280, 1290, 1300 இந்த ஆண்டுகளை இவர் தோன்றிய ஆண்டுகளாகக் குறிக்கின்றார்கள். ஃபிரான்ஸிஸ் மடத்தில் சேர்ந்து தம்முடைய படிப்பை ஆக்ஸ் ஃபோர்டில் தொடங்கினர் என்பதை நாம் அறிவோம். 1310ஆம் ஆண்டு இறை யியலில் இவர் இறங்கினராம். இவருக்கு முன்பு திகழ்ந்த புலமைக் கொள்கை யினருடைய நூல்களில் இவர் தோய்ந்தவர் என்பதில் யாதோர் ஐயமுமில்லை. அரிஸ்டாட்டில் இயற்றிய நூல்களை நன்கு ஓர்ந்தவர்.

டன்ஸ் ஸ்கோடஸ் அளித்த சில கருத்துகளை இவர் ஏற்றாலும், அவரிட மிருந்து இவர் மாறுபடுகின்றார். டன்ஸ் ஸ்கோடஸ் நிறுவிய கருத்துண்மைத் தத்துவத்தின் (Realism)மீது இவர், தம் வாத அம்பைத் தொடுக்கின்றார். அரிஸ்டாட்டில் கொண்ட தருக்க முறையை வைத்தே டன்ஸ் ஸ்கோடஸின் மீது சொற்போர் புரிந்தாலும், அரிஸ்டாட்டிலையே இவர் முற்றிலும் பின் பற்றுகிறார் என்று இயம்புவதற்கில்லை. கடவுளின் சுதந்திரத்தையும் எல்லா வல்லமையையும் புறக்கணிக்கின்ற அரிஸ்டாட்டிலின் கொள்கைகள், இவருடைய சீற்றத்தை எழுப்புகின்றன. புதுமைக்காகவே ஒரு புதுமையைப் படைக்கும் தனிப்பட்ட ஒரு சிந்தனையாளர் இவர் அல்ல. எல்லாவற்றையும் தாக்கிப் பேசு கின்ற இயல்பு, இத்தகைய கருத்திற்கு இடங்கொடுக்கக்கூடும். எழுப்பப்பட்ட பிரச்சினைகளைத் தம் தருக்க நுண்ணறிவு கொண்டு தாமே ஆராயும் ஆற்றல் படைத்தவர் என்னும் முறையில், இவரை ஒரு தனி இயல்பு வாய்ந்த அறிஞர் என்று உரைக்கலாம். சந்தர்ப்பத்திற்கு ஏற்றவாறு ஒருவன் சொல்லின் போக்கும் அமையத்தானே செய்யும். திருச்சபைக்கும் (Church) அரசுக்கும் (State) உள்ள தன்மைகளை அஞ்சாமல் வெளிப்படுத்தும் இவருடைய இயல்பு ஒரே

சுருதியில் பேசுமோ, உன்னிப்பாருங்கள். பலவிதமான அமிசங்கள் இவரிடத்தில் மிளிரக் காண்கின்றோம். நுகர்ச்சிக் கொள்கை—அனுபவ வழக்குக் கொள்கை (Empiricism) ஒருபால்; பகுத்தறிவின் ஆட்சியும் தருக்க முறையும் ஒருபால்; இறையியலின் தன்மையை ஆராயும் பண்பாடு ஒருபால். இந்தச் சுருதிகள் இவருடைய வாழ்க்கையாம் யாழை இசைக்கப் பார்க்கின்றோம். இத்தனை சுருதிகளை எழுப்பும் யாழ் ஒன்றுபோல இயைந்து ஒலிக்குமோ?

கழகத்தில் அமர்ந்து எல்லாவற்றையும் சீர்தூக்கிப் பார்க்கும் இயல்பு ஒருபால்; சமயச் சழக்குகளில் இறங்கி மெய்மறந்து உணர்ச்சி ததும்ப வாதமிடும் இயல்பு ஒருபால் என்றெல்லாம் இவருடைய குணத்தைப் பிரித்துக் காட்டுபவர்களும் உண்டு. இது ஒரு தவறான கருத்து என்று கோப்லஸ்டன் (Copleston) தம்முடைய 'தத்துவ வரலாற்று' நூலில் மொழிகின்றார்.

எல்லாவற்றையும் தருக்கச் சல்லடையில் வைத்துச் சல்லித்துப் பார்க்கும் இவரைப் பார்த்துத் தற்கால 'நுகர்ச்சிக் கொள்கையை' முழுதும் சார்ந்தவர் என்று கூறிவிடக்கூடாது. இவர் ஒரு ஃபிரான்ஸிஸ் மடத்துத் துறவி; இறையியலில் ஈடுபடுகிறவர் என்னும் பேருண்மையை மறந்துவிடக்கூடாது. தம்முடைய தருக்க வாதங்கள் யாவும் தம்முடைய கிறித்துவ சமயக் கொள்கைக்கு அரண் செய்யவேண்டுமென்பதுதான் இவருடைய திருவுள்ளமாகும். கிரேக்கர்கள் கொண்ட கட்டாயப்பாட்டுக் கொள்கையினின்றும், கருத்துண்மைத் தத்துவத்தினின்றும் கிறித்துவ சமயத்தை விடுவிக்க வேண்டுமென்பதே இவருடைய பேரவாவாகும். கருத்துண்மைக் கொள்கை, கடவுளைப் பற்றிக் கிறித்துவர்கள் தேர்ந்த உண்மையைச் சிதையச் செய்துவிடும் என்று இவர் பேரச்சம் கொள்ளுகின்றார். அழியா மூலக் கருத்துகளுக்கேற்றவாறு தான் படைப்பு அமையவேண்டும் என்னும் நியதி ஏற்படுமாயின், ஆண்டவனுடைய சங்கற்பத்தின் ஆட்சியையும், அவன் எல்லாம் வல்லவன் என்னும் சமய உணர்ச்சியையும் சிறைசெய்துவிடுமன்றோ?

ஞானி அகஸ்டைன் தேர்ந்த கருத்துண்மைக் கொள்கையை டன்ஸ் ஸ்கோடஸும் பின்பற்றியமைபற்றி முன்னமேயே நாம் ஆராய்ந்துள்ளோம். இதை, ஒக்ஹம் எதிர்த்து வாதாடுகின்றார். எல்லாம் ஆண்டவனுடைய சங்கற்பத்தையும் விருப்பத் தேர்வையும் குறிப்பன என்று இவர் வலியுறுத்துகின்றார். மூலக்கருத்துகள் இருக்கின்றன என்னும் கொள்கைக்கு நாம் இடந்தந்துவிட்டால், அவற்றிற்கேற்றவாறே ஆண்டவன் தம்முடைய படைப்பை அமைக்க வேண்டுமென்னும் கட்டாயம் ஏற்பட்டுவிடும். கடவுள் எல்லா ஆற்றலையும் படைத்தவன். எல்லாச் சுதந்திரமும் அவனுக்கு உண்டு. அவன் படைத்த மன்னுயிர்கள் மாறும் தன்மையுள்ளன; மேலும், ஆண்டவனை அவை சார்ந்து நிற்கின்றன. இக் கொள்கை, மரபு வழாத கிறித்துவர்கள் ஒருமிக்க ஏற்ற கொள்கையேயாகும்; கருத்துண்மைக் கொள்கையைக் கிறித்துவ இறையியலிலிருந்து நீக்கிவிடவேண்டுமென்பதுதான் ஒக்ஹமின் பெருமுயற்சியாகும்.

இவர் ஒரு பெயர் உண்மைவாதி (Nominalist). பொதுமைக் கொள்கையை எதிர்த்துதான் பேசுகின்றார். 'தனியர்கள்தாம் உண்டு. பொதுமையின் இருப்பு என்று பேசுவதெல்லாம் அறிவின் விளைவைத் தவிரப் பிறிதில்லை. பொதுமை என்னும் கருத்திற்கேற்பப் பொதுமையான பொருள் ஒன்றில்லை. இருப்பதெல்லாம் தனிப்பட்ட பொருள்களேயாகும்' என்கிறார்.

சில ஒற்றுமைகளை வைத்துக்கொண்டு பொதுமைக் கருத்தை நிறுவிவிட முடியாது. சான்றாக, சாக்ரடீஸும் அவர் மாணக்கரான பிளேட்டோவும் ஒரு கழுதையைவிடச் சில அமிசங்களில் ஒற்றுமையுடையவர்களாய் இருக்கலாம். ஆனால், சாக்ரடீஸ் சாக்ரடீஸ்தான்; பிளேட்டோ பிளேட்டோதான் என்பதை மறந்துவிடக்கூடாது. ஏதாவது ஒன்றிற்கு ஒரு மூலகாரணம் இருக்குமானால், மற்றைய காரணங்களைக் கழித்து நீக்கிவிடலாமென்பதுதான் ஒக்ஹமின் கருத்தாகும். இதுவே 'மயிர்வினைஞனின் கத்தி' யாகும் (Ockham's Razor). சான்றாக, ஓர் 'ஏ' என்னும் தேவதத்தன் தோன்றுகின்றபொழுதெல்லாம் 'பி' என்னும் தேவதத்தனும் தோன்றுகின்றான். 'ஏ' மறைகின்றபொழுது 'பி'யும் மறைந்துவிடுகின்றான். இவற்றின் இடையே மற்றைய அமிசங்கள் தோன்றினாலும், அவற்றைக் கழித்து நீக்கி, 'ஏ' யையும் 'பி' யையும் காரணகாரியமாகக் கொள்ளவேண்டும் என்றுதான் ஒக்ஹம் கருதுகின்றார். சொல்லிலும் சரி, கருத்திலும் சரி, ஒரு சிக்கனத்தையே ஒக்ஹம் வற்புறுத்திப் பேசுகின்றார்.

உண்மையிலே தனிப்பட்ட பொருள்கள்தாம் உண்டு என்னும் காரணத்தால், விஞ்ஞானம் என்பது பொதுக் கருத்துரை வாசகங்கள்—பிரதிக்ஞைகள் (propositions) பற்றிய அறிவு என்பதை இவர் மறுக்கவில்லை.

மெய்ப்பிக்கும் ஞானம் என்பது — அறிவு என்பது (Demonstrative knowledge), அனுபவம் மூலமாக எய்திய அறிவாகும். அனுபவ வாயிலாக ஏற்படும் அறிவுக்குத்தான் இவர் ஒரு தனிச் சிறப்பை அளிக்கின்றார். அனுபவத்தை ஒட்டிப் பேசுவதால், இவரை ஒரு முற்றிலும் புலன் நுகர்ச்சிக் கொள்கையினர் (Empiricist) என்றும் இயம்பிவிட முடியாது.

பகுத்தறிவைக்கொண்டு விளக்கம் தரும் அமிசமும் (rationalist side of his philosophy) இவருடைய தத்துவத்தில் இடம் பெறுகின்றது. முக்கூற்று முடிபை (Syllogism) இவர் வெறுக்கவில்லை என்பதை மனத்தில் இருத்திவைத்துக்கொள்ளவேண்டும்.

ஒருவிதமான மூலிகையின் குணங்களை ஒரு கருத்துரை வாசகம்மூலமாக மெய்ப்பிக்கலாம்; ஆனால், ஒரு பொருளின் இருப்பைப் புலப்படுத்த முடியாது. புலப்படுத்துதல் என்பது, அதன் குணங்களைக் கருத்துரை வாசகம்மூலமாகக் கூறுதலேயாகும்.

மேலும், பசு என்னும் சொல்லை ஆங்கிலத்தில் 'Cow' என்று மொழி கின்றோம். அக் காரணம்பற்றியே மொழி என்பது பொதுமை வாய்ந்தது என்று உரைத்துவிட முடியாது. பொருள் ஒன்றாயினும், அதைச் சித்திரிக்க அல்லது அதைச் சுட்டப் பல மொழிகள் இருக்கின்றன என்பதுதான் உண்மை யாகும்.

நேரடி உணர்வைப்பற்றி (Intuition) இவர் பேசுகின்றார். நேரடி உணர்வு என்பது என்ன? ஒன்றைப் பார்த்தவுடனே இது இருக்கிறதா இல்லையா என்று நம்முடைய அறிவு கூறிவிடுகின்றது. ஒன்று மற்றொன்றோடு கூடிய தொடர்பைச் சட்டென உணர்ந்துவிடுகிறது. புலச்சார்பற்ற (Apriori) கருத்து கள் ஆன்மாவில் கரந்து நிற்கின்றன. அவற்றைக் கொண்டுதான் நாம் ஒன்றை அறிகின்றோம் என்னும் கொள்கையை இவர் ஏற்கவில்லை. புலன் வாயிலாக வருகின்ற ஒன்றைத்தான் நாம் ஓர்கின்றோம். இந்த அளவில் இவரைப் புலன் நுகர்ச்சிக் கொள்கையினர் என்று இயம்பலாம்.

நேரடி உணர்வை ஆண்டவன் நம் இதயத்தில் புகுத்தலாம் என்று இவர் மொழிகின்றார்.

கடவுளைப்பற்றிய இவருடைய கருத்துகள் ஆராய்வதற்குரியவை. ஆண்ட வன் அருள் வடிவானவன், எல்லாம் வல்லவன், எல்லாம் அறிந்தவன் என் றெல்லாம் கூறலாமே தவிர, அவற்றைத் தருக்க அறிவுகொண்டு மெய்ப்பிக்க முடியாது என்கிறார். இக் காரணத்தால் இவரை ஓர் இறையியல்வாதியாகவோ அறியொணாக் கொள்கையராகவோ கொள்ளுவதற்கில்லை. இறைவனை அறிவது திடமான நம்பிக்கை மூலமாகத்தான் என்று கூறுகின்றார். ஆப்த மொழி களாலும் தெய்வ அருள் வெளிப்பாட்டாலும்தாம் ஆண்டவனின் குணங்களை நாம் காணமுடியும். வேதாந்த தேசிகர் கூறியது இங்கு நோக்குதற்குரியது. தருக்க ஆற்றலைக்கொண்டு கடவுள் இல்லை என்று ஒரு தருக்க அறிஞன் சாதிக்க முடியும். ஆனால், நாம் சரண் புகுவது யாதென உணரவேண்டும்? வேத காலத்து இருடிகள், சான்றோர்கள் தங்கள் அகக்கண்களால் கண்டதையும், தங்கள் அகச்செவிகளால் கேட்டதையும்தாம் நாம் நம்பவேண்டும் என்று அச் சான்றோன் சாற்றுகின்றார். ஆனால், தருக்க அறிவுக்கு இடமே இல்லை என்று கூறிவிட முடியாது. கடவுள் தன்னையும் அறிகின்றார்; மற்றனைத்தையும் அறிகின்றார் என்பதைத் தத்துவ முறையில் அறிய முடியாதென்பதுதான் ஒக்ஹமின் கருத்தாகும்.

ஆண்டவனின் அறிவிலே பன்மை (plurality) இருப்பதற்கு நியாயமில்லை. அவனுடைய அறிவுதான் சங்கற்பம் (will); அவனுடைய சங்கற்பந்தான்— இயற்றிநிலைதான் — உள்ளியல்பு (essence). எந்தப் பெயரை வைத்தாவது ஆண்டவனை அழையுங்கள், அவரைத் தருக்க அறிவு கொண்டு மெய்ப் பிக்க முடியாதென்பதுதான் உண்மை என்று ஒக்ஹம் உரைக்கின்றார்.

ஒன்றையொன்று தொடர்ந்து வருகின்றது. அக் காரணத்தால் ஒன்று மற்றொன்றிற்குக் காரணமாகிவிடாது என்று இவர் கூறுவது, நவீன விஞ்ஞான இயக்கத்திற்கு இவர் வழி காட்டியதாய் அமைகின்றது. கடவுள் இருக்கையை மெய்ப்பிக்கப் பண்டையர்கள் தந்த காரணங்களையும் சான்று களையும் இவர் ஏற்கவில்லை. அழிகிற உடலில் அழியாத ஒரு தத்துவம் இருக்கிறது என்பதைச் சான்றுகள்கொண்டு மெய்ப்பிக்க முடியாது. கடவல்லி யிலும் மரணத்திற்கு அப்பால் ஒரு வாழ்வு உண்டா, இல்லையா ? என்னும் பிரச்சினை எழுப்பப்பட்டிருப்பதைப் பார்க்கின்றோம். உருவங்களில் பன்மை இருப்பதை ஒப்புக்கொண்ட காரணத்தாலும், அறிவும் சங்கற்பமும் வேறென்று ஏற்றுக்கொண்டதனாலும், இவர் ஃபிரான்ஸிஸ் மடத்தின் மரபைப்பற்றியே பேசுகின்றார் என்பது நன்கு புலனாகின்றது. அறிவைக் காட்டிலும் இயற்றி நிலைக்கு—சங்கற்பத்திற்கு மிகுதியான சிறப்பைத் தருகின்றார். இம் முறையில் இவர் தம் ஆசானான டன்ஸ் ஸ்கோடஸ்ஸின் அடிச்சுவட்டைப் பின்பற்றுகின்றார். மனிதனுடைய சங்கற்ப ஆற்றலை ஒப்புக்கொண்டுவிட்டால் இவனுக்குச் சுதந்தரம் உண்டென்பது வலியுறுகின்றது.

மனிதனுடைய சங்கற்பம் ஒழுக்க நெறிக்குக் கட்டுப்பட்டுள்ளது. தான் எந்த ஒன்றைக் கண்டானோ, அதைப் பின்பற்றுவதற்கு அவனுக்குச் சுதந்தரம் உண்டு. அகச் சான்றின் குரலுக்கு ஏற்றவாறு இவன் தன் சங்கற்பத்தை அமைத்துக்கொள்ளவேண்டும். ஆனால், கடவுளுக்கு எதையும் சங்கற்பிக்கும் ஆற்றலுண்டு. திருவருள் வெளிப்பாட்டில் கண்டதை, அறியாதவன் என்ன செய்யக்கூடும் என்னும் வினாவை எழுப்பி, அதற்கு விடையும் அளிக்கின்றார். அன்றாட வாழ்க்கையில் உளச்சான்றின் ஒலிக்குச் செவி சாய்ப்பதே சாலச் சிறந்ததாகும்.

ஒக்ஹம் ஓர்ந்த அரசியலைப்பற்றிச் சற்று ஆராய்வோம். இவரை ஓர் அரசியல் வித்தகர் என்று கொள்ளுவது பொருத்தமன்று. மனிதனுக்குச் சொத் துரிமை உண்டு. இது இவனுக்கு இயற்கையாகவே அமைந்தது என்று சாற்று கின்றார். திருச்சபையினர் அரசியலில் தலையிடக் கூடாது. ஆன்மீகத் துறையில் போப்பாண்டவர் தலைவராயிருக்கலாம். ஆனால், வேந்தனின் அரசுரிமை இந்தப் போப்பாண்டவரிடமிருந்து வந்ததன்று. தமக்காக வகுக்கப்பட்ட வட்டத்தி லிருந்து, அரசுரிமை வட்டத்தின்மீது படையெடுப்பது தகுதியன்று. மேலும், ஆன்கமீத் துறையிலும் போப்பாண்டவர் தம் விருப்பப்படி நடக்கக்கூடாது. அவருக்கும் அறிவுரை வழங்குவதற்காக ஓர் அறிஞர் குழு நிறுவப்படவேண்டும் என்று அச்சமின்றி இவர் சாற்றினர். பெயருண்மை வாதத்தைப் பின்பற்றிய பலர் தோன்றிவிட்டார்கள் என்றால், இவருடைய கருத்தாட்சியின் சிறப்பை நாம் வியக்காமலிருக்க முடியாது. அடிப்படைத் தத்துவக் கொள்கையை அயிர்க் கின்ற ஐயக் கொள்கை முளைத்துவிட்டது. எதையும் திண்ணமாய்க் கொள்ளக் கூடாது. எதையும் ஆராய்ந்துதான் பார்க்கவேண்டும் என்னும் விஞ்ஞானப்

பண்பு வளர்வதற்குத் தகுந்த வித்தைத் தூவியவர் ஒக்ஹம் என்று உரைக்கலாம். அடிப்படைத் தத்துவம், இறையியல் இவற்றின் சார்பின்றியே தருக்கத்தையோ, மனிதனுக்குரிய அறிவையோ பேணமுடியும் என்று இயம்பிய ஒக்ஹம், விஞ்ஞான ஆராய்ச்சிக்கு ஆதரவு காட்டினார் என்று மொழிந்தால் அது மிகையாகாது. அச்சம் தவிர்ந்த இவருடைய பண்பாடு, ஆர்சிமியைச் சார்ந்த நிக்கலஸ்ஸுக்கு (Nicholase) விஞ்ஞானத் துறையில் ஊக்கமளித்தது. ஞாயிற்றைச் சுற்றித்தான் மற்றைய கோளங்கள் இயங்குகின்றன என்று உரைத்த இவர், கோபர்னிகஸ்ஸுக்கு (Copernicus) ஒரு விடிவெள்ளியாய்த் திகழ்கின்றார் என்று ரஸ்ஸல் கூறுகின்றார். ஒக்ஹமுக்குப் பிறகு சிறந்த புலமைக் கொள்கையினர் தோன்றவில்லை. மணியை விட்டுவிட்டு வெறும் பதரை ஆராயும் சொற்சிலம்பர் தோன்றிவிட்டார்கள்; இந்த உமியும் பதரும் மறுமலர்ச்சிக் காலத்துப் புயலில் சிக்கி, இருந்த இடம் தெரியாமல் போய்விட்டன. இடைக்காலத்துத் தத்துவ வித்தகர்கள்மீது மறுமலர்ச்சிக் காலம், தன் ஐயப் பார்வையைச் செலுத்தி விட்டது. இது இடைக்காலத்துச் சொற்சிலம்பின் விளைவேயாகும்.

நம்முடைய வேதாந்தம் ஒருமையை வற்புறுத்துகின்றது. *ஒரு மலரைப் பறித்தாலும், அந்த அதிர்ச்சி அண்ட கோளங்களையும் அசையுறச் செய்யும் என்று தாம்ஸன் மொழிகின்றார்.

*வேந்தன் அடித்த சாட்டையடி எல்லோர் முதுகிலும் பட்டதன்றோ! சுகரை, வியாசர் விளித்தபோது மரங்களும், செடிகளும், வரைகளும் ஏன் என்று கேட்டனவாம்.

# 25. இடைக்காலம் கண்ட அரசியல் தத்துவம்

இந்தத் தத்துவத்தை ஆராயு முன்பு இடைக்காலத்து நிலப்பண்ணை உரிமை முறையை (feudalism) நோக்குவோம். இந்த முறை இடைக்காலத்தில் சிறப்புற்றோங்கிற்று. குழப்பங்களும், வெம்போர்களும், சமயச் சழக்குகளும் தலை விரித்தாடின காரணத்தால், மக்கள் தங்களைவிட ஆற்றல் படைத்தவர்களிடம் தஞ்சம் புகுந்தார்கள். வேந்தன்தான் எல்லோருக்கும் தலைவனாய்த் திகழ்ந்தான். அவனுக்குக்கீழ் உயர்குடிமக்கள் அமர்ந்திருந்தார்கள். இவர்கள் வேந்தனுக்குப் பணிவுடனும் திடப்பற்றுடனும் அருஞ்செயல்களை ஆற்றிவந்தார்கள். வேந்தனே ஆண்டவனிடமிருந்து தன் அதிகாரத்தைப் பெற்றவனாகக் காட்சி அளித்தான். வேந்தனை வழிபடுவதால் ஆண்டவனுக்கே இவர்கள் தொண்டுபுரிந்ததாகக் கருதப்பட்டார்கள்.

நிலப்பண்ணைமுறை வாயிலாகவே வீரப்பெருந்தகையோர்கள் (Knights) எழுந்துவிட்டார்கள்; நலிவுற்றோர்களுக்கு நல்லாதரவு காட்டும் கருணை மறவர்களாய் மிளிர்ந்துவிட்டார்கள். பிறகு இவர்களே சிலுவைப் போர்களில் கலந்துகொண்டார்கள். தூய்மை நெறியைப் பேணுவதும், அறத்தை வளர்ப்பதும், கற்புடை மகளிரைக் காப்பதும் — இவைபோன்ற சிறந்த பணிகளில் இவர்கள் இறங்கினார்கள். காளிதாசன் போர்வீரர்களின் இனத்தைச் சார்ந்தவர்களுக்கு இலக்கணம் வகுக்கும்போது, 'க்ஷத்திரியன்' என்னும் சொல்லிற்கு விளக்கம் தருகின்றான்; துன்பத்திலிருந்து ஒருவனைக் காப்பாற்றுகிறவனே க்ஷத்திரியன் என்று இயம்புகின்றான்.

காமம் என்னும் சொல் மாறிவிட்டது. காதல்தான் அரும்பிற்று. காதலால் கோசல நாடு தழைத்தது; காமத்தால் இராவணனுடைய நாடு ஒரு பாவபண்டாரமாய் மாறிவிட்டதை நாம் அறிவோம். உயர்வீரத்தையும் மாசு மறுவற்ற காதலையும் சிறப்பித்துக் கூறுவதும், புதுமை உணர்வூட்டும் இயக்கத்தைச் சித்திரிப்பதும் காலத்தால் அழிவுறாததுமான வான்சிறப்பு வாய்ந்த கவிதைகளும், யாழொத்த பாடல்களும் எங்கும் மலரத்தொடங்கிவிட்டன. இவை நம் செவிக்கும் சிந்தைக்கும் தெவிட்டாத ஒரு நல்விருந்தாய்க் காட்சி அளிக்கின்றன. மனிதக் காதலைச் சித்திரிக்கிற சங்ககாலத்து இலக்கியங்களில் திளைத்த ஆழ்வார்களும் நாயன்மார்

களும் புறப்போரை அகப்போராகவும், மனிதக் காதலைத் தெய்வக் காதலாகவும் மாற்றித் தம்முடைய அனுபூதிச் செல்வங்களை இவ் வையகத்திற்கு நல்கியிருக்கும் பெரும்பேற்றை என்னென்று நவில்வது! பெண்டிரைப் போற்றும் நாடே உயர்ந்த நாடு என்று சாற்றும் இளங்கோ அடிகளின் கவிதைத் திறனை நாம் மறக்க இயலுமோ ?

இடைக்காலத்துக் காதலைச் சிறப்பித்துக் கூறுவதற்கு ஒரு மாபெருஞ் சான்று வேண்டுமானால், தாந்தே உலகுக்கு அளித்த 'தெய்வ மங்கல கீதமாகும்.' இந்த நூலாம் வியன்கோயில் அன்பின் வெற்றிக்குக் காலப்புயலில் என்றும் அவியாத விரிசுடர் ஒளியாய்த் திகழ்கின்றது என்று கூறலாம்.

நிலப்பண்ணை முறையைக் கண்ட நாம், இடைக்காலம் வகுத்த அரசியல் துறையில் இறங்குவோமாக.

திருச்சபை (Church), சாம்ராச்சியம் (Empire) இவ் விருவகையான சமூகங்களைச் சுற்றியே இடைக்காலத்து அரசியல் அறிஞர்களின் சிந்தனைகள் எழுந்தன என்று இயம்பிவிடலாம்.

'அரசைப்' பாவத்தின் விளைவு என்று கருதினர். சாதாரண அரசில் நேர்மையில்லை; உண்மையில்லை. பொய் நின்றதாய் அது ஒரு கோரமான காட்சியை நல்குகின்றது. ஒரு கிறித்துவ அரசுதான் (Christian state) தீமையற்றதாய் விளங்கும். மற்றைய நாடுகள் அழிவுற்றதைச் சரித்திர வாயிலாக அறிந்த காரணத்தால், ஆண்டவன் அருள் நகரைப்பற்றி (The City of God) இவர் விளக்கம் தருகின்றார். திருச்சபைதான் அரசு செலுத்தவேண்டும். ஏனெனில், மனிதன் அடைய வேண்டிய குறிக்கோள் ஆண்டவன் பொன்னகரன்றோ ?

மனித ஆட்சி மிகவும் இழிவானது என்னும் துன்பக் கொள்கைமட்டும் (pessimistic view) இடைக்காலத்து அரசியல் துறையில் முழுதும் ஆட்சி புரிந்தது என்று கூறுவதற்கு இடமில்லை.

ஞானி தாமஸ் அக்யுனஸ் கொண்ட கருத்து வேறுபட்டதாயிருக்கிறது. மாறுபாட்டிற்குக் காரணம் வரலாற்றுச் சூழ்நிலைக்கேற்றவாறு அமைந்திருக்கக்கூடும். சமூகமென்பது இயற்கையாய் அமைந்துள்ளது. அவன் பேசும் மொழியே அவனை ஒரு சமூக விலங்கு அல்லது அரசியல் விலங்கெனச் (political animal) சுட்டுகின்றது. அரசாங்கமும் இயற்கையாய் அமைந்த தாபனமே தவிரப் பிறிதில்லை. மனிதனுடைய தேவைகள் யாவும் அரசில்தான் நிறைவேறுகின்றன. நல்வாழ்வு வாழ அவன் விழைகின்றான். அவன் பாவம் புரியாதுபோயினும், ஒரு தாபனத்தை அவன் விரும்பியே இருப்பான். அறத்தில் நிற்கும் வாழ்வுதான் நல்வாழ்வு என்று அரிஸ்டாட்டில் சாற்றும் கொள்கையை இவரும் போற்றுகின்றார். இம்மைக்கு அரசும் மறுமைக்குத் திருச்சபையும் தேவை என்று இவர் கூறுவதுபோலப்

படலாம். பெருநலத்தை—ஆண்டவன் திருப்பதத்தைப் பேணுகின்ற திருச்சபை தான் அரசைக் காட்டிலும் சிறந்தது என்பது தோன்றத்தானே செய்யும். ஆனால், அரசு என்பது திருச்சபையின் ஓர் அங்கமன்று. இவ்விரண்டுமே ஆண்டவனின் சங்கற்பத்தால்—இயற்றிநிலையால் பிறந்தன. சர்வாதிகாரத்தின் மணம் இவருடைய நூலில் எங்கும் கமழவில்லை. தாந்தே கண்ட தத்துவத்தை நாம் முன்னமேயே ஆய்ந்துள்ளோம்.

இவ் வாசிரியர்கள் தோன்றுவதற்கு முன்பே அரசியலைப்பற்றிச் சிந்தித்த சான்றோர்கள் உண்டு என்பதை மறந்துவிடக்கூடாது. நெறிதவறின வேந்தனை, நாயை அடித்துக் கொன்றுவிடுவதுபோல் மாய்த்துவிடலாம் என்று சாந்திபர்வம் சாற்றுகின்றது. மேனிகோல்ட் என்பவர் ஒரு பாதிரி. இவர் கிரகரியைப் (Gregory) போற்றும்வண்ணம் ஒரு நூல் எழுதியுள்ளார். அதில் குறிப்பிட்ட பொருள் வருமாறு : ‘அரசன் ஒரு பதவியை ஏற்கின்றான். இப் பதவி மக்களால் அளிக்கப் பட்ட பதவியாகும். தங்களைப் பிறருடைய கொடுங்கோன்மையிலிருந்து விடு வித்துக்கொள்ளுவதற்காக இவனை அவர்கள் தேர்ந்தெடுத்தார்கள். இந்த ஒப்பு நெறியை (social contract) இவன் புறக்கணிப்பானாயின், மக்கள் அவனை எதிர்த்து,அவனை வீழ்த்திவிடலாம், என்கிறார். இந்தக் கருத்து ரூஸோ தேர்ந்த சமூக ஒப்பு நெறிக்கு விடிவெள்ளியாய்த் திகழாமற்போகுமோ, உன்னிப்பாருங்கள். சாலிஸ்பெரியைச் சார்ந்த ஜான் (John of Salisbury) என்பவரின் கருத்துகள் நம் சிந்தனைக்குரியவைகளல்லவா ? நடுநிலை நேர்மையைக்கொண்டே எல்லாப் பொருள்களையும் சரிப்படுத்திக்கொள்ளவேண்டும். இந்த நடுநேர்மையைப் பொருட்படுத்தக்கூடிய இரண்டு அமிசங்கள் உண்டு. சட்டமும் ஆள்பவனும் தாம் சமுதாயத்திற்குத் துணைபுரியவேண்டும். கொடுங்கோல் மன்னர்களைப்பற்றிப் பேசவேண்டியதில்லை. வேந்தனுக்குச் சட்டத்தளைகள் இல்லை என்றால் அவன் மனம்போனபடி ஆளமுடியும் என்பதில்லை. அவன் பொதுநலத்தை நாடுகின்றான். நடுநிலை நேர்மையாகவும் சட்டத்தின் வடிவமாகவும் அவன் திகழ்கின்றான். அவன் தீர்ப்பு அவனுடைய நடுநிலை நேர்மையின் வடிவமேயாகும். ஆண்டவன் வடிவமாக இந்த ஞாலத்தில் அவன் காட்சி அளிக்கின்றான். அவனுடைய ஆற்றல் ஆண்டவ னுடைய ஆற்றலேயாகும். இவன் அவருடைய பிரதிநிதியாய் மிளிர்கின்றான். இவனுக்கு அதிகாரம் நேரடியாக வரவில்லை. இன்னொரு வாயிலாக, அதாவது திருச்சபை வாயிலாக இவன் ஆண்டவனின் அதிகாரத்தைப் பெறுகின்றான்.

அரசை உயிருள்ள உறுப்பமைதிக்கு (living organism) ஒப்பிடுகின்றார். அதற்கு ஆன்மா சமயமாகும். தலைதான் வேந்தன். மற்றைய உறுப்புகள் சமூகத்தில் திறம்படப் பணியாற்றும் முக்கியமான உறுப்பினர்களாகும். கைகள் தாம் படைஞர்கள். கால்கள்தாம் குடியானவர்கள் அல்லது தொழிலாளர்கள். ஆரியர் வகுத்த சாதிமுறையும் ஈண்டுச் சிந்திக்கத்தகுந்தது. ஆண்டவனுடைய தலைதான் அந்தணர்கள்; புயங்கள் போர்வீரர்கள் ; தொடைகள் வணிகர்கள் ; அவன் திருப்பாதம் வேளாளர்கள் அல்லது தொழிலாளர்கள். இந்தக்

கொள்கையை மனத்தில் கொள்ளாது இழிவு, மேல் என்பதைப் பிற்காலத்தவர்கள் சமூகத்தில் புகுத்திவிட்டார்கள். வயிறுதான் பொதுச் செல்வ ஆட்சி முறையைச் சுட்டும். இதயந்தான் மேல்சபை—செனட்டாகும். வயிறும் பொதுச் செல்வ ஆட்சியில் குழப்பம் வருமாயின் எல்லாவற்றையும் நிலைகுலையச் செய்துவிடும் என்பது திண்ணம் என்று உரைக்கின்றார். டன்ஸ் ஸ்கோடஸ், ஒக்ஹம் முதலியோர்களுடைய அரசியல் தத்துவங்கள் முன்னமேயே ஆராயப்பட்டுள்ளன.

1270ஆம் ஆண்டு படுவாவில் பிறந்த மார்சிகிலியோ (Marsiglio) கொண்ட அரசியல் தத்துவம் நம் சிந்தையைக் கவராமற்போகாது. இவரை மார்ஸிலஸ்' (Marsilius) என்றும் அழைக்கின்றார்கள்.

இவர் எந்த ஆண்டில் பிறந்தார் என்பது விளங்கவில்லை. மருத்துவ ஆராய்ச்சியில் ஈடுபட்டதாகத் தெரியவருகின்றது. இவர் பாரிஸ் மாநகரத்திற்குச் சென்றார் என்பதில் யாதோர் ஐயமுமில்லை. பாரிஸ் பல்கலைக்கழகத்தில் 1312ஆம் ஆண்டு, செப்டம்பர் முதலிலிருந்து 1313ஆம் ஆண்டு, மே மாதம்வரையில் கழகத் தலைவராய்த் (Rector) திகழ்ந்தார்.

அரசியலில் இவர் அரிஸ்டாட்டிலைப் பின்பற்றுகின்றார். மக்கள் நல்வாழ்வு வாழ்தற்பொருட்டே அரசு இருக்கின்றது என்பதை இவர் வற்புறுத்துகின்றார். அரிஸ்டாட்டில் வகுத்த முறையைத்தான் மொழிகின்றார் என்பது நன்கு புலனாகின்றது. வேந்தராட்சியைத்தான் மிகச் சிறந்ததாகக் கருதுகின்றார். மக்களிடந்தான் ஆட்சியுரிமை இருக்கின்றது. மக்களின் வாக்குரிமை வாயிலாக வேந்தன் பதவியை ஏற்கவேண்டும். தேர்ந்தெடுக்கப்படும் வேந்தே தக்கபடி ஆளமுடியும் என்பதை இவர் வலியுறுத்துகின்றார். பரம்பரை வேந்தராட்சிக்கு இவர் இறையளவேனும் ஆதரவு அளிக்கவில்லை.

நியாயத்தின் ஊற்று மக்களிடந்தான் இருக்கின்றது. மக்களின் கருவிதான் வேந்தன். அவர்களுக்குத்தான் இவன் கடமைப்பட்டவன். சட்டம் அமைக்க இவனுக்கு அதிகாரமில்லை. மக்கள் வகுத்த சட்டத்திற்கு இவன் விளக்கம் தரலாம்.

திருச்சபையை எல்லாக் கிறித்துவர்களும் சார்ந்தவர்களே. பாதிரிகளுக்குத் தனிப்பட்ட உரிமைகள் இல்லை என்று இவர் உரைக்கின்றார். பாதிரிகளுக்கெனத் தனிப்பட்ட நீதிமன்றத்தை நிறுவக்கூடாது. அவர்கள் தீங்கிழைப்பார்களாகில், பொது நீதிமன்றத்தில் அவர்கள்மீது குற்றஞ்சாட்டப்படவேண்டும். ஒக்ஹம் ஏறக்குறைய இவர் போற்றிய கருத்துகளை மனத்தில் கொண்டாலும், இவரைப் போல் அவர் அத்துணைச் துணிச்சலுள்ளவர் அல்லர் என்பதுதான் உண்மை. போப்பாண்டவரின் ஆதிக்கியமும் திருச்சபையினர் அதிகாரமும் எல்லாப் பொருள்களிலும் தலையிடக்கூடாது என்பதுதான் இவருடைய நோக்கமாகும். விக்லிப் (Wycliffe) தேர்ந்த உண்மைகளை உரைப்போம். ஒவ்வொரு மனிதனும் ஆண்டவனைச் சார்ந்து நிற்கின்றானேதவிரப் பிறிதில்லை. பாதிரிகள், சாதாரண மக்கள் என்று

பிரிக்காதீர்கள். எல்லோரும் ஆண்டவன் முன்னிலையில் சமமே. ஆண்டவன் அருள் நெறிக்குச் செவிசாய்க்கும் அனைவருக்கும் இவ் வையகத்தின் செல்வம் உரியதே. மனிதன் புரிந்த பாவத்தால்தான் அரசாங்கம் முளைத்தது. வேந்தராட்சிதான் சிறந்த தென்று நினைக்கிறார். மக்கள் தேர்ந்தெடுக்கும் வேந்தன் தக்கவனா அல்லது பரம் பரையாக வருகின்ற மன்னன் சிறந்தவனா என்னும் வினாவை எழுப்பினாலும், பரம்பரையாக வருகின்ற வேந்தனே சாலச் சிறந்தவன் என்னும் முடிவுக்கு வருகின்றார்.

திருச்சபையைச் சார்ந்தவர்கள் உலக அலுவல்களில் ஈடுபடாமலிருக்க வேண்டும். போப்பாண்டவருக்கும் இத்தகைய உரிமையில்லை என்றால், மற்றைய பாதிரிகளைப்பற்றிப் பகர்வானேன்? விக்லி:ப், ஒக்ஹம் இவர்களுக்கு மார்ஸிலி ஸின் அறிவுத் திண்மை இல்லை என்றுதான் இயம்பவேண்டும். இடைக்காலத்து அரசியல் தத்துவ உலகத்தில் குழப்பமான கருத்துகள் நடமாடத்தான் செய்யும். ஆனால், அந்தக் குழப்பமான இருண்ட நிலையிலும் தற்காலத்துக் கருத்தாம் ஒளிக் கதிர்கள் வீசுவதையும் பார்க்கின்றோம்.

# 26. இடைக்காலம்: ஒரு புட்காட்சி

இடைக்காலத்துத் தத்துவ உலகத்தில் திரியும்பொழுது பல காட்சிகள் நம்முன் மிதந்துவருகின்றன. கிறித்துவத் தத்துவம் என்னும் ஒன்று உருவாகக் காண்கின்றோம். கிறித்துவ சமயத்தைத் தத்துவ முறையில் ஆராயும் பல சான்றோர்களைப் பார்க்கின்றோம்.

கிறித்துவ சமயம் ஒரு துன்பக் கொள்கையைப் புலப்படுத்துகின்றது. மறுமைக்காக இன்னல் மண்டிக் கிடக்கின்ற இம்மையை வெறுத்த சான்றோர்களின் மொழிகளைக்கொண்டு இத்தகைய கொள்கை எழுந்திருக்கக்கூடும். இது ஒன்றுதான் இடைக்காலம் தரும் கொள்கையென்று கூறுவார்களேயாகில், அவர்கள் பெருந்தவறு புரிந்தவர்களாவார்கள். தான் படைத்ததைப் பார்த்தே இது ஒரு நற்செயலென்று ஆண்டவனே வியந்து கூறியிருக்கிறான். மேலும், அவன் அமைத்த காரணத்தால் இது பெருநலம் உடையதென்பதை அயிர்க்க இடமுண்டோ, உன்னிப்பாருங்கள்.

உடலை வெறுத்து, அருந்தவம் புரிந்த துறவிகள் உலகைவிட்டு ஓட முயன்றதையும் நாம் இடைக்காலத்தில் பார்க்கின்றோம்.

உலகில் காணும் தீயவை யாவும் ஆண்டவனுடைய அருளையும் வனப்பையும் பதின்மடங்கு விளக்கிக் காட்டுகின்றன என்று ஞானி தாமஸ் அக்யுனஸ் கூறுகின்றார். மேலும், உடலை வெறுக்கவேண்டியதில்லை; உடல் ஆண்டவனை அடைதற்குற்ற ஒரு கருவியேயாகும் என்று அவர் உரைக்கின்றார்.

இவ் வையகமனைத்தும் அவன் உறையும் திருக்கோயிலாகவும் சில சான்றோர்கள் கருதியிருக்கின்றார்கள். ஞானி ஃபிரான்ஸிஸ் செடி கொடிகள், மலர்கள், காற்று—இவற்றையெல்லாம் தம் உடன்பிறந்தவர்களாய்க் கருதி அவற்றின் புகழ் பாடுகின்றானன்றோ? இத்தகைய உணர்ச்சி நன்னம்பிக்கைக் கொள்கையின் (Optimism) விளைவே தவிரப் பிறிதில்லை.

ஆண்டவனுடைய புகழை என்னென்று புகல்வது? அவன் படைத்த பொருள், அவனன்றி வேறு களைகண் இல்லாத பொருள், அவனுடைய இசை

பாடாது என் செய்யும்! தன்னுடைய புகழைப் பாடாது, அவன் புகழ் பாடுதலே அறமாகும். ஏனெனில், எல்லாம் அவன் தந்த வளமே. அவன் நல்கிய ஒன்றை அவனுக்கே உரிமையாக்குவதுதானே மக்களின் குறிக்கோளாகும்? மேலும், கடவுள் ஒன்றைப் படைத்துவிட்டு, அதைப்பற்றி யாதொரு கவலையுமின்றி இருக்க மாட்டான் என்பதுதான் கிறித்துவருடைய திடமான கொள்கை. ஏன் நம்முடைய கொள்கையும் அத்தகையதே. நம்மையே தன் உடலாகக்கொண்ட உத்தமன் நம்மைக் காப்பாற்றுமற்போவானா? அவன் அளித்த நலத்தை அவன் பொன்னடிக்கீழ்ச் சமர்ப்பிப்போமாக.

உடலோடு ஆன்மா அழிந்துவிடுகின்றது என்னும் வினாவை அவர்கள் எழுப்பாமலில்லை. பன்மைக் கொள்கையைத்தான் கிறித்துவர்கள் பின்பற்றுகின்றார்கள். அநேகான்மவாதந்தான் அவர்கள் கண்ட உண்மையாகும்; ஆண்டவனுடைய திருவுள்ளமும் அதுவேயாகும். அறிவு மயமாயுள்ள ஆன்மா என்றும் தான் அழியாத சத்தாயிருக்கிறது.

சாக்ரடீஸ், 'உன்னை அறிவாய்' என்னும் தத்துவத்தைச் சாற்றியுள்ளார். கடவுள் தன்னுடைய வடிவிலே மனிதனைப் படைத்திருக்கிறார் என்று விவிலிய நூல் மொழிகின்றது. அதனால் மனிதன் தன்னை அறிவானாயின் கடவுளை அறிந்துவிடுவான் என்பதுதான் உண்மையாகும். வைணவர்கள் கூறும் தத்துவமும் இதுதான். 'ஆன்மஞானத்தை அடைந்துவிட்டால், பரமான்ம ஞானம் பிறந்துவிடும்' என்று அவர்கள் உரைப்பது ஆழ்ந்து சிந்திப்பதற்குரியது.

அன்பைப்பற்றி இடைக்காலத்தவர்கள் சிந்தித்திருப்பவை நோக்குதற்குரியவை.

கடவுள்தான் அருள். அந்தப் பேரருளில்தான் இப் பிரபஞ்சம் அலர்ந்தது. அன்பும் சிவமும் வேறல்ல. அன்பே சிவம் என்று நாமும் சாற்றுகின்றோமன்றோ!

தன்பால் வைத்த அன்பு விரிய விரிய, அந்த அன்பு ஆண்டவன் அருட்கோயிலுக்கு அழைத்துச் சென்றுவிடும். அன்பு வடிவமாய் ஒன்றை அன்புநெறியின் வாயிலாகத்தானே உணர்ந்து அறியமுடியும்! மனிதக் காதல் தெய்வக் காதலாக மாறவேண்டும். தாந்தே இசைத்த 'தெய்வ மங்கல கீதத்தில்' கோயில் கொண்டுள்ள கருத்து இதைத் தவிரப் பிறிதுண்டோ? தெய்வக் காதலைச் சிறப்பிக்கவந்த அன்பின் வியன்கோயில்தானே அந்த 'மங்கல கீதம்'.

அறிவைக் காட்டிலும் சங்கற்பந்தான் வலிது என்னும் காரணத்தால் மனிதனுக்குச் சுதந்தரமுண்டு என்பது திண்ணம். இயற்றி நிலைதான்—சங்கற்பந்தான் அறிவுமீதும் ஆட்சி புரிகின்றது என்று டன்ஸ் ஸ்கோடஸ் கூறுகின்றார். ஒக்ஹம் இதை வலியுறுத்துகின்றார். ஆனால், ஞானி தாமஸ் அக்யுனஸ் அறிவின் சிறப்பைத்தான் சித்திரிக்கிறார்.

கிறித்துவச் சட்டமென்பது ஆண்டவன் அருள்மொழியை நிறைவேற்றுவது. ஆண்டவனின் நெறி நம்முடைய இதயப் பலகையில் வரையப்பட்டுள்ளது. அந்த உட்சான்றுக்குப் பணிந்து நடப்பதுதான் அறமாகும். இயற்கையும் ஆண்டவனுடைய ஓவியமே. அந்த ஓவியத்தில் அவன் கைத்திறனைப் பார்க்க இயலும். இயற்கை நமக்கு ஒரு பகையன்று. அதன் கருவிகளை வைத்துக் கொண்டே ஆண்டவன் அருட்கோயிலை நண்ணிவிடலாம். இடைக்காலத்து வெம்போர்களிடையேயும் சொற்சிலம்பின் சீற்றக் குரலிடையேயும் ஆண்டவன் அருட்குரலைக் கேட்டு மெய்ம்மறந்த அனுபூதிச் செல்வர்களும் உண்டு. அவர்கள் திரிந்த அருட்சோலையில் நாமும் சற்றுத் திரிவோமாக.

# 27. அனுபூதிச் செல்வர்கள்

மனிதன் விண்ணில் திரிகின்றான்; மண்ணின்மீது ஆட்சி புரிகின்றான்; நீருக்கடியின்கீழுஞ் சென்று தன்னுடைய வெற்றிக் கொடியை நாட்டுகின்றான்; விஞ்ஞானத் துறையில் பற்பல வியத்தக அருஞ்செயல்களைப் புரிகின்றான். ஆனால், சிந்தையை அடக்கியே சும்மா இருக்கின்ற திறத்தை அவன் ஓர்ந்தானில்லை. புலன் கடந்த தனிப்பட்ட ஓர் அனுபவம் இருக்கிறது என்பதை உணராமல், சிற்றின்பத்தில் ஆழ்ந்து ஊமனார் கண்ட கனவினும் பழுதாய்த் தன் வாணாட்களைக் கழிக்கின்றான். ஆனால், சிற்சில சமயம் அவன் மனத்தில் அமைதி குன்றிவிடுகின்றது. வாழ்வின் கசப்பை நுகரும்படி நேரிடுகின்றது. தான் யார் என்னும் வினா அவன் முன் எழுகின்றது. அவன் தன் ஆன்மாவைப்பற்றிய இரகசியங்களில் ஆழ்ந்துவிடுகின்றான். புறத்திலே போகின்ற மனத்தை அடக்கினால்தான் உள்ளொளி பெருகும். போரில் வெற்றி புரிகின்ற வீரன் வீரனல்லன்; அகத்துறை ஐம்புலக் கள்வர்களை அடக்கி, இழந்த சுவர்க்கத்தை மீட்பதே அனுபூதிச் செல்வர்களின் குறிக்கோளாகும்.

**'புன்புல வழியடைத்து அரக்கிலச் சினைசெய்து**
**நன்புல வழிதிறந்து ஞானநற் சுடர்கொளீஇ**
**என்பி லெள்கி நெஞ்சுருகி உள்கனிந் தெழுந்ததோர்**
**அன்பிலன்றி யாழியானை யாவர்காண வல்லரே'**

என்று திருமழிசைப்பிரான் இசைப்பது இங்குச் சிந்திப்பதற்குரியது. ஆற்றோடு மிதந்துபோவது எளிது. அதை எதிர்த்து நீந்திப் போராடி அதன் மூலத்தைக் கண்டுபிடிப்பதுதான் அருஞ்செயலாகும். ஐம்புலவழி செல்லும் மனத்தோடு மிதந்துபோவது யாருக்கும் எளிதே. பர ஆன்மாவைத் தேடி நீண்ட யாத்திரை புரிகின்றார்கள். மனத்தை மாசறக் கழுவிவிட்டால், இதயமே அவன் உறையுங் கோயிலாக அமைந்துவிடும். அப்பொழுது, அந்த உத்தமனைக் கண்டுவிட முடியும்.

எல்லோருமே ஆண்டவனை நாடித் திரிகின்ற யாத்திரிகர்கள்தாம். வழியோ ஒரு நீள்வழி. இடுக்கண்கள்களோ பல. ஆனால், உள்ளந் தளராது நாம் சென்றுகொண்டேயிருப்போமாயின், இறுதியில் ஆண்டவன் திருக்கோயிலை

நண்ணிவிடலாம். சிலர் முன்னரேயே சென்றுவிடுகின்றூர்கள் ; வேறு சிலர் பின் தங்கிவிடுகின்றூர்கள். ஆனல், அவர்களனைவரும் அங்குச் செல்பவர்களே. இந்த நிகரற்ற செல்வம் எல்லோராலும் நுகரக்கூடிய செல்வமே.

இடையருத தியானத்தாலும், எல்லாவற்றையும் துறத்தலாலும், ஆண்டவனையே உண்ணும் சோறும் பருகு நீருமாகக் கொள்ளுவதாலும், இந்தப் பேரின்ப வீடு எய்தப்படும்.

இந்த அனுபூதிச் செல்வ மலர் எந்த நாட்டுத் தோட்டத்திலும் சரி, எந்தக் காலத்திலும் சரி தன் மணத்தைச் சொரிந்துவிடும். அதற்குற்ற தெய்வச் சூழ்நிலை எழுமாயின், அங்கே அந்தக் கற்பக மலர் புன்முறுவல் பூத்து நிற்கக் காண்பீர்.

வேதகாலத்துச் சான்றேர்கள், இருடிகள் நேரில் ஆண்டவனைக் கண்டார்கள். ஆழ்வார்களும் நாயன்மார்களும் மெய்ம்மறந்து ஆடிஆடி அகங்கரைந்து ஆண்டவனுடைய அருளைப் பெற்றுவிட்டார்கள். ஸ்ரீராமகிருஷ்ண பரமஹம்சர், ரமண மகரிஷிகள், ஸ்ரீ அரவிந்தர் முதலிய செந்நெறி வித்தகர்கள், அனுபூதிச் செல்வர்கள் மாபெரு உண்மை ஒளியைப் பெற்றதை நாம் அறிவோம்.

மேனட்டில் இடைக்காலத்தில் தோன்றிய அனுபூதிச் செல்வர்கள் கண்ட உண்மைகளைச் சற்று ஆராய்வோம். ஒவ்வொருவரைப்பற்றியும் நாம் எழுத முயன்றேமானல். ஒவ்வொரு நீண்ட தனி நூலாய் அமைந்துவிடும் என்பதில் ஐயமில்லை.

ஆண்டவனை வழிபடுவதாயிருந்தால், அவனையே தஞ்சமாகப் புகவேண்டும். அருந்தியாகத்தாலும், ஐம்புலன்களை அடக்குவதாலும், உலகத்தையே தழுவக் கூடிய அன்பினுலும் பேரின்ப வீட்டை அடையமுடியும். மூன்று இனத்தார்கள் உண்மையை நாடச்சென்றூர்கள். விண்ணில் 'தா', 'தா', 'தா' என்னும் குரல் ஒலித்தது. மனிதன் பொருளின்மீது ஆசையைச் செலுத்தும் காரணத்தால், அவனுக்குற்ற அறிவுரை 'தத்த', 'கொடு' என்பது. அரக்கர்கள் இரக்கமற்றவர்களானபடியால், அவர்களுக்கு நல்கப்பட்ட நல்லுரை, 'தயத்வம், இரக்கம் காட்டுவாய்' என்பது. விண்ணுட்டவர் அளவுகடந்த களிவின்பத்தில் ஆழ்ந்து திளைக்கும் காரணத்தால், அவர்களுக்கு வழங்கப்பட்ட மெய்யுரை, 'தாம்மியத,' 'புலன்களை அடக்குக' என்பது.

தேவர்கள், மனிதர்கள், அரக்கர்கள் என்னும் இனங்கள் தனிப்பட்ட இனங்கள்ல்ல. நாமே ஒரு தருணம் அரக்கனைக் காட்சி அளிக்கலாம் ; மற்றொரு காலம் பேராசைப் பேய் பிடித்த மனிதனைத் தோன்றலாம் ; வேறொரு பொழுது இரக்கமற்ற கொடும் அரக்கனைத் திரியலாம். இத்தகைய சித்திரத்தைப் 'பிருகதாரணிய' உபநிடதம்' அளிக்கின்றது. அதே கருத்தை டீ. எஸ். எலியட் என்னும் கவிஞர் தம்முடைய 'பாழ்நிலம்' (Waste Land) என்னும் சிறந்த கவிதையில் மிக்க கவின்பெற வைத்து இழைத்துவிட்டார்.

ஓவியம், சிற்பம், இலக்கியம், இசை, நாடகம், தத்துவ ஆராய்ச்சிகள், விஞ்ஞானத் தத்துவப் படிப்பு — இவற்றிற்கெல்லாம் முற்றுப்புள்ளி போட்டு விட்டு, இவற்றிற்கு அப்பாலுள்ள அந்தப் பரம்பொருளை நாடவேண்டும். கலைகள் யாவும் நுண்ணிய புலனுகர்ச்சிளே என்பதை மறக்கக்கூடாது.

மேலினம், கீழினம் என்னும் ஆராய்ச்சி செய்வதால் யாது பயன்? 'ஆண்டவனை உள்ளன்போடு வழிபடுகிற ஓர் எளிய குடியானவன் செருக்குற்ற ஒரு தத்துவ வல்லுநனைக் காட்டிலும் சாலச் சிறந்தவன்' என்று, 'இயேசுநாதரின் அடிச்சுவட்டிலே' என்னும் நூலை அஞ்ஞான இருளில் நிலைதடுமாறும் உலகுக்கு அளித்த உத்தமனை தாமஸ் ஏகெம்பிஸ் மொழிகின்றார். தாமஸ் ஏகெம்பிஸ் ஒரு தத்துவஞானி அல்லர்.

1395ஆம் ஆண்டில் பாரிஸ் பல்கலைக்கழகத்திற்கு வேந்தராய்த் திகழ்ந்த ஜான் ஜெர்சன் (John Jerson) கூறிய பொன்மொழிகள் நம் சிந்தையைக் கவராமற்போகா.

வெறும் ஆணவத்தாலும், கல்விச் செருக்காலும், அழுக்காற்றாலும் உந்தப்பட்டுச் சொற்போர்கள் புரியும் புலமைக் கொள்கையினர்கள் யாது பயனடைந்தார்கள் என்று இவர் வினவுகின்றார். இதனால் இடைக்காலத்திலேயே இத்தகைய சமயச் சழக்குகள் மக்களிடையே ஒரு வெங்கசப்பை எழுப்பிவிட்டது. இந்தச் சழக்குகளின் பேய்க்குரல்களுக்கிடையே ஆண்டவன் அருளொளியைப் பெற்ற பெருந்தகையோர்கள், சான்றோர்கள், அனுபூதிச் செல்வர்கள் இவர்களுடைய அமரகீதமும் நம் செவியில் விழுகின்றதன்றோ?

கிறித்துவ சமயம் தோன்றுவதற்கு முன்பே ஆண்டவனை நேரில் கண்டு பேரின்பம் பெற்ற கீழைநாட்டுச் சான்றோர்கள் இருந்திருக்கிறார்கள் என்பதை நாம் நன்கு உணர்வோம். மேலைநாட்டிலும் அத்தகைய அனுபூதிச் செல்வர்கள் திகழ்ந்திருக்கிறார்கள் என்னும் உண்மையை எவராலும் மறுக்கமுடியாது.

தன் ஆன்மநிலையை அறிந்த சாக்ரடீஸ் ஓர் அனுபூதிச் செல்வர் என்பது அவர் வாழ்க்கை வாயிலாக நமக்கு நன்கு புலனாகின்றது.

பிளேட்டோவுக்கும் ஆன்மக் காட்சி ஏற்பட்டிருக்கவேண்டும். பிளேட்டோவின் வான்மொழிகளைப் பருகிப் பிளோடைனஸும் அத்தகைய தெய்விகக் காட்சியைப் பெற்றிருக்கவேண்டும். அவர் பரத்தை எய்திய தூயவன் என்பதை அவர் எழுதிய நூல்கள் மெய்ப்பிக்கின்றன.

கிறித்துவ அனுபூதி நெறிக்குத் தலையூற்றாய்த் திகழ்கிறவர் டையோனிஸியஸ் (Dionysius) என்பவர். ஆண்டவனுடைய பெருநலம் எங்கும் படிப்படியாய் எல்லோரிடத்தும் அருவிபாய்கின்றது. ஆண்டவனுடைய பூரணத்துவம் சொற்

பதங் கடந்தது. அவன் எல்லாவற்றிலும் உறைந்து நிற்கின்றான். எல்லாம் அவன் புகழ் இசைக்கின்றன, ஆனால், அவனுடைய குணங்கள் சொல்வலையில் சிக்கி விடா. எல்லாம் அவன் அமிசம் பெற்றிருப்பதால் அவனை எல்லாரும் நண்ண முடியும். கடவுளை அது அன்று, இது அன்று என்று இயம்பமுடியுமே தவிர, வேறு முறையில் அவனைச் சித்திரிக்க முடியாது என்று கூறுகிறார்.

இவருடைய நூலை ஞானி அகஸ்டைன் அறிந்துள்ளார். கி.பி. 9ஆம் நூற்றாண்டில் திகழ்ந்த எரிகினு (Erigena) இவருடைய நூலில் தோய்ந்தவர்தாம். ஞானி பெர்னார்ட், ஸெயின்ட் விக்டர் மடத்தைச் சார்ந்த ஹியூகோ (Hugo of St. Victor), அதே மடத்தைச் சார்ந்த ரிச்சர்ட் (Richard of St. Victor), ஞானி ஃபிரான்ஸிஸ் அடிச்சுவட்டைப் பின்பற்றுகிற ஞானி போன்வென்சுரா— இவர்கள் பரம்பரையாக அனுபூதி நெறியாம் வான்சுடரைப் போற்றி வளர்த்து வந்தார்கள். ஞானி தாமஸ் அக்யுனஸும் ஆண்டவன் அருளொளியை இறுதியில் பெற்றுவிட்டார் என்பதை அவருடைய வரலாறு நமக்குப் புலப்படுத்துகின்றது.

ஞானி பெர்னார்ட் கண்ட அனுபூதி நெறியைப் பார்ப்போம். அன்பு நெறியின் வாயிலாகத்தான் ஆண்டவனை அடையமுடியும். ஆண்டவனைக் காதலனாகவும் அடியார்களைக் காதலிகளாகவும் வைத்துப் பாடுகிற மரபு புதிதன்று. சாலமன் இசைத்த பாட்டுக்கொரு பாடல்' (The Song of Songs) என்னும் உயர்ந்த கவிதைக்கு விளக்கந் தருகிற முறையில் அன்பின் சிறப்பைச் சித்திரிக்கிறார். அன்பே சிவம் என்று நாம் இடையறாது கூறிக்கொண்டுதானே இருக்கின்றோம்.

'திருச்சபைதான் மணமகள், இயேசுநாதர்தாம் மணவாளர்' என்பர் ஒரு சாரார்; 'ஆன்மாதான் மணமகள், ஆண்டவன் அருள் மொழி தான் மணாளன்' என்பர் மற்றொரு சாரார்.

நாயக நாயகித் துறையில் நம்மிடையே எழுந்த பாக்கள் எண்ணிறந்தன என்பதை நாம் நம் மனத்தில் இருத்திவைத்துக்கொள்ளவேண்டும்.

அன்பை மூன்று வகையாகப் பிரிக்கின்றார். அடிமை தன்னுடைய தலைவன்பால் காட்டும் அன்பு; ஒரு பணியாளன் தன்னுடைய எஜமானனிடம் செலுத்தும் அன்பு; பிள்ளை தன் தந்தைபால் சொரியும் சுயநலமற்ற தூய அன்பு. இறுதியில் சித்திரிக்கப்பட்ட அன்புதான் சாலச் சிறந்ததாகும்.

தூய்மையான அருஞ்செயலிலும் ஈடுபடவேண்டும்; தியாகத்திலும் ஒருவன் ஆழ்ந்து இருக்கவேண்டும்; தன் குற்றங்குறைகளை உணர்ந்து மனம் நைந்து உருகி ஆண்டவனிடம் மன்னிப்புக் கேட்கவேண்டும். ஒருவன் தன்னிடத்தில் ஆண்டவனுடைய உருக் கண்டு அவனை நேசிக்கவேண்டும். ஆண்டவனைக் காணாதவிடத்து அவனிடத்தில் ஆண்டவனை எப்படி உணரமுடியும்? சிந்தையாலும், செயலாலும், உரையாலும் இவன் ஆண்டவனை நண்ணினால், அவன், இவன்மீது தன் அருள் முகிலைப் பெய்வான்.

நம்முடைய உளமாம் ஏரியைத் தக்கபடி அமைத்துவைத்திருப்போமாயின், அவன் அருள்முகில் பொழிகிறபொழுது அந்த அருளமுதம் அதில் பாயாமற் போகாது என்பது திண்ணம். ஹியூகோ (Hugo of St. Victor) என்பவர் அனுபூதிநெறியைப் பின்பற்றுகிறவர். இடையறாத தியானத்தின்மூலமாகத்தான் ஆண்டவனை நண்ணமுடியும். ஆண்டவன் அருள்தான் இறுதியில் நமக்குத் துணை புரியும். ரிச்சர்ட் இவருடைய அடிச்சுவட்டைப் பின்பற்றியே தம் கருத்துகளை மொழிகின்றார்; தியானமாம் ஏணிப்படிகளைச் சித்திரிக்கிறார். பகுத்தறிவாலும் தருக்க ஆற்றலைக்கொண்டும் ஆண்டவன் திருவருளை எய்திவிடமுடியாது. அவனுடைய அருள்நோக்கு வேண்டும். ஞானி போனவென்சுராவின் வரலாற்றை நாம் முன்னமே மொழிந்துவிட்டோம். ஃபிரான்ஸிஸின் வாழ்க்கை இயேசுநாதரின் வாழ்க்கைக்கே ஓர் உரைபோலத் திகழ்கின்றது. வறுமையை ஏற்று மக்களிடம் அன்புபூண்டு அரிய தொண்டாற்றவேண்டும். இவருடைய அடிச்சுவட்டைத்தான் ஞானி போனவென்சுரா பின்பற்றுகின்றார்.

அடிக்கின்ற காற்றிலும் அலர்கின்ற மலரிலும் இறைவனின் எழிலை அவர் கண்டதேபோல் இவரும் காண்கின்றார். பேரின்பம் என்பது எல்லோருக்குமுரியதே. உலகத்தை வெறுக்காது, அதை அவன் வரைந்த உயிரோவியம் என்று கருதி அதன் வனப்பைப் பருகவேண்டும். தாயுமானவர் மலரில் ஆண்டவனின் தெய்வ முறுவல் கண்டாரன்றோ! நடை, உடை, பாவனை—உளம், உரை, செயல் —சுருங்கக் கூறுமிடத்து, எல்லா அமிசங்களிலும் இயேசுநாதரின் அடிச்சுவட்டைப் பின்பற்றியே நடக்கவேண்டுமென்று இவர் வற்புறுத்துகின்றார். ஏக்கார்ட் (Eckhart, 1260 — 1327) அனுபூதிச் செல்வ உலகத்தில் ஒரு தனிச் சிறப்பு வாய்ந்த இடம் பெற்றிருக்கிறார். இவர் ஜெர்மன் நாட்டைச் சார்ந்தவர். ஆட்டோ என்பவர் 'அனுபூதிநெறி—குணதிசை, குடதிசை' (Mysticism-East and West) என்னும் தம் சிறந்த நூலில் சங்கரருக்கும் இவருக்குமுள்ள ஒற்றுமைகளை அவரவர் நூல்களிலிருந்து மேற்கோள்கள் காட்டி நன்கு புலப்படுத்தியிருக்கின்றார். படைப்புகளனைத்தும் ஒன்றுமே இல்லை என்று இவர் கூறுகின்றார். சங்கரரும் மாயாவாதத்தை ஆள்கின்றாரன்றோ! 'ஆன்மா இறக்கவுமில்லை! பிறக்கவுமில்லை. அது பரமான்வோடு இரண்டறக் கலந்துவிடுகின்றது. வெறும் சைதன்னிய மட்டுந்தான் இலங்கி நிற்கின்றது. ஞானந்தான் மோட்சம் அல்லது விடுதலை; ஆன்மா எஞ்ஞான்றும் கட்டுப்படவில்லையே. அதற்கு மோட்சமுமில்லை; பந்தமுமில்லை. அதை உள்ளவாறு அறிந்தால்மட்டும் போதும். கடவுள் என்று நாம் கூறுவது வழிபடுதற்பொருட்டே தவிரப் பிறிதன்று.

இவர் இறைமையைப் (Godhead) பற்றித்தான் பேசுகின்றார். அந்த இறைமை தந்தையான கடவுளாகக் காட்சி அளிக்கின்றது; மகனை இயேசுநாதராய் விளங்குகின்றது; பரிசுத்த ஆவியாக (Holy Ghost) மிளிர்கின்றது. குணம், நிர்க்குணம் என்று அத்துவைதிகள் வாதாடுகின்றார்களல்லவா?

ஒரு நாள் தம்முடைய நண்பர்களுக்கு ஏக்கார்ட் தம்முடைய அனுபவத்தைக் கூறினர். "நான் அறிவுரை வழங்கிய நங்கையின் ஆன்ம முன்னேற்றத்தைப்பற்றிக் கேட்பீராக. அவள் உரைத்தது இதுதான்: 'என் ஆன்மா எங்கேயோ போய்க் கொண்டிருந்தது; கடைசியாக நானே கடவுளென உணர்ந்தேன்' 'I am God' என்று அவள் இயம்பினள்." இவ்வுரையைக் கேட்ட ஏக்கார்ட்டின் நண்பர்கள், 'போற்றி போற்றி' என்று கடவுளின் புகழ் பாடினர்களாம். 'ஸோகம் ஸோகம்' என்று நாமும் நவில்கின்றோமன்றோ! நம்மாழ்வார், 'காண்கின்ற கடலெல்லாம் யானே' என்றும், 'காண்கின்ற விசும்பெல்லாம் யானே'! என்றும் இசைக்க வில்லையா? பேரின்ப நறவை உண்டவர்கள் இப்படித்தான் பாடுவார்கள்.

ருயிஸ்புரோக் (Ruysbroeck) பிரஸ்ஸல்ஸ் (Brussels) என்னும் நகரத்திற்கு அண்மையிலுள்ள ஒரு சிற்றூரில் 1293ஆம் ஆண்டு பிறந்தார். 1317ஆம் ஆண்டு இவர் ஒரு பாதிரியானர்; 26 ஆண்டுகள் பிரஸல்ஸிலேயே சமயப் பணி ஆற்றிவந்தார். இவர் நடத்திய யாத்திரை அன்பாம் ஞாலத்திலேதான் என்று இயம்பிவிடலாம். தியானந்தான் இவர் பின்பற்றிய பாதையாகும். அன்பின் வளர்ச்சிப் படிகளைத்தான் தியானம் சுட்டும். முதலில் சொற்பதங் கடந்த ஞான ஒளி ஏற்படுகின்றது. பின்பு ஓர் அருள் உரைக்கவொணுத — ஓர் அருள் நம்முடைய ஆன்மாவின் இராச்சியத்தின்மீது ஆட்சிபுரிந்துவிடும். இதன் விளைவாக அந்தப் பரம்பொருளில் நாம் கரைந்துவிடுகின்றோம். ஆன்மா கடவுளிலும், கடவுளில் ஆன்மாவும் காட்சி அளித்துவிடும். ஒருமையை ஓர்ந்தவனுக்கு மயக்கமும் துயரும் இல்லை. எவன் எல்லாப் பொருள்களிலும் தன்னைக் காண்கின்றானே, எல்லாப் பொருள்களையும் தன்னிடத்தில் காண்கின்றானே அவன் அறிவுபடைத்த சான்றோனாவான் என்று உபநிடதங்கள் உரைக்கின்றன.

காத்தரின் (Catherine of Siena) என்னும் நங்கை 1347 ஆம் ஆண்டு பிறந்து 1380ஆம் ஆண்டு மாண்டுபோனாள். இவள் ஏசுநாதரையே மணப்பேன் என்று திடநம்பிக்கையோடு எல்லா இன்னல்களையும் ஏற்ற காரணத்தால் இயேசுநாதரே இவளை மணந்தாராம். இவளுடைய திருமணச் சடங்குகள் மிகச் சிறப்புடன் நடந்தனவாம். அவன் தந்த கைமோதிரத்தையும் இவள் தன்விரலில் விளங்கக் காண்பாளாம். அத்தகைய அனுபவத்தைப் பெரியாழ்வார் கண்ட பொற்கொடியான ஆண்டாளும் எய்தினள் என்பது அந்த அம்மை இசைத்த பாடல்களால் நாம் நன்கு உணர்கின்றோம். 'கைத்தலம் பற்றக் கனாக்கண்டேன்' என்று அவர் பாடுகின்றாரன்றோ!

ஹென்றி ஸுஸோ (Henry Suso 1295—1366) என்னும் அனுபூதிமான் ஆண்டவனின் திருமுகத்தைக் காணவேண்டும் என்று அல்லும்பகலும் ஆடியாடி அகங்கரைந்தார். ஆண்டவனுக்கும் ஓர் அடியவருக்கும் நடந்த உரையாடல் வாயிலாக ஆண்டவனின் வான்பெருமையைச் சித்திரிக்கிறார்:

'என்னை நாடுகின்றவர்களை நான் தேடிப்பிடிக்கின்றேன். அடியவர்கள் அடைகின்ற இன்பமெல்லாம் என் கருணைக் கடலிலிருந்து தெறித்த ஒரு துளியேயாகும்' என்று இறைவன் இயம்புகின்றான்.

இங்கிலாந்தில் பிறந்த ரிச்சர்ட் ரோலே (Richard Rolle, 1300—1349) கண்ட கடவுள் அனுபவமும் நம் சிந்தையை ஈர்க்கின்றது. 'அன்பே, உன் சுடர் என் இதயத்தில் வில் வீசட்டும்; மற்றைய காமங்களைச் சுட்டெரித்துவிடு ஆண்டவனே, உன் அன்பால் என் இதயத்தை நிரப்பிவிடு' என்று இவர் இறைஞ்சுகின்றார். இத்தகைய அனுபூதி நெறி உணர்ச்சி ஆண்டவனை நினைப்பூட்டுகின்றது.

ஜான் தாலர் (John Tauler, 1304—1361) தந்த சித்திரம் நம் உளத்தைக் கவராமற்போகாது. ஆசாபாசங்களாம் வெங்கோய்கள் நம்மைத் துரத்துகின்றன. நாம் ஒரு மான்போல ஓடி ஓடிக் களைத்துவிடுகின்றோம். மிகுதியான நீர்வேட்கை எழுகின்றது. இறுதியாக நமக்கு அவனுடைய அருட்குணம் காட்சி அளிக்கின்றது. அச்சமெலாம் தீர்ந்து. அந்த அருளமுதத்தை நாம் பருகுகின்றோம். ஆண்டவன் வேண்டுவதுயாதெனில், மாசு மறுவற்ற உளமாம் கோயிலே. அவன் விட்ட வழிப்படி நாம் நடப்போம்' என்கிறார். சரணாகதித் தத்துவத்தைத் (absolute self-surrender) தான் இவர் வற்புறுத்துகின்றார். அடைக்கலநெறிதான் இவர் போற்றும் நெறியாகும். 'அறியாமையாம் முகில்' (The cloud of unknowing) என்னும் நூலை எழுதினவர் இன்னாரெனத் தெரியவில்லை. மனத்தில் யாதொரு சங்கற்பமில்லாமலிருப்பதுதான் ஆண்டவனை அடையும் நெறியாகும். நாம் தெரிந்துகொள்ள வேண்டியது நம்முடைய அறிவின்மையையே. 'எவன் தெரிந்துகொண்டேன் என்று உரைக்கின்றானோ அவன் அறிந்துகொள்ளவில்லை; எவன் அறியமுடியாதென்று பணிவுடன் மொழிகின்றானோ அவன்தான் உண்மையான ஆன்மஞானத்தைப் பெற்றவன்' என்று உபநிடதங்கள் சாற்றுகின்றன. 'அறியாமைதான் என் ஆராதனை' என்று கம்பர் இயம்பினதாக ஒரு தனிப்பாடல் உண்டு.

நார்விச்சைச் சார்ந்த ஜூலியன் (1342—1415) என்னும் ஞானப் பெண்மணி அருளிய மொழிகளைப் பார்ப்போம். 'ஆண்டவன் தன் அருள்துகிலால் நம்மை மூடிக் காப்பாற்றுகின்றான். எத்தகைய இடுக்கண்களும் இன்னல்களும் நம்மைச் சாரா. ஏத்தகைய கொடிய பாவங்களும் அவன் மாபெரும் அன்பாம் நீரில் கரைந்துவிடும். அவன்தான் நமக்கு உற்ற களைகண் என்று உன்னுவாய் மனமே' என்று மொழிகின்றாள் இந்த ஞானப் பெண்மணி. வால்டர் ஹில்டன் (Walter Hilton) என்பவருடைய வாழ்க்கை வரலாற்றைப்பற்றி நமக்கு ஒன்றும் கிடைக்கவில்லை. 1396ஆம் ஆண்டு இவர் திருநாட்டை அலங்கரித்ததாகத் தெரிகின்றது. 'முழுநிறைவின் ஏணி' (The Ladder of Perfection) என்னும் நூல்தான் இவருடைய சிறந்த நூலாகும். 'ஆர்வமிக்க ஓர் அடியாரின் யாத்திரை' என்று ஓர் உருவகக் கதையையும் புனைந்திருக்கிறார். 'நீ போகின்ற வழியிலே ஆபாசங்களாம் பகைவர்கள் கரந்து நிற்பார்கள். அவற்றிற்கு நீ இரையாகிவிடாதே. அவற்றைக் கண்டு நீ அஞ்சவேண்டா. அவன் அருளொளியைக்கொண்டு நீ போய்க்கொண்டே யிருப்பாயாக. ஆண்டவன் அருட்கோயில் உன் கண்முன் நிமிர்ந்து

நிற்கும். கையறு கவலையை மாற்றி அவனுடைய அருளாம் சிறகுகளின்கீழ் நீ இன்பமாய் உறைவாயாக' என்கிறார் அவர்.

கூஸாவைச் சார்ந்த நிக்கலஸ் (Nicholas of Cusa) 15ஆம் நூற்றாண்டில் திகழ்ந்திருந்தாலும், புலமைக் கொள்கையினரின் மரபாம் மடியில் தாலாட்டப் பட்டவர் என்பது அவர் நூல்களைத் துருவி ஆராய்வோர்களுக்கு நன்கு புலனாகும். மறுமலர்ச்சிக் காலத்துத் தத்துவ வல்லுநரின் சாயையும் இவர் கொண்ட தத்து வத்தின்மீது படரக் காண்கின்றோம்.

1401ஆம் ஆண்டு இவர் கூஸாவில் பிறந்தார்; படுவா முதலிய பல்கலைக் கழகங்களில் கல்வி பயின்றார். அரசியல்துறையில் இவர் தேர்ந்த கருத்து நாம் சிந்திப்பதற்குரியது. அரசைத் திருச்சபைக்குக் கீழ்ப்படுத்த இவர் விரும்பவில்லை. இவ் விரண்டும் இயைந்து மன்னுயிர்களுக்குப் பணியாற்றவேண்டும் என்பதே இவருடைய கொள்கையாகும். வாழ்க்கையில் காணப்படுகின்ற முரண்பாடுகள் யாவும் ஓர் இசைவில் கரைந்துவிடுகின்றன. பகைநரம்பின் ஒலிகள் யாவும் அவிந்து, வாழ்வாம் தேன்பிழி மகரயாழ் ஆண்டவன் புகழ் பாடுகின்றது. இருப்பும் (existence), உள்ளியல்பும் (essence) ஆண்டவனிடத்தில் ஒன்றாய் ஒளி விடு கின்றன. நம்முடைய நிலையோ வேறு என்பது சொல்லாமலேயே விளங்கும். உளம் ஒன்று நாடும்; உரை ஒன்று பேசும்; செயல் இவ்விரண்டிற்கும் முரண்பட்டிருக்கும். எல்லாம் ஒரே சுருதியில் பேசினால்தான் மனிதன் உய்யமுடியும் என்பதை இவர் தேர்ந்துவிட்டார். 'நேதி, நேதி,அது இல்லை, இது இல்லை' என்னும் சொல்லால்தான் ஆண்டவனைச் சித்திரிக்கமுடியும் என்று இவர் மொழிகின்றார். உயர்வற உயர்ந்த ஆண்டவனுக்கு இலக்கணம் அவனே தவிரப் பிறிதில்லை. அனைத்திறைக் கொள்கையை இவர் ஏற்கின்றாரோ என்னும் கருத்து நம் மனத்தில் முளைக்க இட முண்டு. இவர் வழங்கும் சொற்கள் அத்தகைய கருத்தைப் புலப்படுத்துகின்றன. கடவுள் எல்லாப் பொருள்களிலும் கரந்து (immanent) நிற்கின்றார்; அவற்றைக் கடந்தும் நிற்கின்றார். 'உடல்மிசை உயிரெனக் கரந்துளன்' என்ற நம்மாழ்வார் கருத்திற்கேற்ப இவருடைய அறிவுரையும் அமைந்திருக்கிறது (God is the absolute essence of the world or univese). பிண்டாண்டத்தில்(Microcosm) அண்டாண்டத்தின் (Macrocosm) இயல் பிரதிபலிக்கின்றது. விஞ்ஞானப் பண்பாடும், அனுபூதிநெறியின்பால் இவருக்குற்ற ஆர்வமும் கலந்து ஒரு தனிச் சுடரைத் தூண்டுகின்றன. ஒருமைக் கொள்கையை நாடினாலென்ன? அனைத் திறைக் கொள்கைக்குக் கைகூப்பினாலென்ன? பன்மைக் கொள்கையைப் போற்றினாலென்ன? கடவுள் எல்லாவற்றையும் கடந்தவரா அல்லது எல்லா வற்றிலும் கரந்து நிற்கின்றாரா என்னும் கொள்கையைச் சுற்றிச் சொற்போர்கள் எழுப்பினால் என்ன? நாம் பருகவேண்டியது அவன் அருளமுதத்தையே. 'அமுதம் வைத்திருக்கும் கலங்களைப்பற்றிப் போர்புரியாதீர்கள்; நாம் நுகர வேண்டியது அமுதமே' என்று ஸ்ரீ அரவிந்தர் கூறுகின்றார்.

இடைக்காலத்து அனுபூதிச் செல்வர்கள் ஏற்றிவைத்த ஞானதீபத்திற்கு யாம் வணக்கம் செய்வோமாக. தற்காலத் தத்துவ உலகத்திற்கும் அது வழி காட்டும் என்பதில் நிழலாடும் ஐயமும் இல்லை.

# BIBLIOGRAPHY

(எனக்குத் துணைபுரிந்த நூல்கள்)

St. Augustine : Confession

St. Augustine : The City of God

Copleston : Thorn as Aquinas

Copleston : Medieval Philosophy

Copleston : A History of Philosophy

Vol II : Augustine to Scotus

Vol III : Ockham to Su Arez

Chesterton : Francis of Assisi

Dante : Devine Comedy

M. C. D'Arcy : Thomas Aquinos

Fisher : History of Europe

Gilson : Philosophy of St. Thomas Aquinas

Gilson : Spirit of Medieval Philosophy, Vol I and II

Harris : Duns Scotus

Lane Poole : The History of Medieval Thought and Learning

Phillips : Modern Thomistic Philosophy, Vol I & II

Russell : A History of Western Philosophy

Taylor : The Medieval Mind, Vol I & II

M. De Wulf : History of Medieval Philosophy, Vol I & II

## கலைச்சொற்கள்

### (ஆங்கிலம்—தமிழ்)

| | | |
|---|---|---|
| Absolute | — | பரம்பொருள் |
| Absolutism | — | பரம்பொருட் கொள்கை |
| Abstract | — | அருவமான |
| Age,ancient | — | பண்டைக்காலம் |
| Age,medieval | — | இடைக்காலம் |
| Age,modern | — | இக்காலம் |
| Agnostic | — | அறியொணுக் கொள்கையினர் |
| Agnosticism | — | அறியொணுக் கொள்கை |
| Algebra | — | இயற்கணிதம் |
| Analogy | — | ஒப்புமை |
| Analogical reasoning | — | ஒப்புமுறை ஆய்வு |
| Apriori | — | புலச்சார்பற்ற |
| Archetypes | — | மூலமாதிரிகள் |
| Atheism | — | இறையில் கொள்கை |
| Becoming | — | ஆக்கநிலை |
| Being | — | இருந்தபடி இருத்தல் |
| Canons | — | நியதிகள் |
| Cognition | — | அறிவுநிலை |
| Conservative | — | பழமை பேணும் கட்சியினர் |
| Consistency | — | முரணுமை |
| Cosmology | — | பிரபஞ்ச இயல் |
| Deduce | — | உய்த்துணர் |
| Dialectics | — | முரண்நிலைத் தருக்க இயல் |
| Duality | — | இருமை |
| Dualism | — | இருமைக் கொள்கை |
| Eclectic | — | நன்மை திரட்டும் |
| Eclecticism | — | நன்மை திரட்டும் கொள்கை |
| Ego | — | அகம், நான் |

| | | |
|---|---|---|
| Essence | — | சாறு, சத்து |
| Ethics | — | அறவியல் |
| Existence | — | இருத்தல் |
| Faith | — | சிரத்தை |
| First principles | — | மூலதத்துவங்கள் |
| Gospel | — | நற்செய்தி |
| Grace | — | திருவருள் |
| Holy ghost | — | பரிசுத்த ஆவி |
| Imagination | — | கற்பனை |
| Immanence | — | அகனமர்ந்த |
| Incarnation | — | அவதாரம் |
| Induction | — | தொகுப்புவழி அளவை |
| Introspection | — | அகக்காட்சி |
| Intuition | — | உள்ளுணர்வு |
| Knowledge | — | அறிவு |
| Known object | — | அறிபொருள் |
| Logic | — | அளவை இயல் |
| Logic, deductive | — | பகுப்புவழி அளவை இயல் |
| Logic, inductive | — | தொகுப்புவழி அளவை இயல் |
| Macrocosm | — | அண்டம் |
| Medieval philosophy | — | இடைக்காலத் தத்துவம் |
| Metaphysics | — | அடிப்படைத் தத்துவம் |
| Monastery | — | மடம் |
| Monism | — | ஒருமைக் கொள்கை |
| Mystic | — | அனுபூதிமான் |
| Mysticism | — | அனுபூதிநெறி |
| Nominalism | — | பெயருண்மைக் கொள்கை |
| Ontology | — | உண்மை இயல் |
| Optics | — | கண்ணொளியியல் |
| Optimism | — | நன்னம்பிக்கைக் கொள்கை |
| Pantheism | — | அனைத்திறைக் கொள்கை |
| Pessimism | — | துன்பக் கொள்கை |
| Philosopher | — | தத்துவ அறிஞர் |
| Pluralism | — | பன்மைக் கொள்கை |

| | |
|---|---|
| Political philosophy | — அரசியல் தத்துவம் |
| Realism | — காட்சிப் பொருட் கொள்கை |
| Revelation | — இறைவழி வெளிப்பாடு |
| Salvation | — முக்தி |
| Sceptics | — ஐயக்கொள்கையினர் |
| Scholasticism | — புலமைக் கொள்கை |
| Scepticism | — ஐயக்கொள்கை |
| Species | — கிளை இனம் |
| Syllogistic method | — முக்கூற்று முடிவு |
| Transcendental | — கடந்தநிலை |
| Transcendental idealism | — கடந்தநிலைக் கருத்துக் கொள்கை |
| Trinity | — மூவுரு |
| Ultimates | — முடிபுத் தத்துவங்கள் |
| Universal | — பொதுமை |
| Universe | — பிரபஞ்சம் |
| Will | — சங்கற்பம், இயற்றிநிலை |
| Wisdom | — மெய்யறிவு |

# பொருட் குறிப்பு அகராதி

ர



ல



வ



ஹ



ஸ



ஷ



ஜ

# தமிழ் வெளியீட்டுக் கழகம்

சென்னை-9.

## 1965 வரை வெளியிட்டுள்ள நூல்கள்

### பொருளாதாரம்

| | நூல் | ஆசிரியர் | ரூ. | பை |
|---|---|---|---|---|
| *1. | பொருளாதாரம்-II | சி. வேலாயுதம் | 9 | 00 |
| 2. | புதுமைப் பொருளாதாரக் கூறுகள் | டாக்டர் திருமதி ஆர். தாமரஜாட்சி | 12 | 00 |
| 3. | பொருளாதாரம் ஓர் அறிமுகம்-I | தி. சி. மோகன் | 12 | 00 |
| 4. | பொருளாதாரம் ஓர் அறிமுகம்-II | எம். ஏ. அபூர்வசாமி, பி. வி. ஸ்ரீநிவாசன் | 10 | 75 |
| 5. | பொருளாதாரக் கோட்பாடு வளர்ந்த வரலாறு | க. முத்தையன் | 7 | 00 |
| *6. | பணவியலும் பாங்கியலும்-II | சி. வேலாயுதம் | 11 | 50 |
| 7. | நவீன பாங்கு இயல் | க. வெற்றிவேல் | 7 | 50 |
| *8. | இந்தியச் செலாவணியும் பாங்கு முறையும் | பி. வி. ஸ்ரீநிவாசன் | 5 | 50 |
| *9. | அரசாங்க நிதி இயல் | அர. சேஷாசலம் | 4 | 75 |
| 10. | இந்தியப் பொருளியல்-I | எம். பாலசுப்பிரமணியன் | 10 | 00 |
| 11. | இந்தியப் பொருளியல்-II | எம். லூர்துநாதன் | 4 | 25 |
| 12. | நமது பொருளாதாரப் பிரச்சினை-I | சி. சுந்தரராஜன் | 10 | 75 |
| 13. | நமது பொருளாதாரப் பிரச்சினை-II | எஸ். குழந்தைநாதன் | 10 | 50 |
| 14. | இங்கிலாந்தின் பொருளாதார வரலாறு-I | கீ. சீ. இராமசாமி | 6 | 00 |
| 15. | இங்கிலாந்தின் பொருளாதார வரலாறு-II | ” | 6 | 00 |
| 16. | அமெரிக்காவின் நவீன பொருளாதார வளர்ச்சி... | தி. சி. மோகன் | 5 | 00 |
| 17. | அமெரிக்கப் பொருளாதார வரலாறு-I | மு. க. சுப்பிரமணியம் | 11 | 00 |
| 18. | அரசாங்க நிதியியலின் பொருளாதாரம்-I | மா. குமாரசாமி | 10 | 00 |
| 19. | இந்தியாவின் பொருளாதார வளர்ச்சி-I | தே. வேலப்பன் | 10 | 00 |
| 20. | பணம் சிறு விளக்கம் | கோ. இராதாகிருஷ்ணன் | 10 | 00 |

*மூல நூல் (Original Book)

| | | | ரூ. | பை. |
|---|---|---|---|---|
| *21. | வணிக இயலின் தத்துவங்கள் | கு. ஆளுடைய பிள்ளை | 9 | 50 |
| 22. | பத்தொன்பதாம் நூற்றுண்டில் கிரேட் பிரிட்டனில் தொழில் வாணிபப் புரட்சி | கு. ரா. கருப்பண்ணன் | 11 | 00 |

**வரலாறு**

| | | | | |
|---|---|---|---|---|
| *23. | பிரிட்டன் வரலாறு-I | கி. ர. அனுமந்தன் | 10 | 00 |
| *24. | பிரிட்டன் வரலாறு-II | ,, | 9 | 75 |
| *25. | ஐரோப்பிய வரலாறு-I | டி. வி. சொக்கப்பா | 4 | 50 |
| 26. | ஐரோப்பா—கடந்த ஐந்து நூற்றுண்டு காலச் சரித்திரம் | வை. விருத்தகிரீசன் | 15 | 00 |
| 27. | இங்கிலாந்து வரலாறு-I | இரா. அண்ணாமலை | 13 | 00 |
| 28. | இங்கிலாந்து வரலாறு-II | பா. மாணிக்கவேலு | 13 | 00 |
| 29. | இங்கிலாந்தின் வரலாறு-I | க. த. திருநாவுக்கரசு | 15 | 00 |
| 30. | இந்தியாவின் சிறப்பு வரலாறு-I | தி. வெ. குப்புசாமி | 7 | 50 |

**அரசியல்**

| | | | | |
|---|---|---|---|---|
| *31. | இந்திய அரசியலமைப்பு | வீ. கண்ணையா | 4 | 75 |
| 32. | அரசியலுக்கு ஓர் அறிமுகம் | டி. செல்லப்பா | 8 | 50 |
| 33. | தற்கால அரசியல் அமைப்புகள் | மோ. வள்ளுவன் கிளாரான்சு | 8 | 50 |
| 34. | பன்னாட்டு அரசியல்-I | திருமதி நூர்ஜஹான்பாவா | 16 | 00 |
| 35. | பொதுத்துறை ஆட்சி இயல்-I | வீ. கண்ணையா | 9 | 00 |
| 36. | பொதுத்துறை ஆட்சி இயல்-II | அ. ஜெகதீசன் | 7 | 25 |

**உளவியல்**

| | | | | |
|---|---|---|---|---|
| 37. | குழந்தை உளவியல்-I | கி. ர. அப்புள்ளாச்சாரி | 8 | 00 |
| 38. | குழந்தை உளவியல்-II | கி. ர. அப்புள்ளாச்சாரி | 7 | 00 |
| 39. | உட்கவர் மனம் | சி. ந. வைத்தீஸ்வரன் | 7 | 00 |

| எண் | நூல் | ஆசிரியர் | ரூ. | பை. |
|---|---|---|---|---|
| 40. | இளையோர் உளவியல்-I | தி. இரா. அரங்கராசன் | 12 | 00 |
| 41. | இளையோர் உளவியல்-II | ,, | 9 | 00 |
| 42. | சமூக உளவியல் | என். வேதமணி மானுவேல் | 9 | 25 |
| 43. | பிறழ்நிலை உளவியல் | அ. பெசன்ட் கிரீப்பர்ராஜ் | 11 | 00 |
| 44. | பித்தரின் உள்ளம் | ,, | 3 | 00 |
| **தத்துவம்** | | | | |
| 45. | இந்து சமயத் தத்துவம் | ஞா. ராஜாபகதூர் | 5 | 50 |
| **அறவியல்** | | | | |
| 46. | அறவியல்-ஓர் அறிமுகம் | கோ. மோ. காந்தி | 8 | 50 |
| **அளவையியல்** | | | | |
| 47. | அளவை இயல்-தொடக்க நூல் | கி. ர. அப்புள்ளாச்சாரி | 2 | 50 |
| **மானிடவியல்** | | | | |
| *48. | மானிடவியல் | ம. சு. கோபாலகிருஷ்ணன் | 4 | 75 |
| 49. | பண்பாட்டுக்கோலங்கள் | கி. பூ. சுப்பிரமணியன் | 5 | 50 |
| **சமூகவியல்** | | | | |
| 50. | சமூகவியலின் அடிப்படைக் கோட்பாடுகள் | ஜெ. நாராயணன் | 10 | 00 |
| **புவியியல்** | | | | |
| *51. | ஆசியா-I | கொ. சேஷ நரசிம்மன் | 9 | 50 |
| *52. | ஆசியா-II | ,, | 8 | 75 |
| *53. | ஐரோப்பாக் கண்டத்தின் புவியியல் | ஏ. எஸ். நாராயணன் | 8 | 50 |

*மூல நூல் (Original Book)

| எண் | நூல் | ஆசிரியர் | ரூ. | பை. |
|---|---|---|---|---|
| *54. | வடஅமெரிக்கா | குமாரி இரா. அலமேலு | 8 | 25 |
| *55. | தென் கண்டங்கள்-ஆஸ்திரேலியா | திருமதி எச். நியூமன் | 4 | 00 |
| *56. | புவிப்புறவியல்-II | நா. அனந்த பத்மநாபன் | 6 | 00 |
| *57. | செய்முறைப் புவியியல் | சு. ஜெயச்சந்திரன் | 9 | 00 |
| *58. | மக்கட் பரப்பியல் | வி. எஸ். அனந்தபத்மநாபன் | 6 | 25 |
| *59. | சமுத்திரவியல் | கோ. இராமசுவாமி | 6 | 50 |
| 60. | காலநிலை இயல்-I | கொ. சேஷ. நரசிம்மன் | 10 | 00 |
| 61. | வளியியலுக்கு ஓர் அறிமுகம் | கோ. இராமசுவாமி | 11 | 00 |
| *62. | புவி அமைப்பு இயல் | சி. விசுவநாதன் | 4 | 75 |

## புள்ளியியல்

| எண் | நூல் | ஆசிரியர் | ரூ. | பை. |
|---|---|---|---|---|
| *63. | புள்ளியியல்-அறிமுகம் | சு. வைத்தியநாதன் | 10 | 00 |
| 64. | புள்ளியியல் முறைகள்-I | கோ. சண்முகசுந்தரம் | 10 | 00 |
| 65. | நம்மைச் சுற்றியுள்ள பேரண்டம் | தி. வி. லட்சுமி நரசிம்மன் | 6 | 50 |

## விலங்கியல்

| எண் | நூல் | ஆசிரியர் | ரூ. | பை. |
|---|---|---|---|---|
| *66 | விலங்கியல் | பெ. மா. அண்ணாமலை, இரா. முருகேசன் | 12 | 00 |

## பௌதிகவியல்

| எண் | நூல் | ஆசிரியர் | ரூ. | பை. |
|---|---|---|---|---|
| 67. | ஒளி நூல் | ச. சம்பத்து | 10 | 00 |

## பொது நூல்கள்

| எண் | நூல் | ஆசிரியர் | ரூ. | பை. |
|---|---|---|---|---|
| 68. | மகாத்மா காந்தி | சரஸ்வதி தங்கையன் | 3 | 25 |
| 69. | இந்தியாவில் குடியானவர் வாழ்க்கை | எஸ். இலட்சுமி | 3 | 50 |
| 70. | விவசாயப் புரட்சி | வி. கார்த்திகேயன் | 8 | 00 |
| 71. | சேமக்கைகை-நூல் | ஆ. சுப்பிரமணியன் | 2 | 50 |
| *72. | நீரிழிவு-க்ஷயரோகம் | ஜி. வெங்கடசாமி, ஏ. கதிரேசன் | 2 | 50 |

*மூல நூல் (Original Book)

## தமிழ் வெளியீட்டுக் கழகப் புதிய வெளியீடுகள், 1966

**வரலாறு**

கிரேக்க நாட்டு வரலாறு-I, II, III — ஜே. பி. ப்யூரி

**அரசியல்**

ஆங்கிலேயப் பயன்வழிக் கொள்கையினர் — பிளமனட்ஸ்
பொதுத்துறை ஆட்சியியலுக்கு ஓர் அறிமுகம்-I, II — வியனர்ட் டீ. ஒயிட்

**பொருளாதாரம்**

பென்ஹாம் பொருளாதாரம்-I, II — ஃபிரெடெரிக் பென்ஹாம்
வரவுசெலவுத் திட்டம் — ஆர். ரங்காச்சாரி

**தத்துவம்**

அறிவு ஆராய்ச்சி இயல் — ஆர். இராமானுஜாச்சாரி
மேலைநாட்டுத் தத்துவம் — ஆர். எஸ். தேசிகன்
அத்துவித தத்துவம் — டி. எம். பி. மஹாதேவன்

**உளவியல்**

குமர உள்ளம் — டாக்டர் எம். அறம்

**புவியியல்**

தென் அமெரிக்கா — எம். என். பத்மநாபன்
தென் கண்டங்கள் - ஆப்பிரிக்கா — எஸ். முத்துக்கிருஷ்ணக் கரையாளர்
தென்கிழக்கு ஆசியா - புவியியல் — ஜி. கிருஷ்ணமூர்த்தி

**கணிதம்**

வகை நுண்கணிதம் — டி.கே. மாணிக்கவாசகம் பிள்ளை
தொகை நுண்கணிதம் — தி. கோவிந்தராசன்
ஆயத்தொலை வடிவகணிதம் — டி.கே. மாணிக்கவாசகம் பிள்ளை

**விஞ்ஞானம்**

வானவெளி வெற்றி — டாக்டர் எம். ஏ. தங்கராஜ்
ரேடியோ — டாக்டர் பி. திருஞானசம்பந்தம்
எக்ஸ்-ரே — பெ. நா. அப்புசாமி
பாம்புகள் — பெ. மா. அண்ணாமலை
தாவரம் - வாழ்வும் வரலாறும்-I — டாக்டர் சி. சீனிவாசன்

**மருத்துவம்**

மகப்பேறும் மாதர் நோயும் — ஏ. கப்ளான்
பாக்டீரியா — சு. சுந்தரம்

**பொறியியல்**

நீங்களே வீட்டைக் கட்டலாம் — ஆர். எஸ். தேஷ்பாண்டே

**சட்டம்**

குற்ற இயல் சட்டம் — எம். சண்முகசுப்பிரமணியம்

**பொது**

கரும்பு — கு. பெரியசுவாமி
உணவும் ஊட்டமும் — தி. வேங்கடகிருஷ்ணய்யங்கா[illegible]
முற்காலச் சோழர் கலையும் சிற்பமும் — எஸ். ஆர். பாலசுப்பிரமணிய[illegible]

**இவற்றுடன் மேலும் 11 நூல்களும் ஆக 42 நூல்கள்.**